## சமர்ப்பணம்

தமிழ் வேதாந்த நூல்களை முறையாகக் கற்க விரும்பிய சாதகர்களுக்கு அவற்றை அன்புடன் வாரிவழங்கியவர் தவத்திரு சுவாமி ஸ்வரூபானந்தர் அவர்கள். வாழ்நாள் முழுவதும் ஆத்ம வித்தையில் லயித்து அதை மிக எளிமையாக புரிந்து உணரும் வகையில் கற்பித்தார்.

குறிப்பாக ஞானவாசிட்டம் மற்றும் அஞ்ஞவதைப் பரணி ஆகிய இரு நூல்களும் அவர் பெரிதும் விரும்பியவை. இந்நூல்களிலிருந்து மேற்கோள்காட்டி பாடல்களை விளக்கும்பொழுது அவர் தன்னை மறந்து அந்தப்பாடல்களிலேயே ஆழ்ந்துவிடுவார்.

தவத்திரு சுவாமிகள் அவர்கள் அஞ்ஞவதைப் பரணி நூலுக்கு 'சுவானுபூதி' என்னும் உன்னதமான உரை எழுதியுள்ளார். அவருடைய வாழ்நாளில் அவ்வுரை புத்தகவடிவில் வெளிவரமுடியாமல் போய்விட்டது.

அவ்வுரையை அவர் விரும்பியவண்ணம் நூல்வடிவில் வெளியிட்டு சுவாமிகளின் பொற்பாதங்களில் சமர்ப்பிக்கிறோம்.

சுவாமிகளின் அருளும் ஆசியும் என்றும் நமக்கு ஆன்மீகப் பாதையில் அரணாக இருக்கட்டும்.



இந்நூலில் தட்டச்சுப்பிழைகள் இருப்பின் அதை தயவுசெய்து pranipatachaitanya@yahoo.co.in என்ற மின்னஞ்சல் முகவரிக்கு தெரிவிக்குமாறு வேண்டிக்கொள்கிறோம்.

ஹரி: ஓம்:
ஸ்ரீ குருப்யோ நம:

# அஞ்ஞ வதைப் பரணி

இறும்பூதுார் ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் அருளிச்செய்த அஞ்ஞவதைப்பரணி மூலமும், கோவிலூர் மடம் எட்டாவது பட்டம் ஸ்ரீ சோமசுந்தர ஞான தேசிகர் சீடர் ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகள் செய்த சுவாநுபூதி உரையும்

பரணி இலக்கணம்:

**கடவுள் வாழ்த்துக் கடைத்திறப்புரைத்தல்**
**கடும்பாலை கூறல் கொடுங்காளி கோட்டங்**
**கடிகண முரைத்தல் காளிக் கிதி சொலல்**
**அடுபேய்க் கவள்சொல லதனாற் றலைவன்**
**வன்புக ழுரைத்த லெண்புறத்தினையுற**
**வீட்ட லடுகளம் வேட்ட லிவைமேல்**
**அளவடி முதலா வடியிரண் டாக**
**வுளமகிழ் பரணி யுரைக்கப் படுமே.**

பரணி: பரண் மீது இருந்து பாடுவதற்குப் பரணி என்று பெயர். ஆயிரம் யானைகளை ஏக காலத்தில் ஜெயிக்கும் வல்லபமுடைய இராஜன் தனது யுத்த வீரனோடு போர் செய்யும் சமயம் வித்வான்கள், புலவர் பெருமக்கள் அந்த இராஜனது பிரபாவத்தை பரண் மீது (உயர்ந்த ஸ்தானத்தில்) இருந்து பாடுவது பரணியாம். ஈண்டு நமது தத்துவராய சுவாமிகள் தம்முடைய குருமூர்த்திகள் மீது இப்பரணியை இயற்றியுள்ளார். அதாவது தம்முடைய ஆசிரியர் அஞ்ஞானனென்னும் பகைவீரனை ஞானமென்னும் வேந்தனால் நாசஞ் செய்து சுயராஜ்யமென்னும் பட்டணத்தைத் தமக்கு அடைவிக்கச் செய்த ஓர் வீரபாவத்தை இந்நூலுட் கூறுகின்றார். ஆதலால் இந்நூற்கு அஞ்ஞுவதைப் பரணியென்னும் பெயர் காரணமாக இடப்பட்டது.

# 1. கடவுள் வணக்கம்

தத்துவக்காட்சி

1. **படைப்பானும் வியன்ஞாலங் காக்கு மாழிப்**
**படையானும் படைத்தளிக்கப் பட்ட வெல்லாந்**
**துடைப்பானுஞ் சுருதிகளுந் தொழுது போற்றுஞ்**
**சொருபாநந் தச்சுடரைத் தொழுதல் செய்வாம்.**

| | |
|---|---|
| வியன்ஞாலம் | (நாம ரூபான்மயமாக)விரிந்த இவ்வுலகத்தை |
| படைப்பானும் | சிருட்டிக்கும் பிரம்ம தேவனும் |
| காக்கும் | (அப்படி சிருட்டித்த விரிந்த இவ்வுலகத்தை) இரக்ஷிக்கும் |
| ஆழிப்படையானும் | சுதர்சனமென்னும் சக்ராயுதத்தைத் திருக்கரத்தில் தாங்கிய விஷ்ணு மூர்த்தியும் |
| படைத்து | பிரம்மாவால் சிருட்டித்து |
| அளிக்கப்பட்ட | விஷ்ணுவால் காக்கப்பட்ட |
| எல்லாம் | இவ்வுலகனைத்தையும் |
| துடைப்பானும் | பிரளயாந்தத்தில் சம்மரிப்பவராய உருத்திர மூர்த்தியும் |
| சுருதிகளும் | அபௌருஷேயமாய இருக்காதிவேதங்களும் |
| தொழுது | வணங்கி |
| போற்றும் | துதிக்கும் |
| சொரூபானந்தச் சுடரை | சொரூபானந்தச் சுயம்பிரகாசத்தை |
| தொழுதல் செய்வாம் | வணங்கித் துதிப்பாம். முக்கரணங்களாலும் வழிபடுவாம். |

நாமரூபான்மயமாக விரிந்த இவ்வுலகத்தை சிருட்டிக்கும் பிரம்ம தேவனும் அப்படி சிருட்டித்த விரிந்த இவ்வுலகத்தை இரக்ஷிக்கும் சுதர்சனமென்னும் சக்ராயுதத்தைத் திருக்கரத்தில் தாங்கிய விஷ்ணு மூர்த்தியும் பிரம்மாவால் சிருட்டித்து விஷ்ணுவால் காக்கப்பட்ட இவ்வுலகனைத்தையும் பிரளயாந்தத்தில் சம்மரிப்பவராய உருத்திர மூர்த்தியும் அபௌருஷேயமாய இருக்காதிவேதங்களும் வணங்கி துதிக்கும் சொரூபானந்தச் சுயம்பிரகாசத்தை வணங்கித் துதிப்பாம். முக்கரணங்களாலும் வழிபடுவாம்.

2. **அழிந்துபிறந் துழல்வதுவே தொழிலா யானின்**
**றழியாம லெழுந்தருளி யமையா வின்பம்,**
**பொழிந்தபெருங் கருணைமுகி னாளு நாளும்**
**பூதலத்தின் றுயர்தீரப் பொழிக வென்றே**

| | |
|---|---|
| யான் | அடியேன் (இந்தச் சம்சாரத்தில்) |
| பிறந்து அழிந்து | ஜனித்து மரித்து |
| உழல்வதுவே | சுழலா நிற்பதுவே |
| தொழிலாய் | வேலையாயிருப்பதைக் கண்ணுற்று |
| அழியாமல் | அப்படி ஜனித்து மரிக்காமல் (உய்யும்படி) |
| இன்று | இப்பொழுது |
| எழுந்தருளி | அருளே திருவுருவாக ஆவிர்ப்பாவித்து |
| அமையாவின்பம் | மட்டில்லா வானந்தமழையை |
| பொழிந்த | (சாபேட்சையின்றி நிராபேட்சையால்) வருஷித்த |
| பெரும் | பெருமைவாய்ந்த |
| கருணைமுகல் | கிருபையாகிய மேகமானது |
| நாளும் நாளும் | தினந்தினமும் |
| பூதலத்தின் | பூமியின் கண்ணுள்ள |
| துயர்தீர | சம்சார தாபமானது தணிதற்பொருட்டு |
| பொழிக | வருஷிக்கக் கடவது |
| என்று | என்று பிரார்த்தித்து (சொரூபானந்தமென்னும்)சுயஞ்சித்தை வணங்கித்துதிப்பாம். |

அடியேன் இந்தச் சம்சாரத்தில் ஜனித்து மரித்து சுழலா நிற்பதுவே வேலையாயிருப்பதைக் கண்ணுற்று அப்படி ஜனித்து மரிக்காமல் உய்யும்படி இப்பொழுது அருளே திருவுருவாக ஆவிர்ப்பாவித்து மட்டில்லா வானந்தமழையை சாபேட்சையின்றி நிராபேட்சையால் வருஷித்த பெருமைவாய்ந்த கிருபையாகிய மேகமானது தினந்தினமும் பூமியின் கண்ணுள்ள சம்சார தாபமானது தணிதற்பொருட்டு வருஷிக்கக் கடவது என்று பிரார்த்தித்து சொரூபானந்தச் சுயஞ்சித்தை வணங்கித்துதிப்பாம்.

**3. தலைபலவாய்ப் பெயர்பலவா நதிக ளெல்லாஞ்**
**சாகரத்தி னொருநீராந் தன்மை போலப்**
**பலபலவாய்ச் சொல்லுநெறி யெல்லாஞ் சொல்லப்**
**பட்டவொரு பொருளினையாம் பணிதல் செய்வாம்.**

| | |
|---|---|
| தலைபலவாய் | உற்பத்திஸ்தானம் அநேகமுடையதாயும் |
| பெயர்பலவாம் | கங்கையென்பது முதலிய நாமம் அநேகமுடையதாயுமுள்ள |
| நதிகளெல்லாம் | ஆறுகளனைத்தும் |
| சாகரத்தின் | சமுத்திரத்தின்கண் |
| ஒரு நீராந்தன்மை போல | ஏகஜலமயமாகுமாறு போல |

| | |
|---|---|
| பலபலவாய்ச் சொல்லும் நெறியெல்லாம் | அநேகவிதமாகக் கூறும் மார்க்கங்களனைத்தாலும் |
| சொல்லப்பட்ட | கூறப்பட்ட |
| ஒரு பொருளினை | ஒப்பற்ற ஏகவஸ்துவை (அவ்வேகவஸ்துவை) |
| யாம் | நாம் |
| பணிதல் செய்வாம் | முக்கரணங்களாலும் வழிபடுவாம். |

உற்பத்திஸ்தானம் அநேகமுடையதாயும் கங்கையென்பது முதலிய நாமம் அநேகமுடையதாயுமுள்ள ஆறுகளனைத்தும் சமுத்திரத்தின்கண் ஏகஜலமயமாகுமாறு போல அநேகவிதமாகக் கூறும் மார்க்கங்களனைத்தாலும் கூறப்பட்ட ஒப்பற்ற அவ்வேகவஸ்துவை நாம் முக்கரணங்களாலும் வழிபடுவாம்.

**4. அழியாத வீடென்னும் பழைய வூர்கண்**
**டறியாதா ரதுகாண வேண்டி யாறு**
**வழியாகுஞ் சமயங்கள் கொண்டு தம்மில்**
**வழக்குப்பே சுஞ்சழக்கு மாழ்க வென்றே.**

.

| | |
|---|---|
| அழியாத | நாசமற்ற (நித்தியமாகிய) |
| வீடென்னும் | மோக்ஷமென்னும் (அனர்த்தநிவிர்த்தி அனந்தபிராப்தி ரூபமுக்தியென்று கூறப்படும்) |
| பழையவூர்கண்டு | அநாதியே சித்தித்த சுயராஜ்யத்தைத் தரிசித்து |
| அறியாதார் | அநுபவரூபமாக அறிந்து அடையாதவர்கள் |
| அதுகாண வேண்டி | அவ்விராஜ்யத்தை அநுபவரூபமாக அறிந்து அடையும் பொருட்டு |
| ஆறுவழியாகுஞ் சமயங்கள் கொண்டு | அறுவகை மார்க்கங்களைப் போதிக்கும் சைவ முதலிய ஷட்சமயங்களைப்பற்றி |
| தம்மில் | தங்களுக்குள் |
| வழக்குப்பேசும் | தங்கள் தங்கள் மதமே பெரிதென்று விவாதம் செய்யும் |
| சழக்கு | குற்றமனது |
| மாழ்க | அழியக் கடவது |
| என்று | என்று பிரார்த்தித்து (அவ்வேகவஸ்துவை வணங்கித் துதிப்பாம்) |

நாசமற்ற நித்தியமாகிய மோக்ஷமென்னும் அனர்த்தநிவிர்த்தி அனந்தபிராப்தி ரூபமுக்தி என்று கூறப்படும் அநாதியே சித்தித்த சுயராஜ்யத்தைத் தரிசித்து அநுபவ ரூபமாக அறிந்து அடையாதவர்கள் அவ்விராஜ்யத்தை அநுபவ ரூபமாக அறிந்து அடையும் பொருட்டு அறுவகை மார்க்கங்களைப் போதிக்கும் சைவ முதலிய

ஷட்சமயங்களைப்பற்றி தங்களுக்குள் தங்கள் தங்கள் மதமே பெரிதென்று விவாதம் செய்யும் குற்றமனது அழியக் கடவது என்று பிரார்த்தித்து அவ்வேகவஸ்துவை வணங்கித் துதிப்பாம்

**5. ஈறாகி யாதி முதலாயி ரண்டு**
**வகையா மூன்று வடிவா**
**யெழுதாத வேத மொருநாலு பூத**
**மிவைதானொ ரைந்து சுவைதா,**
**னாறாகி யோது மிசையேழு**
**மான திசையெட்டு மாகி யெவையு**
**மாகாம லாகுஞ்சொரூபங் கலந்த**
**வருளான வாறு மொழிவாம்.**

| | |
|---|---|
| ஆதி ஈறாகி | ஜகத்தினது உற்பத்தி ஸ்திதி லயஸ்தானமாய் |
| முதலாய் | சுத்தப்பிரமமாகியும் |
| இரண்டு வகையாகி | சக்தி சிவமாயும் (மாயா விசிட்ட சைதன்யமாகியும்) |
| மூன்று வடிவாய் | பிரம்ம விஷ்ணு ருத்திரனாய, திரிமூர்த்தியாகியும் |
| ஒரு எழுதாத வேத நாலும் | ஒப்பற்ற அபௌருஷேய மாய இருக்காதி நான்கு வேதங்களாகியும் |
| இவைதான் ஒரைந்து பூதம் | (பிரத்தியக்ஷமாகத் தோன்றா நின்ற) இந்தப் பிருதிவியாதி ஐந்து பூதங்களாகியும் |
| சுவைதான் ஆறாகி | இனிப்பு முதலிய ரசம் அறுவகையாகியும் |
| ஓதும் ஏழு இசையும் ஆன | சொல்லாநின்ற சரிகமபதநி என்னும் சப்த சுரங்களாகியும் |
| எட்டுதிசை ஆகி | கிழக்கு முதலிய அஷ்டதிக்குகளாகியும் |
| யெவையுமாகாமல் | சொல்லிய இவையாவும் பரமார்த்தமாக ஆகாமல் |
| ஆகும் | விவர்த்தமாக தன் கண் தோற்றுவிக்கும் |
| சொரூபம் | வஸ்துவானது |
| கலந்து அருளானவாறு | பிரத்யகான்ம ரூபமாய என்னோடு ஐக்கியத்தையடைந்து நான் பிரம்மரூபமன தன்மையை |
| மொழிவாம் | துதிப்பாம். |

ஜகத்தினது உற்பத்தி ஸ்திதி லயஸ்தானமாய் சுத்தப்பிரமமாகியும் சக்தி சிவமாயும் மாயா விசிட்ட சைதன்யமாகியும் பிரம்ம விஷ்ணு ருத்திரனாய, திரிமூர்த்தியாகியும் ஒப்பற்ற அபௌருஷேய மாய இருக்காதி நான்கு வேதங்களாகியும் பிரத்தியக்ஷமாகத் தோன்றா நின்ற இந்தப் பிருதிவியாதி ஐந்து பூதங்களாகியும் இனிப்பு முதலிய ரசம்

அறுவகையாகியும் சொல்லாநின்ற சரிகமபதநி என்னும் சப்த சுரங்களாகியும் கிழக்கு முதலிய அஷ்டதிக்குகளாகியும் சொல்லிய இவையாவும் பரமார்த்தமாக ஆகாமல் விவர்த்தமாக தன் கண் தோற்றுவிக்கும் வஸ்துவானது கலந்து பிரத்யகான்ம ரூபமாய என்னோடு ஐக்கியத்தையடைந்து நான் பிரம்மரூபமான தன்மையை துதிப்பாம்.

**6. ஒர்வொன்றி லேனொர் பொருளாக நல்கியிருபாத மூன்று குணநான்**
**குள்ளிந்தி யங்க ளுறுகோச மைந்தொ டறுபாவ நாதியுணர்கா,**
**லேர்பொன்றிலாத பவமேழ றுத்து வடிவானவெட்டுமுடையா**
**னெழிலாரு ஞாந மயமாக வாழுமியனாளும் வாழ்கவெனவே.**

| | |
|---|---|
| ஓர்வு ஒன்று இலேன் | ஆன்மானான்ம விவேகம் சிறிதுமின்றிய அபக்குவியாகிய அடியேனையும் |
| ஒரு பொருளாக | ஒரு பக்குவியாகத்தமது திருவுளத்தின்கண்ணே மதித்து |
| இருபாத நல்கி | உபயதிருவடித்தாமரைகளையும் அடியேனது முடியின் கண்ணே கிரீடமாகச் சூட்டி |
| மூன்று குணம் | சத்துவ ரஜஸ் தமசு என்னும் மூன்று குணங்கள் |
| நான்கு உள்ளிந்திரியங்கள் | மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக்கரணம் நான்கும் |
| கோசம் ஐந்து | அன்னமயாதி பஞ்ச கோசங்கள் |
| அறுபாவனாதி | கருப்பையில் கருவுரு வருங் கருவு பிறப்பினொடு வளர்தல் குறைதல் ஒருங்கல், என்னும் ஆறுவிதமாறுபாடுடைய உடம்பின் |
| உறும் பவத்தை | பொருந்திய பவத்தை |
| உணர்கால் | விசாரிக்குமிடத்து |
| ஏர்வு ஒன்றிலாத | சிறப்பு சிறிதுமின்றிய மிகத்தாழ்வான |
| பவம் ஏழு அறுத்து | தேவர் முதலியன எழுவகைப் பிறவிகளையும் நாசஞ்செய்து |
| வடிவான எட்டும் உடையான் | நிலம், நீர், நெருப்பு, உயிர், நீள்வானம் சந்திரன், சூரியன், ஜீவன் ஆகிய இவ்வட்டமங்கள மூர்த்தங்களையும் உடைய எமதாண்டவன் |
| எழிலாரு | மைத்திரியாதி குணங்களால் அழகு பொருந்தி |
| ஞானமயமாக | ஞானசொரூபமாக |
| வாழும் இயல் | வாழ்ந்துவரும் தன்மையானது |
| நாளும் வாழ்க | எப்போதும் வாழவேண்டும் எனப் பிராத்தித்து துதிப்பாம். |

அன்வயம், தத்பதலட்சியமாய சொரூபமயமாகிய எமதாண்டவன் தொம்பதலட்சியமாய அடியேனுடன் ஐக்கியத்தை அடைந்து நான் பிரமரூபமான தன்மையை துதிப்பாம். (இருபாதநல்கி பவமேழறுத்து எனக் கூட்டுக)

ஆன்மானான்ம விவேகம் சிறிதுமின்றிய அபக்குவியாய அடியேனையும் ஒரு பக்குவியாகத்தமது திருவுளத்தின்கண்ணே மதித்து உபயதிருவடித்தாமரைகளையும் அடியேனது முடியின் கண்ணே கிரீடமாய்ச் சூட்டி சத்துவ ரஜஸ் தமசு என்னும் மூன்று குணங்கள் மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக்கரணம் நான்கும் அன்னமயாதி பஞ்ச கோசங்கள் கருப்பையில் கருவுரு வருங் கருவு பிறப்பினொடு வளர்தல் குறைதல் ஒருங்கல், என்னும் ஆறுவிதமாறுபாடுடைய உடம்பின் பொருந்திய பவத்தை விசாரிக்குமிடத்து சிறப்பு சிறிதுமின்றிய மிகத்தாழ்வான தேவர் முதலியன எழுவகைப் பிறவிகளையும் நாசஞ்செய்து நிலம், நீர், நெருப்பு, உயிர், நீள்வானம் சந்திரன், சூரியன், ஜீவன் ஆகிய இவ்வட்டமங்கள மூர்த்தங்களையும் உடைய எமதாண்டவன் மைத்திரியாதி குணங்களால் அழகு பொருந்தி ஞானசொரூபமாய் வாழ்ந்துவரும் தன்மையானது எப்போதும் வாழவேண்டும் எனப் பிராத்தித்து துதிப்பாம்.

7. **சினமான மாயை யினமான மாசு**
**செறி யாம னூறி யறிவாகவே,**
**மனமான தீய பகை வீய மோதி**
**வருஞாந யானை வலிபாடுவாம்.**

| | |
|---|---|
| சினமான | அகடிதகடினா சாமர்த்தியம் வாய்ந்த பகையான |
| மாயையினமான | மாயையினது காரியரூப சங்காதங்களான பஞ்சகோசங்களில் (ஐந்து விதமான உறையோடு கூடிய) இந்த உடம்பில் |
| மாசு | யான் எனது என எழும் அபிமான ஆவரணமானது (மறைப்பானது) |
| செறியாமல் | நெருங்காமல் |
| நூறி | நீக்கி |
| அறிவு ஆகவே | சிதான்மாவாக விளங்குதற்கு |
| மனமான | உருவமனமாகிய |
| தீயபகை வீய | கொடிய சத்ரு நாசமாகியழியவும் |
| மோதிவரு | பொருதுவரும் |
| ஞான யானை | ஞானசொரூப கஜமுகக்கடவுளினது |
| வலி | பிரபாவத்தைத் |
| பாடுவாம் | துதிப்பாம். |

அகடிதகடினா சாமர்த்தியம் வாய்ந்த பகையான மாயையினது காரிய சங்காதங்களான பஞ்சகோசங்களில் (ஐந்து விதமான உறையோடு கூடிய) இந்த உடம்பில் யான் எனது என எழும் அபிமான ஆவரணமானது (மறைப்பானது) நெருங்காமல் நீக்கி சிதான்மாவாக விளங்குதற்கு உருவமனமாகிய கொடிய சத்ரு நாசமாகியழியவும் பொருதுவரும்

ஞானசொரூப கஜமுகக்கடவுளினது பிரபாவத்தைத் துதிப்பாம்.

**8. ஒழியாம லீசனொளியாகி மேவ**
**வுணராமன் மூடு மொருமாயையால்,**
**விழியாத லோக ரழியாத ஞாந**
**விழிமேவ லான வழிமேவவே.**

| | |
|---|---|
| ஈசன் ஒளியாகி | ஈசுரனானவர் சித்ரூபத்தால் |
| ஒழியாமல் மேவ | நீக்கமின்றி யாண்டும் நிறைந்திருந்தும், |
| உணராமல் | அதனை அறியாமல், |
| மூடும் | மறைக்கும், |
| ஒரு மாயையால் | சமானமற்ற ஆவரண சக்தியினால் |
| விழியாத லோகர் | ஆன்மாவின் கண்ணே விழிப்பின்றி உலகிலுள்ள அவிவேகிகள் |
| அழியாத ஞான விழிமேவலான | நித்தியமாய ஞானப்பார்வையை அடையும் படியான |
| வழிமேவவே | அத்வைத மார்க்கத்தைப் பற்றும்பொருட்டு (ஞானயானையினது பிரபாவத்தைத் துதிப்பாம். |

ஈசுரனானவர் சித்ரூபமாய் நீக்கமின்றி யாண்டும் நிறைந்திருந்தும், அதனை அறியாமல், மறைக்கும், சமானமற்ற ஆவரண சக்தியினால் ஆன்மாவின் கண்ணே விழிப்பின்றி உலகிலுள்ள அவிவேகிகள் நித்தியமாய ஞானப்பார்வையை அடையும் படியான அத்வைத மார்க்கத்தைப் பற்றும்பொருட்டு (ஞானயானையினது பிரபாவத்தைத் துதிப்பாம்.

**9. இறைவாழி நாத னருள்வாழி தாளி**
**னிசை வாழி யாளு மியல்வாழியே,**
**மறைவாழி மோந மொழிவாழி யாறு**
**வழிவாழி ஞாந விழி வாழியே.**

| | |
|---|---|
| இறைவாழி | சாட்சாத் பரமேஸ்வர வடிவ குருமூர்த்தி நீடூழி வாழவும், |
| நாதனருள் வாழி | அக்குருமூர்த்தியின் கருணையானது வாழவும், |
| தாளின் இசை வாழி | அக்குருமூர்த்தியின் உபயத்திருவடிகளின் கீர்த்தியானது வாழவும், |
| ஆளும் இயல் வாழி | அடியேனைப் போன்றாரை தடுத்தாட்கொள்ளுந் தன்மையானது வாழவும், |
| மறைவாழி | அக்குருமூர்த்தியின் மகிமையைப் போற்றும் வேதமானது வாழவும், |
| மோனமொழி வாழி | மௌனமாகிய மகாவாக்ய உபதேசமானது வாழவும், |

| | |
|---|---|
| ஆறு வழி வாழி | சண்மார்க்கம் (ஆறு சமயங்களும்) வாழவும், |
| ஞான விழிவாழியே | நிறைந்த ஞானப்பார்வை நீடூழி வாழவும் . |

சாட்சாத் பரமேஸ்வர வடிவ குருமூர்த்தி நீடூழி வாழவும், அக்குருமூர்த்தியின் கருணையானது வாழவும், அக்குருமூர்த்தியின் உபயத்திருவடிகளின் கீர்த்தியானது வாழவும், அடியேனைப் போன்றாரைத் தடுத்தாட்கொள்ளுந் தன்மையானது வாழவும், அக்குருமூர்த்தியின் மகிமையைப் போற்றும் வேதமானது வாழவும், மௌனமாகிய மகாவாக்ய உபதேசமானது வாழவும், சண்மார்க்கம் (ஆறு சமயங்களும்) வாழவும், நிறைந்த ஞானப்பார்வை நீடூழி வாழவும் .

**10. தறுகண்வினை வழிசரிய வருதலைவன் வாழியே**
**தனதுசர ணெனதுதலை தரவலவன் வாழியே,**
**யுறுகணற வுணர்வுவிழி யுதவுமவன் வாழியே**
**யுணர்வறமெய் நிகழவரு ளொழிவில் பரன் வாழியே.**

| | |
|---|---|
| தறுகண் வினை வழி சரிய | ஆசை முதலியவைகளுக்கு காரணமான தீவினை மார்க்கமானது முற்றும் நீங்கவும், |
| வருதலைவன்வாழியே | அருளே திருவுருவாக வரும் நம்முடைய இறைவன் வாழியே, |
| தனது சரண் | தன்னுடைய பொன் போன்ற உபய திருவடிகளையும், |
| எனது தலை | எனது சிரசின்மீது |
| தர வலவன் | (தீட்சை செய்பவராய்) சூடத்தருபவனாய குருமூர்த்தியானவர் |
| வாழியே | நீடூழி வாழவும், |
| உறுகண் அற | பிறவித்துன்பமானது நீங்கும்படி (சுட்டி அறிதல் இல்லாத) |
| உணர்வுவிழி உதவும் அவன் | ஞானக்கண்ணை கொடுக்கும் (முற்றும் அறியும் தன்மையைக் கொடுக்கும்) எமது குருமூர்த்தி |
| வாழியே | நீடூழி வாழவும், |
| உணர்வற | மனதிலுள்ள அநேக நினைவுகள் நீங்கவும், |
| மெய் நிகழ | அறிவு சொரூபம் நன்றாக விளங்கவும், |
| அருள் | அருள் செய்பவராய, |
| ஒழிவில் பரன் வாழியே | நீக்கமின்றி நிறைந்துள்ள எமது குருமூர்த்தி நீடூழி வாழக் கடவன். |

ஆசை முதலியவைகளுக்கு காரணமான தீவினை மார்க்கமானது முற்றும் நீங்கவும், அருளே திருவுருவாக வரும் நம்முடைய இறைவன் வாழியே, தன்னுடைய பொன் போன்ற உபய திருவடிகளையும், எனது சிரசின்மீது (தீட்சை செய்பவராய்) சூடத்தருபவனாய குருமூர்த்தியானவர் நீடூழி வாழவும், பிறவித்துன்பமானது நீங்கும்படி (சுட்டி அறிதல் இல்லாத) ஞானக்கண்ணை கொடுக்கும் (முற்றும் அறியும் தன்மையைக் கொடுக்கும்)

எமது குருமூர்த்தி நீடூழி வாழவும், மனதிலுள்ள அநேக நினைவுகள் நீங்கவும், அறிவு சொரூபமாய் நன்றாக விளங்கவும், அருள் செய்பவராய, நீக்கமின்றி நிறைந்துள்ள எமது குருமூர்த்தி நீடூழி வாழக் கடவன்.

**11. நினைவயர்வு கெட நிகழு நிகரிலவன் வாழியே**
**நிரதிசய சுகவடிவி னிலைசெய்பரன் வாழியே,**
**யெனையழிய வரும்விழியி னிசையுமவன் வாழியே,**
**யினிமைதரு சரணபத மருளுமிறை வாழியே.**

| | |
|---|---|
| நினைவு அயர்வு கெட | நினைவு, கனவு, துயில் முதலிய நிலைகள் நீங்கிய(சுத்த ஞான நிலையில்) |
| நிகழும் | விளங்கும், |
| நிகரிலவன் வாழியே | சமானமற்ற எமது குருமூர்த்தி நீடூழி வாழவேண்டும், |
| நிரதிசய சுகவடிவில் | ரம்பை முதலிய அதிசயமின்றிய நிரதிசய சுக சொரூபத்தில் |
| நிலைசெய்பரண் வாழியே | நிலைக்கச் செய்த மேலான எமது ஆண்டவன் நீடூழி வாழ வேண்டும். |
| யெனை அழிய வரும் விழியால் | தற்போதம் கெடும்படி அருள் செய்கின்ற ஞான கண்ணோடு |
| இசையுமவன் வாழியே | கூடி விளங்கும் எமது ஆண்டவன் நீடூழி வாழ வேண்டும். |
| இனிமைதரு சரண பதம் அருளும் | ஆனந்தத்தையளிக்கும் அடைக்கலஸ்தானமாய உபய திருவடிகளையும் அனுக்கிரகம் செய்யும் |
| இறைவாழியே | எம்முடைய தலைவன் நீடூழி வாழ வேண்டும். |

நினைவு, கனவு, துயில் முதலிய நிலைகள் நீங்கிய(சுத்த ஞான நிலையில்) விளங்கும், சமானமற்ற எமது குருமூர்த்தி நீடூழி வாழவேண்டும், ரம்பை முதலிய அதிசயமின்றிய நிரதிசய சுக சொரூபத்தில் நிலைக்கச் செய்த மேலான எமது ஆண்டவன் நீடூழி வாழ வேண்டும். தற்போதம் கெடும்படி அருள் செய்கின்ற ஞான கண்ணோடு கூடி விளங்கும் எமது ஆண்டவன் நீடூழி வாழ வேண்டும். ஆனந்தத்தையளிக்கும் அடைக்கலஸ்தானமாய உபய திருவடிகளையும் அனுக்கிரகம் செய்யும் எம்முடைய தலைவன் நீடூழி வாழ வேண்டும்.

———————

# 2. கடைத் திறப்பு

அவதாரிகை: இராஜாவானவன் தனது பட்டணத்தைக் கொள்ளை கொள்ளவந்த (யுத்த) பகை வீரனோடு யுத்தத்திற்குச் செல்வான் வேண்டி, அந்தப்புரத்து மனைவியிடம் தெரிவிப்பான் செல்லு வழி அவளதையறியாது, தாளிட்டுக் கொண்டிருப்ப, அவ்விராணியைக் கதவு திறக்கச் சொல்வது போல ஈண்டு அஞ்ஞானமாகிய யுத்தவீரன் சுயராஜ்யமாகிய பட்டத்தில் அதிக்கிரமித்துக் கொண்டிருப்பதை ஞானவேந்தனாய குருவறிந்து அவனோடு போர் செயச் செல்லுவான் வேண்டி, மஹான்களாகிய பத்தினிகள் பாற் தெரிவிப்பான் செல்லுவழி அவர்கள் நிர்விகற்பசமாதி என்னும் யோக நித்திரையிலிருப்பதை அறிந்து சமாதியாகிய கதவைத் திறந்து பகிர் முகமாகும்படி வேண்டிக்கொள்ளுதல், இராஜனுக்கு மனைவி எப்படி அத்யந்தம்பிரியமுடையவளோ, அப்படி, ஈண்டு மகான்கள் குருமூர்த்திக்கு அத்யந்தப் பிரியமுடையவர்களாதலால் மனைவியென்று கூறப்பட்டனர். ஹே!, எனக்கு மிகப்பிரிய முடைய மஹான்களே, தாங்கள் எத்தகையரெனின் கூறுகின்றேன் கேளுங்கள்

1. **தனிநாடியர் பொருளோடுறு தலைநாடியர் நிலைபேர்**
   **துனிநாடிய ரலைதீர்வதொர் துறை நாடியர் திறமின்**

| | |
|---|---|
| தனி நாடியர் | ஏகாந்த ஸ்தானத்திலிருந்து சொரூப நாட்டமுடையவர் தாங்கள். |
| பொருளோடு உறுதலை நாடியர் | பிரத்தியகபின்ன பிரமமே நான் என பரமான்மாவுடன் ஐக்கியத்தைப் பொருந்தியிருப்பவரல்லவா தாங்கள். |
| துணிநிலை பேர் நாடியர் | துன்பநிலையை நிவர்த்திக்கவல்ல விசாரத்தையுடையவர் தாங்கள். |
| அலைதீர்வது ஓர் துறைநாடியர் | சலனமின்றிய நிச்சலமான அத்வைத மார்க்கத்தையே நாடியவர்களல்லவா தாங்கள். |
| திறமின் | கதவைத் திறவுங்கள். |
| நிலைபேர் துணி நாடியர் | சொரூப நிலையினின்றும் பகிர்முகமாகும்படிச் செய்யும் துன்பத்தை (முன்நிகழ் பிறப்பொடு மூப்பிறப்பினால் சென்றடையிடும்பைச் சிந்தை செய்கையும் என்ற பகவானது வாக்கியப்படி, சதாவும்) விசாரஞ்செய்பவரல்லவா தாங்கள் என்றும் பொருள்படும். |

ஏகாந்த ஸ்தானத்திலிருந்து சொரூப நாட்டமுடையவர் தாங்கள். பிரத்தியகபின்ன பிரமமே நான் என பரமான்மாவுடன் ஐக்கியத்தைப் பொருந்தியிருப்பவரல்லவா தாங்கள். துன்பநிலையை நிவர்த்திக்கவல்ல விசாரத்தையுடையவர் தாங்கள். சலனமின்றிய

நிச்சலமான அத்வைத மார்க்கத்தையே நாடியவர்களல்லவா தாங்கள். கதவைத் திறவுங்கள். சொரூப நிலையினின்றும் பகிர்முகமாகும்படிச் செய்யும் துன்பத்தை (முன்நிகழ் பிறப்பொடு மூப்பிறப்பினால் சென்றடையிடும்பைச் சிந்தை செய்கையும் என்ற பகவானது வாக்கியப்படி, சதாவும்) விசாரஞ்செய்பவரல்லவா தாங்கள் என்றும் பொருள்படும்.

**2. மறைநாடியர் மநுநாடியர் மதியால்வரு சமயத்**
**துறைநாடிய ரிறைதாளிணை தொழ நாடியர் திறமின்**

.

| | |
|---|---|
| மறைநாடியர் | வேதத்தில் சொல்லப்பட்ட பரம்பொருளை நாடியிருப்பவர், |
| மனுநாடியர் | மநுஸ்மிருதி முதலான தர்ம சாஸ்திரம் கூறயபடி நடப்பவரல்லாது தங்கள் தங்கள் |
| மதியால்வரு சமயத்துறை நாடியர் | புத்திவலியாற் கொண்டுள்ள ஆறு சமயங்க(மார்க்கங்களை)ளை உடையவர் தாங்கள். |
| இறைதாளினை தொழு நாடியர் | குருமூர்த்தியினது இரண்டு திருவடியை வணங்குதலையே உடையவர் தாங்கள். |
| திறமின் | கதவைத் திறவுங்கள். |

வேதத்தில் சொல்லப்பட்ட பரம்பொருளை நாடியிருப்பவர், மநுஸ்மிருதி முதலான தர்ம சாஸ்திரம் கூறயபடி நடப்பவரல்லாது தங்கள் தங்கள் புத்திவலியாற் கொண்டுள்ள ஆறு சமயங்க(மார்க்கங்களை)ளை உடையவர் தாங்கள். குருமூர்த்தியினது இரண்டு திருவடியை வணங்குதலையே உடையவர் தாங்கள். கதவைத் திறவுங்கள்.

**3. அருவ மன்றியவ ருருவ மன்றியவ**
**ரடைய வன்றியவ ருடையசீ**
**ருருவ மொன்றுபட வுடைய நெஞ்சடைய**
**வுருகு கின்றவர்க டிறமினோ,**

| | |
|---|---|
| அருவமன்றியவர் | பரமார்த்தமாக அருவமாயிருந்தாலும் லோகபாலனார்த்தம் லீலையாக திருவுருவத்தைத் தாங்கி வருவதால் அருவமல்லாதவர். |
| உருவமன்றியவர் | லீலையாகக் கொண்ட அக்கோலமும் பரமார்த்தமாகத்தன்கணில்லாமையின் உருவமல்லாதவர். |
| அடையவன்றியவர் | சர்வதிருசியராகித்தியர். |
| உடைய | இவ்வித இலக்கணமுடைய |

| | |
|---|---|
| சீர் உருவம் ஒன்றுபட | சிறந்த பரமான்மாவுடன் பிரத்தியகான்மா ஏகைகபாவத்தையடைய அதனால் |
| நெஞ்சு அடைய உடைய | மனமுழுதும் நெக்கு நெக்காக இளகும்படி |
| உருகுகின்றவர்கள் | நெகிழ்கின்ற மாதர்கணங்காள் |
| திறமினோ | கதவைத் திறவுங்கள். |

பரமார்த்தமாக அருவமாயிருந்தாலும் லோகபாலனார்த்தம் லீலையாக திருவுருவத்தைத் தாங்கி வருவதால் அருவமல்லாதவர். லீலையாகக் கொண்ட அக்கோலமும் பரமார்த்தமாகத்தன்கணில்லாமையின் உருவமல்லாதவர். சர்வதிருசியராகித்தியர். இவ்வித இலக்கணமுடைய சிறந்த பரமான்மாவுடன் பிரத்தியகான்மா ஏகைகபாவத்தையடைய அதனால் மனமுழுதும் நெக்கு நெக்காக இளகும்படி நெகிழ்கின்ற மாதர்கணங்காள் கதவைத் திறவுங்கள்.

**4.** **புனலினமி ழாது ககநமிசை யூதை**
**புகுத வசை யாத பொருளதா**
**யனலினெரி யாது படையினழி யாத**
**வறிவையறி வார்க டிறமினோ.**

| | |
|---|---|
| புனலின் அமிழாது | நீரால் நெக்கொழுகாததும் |
| ககனமிசையூதை | ஆகாயத்தின்கண் சரிக்கும் மருத்தாலும்(வாயுவாலும்) |
| புகுதவசையாத பொருளதாய் | நுழைந்து சலிக்கச்செய்ய முடியாத வஸ்துவாயும் |
| அனலின் எரியாது | நெருப்பால் வெந்தழியாததும் |
| படையினழியாத | அஸ்திர சாஸ்திரங்களால் சேதிக்கமுடியாததும் ஆகிய |
| அறிவைஅறிவார்கள் | சித் சொரூபத்தை தனது சொரூபமாகச் சாட்சாத்கரிக்கும் மாதர்கணங்களென்னும் முனிவர்காள் |
| திறமினோ | கதவைத் திறவுங்கள் |

நீரால் நெக்கொழுகாததும் ஆகாயத்தின்கண் சரிக்கும் மருத்தாலும் (வாயுவாலும்) நுழைந்து சலிக்கச் செய்ய முடியாத வஸ்துவாயும் நெருப்பால் வெந்தழியாததும் அஸ்திர சாஸ்திரங்களால் சேதிக்க முடியாததும் ஆகிய சித் சொரூபத்தை தனது சொரூபமாகச் சாட்சாத்கரிக்கும் மாதர்கணங்களென்னும் முனிவர்காள் கதவைத் திறவுங்கள்.

**5.** **ஐய மொன்றுமற வந்த கோனடியி**
**னன்பொ டொன்றியக மின்புற**
**மைய ழிந்திட மலர்ந்தி லங்குவிழி**
**மல்கு வீர்கள்கடை திறமினோ.**

| | |
|---|---|
| வந்தகோன் | ஈண்டு எழுந்தருளிய இறைவன் |
| ஐயமொன்றுமற | ஈசுவரனோ அலனோ என்று உள்ள சந்தேகம் சிறிதும் இல்லாமல் நீங்கவும் |
| அடியில் அன்பொடு ஒன்றி | இவ்விறைவனது சொரூபத்தில் பக்தியோடு ஒன்றுபட்டு |
| அகம் இன்பமுற | மனமானது பேரின்பத்தை அடையவும் |
| மையழிந்திட | மனமானது ஆனந்தத்தையடையவும்(ஆவரணமானது) சொரூபமறைப்பானது நீங்கவும் |
| மலர்ந்து | நன்றாக விளங்கிய |
| இலங்குவிழி | தடையில்லாத முற்றும் உணர்தலாகிய பார்வையால் |
| மல்குவீர்கள் கடைதிறமினோ | விளங்குகின்ற மாதர்கணங்காள் கதவைத் திறவுங்கள். |

ஈண்டு எழுந்தருளிய இறைவன் ஈசுவரனோ அலனோ என்று உள்ள சந்தேகம் இல்லாமல் நீங்கவும் இவ்விறைவனது சொரூபத்தில் பக்தியோடு ஒன்றுபட்டு மனமானது பேரின்பத்தை அடையவும் மனமானது ஆனந்தத்தையடையவும்(ஆவரணமானது) சொரூப மறைப்பானது நீங்கவும் நன்றாக விளங்கிய தடையில்லாத முற்றும் உணர்தலாகிய பார்வையால் விளங்குகின்ற மாதர்கணங்காள் கதவைத் திறவுங்கள்.

**6. பாரு மெறிவளியும் நீரு மெரியும்வெளி**
**பானு மதியுமிய மாநுநே**
**ரோரு மளவினுணர் வாக வொருமொழியி**
**னோது மவர்கள்கடை திறமினோ.**

| | |
|---|---|
| பாரும் | பூமியும் |
| எறிவளியும் | வீசுகின்ற காற்றும் |
| நீரும் | தண்ணீரும் |
| எரியும் | நெருப்பும் |
| வெளி | ஆகாயமும் |
| பானும் | சூரியனும் |
| மதி | சந்திரனும் |
| இயமானும் | ஜீவனும் ஆகிய இந்த எட்டு மங்கள வடிவத்தையும் |
| நேர் ஒருமளவில் | நன்றாக விளங்கும் பொழுது |
| உணர்வாக | எல்லாம் சித்மயமாக |
| ஒரு மொழியினர் | ஒப்பற்ற மஹாவாக்கிய உபதேசத்தினால் |
| ஓதுமவர்கள் | (அனுக்கிரகம்) அருள் செய்யும் மாதர்காள் |
| கடைதிறமினோ | கதவைத் திறவுங்கள். |

பூமியும் வீசுகின்ற காற்றும் தண்ணீரும் நெருப்பும் ஆகாயமும் சூரியனும் சந்திரனும் ஜீவனும் ஆகிய இந்த எட்டு மங்கள வடிவத்தையும் நன்றாக விளங்கும் பொழுது எல்லாம் சித்மயமாக ஒப்பற்ற மகாவாக்கிய உபதேசத்தினால் (அனுக்கிரகம்) அருள் செய்யும் மாதர்காள் கதவைத் திறவுங்கள்.

7. **கருகு கலியன்வலி தொலைய வுலகின்வரு**
**கருணை மலையினருள் பரவியே**
**பெருகு மதிசயமொ டுருகி யருவிசொரி**
**பெரிய விழியினவர் திறமினோ.**

| | |
|---|---|
| கருகு கலியின் வலி தொலைய | உளத்தைக் கருகச் செய்யும் கலிபுருசனுடைய சாமர்த்தியமானது முழுதும் நாசமாகும்பொருட்டு |
| உலகின்வரு | இந்த உலகத்தின்கண்ணே எழுந்தருளிவரும் |
| கருணைமலையின் | கிருபைமிக்க சலனமின்றிய பரமாத்மாவினுடைய |
| அருள்பரவியே | அருளை துதி செய்து |
| பெருகும் அதிசயமொடு உருகி | மிகுந்த ஆச்சரியத்துடன் கசிந்து |
| அருவிசொரி | கண்ணினின்றும் ஆனந்தக் கண்ணீர் ஒழுகும்படி |
| பெரிய வாழியினவர் | மஹத்தாய பெரிய ஞானப்பார்வையை உடையவர்களே |
| திறமினோ | கதவைத் திறவுங்கள். |

உளத்தைக் கருகச் செய்யும் கலிபுருசனுடைய சாமர்த்தியமானது முழுதும் நாசமாகும்பொருட்டு இந்த உலகத்தின்கண்ணே எழுந்தருளிவரும் கிருபைமிக்க சலனமின்றிய பரமாத்மாவினுடைய அருளை துதி செய்து மிகுந்த ஆச்சரியத்துடன் கசிந்து கண்ணினின்றும் ஆனந்தக் கண்ணீர் ஒழுகும்படி மஹத்தாய பெரிய ஞானப்பார்வையை உடையவர்களே கதவைத் திறவுங்கள்.

8. **உளவலி முநிவர்க ளொழியவா**
**ருயிர்விட விழிகொள வருகிவீ**
**ழளவினி னொருதிரு மொழியதா**
**மமிர்தருள் பவர்கடை திறமினோ.**

| | |
|---|---|
| உளவலி முனிவர்கள் ஒழிய | திடஞான சித்தத்தை உடைய வியாச வசிட்டாதி மனன (முனி) சீலர்கள் தவிர மற்றையர் |
| ஆருயிர் விட | சீ(ஜீ)வத்துவத்தைவிடவும் |

| | |
|---|---|
| விழிகொள | பரிபூர்ண திருட்டியை (எங்கும் நிறைந்த) பார்வையை அடையவும் |
| உருகி வீழ் அளவினில் | மனமானது கசிந்து கண்ணினின்றும் ஆனந்த நீர் ஒழுகும் தருணத்தில் |
| ஒரு திரு மொழியதாம் | ஒப்பற்ற அழகிய உபதேசமாகிய |
| அமிர்து அருள்பவர் | அமிர்தத்தைக் கொடுக்கும் மாதர்கணங்களே |
| கடைதிறமினோ | கதவைத் திறவுங்கள். |

திடஞான சித்தத்தை உடைய வியாச வசிட்டாதி மனன (முனி) சீலர்கள் தவிர மற்றையர் சீ(ஜீ)வத்துவத்தைவிடவும் பரிபூர்ண திருட்டியை (எங்கும் நிறைந்த) பார்வையை அடையவும் மனமானது கசிந்து கண்ணினின்றும் ஆனந்த நீர் ஒழுகும் தருணத்தில் ஒப்பற்ற அழகிய உபதேசமாகிய அமிர்தத்தைக் கொடுக்கும் மாதர்கணங்களே கதவைத் திறவுங்கள்.

9. **கனவினு மமரர்கள் பெறலறக்**
**கலியுக மிதிலொரு நினைவறத்**
**தனையருள் செயவிறை நினைவறத்**
**தமைநினை பவர்கடை திறமினோ.**

| | |
|---|---|
| கனவினும் அமரர்கள் பெறலற | சொப்பனத்திலும் தேவர்கள் அடைதற்கு அருமைத்தான |
| கலியுகமிதில் | கொடிய பாபயுகத்தின்கண் |
| ஒரு நினைவு அற | பக்குவமென்னும் பக்குவம் அற்றவனென்றும் பாராமல் |
| இறை | குருமூர்த்தியானவர் |
| தனையருள்செய | பிரஹ்ம ரூபமாய தன்னைக் கொடுக்க (உடனே திரிசியத்தில்) |
| நினைவற | எண்ணம் இல்லாதவராய் |
| தமைநினைபவர் | தங்கள் ஆத்ம சொரூபத்தையே தியானிக்கும் மஹான்கள் |
| கடை திறமின் | கதவைத் திறவுங்கள். |

சொப்பனத்திலும் தேவர்கள் அடைதற்கு அருமைத்தான கொடிய பாபயுகத்தின்கண் பக்குவமென்றும் பக்குவம் அற்றவனென்றும் பாராமல் குருமூர்த்தியானவர் பிரஹ்ம ரூபமாய தன்னைக் கொடுக்க (உடனே திரிசியத்தில்) எண்ணம் இல்லாதவராய் தங்கள் ஆத்ம சொரூபத்தை தியானிக்கும் மஹான்கள் கதவைத் திறவுங்கள்.

10 **வளைதரு வினைகழல் வுறவரு ளிறையடி**

**மருவுதொ ருளமுடல் புளகம தெரியவு**
**மலர்தரு குவளைக ளருவிகள் சொரியவு**
**மறிகட லொலியென வலறியு முலறியு,**

**மனைதரு புலனவை மடிதர மநமிற**
**வறிவெழு மதுவற மருவிய வெளியினி**
**னழிதர வொழிவற மிகுவிழி நிகழ்தரு**
**மமிர்தது பருகிடு மவர்கடை திறமினோ.**

| | |
|---|---|
| வளைதருவினை கழல்வுற | நம்மைச் சூழ்ந்த பாப கருமங்கள் விட்டு நீங்க |
| அருள் இறை அடி மருவு தொறும் | கிருபை செய்யும் குருமூர்த்தியினது திருவடியை நெருங்கும்பொழுது |
| உளம் உடல் புளகம தெறியவும் | மனமும் காயமும் மயிர்க்கூச்சு முதலிய புளகாங்கிதத்தை அடையவும், |
| அலர்தரு குவளைகள் அருவிகள் சொரியவும் | மலர்ந்த நீலோற்பலம் போன்ற நேத்திரத்தினின்றும் ஆனந்தக் கண்ணீர் வழியவும் |
| மறிக்கடலொலியென | அலைகளை மாறிமாறி வீசுகின்ற சமுத்திரத்தினது சப்தம் போன்று |
| அலறியும் | அநேக துதிகளாற் துதித்தும் |
| உலறியும் | மனமானது பரவசம் அடைந்து குழப்பமுற்றும் |
| அனைதரு புலனவைமடிதர | சப்த முதலிய விஷயத்தில் சேர்க்கும் மெய்,வாய், கண், மூக்கு, செவி என் ஐம்புலன்கள் அழியவும் |
| மனமிற | சலனவடிவ மனமானது நாசமாகவும் |
| எழும் அறிவு அது அற | இது கடம் இது படம் என எழுகின்ற நிச்சய வடிவ புத்தி அழியவும் |
| ஒழிவற மருவிய வெளியினில் அழிதர | நீக்கமற நிறைந்த சிதாகாச சொரூபம் யாவும் மீதமின்றி ஒடுங்கும்படிசெய்து |
| மிகுவிழி நிகழ்தரு | பெரிய பிரமதிருட்டியுடன் (ஞானப்பார்வையில்) விளங்கும் அதனால் உண்டாகும் |
| அமிர்தது பருகிடுமவர் | அமிர்தத்தை அருந்துகின்ற மாதர்கணங்களே |
| கடை திறமின் | கதவைத் திறவுங்கள். |

நம்மைச் சூழ்ந்த பாப கருமங்கள் விட்டு நீங்க கிருபை செய்யும் குருமூர்த்தியினது திருவடியை நெருங்கும்பொழுது மனமும் காயமும் மயிர்க்கூச்சு முதலிய புளகாங்கிதத்தை அடையவும், மலர்ந்த நீலோற்பலம் போன்ற நேத்திரத்தினின்றும் ஆனந்தக் கண்ணீர் வழியவும் அலைகளை மாறிமாறி வீசுகின்ற சமுத்திரத்தினது சப்தம் போன்று அநேக துதிகளாற் துதித்தும் மனமானது பரவசம் அடைந்து குழப்பமுற்றும் சப்த முதலிய விஷயத்தில் சேர்க்கும் மெய்,வாய், கண், மூக்கு, செவி என் ஐம்புலன்கள் அழியவும் சலனவடிவ மனமானது நாசமாகவும் இது கடம் இது படம் என எழுகின்ற

நிச்சய வடிவ புத்தி அழியவும் நீக்கமற நிறைந்த சிதாகாச சொரூப யாவும் மீதமின்றி ஒடுங்கும்படிசெய்து பெரிய பிரமதிருட்டியுடன் (ஞானப்பார்வையில்) விளங்கும் அதனால் உண்டாகும் அமிர்தத்தை அருந்துகின்ற மாதர்கணங்களே கதவைத் திறவுங்கள்.

**11. சிதையு மெனவுடன் முதல்வரு பொருள்களுந்**
**திரியு மெனவுயர் பதமுறு வினைகளுஞ்**
**சிலுக தெனவலை யலைவரு சமயமுந்**
**தெளிவு தரவிவை முழுதையு நழுவிநின்,**

**றிதைய மலர்செய வுருகிநம் மிறைவர்தந்**
**திடுமடி யிணைமலர் முடிமிசை யணியவந்**
**திழிவு கழிவித மகமறு மமிர்தமுண்**
**டெமது சுகவடி வெனுமவர் திறமினோ.**

| | |
|---|---|
| உடன் முதல்வரு பொருள்களும் சிதையுமென | தேக முதலாக கர்மத்தால் உண்டான எல்லா உலகப் பொருள்களும் அழியும் எனவும் |
| உயர்பதமுறு வினைகளும் திரியுமென | இதிலும் மேலான பிரமபதவியை கொடுக்கும் எல்லாப் புண்ணிய கர்மங்களும் அதனது முடிவு காலத்தில் அழிந்து திரும்பவும் உண்டாகும் |
| அலையலைவரு சமயமும் சிலுகதென | கடலினது அலையைப் போல் சலன வடிவமான ஆறு சமயங்களும் சண்டையிட்டுக் கொள்வனவாம் எனவும் |
| இவை முழுதையும் நழுவி தெளிவு தர நின்று | இவைகளனைத்தையும் நீக்கி ஐயந்திரிபு அற இருந்து |
| இதயமலர் | இருதய கமலம் |
| செய உருகி | நன்றாகக் கசிந்து உருகி |
| நம்மிறைவர் வந்து தந்திடும்இணையடிமலர் முடிமிசை யணிய | நமது பிரான் இங்கே கருணையால் வந்து அருளிடும் உபய திருவடிதாமரையை நமது தலையில் சூட்டி |
| இழிவு கழிவு | நித்தியம் அல்லாததும் ஜடம் துக்க மயமான சம்சார பந்தம் நீங்கி |
| இதம் அகம் அறு | அகந்தை மமதை அற்று |
| அமிர்தம் உண்டு | அமிர்தம் உண்டு |
| எமது வடிவு சுகம் எனும் அவர் | நாம் ஆனந்தவடிவம் என்று கூறும் மாதர்கணங்களே |
| திறமின் | கதவைத் திறவுங்கள். |
| | |

தேக முதலாக கர்மத்தால் உண்டான எல்லா உலகப் பொருள்களும் அழியும் எனவும் இதிலும் மேலான பிரமபதவியை கொடுக்கும் எல்லாப் புண்ணிய கர்மங்களும் அதனது முடிவு காலத்தில் அழிந்து திரும்பவும் உண்டாகும் கடலினது அலையைப் போல் சலன

வடிவமான ஆறு சமயங்களும் சண்டையிட்டுக் கொள்வனவாம் எனவும் இவைகளனைத்தையும் நீக்கி ஐயந்திரிபு அற இருந்து இருதய கமலம் நன்றாகக் கசிந்து உருகி நமது பிரான் இங்கே கருணையால் வந்து அருளிடும் உபய திருவடிதாமரையை நமது தலையில் சூட்டி நித்தியம் அல்லாததும் ஜடம் துக்க மயமான சம்சார பந்தம் நீங்கி அகந்தை மமதை அற்று அமிர்தம் உண்டு நாம் ஆனந்தவடிவம் என்று கூறும் மாதர்கணங்களே கதவைத் திறவுங்கள்.

**12. மருவு குணமொடு மலமது கழியவு**
**மலரு மிருவினை மயலது பறியவு**
**மகிழ்வு மடிவற வொருபொறை யணையவு**
**மநனு நினைவரு மிடமது நினையவு,**

**மருவ வுருவன தடிதலை யமரவு**
**மயர்வு நினைவறு மறிவது நிகழவு**
**மடைய வொழிவறு மதனிலை திதிபெறு**
**மமிர்து பருகிடு மவர்கடை திறமினோ.**

| | |
|---|---|
| மருவு குணமொடு மலமது கழியவும் | விளக்கம், சஞ்சலம், மயக்கம் பொருந்திய சத்துவாதி குணங்களுடன் அதனால் வரும் காமம் வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களும் நீங்கவும், |
| மலரும் இருவினை மயலது யறியவும் | மிகுந்த புண்ணிய பாவ கருமங்களால் உண்டாகும் சுக துக்கமானது நீங்கவும், |
| மகிழ்வு மடிவற ஒரு பொறை யணையவும் | சந்தோஷமும் துக்கமும் நீங்க ஒப்பற்ற பொறுமை நம்மிடம் வந்து சேரவும், |
| மனனும் நினைவருமிடமது நினையவும் | மனமானது நினைக்க முடியாத நான்காவதாகிய துரிய அறிவு வடிவத்தில் நிலைக்கவும், |
| அருவவுருவனது அடிதலை யமரவும் | அருவனாயும் உருவனாயும் உள்ள குருமூர்த்தியினது திருவடி மலர் தங்களது சிரசில் பொருந்தவும், |
| அயர்வு நினைவறு மறிவது நிகழவும் | இருப்பு இன்மை என்னும் விளிப்பு, துயில், கடந்த சுத்த ஞான நிலையென்னும் துரியமதில் நான்காவது நிலையில் விளங்கும் சொரூபமாக விளங்கவும், |
| அடைய வொழிவறு மதனிலை திதி பெறும் | அனைத்து நீங்கவும் அறிவினிடத்து நிலைபேறு பெற்று |
| அமிர்தது பருகிடு மவர் | அதனால் உண்டான அமிர்தத்தை அருந்தி இருக்கும் மாதர்கணங்களே |
| கடை திறமினோ | கதவைத் திறவுங்கள். |

விளக்கம், சஞ்சலம், மயக்கம் பொருந்திய சத்துவாதி குணங்களுடன் அதனால் வரும் காமம் வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களும் நீங்கவும், மிகுந்த புண்ணிய பாவ கருமங்களால் உண்டாகும் சுக துக்கமானது நீங்கவும், சந்தோஷமும் துக்கமும் நீங்க ஒப்பற்ற பொறுமை நம்மிடம் வந்து சேரவும், மனமானது நினைக்க முடியாத நான்காவதாகிய துரிய அறிவு வடிவத்தில் நிலைக்கவும், அருவனாயும் உருவனாயும் உள்ள குருமூர்த்தியினது திருவடி மலர் தங்களது சிரசில் பொருந்தவும், இருப்பு இன்மை என்னும் விளிப்பு, துயில், கடந்த சுத்த ஞான நிலையென்னும் துரியமதில் நான்காவது நிலையில் விளங்கும் சொரூபமாய் விளங்கவும், அனைத்து நீங்கவும் அறிவினிடத்து நிலைபேறு பெற்று அதனால் உண்டான அமிர்தத்தை அருந்தி இருக்கும் மாதர்கணங்களே கதவைத் திறவுங்கள்.

**13. உலகம நித்தமெனா வுணர்வது நித்தமெனா**
**வுருவரு வற்றவரோ ருருவு தனைக்கொடுநுங்**
**கலகம நத்திடையே யிலகமு தற்பகருங்**
**கலைகளை விட்டெறிவீர் கடைதிற மின்றிறமின்.**

| | |
|---|---|
| உலகம் அநித்தம் எனா | உலகப் பொருட்கள் அனைத்தும் அழியக்கூடியவைகளேயாகும் என்றும் |
| உணர்வது நித்தம் எனா | இவைகளுக்கெல்லாம் ஆதாரமாக அறிவு வடிவ ஆன்மாவே நித்தியமெனவும் |
| உருவருவற்றவர் ஓர் உருவுதனைக் கொடு | உருவமென்றும் அருவமென்றும் சொல்ல முடியாத ஒப்பற்ற பரம்பொருள் ஒரு உருவத்தை எடுத்து வந்து |
| நுங்கலகமனத்திடையே இலக | உங்களுடைய மனதின் கண்ணே வந்து குடிகொண்டு விளங்க |
| முதல் பகரும் கலைகளை விட்டு எறிவீர் | அதனால் முன் ஆரம்ப நிலை கூறியபடி அப்பியாசம் செய்து வந்து பின் அவைகளை விட்டு உள்ள மகான்களே |
| கடை திறமின்றிறமின் | கதவைத் திறவுங்கள். |

எல்லா உலகப் பொருள்கள் அனைத்தும் அழியக்கூடியவைகளேயாகும் என்றும் இவைகளுக்கெல்லாம் ஆதாரமாக அறிவு வடிவ ஆன்மாவே நித்தியமெனவும் உருவமென்றும் அருவமென்றும் சொல்ல முடியாத ஒப்பற்ற பரம்பொருள் ஒரு உருவத்தை எடுத்து வந்து உங்களுடைய மனதின் கண்ணே வந்து குடிகொண்டு விளங்க அதனால் முன் ஆரம்ப நிலை கூறியபடி அப்பியாசம் செய்து வந்து பின் அவைகளை விட்டு உள்ள மகான்களே கதவைத் திறவுங்கள்.

**14. ஓதல றக்கணியா வொப்பில்ப ரம்பொருளே**
**யொருவடி வாகியெழுந் தருளுத லுன்னுதொறுங்**

**காதன்மி குத்துவரக் கண்பனி கொண்டுவரக்**
**கரையழி யன்புடையீர் கடைதிற மின்றிறமின்.**

| | |
|---|---|
| ஓதலறக்கணியா | உருவமும் பெயரும் இல்லாததினால் இப்படிப்பட்டதென்று வாக்கினால் கூற முடியாததும், தோற்றமில்லாததும் சுயமே பிரகாசமாய் இருப்பதினாலும் மனதினாலும் எண்ண முடியாததும் |
| ஒப்பில் பரம்பொருளே | ஆன ஒப்பற்ற பரம்பொருளே |
| ஒருவடிவாகி எழுந்தருளுதல் உன்னுதொறும் | ஒரு வடிவத்தை எடுத்து வந்ததை நினைக்கும் போதெல்லாம் |
| காதன்மிகுந்து வரக் | அன்பு ததும்பி வரவும் |
| கண் பனி கொண்டு வர | கண்களில் ஆனந்த நீர் பெருகவும் |
| கரையழிஅன்புடையீர் | அளவின்றிய பக்தியை உடைய மாதர்கணங்காள் |
| கடை திறமின் | கதவைத் திறவுங்கள். |

உருவமும் பெயரும் இல்லாததினால் இப்படிப்பட்டதென்று வாக்கினால் கூற முடியாததும், தோற்றமில்லாததும் சுயமே பிரகாசமாய் இருப்பதினாலும் மனதினாலும் எண்ண முடியாததும் ஆன ஒப்பற்ற பரம்பொருளே ஒரு வடிவத்தை எடுத்து வந்ததை நினைக்கும் போதெல்லாம் அன்பு ததும்பி வரவும் கண்களில் ஆனந்த நீர் பெருகவும் அளவின்றிய பக்தியை உடைய மாதர்கணங்காள் கதவைத் திறவுங்கள்.

**15. ஆவியி னுக்குயிரா மாரண னோருருவா**
**யவனியில் வந்தருளும் பவநிவி ரைந்துதொழா**
**வோவிய மொத்திடநின் றுரையுணர் வொன்றொழியா**
**தும்மையொ ழிந்திடவே வொழிவறு வீர்திறமின்.**

| | |
|---|---|
| ஆவியினுக்குயிராம் ஆரணன் | உயிருக்குயிராய் உள்ள வேதங்களால் நிச்சயிக்கப்பட்ட பரமேஸ்வரன் |
| ஓருருவாய் அவனியில் வந்தருளும் பவனி | ஒப்பற்ற அருளுறுவாய் இவ்வுலகின் கண்ணே எழுந்தருளிவந்து அனுக்கிரஹம் புரியும் திருவிழாவானதை அறிந்து (பூமிக் கிரமங்களை) |
| விரைந்துதொழா | அதி சீக்கிரமாகத்தானே கடந்து சென்று வணங்கி |
| ஓவியமொத்திட நின்று | சித்திரப் பதுமையைப்போல் இருந்து |
| உரையுணர்வு ஒன்றொழியாது | வாக்கும் மனம் முதலிய சர்வமும் கடந்து |
| உம்மையொழிந்திட | ஜீவத்துவத்தை விட்டு |
| ஒழிவு அறுவீர் | நீக்கமின்றி எங்கும் நிறைந்திருப்பவர்களே பரிபூர்ண பிரம்ம |

| | |
|---|---|
| | திருஷ்டியை உடைய மகான்களே |
| திறமின் | கதவைத் திறவுங்கள். |

உயிருக்குயிராய் உள்ள வேதங்களால் நிச்சயிக்கப்பட்ட பரமேஸ்வரன் ஒப்பற்ற அருளுருவாய் இவ்வுலகின் கண்ணே எழுந்தருளிவந்து அனுக்கிரஹம் புரியும் திருவிழாவானதை அறிந்து (பூமிக் கிரமங்களை) அதி சீக்கிரமாகத்தானே கடந்து சென்று வணங்கி சித்திரப் பதுமையைப்போல் இருந்து வாக்கும் மனம் முதலிய சர்வமும் கடந்து ஜீவத்துவத்தை விட்டு நீக்கமின்றி எங்கும் நிறைந்திருப்பவர்களே பரிபூர்ண பிரம்ம திருஷ்டியை உடைய மகான்களே கதவைத் திறவுங்கள்.

**16. பொருளையே கருதிவெம் புலன்வழிச் செல்லுமென்**
**புன்மையே கண்டுவந் திம்மையே யருள்பெருங்**
**கருணையே யுடையவன் கழனினைந் திடுதொறுங்**
**கரையழிந் துளநெகுங் காதலீர் திறமினோ.**

| | |
|---|---|
| பொருளையே கருதி | தனாதி விஷயங்களையே நினைப்பவனாய் |
| வெம்புலன் வழிசெல்லும் | கொடிய புலன்வழிச் செல்லும் |
| என்புன்மையே கண்டு | எனது இழிந்த செய்கைகளை அறிந்திருந்தும் |
| இம்மையே வந்து | இவ்வுலகத்தில் ஒப்பற்ற திருவுருவம் தாங்கிவந்து |
| அருள் | அனுக்கிரகம் செய்யும் |
| பெருங்கருணையேயுடையவன் கழல் | மிகுந்த கருணாமூர்த்தியினது பாதத்தை |
| நினைத்திடுதொறும் | நினைக்கும் தோறும் |
| கரையழிந்து | அளவின்றி |
| உளம் நெகுங்காதலீர் | உள்ளம் நெகிழ்ந்து கசியும் அன்புடையீர் |
| திறமின் | கதவைத் திறவுங்கள். |

தனாதி விஷயங்களையே நினைப்பவனாய் கொடிய புலன்வழிச் செல்லும் எனது இழிந்த செய்கைகளை அறிந்திருந்தும் இவ்வுலகத்தில் ஒப்பற்ற திருவுருவம் தாங்கிவந்து அனுக்கிரகம் செய்யும் மிகுந்த கருணாமூர்த்தியினது பாதத்தை நினைக்கும் தோறும் அளவின்றி உள்ளம் நெகிழ்ந்து கசியும் அன்புடையீர் கதவைத் திறவுங்கள்.

**17. நம்மையா ளுடையநா யகனையே நனவிலுங்**
**கனவிலு நவிலுமா றன்றிவே றொன் றுநஞ்**
**செம்மையா னதுதெரிந் திடுதல்கண் டிலமெனத்**
**தெரியுமா தரவினீர் கடைதிறந் திறமினோ.**

| | |
|---|---|
| நம்மையாளுடைய நாயகனையே | பசுக்களாகிய நம்மை ஆட்கொண்டருளிய பதியையே (குருமூர்த்தியினது கருணையே) |
| நனவிலும் கனவிலும் நவிலுமாறன்றி | நனவிலும் கனவிலும் துதிப்பதே அல்லாமல் |
| வேறொன்று நம் செம்மையானது தெரிந்திடுதல் கண்டிலம் | அதற்கன்னியமாக நமது அழகிய பரமான்ம சொரூபத்தை அறிவுறுத்த வல்ல சாதனத்தைக் காண்கின்றிலம் |
| எனத் தெரியும் ஆதரவினீர் கடை திறந்திறமினோ | என்று அறிந்த மிகுந்த பேரன்புடையீர் கதவைத் திறவுங்கள், திறவுங்கள் |

பசுக்களாகிய நம்மை ஆட்கொண்டருளிய பதியையே (குருமூர்த்தியினது கருணையே) நனவிலும் கனவிலும் துதிப்பதே அல்லாமல் அதற்கன்னியமாக நமது அழகிய பரமான்ம சொரூபத்தை அறிவுறுத்த வல்ல சாதனத்தைக் காக்கிண்றிலம் என்று அறிந்த மிகுந்த பேரன்புடையீர் கதவைத் திறவுங்கள், திறவுங்கள்

**18. விழியாலுல கழியாவெறு முணர்வாய்விடும் வகையா**
**லொழியாவமிர் துண்பீரும துயர் பொற்கடை திறமின்.**

| | |
|---|---|
| விழியால் | நிறைந்த ஞானப்பார்வையால் |
| உலகு | உலகனைத்தையும் |
| அழியா | அழித்து |
| வெறுமுணர்வாய் விடும் வகையால் | தனித்த ஒப்பற்ற சித்வடிவமாக மிஞ்சியிருப்பதால் |
| ஒழியாவமிர்து உண்பீர் | நீக்கமின்றி நிறைந்த முக்தி இன்பம் அடைந்து புசிக்கும் மாதர்கணங்காள் |
| பொற்கடை திறமின் | உங்களது மேலான பொன்னாலாய கதவைத் திறவுங்கள். |

நிறைந்த ஞானப்பார்வையால் உலகனைத்தையும் அழித்து தனித்த ஒப்பற்ற சித்வடிவமாக மிஞ்சியிருப்பதால் நீக்கமின்றி நிறைந்த முக்தி இன்பம் அடைந்து புசிக்கும் மாதர்கணங்காள் உங்களது மேலான பொன்னாலாய கதவைத் திறவுங்கள்.

**19. அளவு கண்டிட வரிய பங்கய நயநம் வந்தும தாவியைக்**
**களவு கொண்டிட வுருகுகின்றவர் கநக நன்கடை திறமினோ.**

| | |
|---|---|
| அளவு கண்டிட வரிய | இவ்வளவென்று அளவிட முடியாத அருமையாகிய |
| பங்கய நயனம் வந்து | தாமரைபோன்ற திருவிழி கிருபாநோக்கம் வந்து |

| | |
|---|---|
| உமது ஆவியை களவுகொண்டிட | உமது ஆவியை அபகரித்துச் செல்லும் |
| உருகுகின்றவர் | அதனால் உருகுகின்ற மனத்தையுடைய மாதர்கணங்களே |
| கனக நன்கடை திறமினோ | சொர்ணமயமாய சிறந்த கதவைத்தானே திறவுங்கள். |

இவ்வளவென்று அளவிட முடியாத அருமையாகிய தாமரைபோன்ற திருவிழி கிருபாநோக்கம் வந்து உமது ஆவியை அபகரித்துச் செல்லும் அதனால் உருகுகின்ற மனத்தையுடைய மாதர்கணங்களே சொர்ணமயமாய சிறந்த கதவைத்தானே திறவுங்கள்.

**20. அழுந்த வாகமி ரண்டு மொன்றுற வழிவிலானொடு தழுவிமுன்
பிழந்த நாளைநி னைந்துபோதவி ரங்கு வீர்கடை திறமினோ.**

| | |
|---|---|
| ஆகம் இரண்டும் ஒன்றுற அழுந்த | துவம்பத லக்ஷியவிரத்தியகான்மவடிவமும் தத்பதலக்ஷிய பிரமவடிவமும் பிரிவின்றி அபேதத்தையடைய |
| அழிவிலானொடுதழுவி | தத்பத லக்ஷிய பிரமத்துடன் துவம்பதலக்ஷிய பிரத்தியகான்மா ஐக்கியத்தை (ஏகைகபாவத்தை)யடைந்து |
| முன்பிழந்த நாளை நினைந்த போது இரங்குவீர் | சுக சொரூபமான பூர்வம் சென்ற தினங்களை நினைக்குந்தோறும் ஆ! எண்ணிலா) காலம் அவமே விடுத்தனம் எண்ணரிதே என்று மிகவும் இரங்குகின்ற மாதர்கணங்களே |
| கடைதிறமின் | கதவைத்திறவுங்கள். |

துவம்பத லக்ஷியவிரத்தியகான்மவடிவமும் தத்பதலக்ஷிய பிரமவடிவமும் பிரிவின்றி அபேதத்தையடைய தத்பத லக்ஷிய பிரமத்துடன் துவம்பதலக்ஷிய பிரத்தியகான்மா ஐக்கியத்தை (ஏகைகபாவத்தை)யடைந்து சுக சொரூப பூர்வம் சென்ற தினங்களை நினைக்குந்தோறும் ஆ! எண்ணிலா) காலம் அவமே விடுத்தனம் எண்ணரிதே என்று மிகவும் இரங்குகின்ற மாதர்கணங்களே கதவைத்திறவுங்கள்.

கருத்துரை: இந்தச் சரீரத்தில் நான் என்ற சொல்லின் பொருளாய் மூன்று தேகம் மூன்று நிலைகள் மூன்று காலம் இவைகளுக்கு வேறாகவுள்ள சீவன் ஆசை கோபம் முதலியவற்றை விட்டு சிவமாகிய பரம்பொருளுடன் ஒன்றாயிருக்க எங்கும் நிறைந்த சுயம் பிரகாச இருப்பு ஒளி இன்பமயமான இறைவனுடன் ஒன்றாக இருக்கும்போது முன்னே வீணாக காலம்கழித்தோமே என்று ஏங்குகிற மாதர்களே கதவைத்திறவுங்கள் என்பதாம்.

**21. ஒழித்தே யுள்ள முணர்வடையவொழியா வொருவன் வருமளவும்**

**விழித்தே யுறங்கும் விளங்கிழையீர் மேவுங் கபாடந் திறமினோ.**

| | |
|---|---|
| உணர்வடைய உள்ளம் ஒழித்தே | சித்து வடிவத்தை அடைவதற்கு மனதை உள்முகமாக திருப்பி அழித்து |
| ஒழியா ஒருவன் வருமளவும் | எங்கும் நிறைந்த பரம்பொருளை அடையும்வரை |
| விழித்தேயுறங்கும் விளங்கிழையீர் | நனவில் துயில் என்னும் நிலையை அதாவது அரிதுயில் என்னும் நிலையை அடைந்து கருணை முதலிய நற்குணங்கள் நிறைந்த மாதர்கணங்களே |
| மேவுங் கபாடந்திறமினோ | பொருந்தியுள்ள கதவைத் திறவுங்கள். |

சித்து வடிவத்தை அடைவதற்கு மனதை உள்முகமாக திருப்பி அழித்து எங்கும் நிறைந்த பரம்பொருளை அடையும்வரை நனவில் துயில் என்னும் நிலையை அதாவது அரிதுயில் என்னும் நிலையை அடைந்து கருணை முதலிய நற்குணங்கள் நிறைந்த மாதர்கணங்களே பொருந்தியுள்ள கதவைத் திறவுங்கள்.

**22. உருநாம மொன்றுமிலா வொளிகருணா கரனென்னுந்**
**திருநாமம் பெறவந்த திறம் பாடத் திறமினோ.**

உருநாமமொன்றுமிலா என்பதற்குதாரணம் திருவாசகம். ஒரு நாமம், ஓர் உருவம் ஒன்றுமில்லார்க்கு ஆயிரந் திருநாமம் பாடி நாம் தெள்ளேனம் கொட்டாமோ எனவும்.

| | |
|---|---|
| உருநாம மொன்றுமிலாவொளி | மேலான பார்வையில் ஒரு பெயரும், உருவமும் இல்லாத செயஞ்சோதியான் |
| கருணாகரனென்னும் திருநாமம் பெற | இறைவன் கருணைக்கு இருப்பிடமாக உள்ளவன் என்று சொல்லும்படி அழகிய பெயரைப் பெற்று |
| வந்த திறம் பாடத் திறமினோ | இங்கே எழுந்தருளி வந்த திறத்தை பாடிட கதவைத் திறவுங்கள். |

மேலான பார்வையில் ஒரு பெயரும், உருவமும் இல்லாத செயஞ்சோதியான் இறைவன் கருணைக்கு இருப்பிடமாக உள்ளவன் என்று சொல்லும்படி அழகிய பெயரைப் பெற்று இங்கே எழுந்தருளி வந்த திறத்தை பாடிட கதவைத் திறவுங்கள்.

**23. தரணியில் வந்த பெருமானார் தாளிணை சூடி யஞ்ஞவதைப்**
**பரணியை யின்றென் வாயாரப் பாடக்க பாடந் திறமினோ.**

நம்முடைய குருமூர்த்தியினது கிருபாபலங்கொண்டு பாடுவதேயல்லாது எனது புத்திவலிகொண்டு பாடவில்லை என்பதாம்—இதனால் அவையடக்கம் கூறப்பெற்றதாயிற்று.

| | |
|---|---|
| தரணியில் வந்த பெருமானார் தாளினைச் சூடி | பூமியின் கண் அருளே வடிவாய் வந்த குருமூர்த்தியினுடய இரண்டு பாதங்களை என் சிரசுக்கு கிரீடமாகத் தரித்து |
| அஞ்ஞவதைப்பரணியை | அஞ்ஞவதைப் பரணி என்ற இந்த ஞான நூலினை |
| இன்று | இப்பொழுது |
| என் வாயாரப் பாட | எனது வாக்கால் துதிப்பதற்கு |
| கபாடந் திறமினோ | கதவைத் திறவுங்கள். |

நம்முடைய குருமூர்த்தியினது கிருபாபலங்கொண்டு பாடுவதேயல்லாது எனது புத்திவலிகொண்டு பாடவில்லை என்பதாம்—இதனால் அவையடக்கம் கூறப்பெற்றதாயிற்று.

பூமியின் கண் அருளே வடிவாய் வந்த குருமூர்த்தியினுடய இரண்டு பாதங்களை என் சிரசுக்கு கிரீடமாகத் தரித்து அஞ்ஞவதைப் பரணி என்ற இந்த ஞான நூலினை இப்பொழுது எனது வாக்கால் துதிப்பதற்கு கதவைத் திறவுங்கள்.

——————————

# 3. காடு (புறங்காடு)

அவதாரிகை: இப்படி ஞானவேந்தன் தனது மனைவிகளென்றுகூறிய மஹான்கள் பாற்றெரிவித்து யுத்தத்திற்குப் புறப்பட்டுச் செல்லுழி வழியிலுள்ள காடு–சம்சார ஆரணியம் கடத்தல் எப்படிப் பிரசித்தமாய காட்டில் அம்பாள், கோவில், பேய், கல், மரம், தீ இவை முதலியனவிருக்குமோ அப்படி இந்தச் சம்சாரமாகிய ஆரணியத்திலும் அம்பிகையும் கோவிலும் பேயும் கல்லும் மரமும் தீயும் இருப்பதை வர்ணித்தல்.

**1. குறியுறா வறிவுதா னிறைவிதன் கோலமே**
**குறுகுவா ருளமெலா மவள்பெருங் கோயிலே**
**யறிஞர்வா ழிடமலா தழனெடுங் காநமே**
**யறிவிலா வவையெலா மடையவும் பேய்களே.**

1. சுட்டுதற்கரிய என்பதற்குதாரணம்–சிவப்பிரகாசர். சுட்டுதற்கரிய நின்னை மெய்ஞ்ஞான சொரூபி என்று அருமறையனைத்தும் கூறு எனவும்

2. அறிஞர் வாழ் இடம் அலாது என்பதற்குதாரணம் ஞானவாசிட்டம்:

**எவ்விடத் தில்லை நல்ல ஞாநிகளா**
**மீர்ங்கனி மலர்குளிர் சோலை**
**யவிவிடங் கானன் மேடதா மாங்கே**
**யமர்பவ ரறிவிலா ரன்றோ**
**கவ்விய செல்வ நட்பு நூல் சுற்றங்**
**கருமமா திகளெலா முதவாச்**
**செவ்விய மநமே யுதவுறல் வேண்டுஞ்**
**சீவனைச் செல்கதி யேற்ற.**

| | |
|---|---|
| குறியயுறாவறிவுதான் | சுட்டுதற்குறிய அடையாளமின்றிய சித்வடிவ சாட்சாத் அந்த மஹேஸ்வரியின் வடிவம் |
| இறைவிதன் கோலம் | அந்த மஹேஸ்வரியினது சொரூபம் |
| கறுகுவார் உளமெலாம் | தனது வடிவமாக அறிந்த ஞானிகளது இருதயமெல்லாமே |
| அவள் பெருங்கோயிலே | அந்த மஹேஸ்வரியின் கோவிலாம். |
| அறிஞர்வாழ் இடம் அலாது | மகான்கள் வசிக்கும் இடமல்லாத மற்ற இடங்களெல்லாம் |
| அழல்னெடும்கானமே | வெப்பம் பொருந்திய பாலைவனமாகும். |
| அறிவிலா வவையெலாம் | ஆன்மா அனான்மா விவேகமின்றிய ஜீவர்களெல்லாம் |
| அடையவும் பேய்களே | அந்தக் காட்டில் வசிக்கின்ற பேய்கள் ஆகும். |

**1.** சுட்டுதற்கரிய என்பதற்குதாரணம்—சிவப்பிரகாசர். சுட்டுதற்கரிய நின்னை மெய்ஞான சொரூபி என்று அருமறையனைத்தும் கூறு எனவும்

**2.** அறிஞர் வாழ் இடம் அலாது என்பதற்குதாரணம் ஞானவாசிட்டம்:

**எவ்விடத் தில்லை நல்ல ஞாநிகளா**
**மீர்ங்கனி மலர்குளிர் சோலை**
**யவிவிடங் கானன் மேடதா மாங்கே**
**யமர்பவ ரறிவிலா ரன்றோ**
**கவ்விய செல்வ நட்பு நூல் சுற்றங்**
**கருமமா திகளெலா முதவாச்**
**செவ்விய மநமே யுதவுறல் வேண்டுஞ்**
**சீவனைச் செல்கதி யேற்ற.**

சுட்டுதற்குறிய அடையாளமின்றிய சித்வடிவ சாட்சாத் அந்த மஹேஸ்வரியின் வடிவம் அந்த மஹேஸ்வரியினது சொரூபமாய் தனது வடிவமாக அறிந்த ஞானிகளது இருதயமெல்லாமே அந்த மஹேஸ்வரியின் கோவிலாம். மகான்கள் வசிக்கும் இடமல்லாத மற்ற இடங்களெல்லாம் வெப்பம் பொருந்திய பாலைவனமாகும். ஆன்மா அனான்மா விவேகமின்றிய ஜீவர்களெல்லாம் அந்தக் காட்டில் வசிக்கின்ற பேய்கள் ஆகும்.

**2.** **மறையெலா மறைவதா கியபரஞ் சோதியோர்**
**வடிவதா யருளுமிப் பொருளெனுந் தேசுதா**
**னுறைவதா மகமுறா தலமரும் பேயெலா**
**முழல்வதா முலகமா மொருபுறங் கூறுவாம்.**

| | |
|---|---|
| மறையெலாம் அறைவதாகிய பரஞ்சோதி | வேதங்கள் எல்லாம் சொல்லப்பட்டு மேலான சுயஞ்சோதி சொரூபம் |
| ஓர்வடிவதா யருளும் இப்பொருளெனுந் தேசுதான் | ஒப்பற்ற திருவுருவம் தாங்கி அனுக்கிரகம் செய்ய பரமாத்மாவென்னும் சுயஞ்சோதியை |
| உறைவதாம் அகமுருது | (நேரே) அடையும் பக்குவமில்லாமல் |
| அலமரும் பேயெல்லாம் | பிரமை கொண்டு சுழன்று கூத்தாடித் திரிகின்ற பேய்கள் |
| உழல்வதாம் | சஞ்சரிக்கும் |
| உலகமாம் | உலகமாகிய |
| ஒருபுறங் கூறுவாம் | ஒரு பாகத்தை எடுத்துச் சொல்வாம். |

வேதங்கள் எல்லாம் சொல்லப்பட்டு மேலான சுயஞ்சோதி சொரூபம் ஒப்பற்ற திருவுருவம் தாங்கி அனுக்கிரகம் செய்ய பரமாத்மாவென்னும் சுயஞ்சோதியை (நேரே) அடையும் பக்குவமில்லாமல் பிரமை கொண்டு சுழன்று கூத்தாடித் திரிகின்ற பேய்கள் சஞ்சரிக்கும் உலகமாகிய ஒரு பாகத்தை எடுத்துத் சொல்வாம்.

(காட்டிலுள்ள கல்லும் மரமும் காட்டுத்தீயும் சூராவளி காற்றும் இவைதான் என உணர்த்துகின்றார்)

**3. கல்லுங் கயவோர் மநமே யவர்தங்**
**கண்ணே மரமு மவர்தண் மையறச்**
**சொல்லு முரையே சுடுதீ யிடர்சேர்**
**சூறா வளிமற் றவர்தந் தொழிலே**

| | |
|---|---|
| கயவோர் மனமே கல்லும் | விவேகம் இல்லாதவர் மனமே கல்லாம். |
| அவர் தங்கண்ணே மரமும் | மேல்நோக்கான பார்வையையுடைய கயவர்களது கண்கள் மரமாம். (இரக்கமற்றவர்கள் என்பதாம்) |
| அவர் தன்மையறச் சொல்லுமுறையே சுடுதீ | கயவர்கள் கூறும் வன்சொல்லே தீயாம். |
| மற்று அவர் தன் தொழிலே சூறாவளி | அவர்களது செய்கை அனைத்தும் சூறாவளிக்காற்றுக் கொப்பாகும். பிறர்க்குத் துன்பமாம். |

விவேகம் இல்லாதவர் மனமே கல்லாம். மேல்னோக்கான பார்வையையுடைய கயவர்களது கண்கள் மரமாம். (இரக்கமற்றவர்கள் என்பதாம்) கயவர்கள் கூறும் வன்சொல்லே தீயாம். அவர்களது செய்கை அனைத்தும் சூறாவளிக்காற்றுக் கொப்பாகும். பிறர்க்குத் துன்பமாம்.

**4. செயிரைச் சுடவல் லவர்தம் மளவுஞ்**
**செயிர்செய் பவர்சேர் வுறுதீ வநமீ**
**துயிரைச் சுடவல் லதுவெவ் வழலோ**
**வோரா விவர்த முரையன் றியுமே,**

| | |
|---|---|
| செயிரைச் சுடவல்லவர் தம்மளவும் | கோபத்தையும் சர்வ துன்பங்களையும் போக்கவல்ல ஞானிகளாகிய தீர மஹான்களைக்கூட |
| செயிர் செய்பவர் | துன்பம் அடையும்படிச் செய்யும் கயவர்கள் வசிக்கின்ற |

| | |
|---|---|
| வேர்வுறு தீ வனமீது | கொடிய ஆரண்யத்தின்கண்ணே |
| உயிரைச் சுடவல்லது வெவ்வழலோ | சீவனுக்குத் துன்பத்தைக் கொடுத்துத் தஹிக்க வல்லது கொடிய நெருப்போ(அன்று) |
| ஓராவிவர்த முரை யன்றியுமே | ஆன்மானான்மவிசாரமில்லாத இக்கயவர்களது வசனமாய வன்சொல்லாம். |

கோபத்தையும் சர்வ துன்பங்களையும் போக்கவல்ல ஞானிகளாகிய தீர மஹான்களைக்கூட துன்பம் அடையும்படிச் செய்யும் கயவர்கள் வசிக்கின்ற கொடிய ஆரண்யத்தின்கண்ணே சீவனுக்குத் துன்பத்தைக் கொடுத்துத் தஹிக்க வல்லது கொடிய நெருப்போ(அன்று) ஆன்மானான்மவிசாரமில்லாத இக்கயவர்களது வசனமாய வன்சொல்லாம்.

5. **வெருவ வெரிசொரியும் விழியுமழல் பொழியுமால்**
**வெகுளி யெரிவிரவி மிகமிகவு மெரியுமா**
**லருவ வுபிருமிற வெரியுமன லதனில்வே**
**றனலு மிலதகில வுலகதனி னழலதே.**

| | |
|---|---|
| வெகுளியெரி | கோபாக்கினியானது மிகுந்து |
| வெருவ எரி சொரியும் | யாவரும் பயப்படும்படி அக்கினியை எவ்விடங்களிலும் வீசும் |
| விழியும் அழல் பொழியும் | அப்பொழுது கண்களில் நெருப்புப்பொறி சிந்தும் |
| மிகமிகவும் எரியும் | உள்ளிலும் புறனிலும் மிகமிகவுந் தகிக்கும் ஆனதால் |
| அருவவுயிரு மிற எரியும் அனலதின் | அதிசூட்சுமமான பிராணனையும் தகிக்கக்கூடிய கோபமாகிய அக்னியைக் காட்டிலும் |
| அருவவுயிருமிற எரியும் அனலதனின் | உலகத்தின்கண் அக்கினியிருக்கின்றது. |
| அகில உலக தனி அழலதே | சர்வ வுலகத்திலும் சம்சார ஆரண்யத்தின் கோப அக்கினியேயாம். |
| வேறு அனலுமிலது | இக்காட்டகத்தில் அதற்கந்நியமாக ஜீவனைத் துன்புறுத்தும் அக்கினி இல்லையாம். |

கோபாக்கினியானது மிகுந்து யாவரும் பயப்படும்படி அக்கினியை எவ்விடங்களிலும் வீசும் அப்பொழுது கண்களில் நெருப்புப்பொறி சிந்தும் உள்ளிலும் புறனிலும் மிகமிகவுந்தகிக்கும் ஆனதால் அதிசூட்சுமமான பிராணனையும் தகிக்கக்கூடிய கோபமாகிய அக்னியைக் காட்டிலும் உலகத்தின்கண் அக்கினியிருக்கின்றது. சர்வ வுலகத்திலும் சம்சார ஆரண்யத்தின் கோப அக்கினியேயாம். இக்காட்டகத்தில் அதற்கந்நியமாக ஜீவனைத் துன்புறுத்தும் அக்கினி இல்லையாம்.

(இந்தக் காட்டில் வசிக்கும் நரிகளைக் கூறுகின்றார்)

6. **தருவர் தருவதில ரெனநினையு மநமொடே**
**தமது தலைமைகெட வவரவர்கள் கடையிலே**
**யொருவர் தருமுணவு கருதியுழல் பவையில்வே**
**றுழலு ஞமலிகளு முளவுமல வுணரிலே.**

| | |
|---|---|
| தருவர் தருவதிலரென நினையும் மனமொடு | நமக்கு உணவு அளிப்பரோ அளிக்காரோ என்று சம்சயத்தால் வியாபிக்கப்பட்ட சித்தத்தையுடையவராய் |
| தமது தலைமை கெட | தங்களது பெருந்தன்மையும் கெடும்படி |
| அவரவர்கள் கடையிலே | கொடுப்பவர்களது வாயில் தோறும் சென்று |
| ஒருவர் தருமுணவு கருதி யழல்பவை | ஒருவர் கொடுக்கும் உணவையே எதிர்பார்க்கும் சிந்தனையுடன் உழன்றுதிரியும் நரிகளைக் காட்டிலும் |
| உணரில் | விசாரிக்குமிடத்து |
| வேறு உழலு ஞமலிகளும் உளவுமல | அதற்கந்நியமாக சுற்றித் திரியும் நரிகளும் இருக்கின்றனவா ?(இல்லை). |

நமக்கு உணவு அளிப்பரோ அளிக்காரோ என்று சம்சயத்தால் வியாபிக்கப்பட்ட சித்தத்தையுடையவராய் தங்களது பெருந்தன்மையும் கெடும்படி கொடுப்பவர்களது வாயில் தோறும் சென்று ஒருவர் கொடுக்கும் உணவையே எதிர்பார்க்கும் சிந்தனையுடன் உழன்றுதிரியும் நரிகளைக் காட்டிலும் விசாரிக்குமிடத்து அதற்கந்நியமாக சுற்றித் திரியும் நரிகளும் இருக்கின்றனவா ?(இல்லை).

(காடு மரம் பூக்காததும்,காய்க்காததும், பழம் தின்ன உதவாததும் ஆகிய மரங்களிருக்கின்றன).

7. **அணிகொ ளும்பர் தருவுநே ரருகர் பிண்டி மரமுநேர்**
**கணிக பங்க ரரசுநேர் கடிய காந மதனிலே.**

| | |
|---|---|
| கடிய கானமதனிலே | இந்த கொடிய சம்சார கானகத்தில் வனத்தில் |
| அணிகொள் உம்பர் தருவு நேர் | அழகுள்ளதும் விரும்பியதை கொடுப்பதும் ஆன கற்பக மரமும் இல்லை. கொடையென்பது அணுவளவும் இல்லை. |
| அருகர் பிண்டடி மரமுநேர் | சைனர்களால் வணங்கும் அசோக மரமும் இல்லை. ( அதாவது ஜீவகாருண்யம் சிறிதும் இல்லையென்பதாம்). |
| கணிகபங்கரரசு நேர் | க்ஷனிக விஞ்ஞானவாதிகளால் சேவிக்கப்படும் அரச மரமும் இல்லையாம் (அதாவது) சித்ஜடவிவேகம் (பகுத்தறிவு) கொஞ்சமும் இல்லையாம். |

இந்த கொடிய சம்சார கானகத்தில் வனத்தில் அழகுள்ளதும் விரும்பியதை கொடுப்பதும் ஆன கற்பக மரமும் இல்லை. கொடையென்பது அணுவளவும் இல்லை. சைனர்களால் வணங்கும் அசோக மரமும் இல்லை. ( அதாவது ஜீவகாருண்யம் சிறிதும் இல்லையென்பதாம்). க்ஷனிக விஞ்ஞானவாதிகளால் சேவிக்கப்படும் அரச மரமும் இல்லையாம் (அதாவது) சித்ஜடவிவேகம் (பகுத்தறிவு) கொஞ்சமும் இல்லையாம்.

(எப்படிப்பிரசித்தமான கொடிய கருவேலமரம் வளர்ந்து அடர்ந்த காடானது தூரத்தில் சோலைபோலும் தன்னை நெருங்கியவர்களுக்கு கொடிய வெப்பந்தந்ததுவான் போன்ற முற்களால் நிறைந்து பிரயோஜனமின்றிக் காய்ந்துளதோ அப்படி இந்தச் சம்சார வனமும் உளது எனக் கூறுகின்றார்.)

**8. நீளத்திற் சோலையா நெடுந்தா பத்தா**
**னிழலெனவந் தடைந்தவர்க்கு நெருப்பே யாகி**
**வாளொத்த முட்சரித்து வறிதே காய்க்கும்**
**வன்பாகுங் கருவேலை வளர்க்குங் காநம்.**

| | |
|---|---|
| நீளத்தில் சோலையாம் | நீண்ட தூரத்தில் (விசாரமின்றி) பார்க்கும்போது மிகரமணீயமாயும் சோலையாயும் |
| நெடுந்தாபத்தால் நிழலென வந்தடைந்தவர்க்கு நெருப்பேயாகி | இருக்கும் மிகுந்த தாபத்தால் (தெய்வத்தாலும் பிராணிகளினாலும் தன்னாலும்) உண்டாகும் மூன்றுவித துக்கமும் தாங்க முடியாமல் அதை நீக்கிக் கொள்ளும் பொருட்டு மேலான குளிர்ச்சியை கொடுக்கும் நிழல் எனக்கருதி தன்னை வந்து அண்டினவர்களுக்கு மிகுந்த துக்கத்தைதரக் கூடியதாயும் |
| வாளொத்த முட்சரித்து | வாளாயுதம் போன்ற (கடுஞ்சொல் கூறல் காமாதி முதலான) முட்கள் நிறைந்து (உதிர்ந்து) |
| வறிதே காய்க்கும் | ஒரு பிரயோஜனமும் இல்லாமல் பிள்ளைகளைப் பெற்றவர்க்கும் |
| வன்பாகுங் கருவேலை | மிகவும் கொடிதாகிய கருக்குழி வேலை |
| வளர்க்குங் கானம் | அதிகமாக இரவு பகலாக வளர்த்து விருத்தி செய்து வரும் இந்த சம்சார வனமும். |

நீண்ட தூரத்தில் (விசாரமின்றி) பார்க்கும்போது மிகரமணீயமாயும் சோலையாயும் இருக்கும் மிகுந்த தாபத்தால் (தெய்வத்தாலும் பிராணிகளினாலும் தன்னாலும்) உண்டாகும் மூன்றுவித துக்கமும் தாங்க முடியாமல் அதை நீக்கிக் கொள்ளும்

பொருட்டு மேலான குளிர்ச்சியை கொடுக்கும் நிழல் எனக்கருதி தன்னை வந்து அண்டினவர்களுக்கு மிகுந்த துக்கத்தைதரக் கூடியதாயும் வாளாயுதம் போன்ற (கடுஞ்சொல் கூறல் காமாதி முதலான) முட்கள் நிறைந்து (உதிர்ந்து) ஒரு பிரயோஜனமும் இல்லாமல் பிள்ளைகளைப் பெற்றவர்க்கும் மிகவும் கொடிதாகிய கருக்குழி வேலை அதிகமாக இரவு பகலாக வளர்த்து விருத்தி செய்து வரும் இந்த சம்சார வனமும்.

**9. ஆராத வருந்துலும் புணர்ப்பு மாகு**
**மாயாமல் வருந்தோற்ற மம்பென் றோடிப்**
**பேராசை மான்செல்லச் செல்லப் போகும்**
**பேய்த்தேரே யெம்மருங்கும் பெருகுங் காநம்.**

| | |
|---|---|
| ஆயாமல் வருந்தோற்ற அம்பொன்றோடி | எப்படி மானானது சூரிய வெப்பத்தால் கழற்நிலத்தில் தோன்றும் கானல் நீரை அறியாமல் தண்ணீர் என்று நம்பி ஓடி களைத்ததைப்போல |
| பேராசை மான் செல்லச் செல்லப் போம் | அளவிறந்த ஆசையோடு கூடிய ஜீவர்களான மான்கள் போகப்போகப் போய்க்கொண்டேயிருக்கும் |
| ஆராத அருந்துதலும் புணர்ப்பு மாகும் பேய்த்தேரே | அடைதியடையாத அருந்தல் பொருந்தல் என்ற கானல் நீராய பொய்த்தோற்றமே |
| எம்மருங்கும் பெருகும் கானம் | எங்கும் பெருகி உள்ள வனமாம். |

எப்படி மானானது சூரிய வெப்பத்தால் கழற்நிலத்தில் தோன்றும் கானல் நீரை அறியாமல் தண்ணீர் என்று நம்பி ஓடி களைத்ததைப்போல அளவிறந்த ஆசையோடு கூடிய ஜீவர்களான மான்கள் போகப்போகப் போய்க்கொண்டேயிருக்கும் அடைதியடையாத அருந்தல் பொருந்தல் என்ற கானல் நீராய பொய்த்தோற்றமே எங்கும் பெருகி உள்ள வனமாம்.

**10. செத்தபிண மிடுகாடு சுடுகா டென்று**
**செப்புவர்க ளறியாதார் சிலர்தன் னெஞ்சத்**
**தொத்ததுதா முணராதுண் டுடுத்து வாழு**
**முயிரோடும் பிணம்பயில்கா டொழியவிட்டே.**

| | |
|---|---|
| நெஞ்சத்து ஒத்தது தாமுணராது | சத்துவகுணமனத்தின்கண் தனது ஆன்மாவாகப்பொருந்தியிருக்கும் பரமாத்மாவை நேரே அறியாமல் |
| உண்டு உடுத்து வாழும் | உணவாதியை உண்டும் நல்ல ஆடைகளைத் தரித்தும் |

| | |
|---|---|
| | இதுவே எனக்குப் போதும் என்று களிப்படைந்து ஜீவிக்கும் |
| உயிரோடும் பிணம்பயில் காடு ஒழிய விட்டு | பிராணனோடு கூட சஞ்சரிக்கும் நடைபிணங்கள் வாழும் வனத்தை சுடுகாடென்று சொல்வதைநீக்கிவிட்டு |
| அறியாதவர் சிலர் தாம் | விவேகம் இன்மையராகிய சிலபேர் |
| செத்த பிணம் இடுகாடு சுடுகாடென்று | உயிர் நீங்கிய பிணத்தை புதைத்தல் தஹித்தல் செய்யும் இடத்தை மயானமென்று |
| செப்புவர் | கூறுவர். |

சத்துவகுணமனத்தின்கண் தனது ஆன்மாவாகப்பொருந்தியிருக்கும் பரமாத்மாவை நேரே அறியாமல் உணவாதியை உண்டும் நல்ல ஆடைகளைத் தரித்தும் இதுவே எனக்குப் போதும் என்று களிப்படைந்து ஜீவிக்கும் பிராணனோடு கூட சஞ்சரிக்கும் நடைபிணங்கள் வாழும் வனத்தை சுடுகாடென்று சொல்வதைநீக்கிவிட்டு விவேகம் இன்மையராகிய சிலபேர் உயிர் நீங்கிய பிணத்தை புதைத்தல் தஹித்தல் செய்யும் இடத்தை மயானமென்று கூறுவர்.

**11. அறங்காட்டி லிருசெவிமீ தழற்காட்டி னாற்போலு மலகை வாழும்**
**புறங்காட்டிற் கொப்பதுமிப் புறங்காடே வேறுண்டோ புறம்புகூற.**

| | |
|---|---|
| அறங்காட்டில் | பெரியோர்கள் தர்மத்தைப் பற்றி போதிக்கில் |
| இரு செவிமீது | இரண்டு காதுகளிலும் |
| அழல் காட்டினால் போலும் | அக்கினியையெடுத்து வைத்ததுபோல் |
| அலகை வாழும் | கருதும் பேய்கள் வசிக்கும் |
| புறங்காட்டிற் கொப்பதும் | நகரத்திற்குப் புறம்பேயுள்ள காட்டிற்கு (மயானத்திற்கு) சமானமாவது |
| இப்புறங்காடே | இந்த உலகமாகிய சுடுகாடே |
| புறம்பு கூற வேறுண்டோ | அந்நியமாகச் சொல்வதற்கு வேறே இல்லையாம். |

பெரியோர்கள் தர்மத்தைப் பற்றி போதிக்கில் இரண்டு காதுகளிலும் அக்கினியையெடுத்து வைத்ததுபோல் கருதும் பேய்கள் வசிக்கும் நகரத்திற்குப் புறம்பேயுள்ள காட்டிற்கு (மயானத்திற்கு) சமானமாவது இந்த உலகமாகிய சுடுகாடே அந்நியமாகச் சொல்வதற்கு வேறே இல்லையாம்.

**12. வெய்யமற மறப்பொருத்த விடயமெனி**
**னெப்பொழுதும் வெறுத்து மெய்யை**
**யையமறத் துறந்தவர்க ளருவருத்த**

**திதுசுடுகாடாகை யன்றோ.**

| | |
|---|---|
| விடயம் வெய்ய மறம் அறப் பெறுத்த எனில் | சப்த முதலிய விஷயங்கள் எல்லாம் கொடிய பாபம் அதர்மம் மிகவும் அதிகரித்தனவாம் என்று சுருதி ஸ்மிருதி கூறுவதால் |
| எப்பொழுதும் வெறுத்து | விவேகமற்றவரிருக்கும் காடு எப்பவும் அசுத்தம், துக்கம், அநித்யம் என்று நிந்தித்து |
| ஐயமறத் துறந்தவர்கள் | சம்சயமின்றி விடுத்த மஹான்கள் |
| இது சுடுகாடாகையன்றோ | இது சுடுகாடுஆனதினாலல்லவா சரீரத்தை (இவ்வுலகை ) வாந்தி பண்ணிய உணவுக்குச் சமமாக அருவறுத்து விட்டார். |

சப்த முதலிய விஷயங்கள் எல்லாம் கொடிய பாபம் அதர்மம் மிகவும் அதிகரித்தனவாம் என்று சுருதி ஸ்மிருதி கூறுவதால் விவேகமற்றவரிருக்கும் காடு எப்பவும் அசுத்தம், துக்கம், அநித்யம் என்று நிந்தித்து சம்சயமின்றி விடுத்த மஹான்கள் இது சுடுகாடுஆனதினாலல்லவா சரீரத்தை (இவ்வுலகை ) வாந்தி பண்ணிய உணவுக்குச் சமமாக அருவறுத்து விட்டார்.

**13. தின்றாலுஞ் சிலரரிந்து தீற்றி னாலுந்**
**தீமையுறத் தீக்குள்ளே தள்ளி னாலுங்**
**கொன்றாலு மஞ்சாதார் தங்க ணெஞ்சிற்**
**குலைகுலைந்த திக்காடு கொடிதா யன்றோ.**

| | |
|---|---|
| சிலர் தின்னாலும் | சில மூடர்கள் சரீரத்தைக் கடித்தபோதிலும் |
| அரிந்து தீற்றினாலும் | (சிலர்) அரிந்து சில பாபிஷ்டர்கள் சரீரத்தை சின்னாபின்னமாக அரிந்த சிதறினபோதிலும் அல்லது அசுத்தமான (நாய் மாமிசம் போன்றவற்றைக் கொண்டு வந்து அரிந்து வாயில் வைத்து உண்ணும்படி துன்புறுத்தியபோதிலும் |
| தீமையுறத் தீக்குள்ளே தள்ளினாலும் | தஹித்தலால் துன்புறும்படி நெருப்பில் (திருநாவுக்கரசு சுவாமிகளை வீழ்த்தியது போல் வீழ்த்தியபோதிலும் |
| அஞ்ஞாதார் | பயப்படாத மனதையுடைய மஹான்களும், வஞ்சர் வேல்கொடு மார்பினெறியினும், எஞ்சவே தழன்மூடியெரியினும் நஞ்சினார் அழனாக நலியினும், அஞ்சிடாதவை ஆனந்தம் என்னும் (கீதையில் கூறிய) திடப்பிரஞ்ஞர்களாகிய மகான்களும்) |
| இக்காடு கொடியதாயன்றோ | இவ்வனம் கொடியதாயிருந்ததினாலல்லவா |
| தங்கள் நெஞ்சிற் குலை குலைந்தது | அந்நிய ஜீவர்களுக்குத் துன்புறுத்துதலைக் கண்ணுற்று சகியாதவராய் அதனால் தங்கள் மனதில் நடுநடுக்கமுற்றனர். |

சில மூடர்கள் சரீரத்தைக் கடித்தபோதிலும் (சிலர்) அரிந்து சில பாபிஷ்டர்கள் சரீரத்தை சின்னாபின்னமாக அரிந்த சிதறினபோதிலும் அல்லது அசுத்தமான (நாய் மாமிசம் போன்றவற்றைக் கொண்டு வந்து அரிந்து வாயில் வைத்து உண்ணும்படி துன்புறுத்தியபோதிலும் தஹித்தலால் துன்புறும்படி நெருப்பில் (திருநாவுக்கரசு சுவாமிகளை வீழ்த்தியது போல் வீழ்த்தியபோதிலும் பயப்படாத மனதையுடைய மஹான்களும், வஞ்சர் வேல்கொடு மார்பினெறியினும், எஞ்சவே தழன்மூடியெரியினும் நஞ்சினார் அழனாக நலியினும், அஞ்சிடாதவை ஆனந்தம் என்னும் (கீதையில் கூறிய) திடப்பிரஞ்ஞர்களாகிய மகான்களும்) இவ்வனம் கொடியதாயிருந்ததினாலல்லவா அந்நிய ஜீவர்களுக்குத் துன்புறுத்துதலைக் கண்ணுற்று சகியாதவராய் அதனால் தங்கள் மனதில் நடுநடுக்கமுற்றனர்.

**14. கரையற்ற நீராருங் கனன்றெழுவ திக்காட்டின் கடுமையன்றோ**
**புரையற்ற பெரியோர்கள் போயகல்வ திவ்வெம்மை பொறாமையன்றோ.**

| | |
|---|---|
| இக்காட்டின் கடுமையன்றோ | இவ்வனத்தின் கொடுமையினால் அல்லவா |
| கரையற்ற நீராடுங் கனன்றெழுவது | காமம் வெகுளி மயக்கமென்னும் யாதொரு குற்றமுமின்றிய மகான்களும் கோபித்து எழுகின்றனர் அல்லது அளவு கடந்த நீர் நிறைந்த சமுத்திரமும் கோபித்து கரையை மோதுகின்றது. |
| புரையற்ற பெரியோர்கள் | குற்றமற்ற தத்துவ தரிசிகளும் |
| இவ்வெம்மை பொறாமையன்றோ | இவ்வனத்தின் உஷ்ணம் சகிக்க முடியாமையினாலல்லவா |
| போயகல்வது | குகை முதலிய ஸ்தானங்கள் சென்று நிவிர்த்தியாயிருக்கின்றனர். |

இவ்வனத்தின் கொடுமையினால் அல்லவா காமம் வெகுளி மயக்கமென்னும் யாதொரு குற்றமுமின்றிய மகான்களும் கோபித்து எழுகின்றனர் அல்லது அளவு கடந்த நீர் நிறைந்த சமுத்திரமும் கோபித்து கரையை மோதுகின்றது. குற்றமற்ற தத்துவ தரிசிகளும் இவ்வனத்தின் உஷ்ணம் சகிக்க முடியாமையினாலல்லவா குகை முதலிய ஸ்தானங்கள் சென்று நிவிர்த்தியாயிருக்கின்றனர்.

**15. மேலாய வானோரும் விண்டிருப்ப துடம்புற்ற வெம்மை யன்றோ**
**மாலாரும் பாலாழி வைகுவது மிவ்வழலை மாற்ற வன்றோ.**

| | |
|---|---|
| மேலாய வானோரும் | சத்துவகுண பிரதானிகளாகிய உயர்ந்த இந்திராதி |

| | |
|---|---|
| | தேவர்களும் |
| விண்டிருப்பது | இவ்வுலகவனத்தைப் பரித்யாகித்து சுவர்க்கத்தின் கண் வசிப்பது |
| உடம்புற்ற வெம்மையன்றோ | தேகத்தைப் பற்றிய வெப்பத்தினாலல்லவா |
| மாலாரும் | மஹாவிஷ்ணுவும் |
| இவ்வழலை மாற்றவன்றோ | இந்தக் கொடிய நெருப்பைத் தணித்தற் பொருட்டல்லவா |
| பாலாழி வைகுவது | க்ஷீராப்தியின்கண் அரிதுயிலமர்ந்திருக்கின்றனர். |

சத்துவகுண பிரதானிகளாகிய உயர்ந்த இந்திராதி தேவர்களும் இவ்வுலகவனத்தைப் பரித்யாகித்து சுவர்க்கத்தின் கண் வசிப்பது தேகத்தைப் பற்றிய வெப்பத்தினாலல்லவா மஹாவிஷ்ணுவும் இந்தக் கொடிய நெருப்பைத் தணித்தற் பொருட்டல்லவா க்ஷீராப்தியின்கண் அரிதுயில மர்ந்திருக்கின்றனர்.

**16. இன்னமுநான் வேறுசில வியம்புவதே னிவ்வுலக மெல்லா மீன்றா
னன்னமுமாய்ப் பறந்ததுமிவ் வாரணியத் துறுவெம்மை யாற்றவன்றோ.**

| | |
|---|---|
| இன்னமுநான் வேறு சில வியம்புவதென் | அடிக்கடி நான் பல பலவிதமாக கூறுவதிற் பயனென். |
| இவ்வுலகமெல்லாமீன்றான் | இவ் உலகத்தனைத்தும் தந்த நான்முக தேவனும் |
| இவ்வாரண்ணியத்துறு வெம்மை யாற்றாதன்றோ | இவ்வனத்திற் பொருந்திய உஷ்ணம் சகிக்க முடியாததினாலல்லவா |
| அன்னமுமாய் பறந்தது | அன்னப்பறவையாய் பறந்து சத்திய லோகத்திற்குச் சென்று விட்டனர். |

அடிக்கடி நான் பல பலவிதமாக கூறுவதிற் பயனென். இவ் உலகத்தனைத்தும் தந்த நான்முக தேவனும் இவ்வனத்திற் பொருந்திய உஷ்ணம் சகிக்க முடியாததினாலல்லவா அன்னப்பறவையாய் பறந்து சத்திய லோகத்திற்குச் சென்று விட்டனர்.

**17. ஓத வரியவெறி காந மிதிலொருவ வரநினைய லாவதோ**
**போத வுருவநினை யாதவவரையடு பூத கணமணவி மோதுமே.**

| | |
|---|---|
| ஓதவரிய எறி கானமதில் | இந்தப் பிரகாரம் இன்னபடி என்று கூறுதற்கு அருமையாய் தஹிக்கும் வனத்தில் |
| ஒருவர் ஊடுவர நினையலாவதோ | யாரெனும் ஒருவர் மத்தியில் பிரவேசித்து வரலாம் என்று கருத்தத்தக்கதா, |
| போத வுருவம் நினையாத அவரை | ஞான சொரூபத்தை தியானிக்காதவரை |
| அடு பூத கணம் | கொல்கின்ற பூதக்கூட்டம் |
| அணவி | நெருங்கி |
| மோதுமே | தலையிற் குட்டி கன்னத்தில் அறைகின்றதாம். |

இந்தப் பிரகாரம் இன்னபடி என்று கூறுதற்கு அருமையாய் தஹிக்கும் வனத்தில் யாரெனும் ஒருவர் மத்தியில் பிரவேசித்து வரலாம் என்று கருத்தத்தக்கதா, ஞான சொரூபத்தை தியானிக்காதவரை கொல்கின்ற பூதக்கூட்டம் நெருங்கி தலையிற் குட்டி கன்னத்தில் அறைகின்றதாம்.

————————————

# 4. பேய்

அவதாரிகை: இனி ஞானவேந்தன் செல்லும் அவ்வனத்திலுள்ள சில வாய்பிதற்றும் பேய்களை மட்டிலும் எடுத்துக்கூறத் தொடங்குகின்றார்

1. **ஏத மளவுதெரி யாத கொடியவந மேவும் வகைமருவு பேயரோ,**
**பேத மளவுதெரி யாது பெரிதறிவு பேசு மலகைசில பேசுவாம்.**

| | |
|---|---|
| ஏதம் அளவு தெரியாத | குற்றம் இவ்வளவிற் றென்று கணக்கிடமுடியாத |
| கொடிய வனம் மேவும் வகை மருவு பெயரோ | மிகவும் கொடூரமான இந்த ஆரண்யத்தின்கண் பொருந்திய அநேக வித கொள்கையையுடைய பேய்களினது |
| பேதம் அளவு தெரியாது | வேறுபாட்டைக் கணக்கிடமுடியாது (இருந்தாலும்) |
| பெரிதறிவு பேசும் | கொஞ்சம் கூடுதலான விவேகத்தோடு கூட வாய் பிதற்றும் |
| அலகை சில பேசுவாம். | பேய்களில் சில பேசுவாம். |

குற்றம் இவ்வளவிற் றென்று கணக்கிடமுடியாத மிகவும் கொடூரமான இந்த ஆரண்யத்தின்கண் பொருந்திய அநேக வித கொள்கையையுடைய பேய்களினது வேறுபாட்டைக் கணக்கிடமுடியாது (இருந்தாலும்) கொஞ்சம் கூடுதலான விவேகத்தோடு கூட வாய் பிதற்றும் பேய்களில் சில பேசுவாம்.

2. **ஒன்றென்று நின்றசில பலவென்று**
**நின்றசில வுபயத்து நின்ற சிலபே**
**யன்றென்று நின்றதனையாமென்று**
**சொல்லியுட னலகிட்டு விட்ட சிலபேய்.**

| | |
|---|---|
| ஒன்றென்று நின்றசில | (ஏகமேவாத்விதீயம் நேகநாநாஸ்திகிஞ்சன ஸதேவ ஸௌமிய மிதமக்ரமாஸீத்) என்னும் இவை முதலிய சுருதிகளால் ஒன்றேயுளது இரண்டில்லை என்று அனுபவத்திற்குக் கொண்டு வராமல் வாய்ப்போக்காக சில பேய்கள் சொல்லிக்கொண்டு நின்றன (உள்ளன). |
| பல சென்று நின்ற சில | காலம், திசை, மனம், ஆன்மா என்பவற்றை நித்தியம் விபு என்னும் தார்க்கிகப் பேயும், ஆன்மா, நாநா, விபு என்னும் சாங்கியப் பேயும், சில இருக்கின்றன. |
| வுபயத்து நின்ற சில | விசிட்டாத்விதி, துவிதி, பதி, பசு, பாசம் மூன்றும் நித்தியமென்னும் (ராமானுஜர் மத்துவர், நீலகண்ட பண்டிதர் முதலிய இவர்களது) கொள்கையைக் கொண்டுள்ள சில |

| | |
|---|---|
| | பேய்கள் இருக்கின்றன. |
| அன்றென்று நின்றதனை | சப்தம் அநித்தியமன்று நித்தியமென்னும் பூர்வ மீமாம்சர்களது கொள்கையை |
| ஆமென்று சொல்லியுடலை கிட்டு விட்ட சிலவே | சப்தம் அநித்யமன்று நித்தியமன்று என்று கூறி அவர்களுடைனே கூட உபேட்சித்து விட்ட தார்க்கீகப் பேயும் சில இருக்கின்றன. |

(ஏகமேவாத்விதீயம் நேகநாநாஸ்திகிஞ்சன ஸதேவ சௌமிய மிதமக்ரமாஸீத்) என்னும் இவை முதலிய சுருதிகளால் ஒன்றேயுளது இரண்டில்லை என்று அனுபவத்திற்குக் கொண்டு வராமல் வாய்ப்போக்காக சில பேய்கள் சொல்லிக்கொண்டு நின்றன (உள்ளன). காலம், திசை, மனம், ஆன்மா என்பவற்றை நித்தியம் விபு என்னும் தார்க்கிகப் பேயும், ஆன்மா, நாநா, விபு என்னும் சாங்கியப் பேயும், சில இருக்கின்றன. விசிட்டாத்விதி, துவிதி, பதி, பசு, பாசம் மூன்றும் நித்தியமென்னும் (ராமானுஜர் மத்துவர், நீலகண்ட பண்டிதர் முதலிய இவர்களது) கொள்கையைக் கொண்டுள்ள சில பேய்கள் இருக்கின்றன. சப்தம் அநித்தியமன்று நித்தியமென்னும் பூர்வ மீமாம்சர்களது கொள்கையை சப்தம் அநித்யமன்று நித்தியமன்று என்று கூறி அவர்களுடைனே கூட உபேட்சித்து விட்ட தார்க்கீகப் பேயும் சில இருக்கின்றன.

**3. இலதென்று நின்றசில வுளதென்று**
**நின்றிசில விறைதன்னை நெஞ்சி னுணரும்**
**வலதின்றி மங்குமல வுடறங்கு**
**கின்றதவ வடிவங்கள் கொண்ட சிலபேய்.**

| | |
|---|---|
| இலதென்று நின்றசில | மாத்மிக பௌத்தர் முதலிய சூன்யவாதிகள் ஒன்றும் இல்லையென்று கூறி நிற்கின்றவராகிய சில பேய்கள் |
| உளதென்று நின்றசில | பிரபாகரர் முதலான கர்மகாண்டிகள், புண்ணியம், பாபம் சர்வமும் உண்டு என்று கூறுபவராகிய சில பேய்கள், |
| இறைதன்னை நெஞ்சில் உணரும் வலதின்றி | மனதில் பரமான்மாவை சாட்சாத்கரிக்கும் வல்லமையின்றியவராய், |
| மங்குமலவுடல் தங்குகின்ற தவவடிவங்கள் கொண்ட சிலவே | காலாந்தரத்தில் நாசமாகா நின்று அசுத்தமான தேகாதிகளில் அபிமானத்தைப் பொருத்தி, தவவேடத்தைப் பூண்டு திரிகின்றன சில பேய்கள். |

மாத்மிக பௌத்தர் முதலிய சூன்யவாதிகள் ஒன்றும் இல்லையென்று கூறி நிற்கின்றவராகிய சில பேய்கள் பிரபாகரர் முதலான கர்மகாண்டிகள், புண்ணியம், பாபம்

சர்வமும் உண்டு என்று கூறுபவராகிய சில பேய்கள், மனதில் பரமான்மாவை சாட்சாத்கரிக்கும் வல்லமையின்றியவராய், காலாந்தரத்தில் நாசமாகா நின்று அசுத்தமான தேகாதிகளில் அபிமானத்தைப் பொருத்தி, தவவேடத்தைப் பூண்டு திரிகின்றன சில பேய்கள்.

**4. தன்டைப்பி டித்தசில சிகையைத்த ரித்தசில சடையைப்ப ரித்த சிலவே முண்டித்து விட்டசில முடியைப்ப றித்தசில முசுவிற்பொ றுத்த சிலபேய்.**

| | |
|---|---|
| தண்டைப்பிடித்த சில | சில பேய்கள் சந்யாசி என்று தண்டதாரியாய்த் திரிகின்றன. |
| சில சிகையைத் தரித்த | சில பேய்கள் பிரம்மசாரியென்று குடுமி வைத்துத் திரிகின்றன. |
| சடையைப் பரித்த சில | சில பேய்கள் சடைமுடியை வளர்த்து பெரிய தபசிகளென்று திரிகின்றன. |
| முண்டித்து விட்ட சில | சில பேய்கள் மொட்டையடித்து துறவி யென்று திரிகின்றன. |
| சில முடியைப் பறித்த | சில ஜைனப் பிசாசுகள் ஜீவகாருண்யமுடையவரென்று சொல்லி உரோமத்தைப் பிடுங்கிக் கொண்டும் |
| முசுவிற் பொறுத்த சில பேய் | சில தண்டிகையில் ஏறிச் செல்லும். சில குரங்குபோல் சரீரமெங்கும் உரோமத்தை வளர்த்து அதை அலங்கரித்து நோக்கிக் கொண்டும் திரிகின்றன சில பிசாசுகள். |

சில பேய்கள் சந்யாசி என்று தண்டதாரியாய்த் திரிகின்றன. சில பேய்கள் பிரம்மசாரியென்று குடுமி வைத்துத் திரிகின்றன. சில பேய்கள் சடைமுடியை வளர்த்து பெரிய தபசிகளென்று திரிகின்றன. சில பேய்கள் மொட்டையடித்து துறவி யென்று திரிகின்றன. சில ஜைனப் பிசாசுகள் ஜீவகாருண்யமுடையவரென்று சொல்லி உரோமத்தைப் பிடுங்கிக் கொண்டும் சில தண்டிகையில் ஏறிச் செல்லும். சில குரங்குபோல் சரீரமெங்கும் உரோமத்தை வளர்த்து அதை அலங்கரித்து நோக்கிக் கொண்டும் திரிகின்றன சில பிசாசுகள்.

**5. அலைகெட்டி ராதுபல தலைகெட்ட நூல்பழகி யதுமுக்ய மாக மிகவே கலைகற்ற பேய்களொடு சிலுகிட்டு லாவுவன கரையற்ற பேய்க ளுளவே.**

| | |
|---|---|
| அலைகெட்டிராது | சித்த சலனமின்றி நிர்விகற்ப சமாதியிலிராது |
| தலைகெட்ட நூல் பழகி | சன்மார்க்கத்தைப் போதியாத நூல்களை கற்று |
| அது முக்கியமாகி | அதுவே சம்பாதிக்க தக்கதாம் என்று கருதி |
| மிகவே கலை கற்ற பேய்களோடு | அதிகமான வடமொழிநூல்களை கற்ற பண்டிதர்களான பிசாசுகளுடன் |
| சிலுகிட்டு | சண்டையிட்டு |
| உலாவுவன | சஞ்சரிக்கும் |

| | |
|---|---|
| கரையற்ற பேய்களுளவே | அளவு கடந்த பேய்களிருக்கின்றனவாம். |

குறிப்பு: தலைகெட்ட—மூலமின்றிய வேதாந்த சாஸ்திரம் அல்லாத நூல்களையாகும்.

சித்த சலனமின்றி நிர்விகற்ப சமாதியிலிராது சன்மார்க்கத்தைப் போதியாத நூல்களை கற்று அதுவே சம்பாதிக்க தக்கதாம் என்று கருதி அதிகமான வடமொழிநூல்களை கற்ற பண்டிதர்களான பிசாசுகளுடன் சண்டையிட்டு சஞ்சரிக்கும் அளவு கடந்த பேய்களிருக்கின்றனவாம்.

**6. வறிய வானவு ரைபல கேட்பன மாண்டு மீண்டினி வாராவ ழியினைச்**
**செறிய லான பொருள்கடெ ரிந்துரைசெய்யு மெல்லை செவிடுக ளாவன.**

| | |
|---|---|
| விறியவான உரை பல கேட்பன | வீணான வார்த்தைகள் பலவற்றைக் கேட்கும். ஆனால், |
| மாண்டு | இறந்து |
| மீண்டு | திரும்பவும் |
| வரா வழியை | இனிமேல் ஒரு தாயின் வயிற்றில் செல்லாத |
| | |
| செறியலான பொருள்கள் | சேர்க்கும் அறிவு |
| தெரிந்துரை செய்யுமெல்லை | உபதேச நல்வழியை அறிந்து உபதேசிப்பாரேயானால் |
| செவிடுகளாவன | இரு காதும் மந்தமாக கேட்கமாட்டார்களாம். |

வீணான வார்த்தைகள் பலவற்றைக் கேட்கும். ஆனால், இறந்து திரும்பவும் இனிமேல் ஒரு தாயின் வயிற்றில் செல்லாத வழியை சேர்க்கும் அறிவு உபதேச நல்வழியை அறிந்து உபதேசிப்பாரேயானால் இரு காதும் மந்தமாக கேட்கமாட்டார்களாம்.

**7. வம்பு கூறிலு டம்பெ லாம்வெறும்**
**வாய்க ளாகிவ டித்தற்கு வல்லன**
**வும்பர் கோனடித் தாமரை போற்றியென்**
**றுரைக்க வென்னில்வெற் றூமை களாவன.**

| | |
|---|---|
| வம்பு கூறில் | வீணான வார்த்தையைப் பேசுமிடத்து |
| உடம்பெல்லாம் | சரீரங்களிலுள்ள மயிர்க்கால்கள்தோறும் |
| வெறும்வாய்களாகி | அவ்வளவும் வாயாக இருந்து |
| வடித்தற்கு வல்லன | தடையில்லாமல் பேசுவதற்கு வலிமையுடையனவாகின்றன |
| உம்பர் கோனடி தாமரை போற்றி என்றுரைக்க என்னில் | தேவதேவனாகிய இறைவனுடைய தாமரை போன்ற திருவடியை தோத்திரம் செய்யுங்கள் என்று சொன்னபோது |
| வெற்றூமைகளாவன | முன்இருந்த வாயும் ஊமை போல் பேசாமல் |

| | |
|---|---|
| | போய்விடுவார்கள். |

வீணான வார்த்தையைப் பேசுமிடத்து சரீரங்களிலுள்ள மயிர்க்கால்கள்தோறும் அவ்வளவும் வாயாக இருந்து தடையில்லாமல் பேசுவதற்கு வலிமையுடையனவாகின்றன தேவதேவனாகிய இறைவனுடைய தாமரை போன்ற திருவடியை தோத்திரம் செய்யுங்கள் என்று சொன்னபோது முன்இருந்த வாயும் ஊமை போல் பேசாமல் போய்விடுவார்கள்.

**8. பொய்ம்மை யாகிமெய் போலவி ளங்கிய**
**பொருடெ ரிக்கினற் புற்புதக் கண்ணினர்**
**மெய்ம்மை யானபொ ருளையு ளத்தினில்**
**மீண்டு பார்க்கில்வெ றுங்குரு டாவன.**

| | |
|---|---|
| பொய்ம்மையாகி | முற்றிலும் பொய்யாகி |
| மெய்போல் விளங்கிட | உண்மைபோல தோன்றிடும். |
| பொருள் தெரிக்கில் | உலகப்பொருளை பார்க்கும்போது |
| நற்புற்புதக் கண்ணின | நல்ல நீர்க்குமிழிபோல பெரிய கண்களை உடையனவாயிருக்கின்றன. |
| மீண்டு | மெய், வாய், கண், மூக்கு, நாக்கு இவ்வழியில் மனது செல்லாமல் திருப்பி உள்முக பார்வையாக |
| உளத்தினில் | இதயத்தில் |
| மெய்ம்மையான பொருளைப் பார்க்கில் | அறிகின்ற அறிவை உண்மையான தனது வடிவை பார்க்கும்போது |
| வெறுங் குறுடாவன | மிகவும் குருடாகி ஞானக்கண் இல்லாத தன்மை அடைகின்றது சில பேய்கள். |

முற்றிலும் பொய்யாகி உண்மைபோல தோன்றிடும். உலகப்பொருளை பார்க்கும்போது நல்ல நீர்க்குமிழிபோல பெரிய கண்களை உடையனவாயிருக்கின்றன. மெய், வாய், கண், மூக்கு, நாக்கு இவ்வழியில் மனது செல்லாமல் திருப்பி உள்முக பார்வையாக இதயத்தில் அறிகின்ற அறிவை உண்மையான தனது வடிவை பார்க்கும்போது மிகவும் குருடாகி ஞானக்கண் இல்லாத தன்மை அடைகின்றது சில பேய்கள்.

**9. பருகு ளத்தமிர் தம்பொழி நூல்களைப்**
**பக்க மோதிப்ப ழித்துக்க ழிப்பன**
**திருகு ளத்தொடு தர்க்கங்க ளேயுரை**
**செய்யு நூல்கற்றுத் தெற்றர்க ளாவன.**

| | |
|---|---|
| உளத்து பருகு | இருதயத்தின்கண் அளவின்றி நிறைந்திருக்கும் பேரின்பத்தை நூண்ணறிவால் அனுபவிக்கும் |
| அமிர்தம் பொழி | பெரிய ஆனந்தம் என்னும் அமிர்தத்தைக் கொட்டுகின்ற |

| | |
|---|---|
| நூல்களை | ஆன்மீக நூல்களை |
| பக்கமோதி | ஒரு பக்கமாகக் கொண்டு |
| பழித்துக் கழிப்பன | குறை கூறி தள்ளிவிடுவார்கள். |
| திருகு உளத்தொடு | மாறுபட்ட மனமுடையவர்களாய் |
| தர்க்கங்களேயுரை செய்யும் | வெறும் தர்க்கம் போதிக்கும் |
| நூல் கற்று | நியாய முதலிய நூல்களை படித்து |
| தெற்றர்களாவன | வாழ்நாளை வீணாளாக இளைத்துக் கழிக்கும் சில பிசாசுகள். |

இருதயத்தின்கண் அளவின்றி நிறைந்திருக்கும் பேரின்பத்தை நூண்ணறிவால் அனுபவிக்கும் பெரிய ஆனந்தம் என்னும் அமிர்தத்தைக் கொட்டுகின்ற ஆன்மீக நூல்களை ஒரு பக்கமாகக் கொண்டு குறை கூறி தள்ளிவிடுவார்கள். மாறுபட்ட மனமுடையவர்களாய் வெறும் தர்க்கம் போதிக்கும் நியாய முதலிய நூல்களை படித்து வாழ்நாளை வீணாளாக இளைத்துக் கழிக்கும் சில பிசாசுகள்.

**10. ஆவ தொன்றிலை யாயினுந் தன்னைமே**
**லாக வுன்னிய றக்கடை யாவன**
**பாவ கத்தொன்றி லாதமை காட்டல்போற்**
**படப டத்துத்தன் பாழ்வாய்தி றப்பன.**

| | |
|---|---|
| ஆவது ஒன்றிலையாயினும் | தன்னால் சாதிக்கக் கூடியது சிறிதும் இல்லாவிட்டாலும் |
| தன்னை மேலாக உன்னி | தன்னைத் தலைமையாகக்கருதி |
| அறக்கடையாவன | மிகவும் கீழான நிலையையடைகின்றன சில பேய்கள். |
| பாவகத் தொன்றிலாதமை | பரமாத்மபாவனை தன்னிடத்து இல்லாததன்மையை |
| காட்டற்போற் | அறிவிக்கும் அறிகுறியாக |
| படபடத்து | அதிவேகமாகத்தானே படபடவென்று |
| பாழ்வாய் திறப்பன | தனது இழிவானவார்த்தையோடு கூடிய வாயைத் திறந்து பயனில்லாத வார்த்தைகளை சொல்வன சில பிசாசுக்கள். |

தன்னால் சாதிக்கக் கூடியது சிறிதும் இல்லாவிட்டாலும் தன்னைத் தலைமையாகக்கருதி மிகவும் கீழான நிலையையடைகின்றன சில பேய்கள். பரமாத்மபாவனை தன்னிடத்து இல்லாததன்மையை அறிவிக்கும் அறிகுறியாக அதிவேகமாகத்தானே படபடவென்று தனது இழிவானவார்த்தையோடு கூடிய வாயைத் திறந்து பயனில்லாத வார்த்தைகளை சொல்வன சில பிசாசுக்கள்.

**11. ஆறு ஞாநமு டையார்பி ணக்கற**

**வாறு ஞாநநெ றியென்ற றிந்தவர்**
**கூறு ஞாநக்க ரும்புகொள் ளாதுபோய்க்**
**குருடர் சொன்னசொற் கோதுகொண்டாடுவ.**

| | |
|---|---|
| ஆறு ஞானமுடையார் | சைவம் வைஷ்ணவம் காணாபத்தியம் கௌமாரம் சக்தி சௌரவம் என்னும் அறுவகை மார்க்கங்களையும் பற்றியவர் |
| பிணக்கற | பேதபுத்தியால் உண்டாகும் துன்பத்தினின்றும் நீங்கும்படி |
| ஆறு ஞான நெறியென்றறிந்தவர் | சட்சமயவுணர்வையும் மோக்ஷத்திற்குச் சாதனம் என்று தெரிந்த மகான்கள் |
| கூறும் | உபதேசிக்கும் |
| ஞானக் கரும்பு கொள்ளாது | அத்வைதஞானவடிவ கரும்பைக் கொள்ளாமல் |
| பொய்க்குருடர் சொன்ன | பொய்யாக தோற்றிக்கொண்டிருக்கும் உருவங்களை உண்மை என்று எண்ணுகிற விவேகமின்றிய குருடர்கள் கூறும் |
| சொற்போது கொண்டாடுவ | வார்த்தையை அதாவது சுகமில்லாத வார்த்தை பயனற்று சொல்வதை கேட்டு சந்தோசித்து இருக்கின்றார்கள் சில பேய்த்தன்மையுடையவர்கள். |

சைவம் வைஷ்ணவம் காணாபத்தியம் கௌமாரம் சக்தி சௌரவம் என்னும் அறுவகை மார்க்கங்களையும் பற்றியவர் பேதபுத்தியால் உண்டாகும் துன்பத்தினின்றும் நீங்கும்படி சட்சமயவுணர்வையும் மோக்ஷத்திற்குச் சாதனம் என்று தெரிந்த மகான்கள் உபதேசிக்கும் அத்வைதஞானவடிவ கரும்பைக் கொள்ளாமல் பொய்யாக தோற்றிக்கொண்டிருக்கும் உருவங்களை உண்மை என்று எண்ணுகிற விவேகமின்றிய குருடர்கள் கூறும் வார்த்தையை அதாவது சுகமில்லாத வார்த்தை பயனற்று சொல்வதை கேட்டு சந்தோசித்து இருக்கின்றார்கள் சில பேய்த்தன்மையுடையவர்கள்.

**12. உண்ண லானவி டந்தொறு மற்றவர்க்**
**குற்ற நட்டவர் போலுற வாடுவ**
**கண்ண னார்சில ராயினுங்**
**கைப்பொரு ளில்லை யாகிற்க ழலக்க ழல்வன.**

| | |
|---|---|
| உண்ணலான இடந்தொறும் | சட்ரசங்களுடன் போஜனம் தடையின்றிக் கிடைக்கும் பரியந்தம் |
| அவர்க்குற்ற நட்டவர் போலுறவாடுவ | அன்னமிடுபவர்க்கு நெருங்கிய சிநேகிதர்கள் போல் பந்துத்வம் கொண்டாடும் சில பிசாசுகள். |
| கண்ணனார் சிலராயினும் | நேத்திரத்திற்குச் சமானமானவர்களாயிருந்த போதிலும் |

| | |
|---|---|
| கைப்பொருளில்லையாகில் | வறுமையடைந்தகாலத்து |
| கழலக் கழல்வன | நேத்திரம் போன்ற அவர்கள் வந்து பேசியபோது அவர்கள் தானே தன்னைவிட்டு நீங்கும்படியான உபாயத்தைச் சொல்லும் சில பேய்கள்.(அவர்கள் நீங்க தானும் நீங்குவன.) |

சட்ரசங்களுடன் போஜனம் தடையின்றிக் கிடைக்கும் பரியந்தம் அன்னமிடுபவர்க்கு நெருங்கிய சிநேகிதர்கள் போல் பந்துத்வம் கொண்டாடும் சில பிசாசுகள். நேத்திரத்திற்குச் சமானமானவர்களாயிருந்த போதிலும் வறுமையடைந்தகாலத்து நேத்திரம் போன்ற அவர்கள் வந்து பேசியபோது அவர்கள் தானே தன்னைவிட்டு நீங்கும்படியான உபாயத்தைச் சொல்லும் சில பேய்கள்.(அவர்கள் நீங்க தானும் நீங்குவன.)

**13. கண்ட மட்டினி துவன்றி வேறொன்றுங்**
**கண்டி லோங்கதி யென்னுங்க ருத்தினாற்**
**பிண்ட மிட்டவர் தம்பிற கேஞுஞ்ஞை**
**பிஞ்ஞை யென்றுபி தற்றித்தி ரிவன.**

| | |
|---|---|
| கண்டமாட்டின் | பார்த்தவரையும், |
| கதி | மோக்ஷமானது |
| இதுவன்றிக்கண்டிலோம் | உண்டிவளர்ப்பதே, மோக்ஷமல்லாமல் வேறொன்றைப்பார்த்திலம் |
| என்னும் கருத்தினால் | என்னும் அபிப்பிராயத்தையுடையவராய், |
| பிண்டமிட்டவர்தம்பிறகே | அன்னமளித்த அவர்களது பின்னாலேயே |
| ஞஞ்ஞைபிஞ்ஞை என்று | ஐயா, சாமி என்று பல்லைக்காட்டிகொண்டு |
| பிதற்றித் திரிவன | வாய்பிதற்ற வயிறு வளர்த்து சஞ்சரிக்கும் சில பேய்கள். |

பார்த்தவரையும், மோக்ஷமானது உண்டிவளர்ப்பதே, மோக்ஷமல்லாமல் வேறொன்றைப்பார்த்திலம் என்னும் அபிப்பிராயத்தையுடையவராய், அன்னமளித்த அவர்களது பின்னாலேயே ஐயா, சாமி என்று பல்லைக்காட்டிகொண்டு வாய்பிதற்ற வயிறு வளர்த்து சஞ்சரிக்கும் சில பேய்கள்.

**14. வயிறு சாணும்வ ளர்த்தற்பொ ருட்டந்த**
**வானுஞ் சென்றுவ ரக்காலு டையன**
**கயிறுங் கம்பையு மேடும்பி றர்க்கொரு**
**காட்சி போல்வரும் புத்தகக் கையன.**

| | |
|---|---|
| வயிறு சாணும் வளர்த்தற்பொருட்டு | சாண்வயிற்றைப் போஷிப்பதற்காக |
| வானும் சென்றுவர | ஆகாயமனைத்தும் அளாவி வருதற்கு |
| காலுடையன | பாதத்தையுடையனவாயிருக்கும் சில பேய்கள். |
| கயிறும் | இடுப்பில் பருத்த கயிற்றையும், |
| கம்பும் | யோகதண்டம், திரிதண்டம், ஜெகன்னாதபிரம்பு, பத்ரி கேதார யாத்திரைக்கம்பு களும், |
| ஏடும் | பெரிய சுவடிக்கட்டுகளையும் கொண்டு |
| பிறர்க்கு ஒரு காட்சிபோல் | அந்நியருக்கு வித்துவான்போல் |
| வரும் | ஆச்சரியத்தையுண்டுபண்ணும்படி வருகின்ற |
| புத்தகக்கையன | புத்தகங்களை கையிற்றாங்கிய சில பிசாசுகள். |

சாண்வயிற்றைப் போஷிப்பதற்காக ஆகாயமனைத்தும் அளாவி வருதற்கு பாதத்தையுடையனவாயிருக்கும் சில பேய்கள். இடுப்பில் பருத்த கயிற்றையும், யோகதண்டம், திரிதண்டம், ஜெகன்னாதபிரம்பு, பத்ரி கேதார யாத்திரைக்கம்பு களும், பெரிய சுவடிக்கட்டுகளையும் கொண்டு அந்நியருக்கு வித்துவான்போல் ஆச்சரியத்தையுண்டுபண்ணும்படி வருகின்ற புத்தகங்களை கையிற்றாங்கிய சில பிசாசுகள்.

15. **சவலைச் சாகர மாகிய சமயத் தேநிலை யாவன**
**தனைமெய்ப் பாலுண ராதன தநுவைந் தானென நாடுவ**
**கவலைக் காகர மாவன கடை கட் கேநட மாடுவ**
**கலைவிற் றேயுண வாவன கருவிப் பேய்பல கோடியே.**

| | |
|---|---|
| சவலைச் சாகரமாகிய சமயத்தே | தைரியமற்ற மிகுந்த சஞ்சலசமுத்திரம் போன்றுடைய சைவ முதலிய சட்சமயங்களிலேயே |
| நிலையாவன | நிலைபெற்றிருப்பதும் |
| தனை மெய்ப்பாலுணராதன | தனது உண்மையாக உள்ளேயே ஒன்றாக உள்ள பிரமசொரூபத்தை நேரே அறியாமலும், |
| தநுவைத் தானென நாடுவ | இந்த உடம்பையே நான் எனக் கருதியிருப்பதும், |
| கவலைச் சாகரமாவன | சோகத்தோடு புத்திமயக்கத்துன்பக் கடலில் மூழ்கியிருப்பதும் |
| கடைகட்கே நடமாடுவ | கீழான மார்க்கத்தில் வீட்டு வாசல்களில் சஞ்சரிப்பதும் அல்லது வாசற்படிகள் தோறும் நடமாடுவதும் |
| கலைவிற்றேயுணவாவன | தான் கற்ற கருவி நூலைப் பிறருக்குப் போதித்து உணவைத்தேடி அலைவதும் ஆன சாத்திர அப்பியாசப்பேய் அநேக கோடிகளாம். |

தைரியமற்ற மிகுந்த சஞ்சலசமுத்திரம் போன்றுடைய சைவ முதலிய சட்சமயங்களிலேயே நிலைபெற்றிருப்பதும் தனது உண்மையாக உள்ளேயே ஒன்றாக உள்ள பிரமசொரூபத்தை நேரே அறியாமலும், இந்த உடம்பையே நான் எனக் கருதியிருப்பதும், சோகத்தோடு புத்திமயக்கத்துன்பக் கடலில் மூழ்கியிருப்பதும் கீழான மார்க்கத்தில் வீட்டு வாசல்களில் சஞ்சரிப்பதும் அல்லது வாசற்படிகள் தோறும் நடமாடுவதும் தான் கற்ற கருவி நூலைப் பிறருக்குப் போதித்து உணவைத்தேடி அலைவதும் ஆன சாத்திர அப்பியாசப்பேய் அநேக கோடிகளாம்.

**16. அடைகட் டாவுக கோடிக ளவிளற் காமசனாதியை**
**யமைவற் றேநிலை யாமையு மறைவுற் றேயறி யாதன**
**சடைகட் டாமழி யாவுட றலைகட் டாநினை யாவொரு**
**தமைமெய்ப் பாலுண ராதன சமயப் பேய்பல கோடியே**

| | |
|---|---|
| உக கோடிகள் அளவிற்கு | பந்தமாக பொருந்திய யுகங்கள் கோடிக்கணக்காகும் பரியந்தம், |
| ஆம் | தகுதியுடையனவாய |
| அசனாதியை | உண்ட உணவாதிகளையேயுண்டும் |
| அமைவற்றே | திருப்தியின்றியதாய் |
| அடைகட்டா | அதனால் பந்திக்கப்பட்டு இருந்தும் |
| நிலையாமையும் அறைவுற்றே | மற்றையருக்கு அநித்தியத்தன்மையைப் போதித்தும் |
| அறியாதன | தனது யதார்த்த சொரூபத்தைத் தெரியாதனவாயுள்ள |
| சடைகட்டா | தனது சிரசில் ஜடைகளை கிரீடமாகக்கட்டியும் |
| உடல்மழியா | தேகத்தில் உரோமத்தை மழித்தும் சவரம் செய்தும் |
| தலைகட்டா | சிரசில் குடுமி முடிந்தும் |
| நினையா ஒரு தனை | மனாதிகட்கு எட்டாமல் ஒப்பற்ற பிரம ரூபமாய தன்னை |
| மெய்ப்பால் உணராதன | உள்ளபடியறியாதனவும் ஆகிய |
| சமயப்பேய் பலகோடியே | இப்படி மதப்பிசாசுக்காள் அநேகங் கோடி உள்ளன. |

பந்தமாக பொருந்திய யுகங்கள் கோடிக்கணக்காகும் பரியந்தம், தகுதியுடையனவாய உண்ட உணவாதிகளையேயுண்டும் திருப்தியின்றியதாய் அதனால் பந்திக்கப்பட்டு இருந்தும் மற்றையருக்கு அநித்தியத்தன்மையைப் போதித்தும் தனது யதார்த்த சொரூபத்தைத் தெரியாதனவாயுள்ள தனது சிரசில் ஜடைகளை கிரீடமாகக்கட்டியும் தேகத்தில் உரோமத்தை மழித்தும் சவரம் செய்தும் சிரசில் குடுமி முடிந்தும் மனாதிகட்கு எட்டாமல் ஒப்பற்ற பிரம ரூபமாய தன்னை உள்ளபடியறியாதனவும் ஆகிய இப்படி மதப்பிசாசுக்காள் அநேகங் கோடி உள்ளன.

**17. உழலத் தானிளை யாதன வுணவிற் காவன தேடுவ**
**வுணர்வைத் தானுண ராதன வுலகத் தார்நக வாழ்வன**
**கழலத் தானுரை யாடுவ கதறத் தான்முசி யாதன**
**கநகந் தேமந னாவன கருவிப் பேய்பல கோடியே.**

| | |
|---|---|
| உழலத்தான் இளையாதன | அங்குமிங்கும் அலைந்து திரிவதில் சலிப்பின்றியதும் அடைதியடையாதனவும் |
| உணவிற்காவன தேடுவ | புசிப்பதற்கு வேண்டிய ஆகாரத்தைச் சம்பாதிப்பதும், |
| உணர்வைத் தானுணராதன | தனது சித்வடிவத்தை அறியாமல் |
| உலகத்தார் நக வாழ்வன | வியாச வசிட்டாதி மஹான்களால் சிரிக்கும்படிக் காலத்தைக் கழிப்பதும், |
| கழலத்தான் உரையாடுவ | வந்தவன் தானே தன்னை விட்டு நீங்கும்படி விடாமல் பயனின்றிய சொற்களைக் கூறுவனவும், |
| கதறத்தான் முசியாதன | கத்திப் பேசுவதில் இளைப்பையடையாதனவும், |
| கனகத்தே மனமாவன | பொருளை ஈட்டுதலிலேயே கருத்துடையனவும், |
| கருவிப்பேய் பலகோடியே | இலக்கண முதலிய கருவி நூல்கற்ற அநந்தங்கோடி பிசாசுக்கள் உள்ளன. |

அங்குமிங்கும் அலைந்து திரிவதில் சலிப்பின்றியதும் அடைதியடையாதனவும் புசிப்பதற்கு வேண்டிய ஆகாரத்தைச் சம்பாதிப்பதும், தனது சித்வடிவத்தை அறியாமல் வியாச வசிட்டாதி மஹான்களால் சிரிக்கும்படிக் காலத்தைக் கழிப்பதும், வந்தவன் தானே தன்னை விட்டு நீங்கும்படி விடாமல் பயனின்றிய சொற்களைக் கூறுவனவும், கத்திப் பேசுவதில் இளைப்பையடையாதனவும், பொருளை ஈட்டுதலிலேயே கருத்துடையனவும், இலக்கண முதலிய கருவி நூல்கற்ற அநந்தங்கோடி பிசாசுக்கள் உள்ளன.

காலத்தான் உரையாடுவ என்பதற்கு உதாரணம்
எல்லோர்க்கும் காலம் நுற வீவன் ஈயாமுன் நல்லோர் துறப்பர்
என்று பெரியோர் கூறுகிறபடியால் சீக்கிரம் சர்வசங்க பரித்தியாகஞ் செய் என்று உபதேசிக்கும். ஆனால் கதறத்தான் முதியாதன— இப்படிக் கத்திப் பிறர்க்குக் கூறியும் தாம் விடாதனவாயிருக்கும்.

**18. மெய்வருந்திக் குரவனருள் விரும்பா தென்றும்**
**விட்டிடமுந் தொட்டிடமு மறியா தேநின்**

**றவ்வருகுப் பட்டனவாய் மிகவுந் தம்மை**
**யகமதித்துத் திரியும்பே யநந்தங் கோடி.**

| | |
|---|---|
| மெய்வருந்திக் குரவனருள் விரும்பாது | மனமொழி மெய் என்னும் முக்கரணத்தாலும் பிரயாசைப்பட்டு ஆசாரியரது அனுக்ரஹத்தை இச்சியாமல் |
| என்றும் | சதாவும் |
| விட்டிடமும் தொட்டிடமும் அறியாதே | மோக்ஷமின்னது பந்தமின்னது என்று தெரியாமல் |
| நின்று | இருந்து |
| ஐவறாகப்பட்டனவாய் | பஞ்சேந்திரியங்களில் வழித்தாய் வசப்பட்டு |
| மிகவும் தம்மை | வெகுவாகத் தம்மை |
| அகமதித்துத் திரியும் | 'நான் பண்டிதனாக்கும்' என்று அபிமானித்து திரியும் |
| பேய் அனந்தங் கோடி | பேய்கள் பல கோடிக்கணக்காக உள்ளன. |

மனமொழி மெய் என்னும் முக்கரணத்தாலும் பிரயாசைப்பட்டு ஆசாரியரது அனுக்ரஹத்தை இச்சியாமல் சதாவும் மோக்ஷமின்னது பந்தமின்னது என்று தெரியாமல் இருந்து பஞ்சேந்திரியங்களில் வழித்தாய் வசப்பட்டு வெகுவாகத் தம்மை 'நான் பண்டிதனாக்கும்' என்று அபிமானித்து திரியும் பேய்கள் பல கோடிக்கணக்காக உள்ளன.

**19. கவலையுற்ற தம்பசியைத் தணிப்ப வேறோர்**
**கதியின்மை யாலறந்தாங் காட்டு வார்போற்**
**குவலபத்தோர் பொருள்விரகால் வாங்கிக் கொண்டு**
**குருக் கொடுக்கும் பேய்களொரு கோடி கோடி.**

| | |
|---|---|
| கவலையுற்ற தம்பசியைத் தணிக்க | அதிதுன்பம் வாய்ந்த தனது பசிநோயைச் சாந்தமடையும்படி செய்ய |
| வேறோர் கதியின்மையால் | இகலோகத்திற்குரிய உழவு முதலிய அறுவகைத் தொழில்களுக்கு வேறாக ஓர் ஏதுவில்லாதபடியால் |
| அறந்தான் காட்டுவார் போல் | தர்மத்தைப் போதிப்பவரைப் போல் |
| குவலயத்தோர் பொருள் | உலகிலுள்ளவர்களது பணத்தை |
| விரகால் வாங்கிக் கொண்டு | சாமர்த்தியத்தால் வாங்கிக்கொண்டு, |
| குருக் கொடுக்கும் | ஆசாரியராக விருந்து உபதேசமளிக்கும் |

| | |
|---|---|
| பேய்களொரு கோடி | பிசாசுகள் அளவிறந்தனவாம். |

அதிதுன்பம் வாய்ந்த தனது பசிநோயைச் சாந்தமடையும்படி செய்ய இகலோகத்திற்குரிய உழவு முதலிய அறுவகைத் தொழில்களுக்கு வேறாக ஓர் ஏதுவில்லாதபடியால் தர்மத்தைப் போதிப்பவரைப் போல் உலகிலுள்ளவர்களது பணத்தை சாமர்த்தியத்தால் வாங்கிக்கொண்டு, ஆசாரியராக விருந்து உபதேசமளிக்கும் பிசாசுகள் அளவிறந்தனவாம்.

**20. தன்ம நந்தனை வெருட்டு மேபிறர்**
**தளும்பு நெஞ்சுக டெருட்டுமே**
**வன்ம நங்கொடு கிளிகள் போலறம்**
**வடிக்கு மேபட நடிக்குமே.**

| | |
|---|---|
| தன்மனந்தனை வெருட்டுமே | தனது மனம் தன்னை உள்ளே அடங்கியிருக்கும்படி செய்யாமல் அலையச் செய்யும் அல்லது இதுவரை நமக்கு சொரூப ஞானம் உண்டாகவில்லையே என்று தன்னைப் பயப்படுத்தும். ஆனால் |
| பிறர் தளும்பு நெஞ்சுகள் தெருட்டுமே | அன்னியர்களது தோஷமுள்ள மனத்தைத் தெளிவிக்குமாம் |
| வன்மனங்கொடு கிளிகள் போல் | வலிமையான சித்தத்தையுடையவனாய் சொன்னதை சொல்லும் கிளிப்பிள்ளைகள் போல |
| அறம் வடிக்கும் | தர்மத்தைப் போதிப்பிக்கும். |
| பட நடிக்கும் | அத்தர்மாதிகள் தம்மிடத்து பொருந்தியது போல அபினயஞ்செய்வன சில பிசாசுகள். |

தனது மனம் தன்னை உள்ளே அடங்கியிருக்கும்படி செய்யாமல் அலையச் செய்யும் அல்லது இதுவரை நமக்கு சொரூபஞானம் உண்டாகவில்லையே என்று தன்னைப் பயப்படுத்தும். ஆனால் அன்னியர்களது தோஷமுள்ள மனத்தைத் தெளிவிக்குமாம் வலிமையான சித்தத்தையுடையவனாய் சொன்னதை சொல்லும் கிளிப்பிள்ளைகள் போல தர்மத்தைப் போதிப்பிக்கும். அத்தர்மாதிகள் தம்மிடத்து பொருந்தியது போல அபினயஞ்செய்வன சில பிசாசுகள்.

**21. நீளு கின்றசடை தன்னி னாசைமிக**
**நீளு மேவினையின் மூளுமே**
**மீளு கின்றநெறி தன்னினாதரவு**
**மீளு மேயொழுக நாளுமே.**

| | |
|---|---|
| நீளுகின்ற சடைதன்னில் | நீண்டு வளரும் சடையைப்போல் |
| ஆசை நீளுமே | ஆசையானது வளர்ந்துகொண்டே செல்லும். |
| வினையின் மூளும் | அதனால் ஆசையைப்பூரணமாக்கும் பொருட்டு கர்மங்களிற் தற்பரனாவன் |
| வரும் மீளுகின்ற நெறி தன்னின் | ஜனனத்தை நிவர்த்திசெய்யும் மோக்ஷ மார்க்கத்தில் |
| ஆதரவு மீளும் | அன்பானது நீங்கியிருக்கும். சில பேய்கள் நீண்ட சடைவேண்டுமென்று இச்சிக்கும், |
| ஒழுக நாளுமே | பின் அதற்காக வேண்டிய உபாயமாகிய கர்மங்களில் தற்பரனானவன்போல் என்றுமாம். |

நீண்டு வளரும் சடையைப்போல் ஆசையானது வளர்ந்துகொண்டே செல்லும். அதனால் ஆசையைப்பூரணமாக்கும் பொருட்டு கர்மங்களிற் தற்பரனாவன் ஜனனத்தை நிவர்த்திசெய்யும் மோக்ஷ மார்க்கத்தில் அன்பானது நீங்கியிருக்கும். சில பேய்கள் நீண்ட சடைவேண்டுமென்று இச்சிக்கும், பின் அதற்காக வேண்டிய உபாயமாகிய கர்மங்களில் தற்பரனானவன்போல் என்றுமாம்.

**22.** **பஞ்சு படுகலைக டன்னை யும்பல**
**படிக்கு மேதலை வெடிக்குமே**
**பிஞ்சு படுகலைக டன்னை யுந்துவர்**
**பிடிக்கு மேபட நடிக்குமே.**

| | |
|---|---|
| பஞ்சு படு கலைகள் தன்னையும் | விவேகத்தைக் கெடுக்கும் அற்பமாகிய சாத்திரங்களையும் |
| பல படிக்கும் | அநேகமானவற்றைக் கற்கும் |
| தலை வெடிக்கும் | மண்டைவெடிக்க கத்துவார்கள். |
| சிரம் பிளக்கும் | அதனால் தலைவலியே தவிர ஒரு பிரயோசனமும் இராது. |
| பிஞ்சு படு கலைகள் தன்னையும் | சில காலத்தில் கிழிந்துபோகும் வஸ்திரங்களைக்கூட |
| துவர் பிடிக்குமே | நல்ல சாயங்களை நனைத்து கட்டிக்கொண்டு |
| பட நடிக்குமே | பார்த்தவர்கள் அதிசயிக்கும்படி அபிநயம் காட்டும் சில பேய்கள். |

விவேகத்தைக் கெடுக்கும் அற்பமாகிய சாத்திரங்களையும் அநேகமானவற்றைக் கற்கும் மண்டைவெடிக்கக் கத்துவார்கள். அதனால் தலைவலியே தவிர ஒரு பிரயோசனமும் இராது. சில காலத்தில் கிழிந்துபோகும் வஸ்திரங்களைக்கூட நல்ல

சாயங்களை நனைத்து கட்டிக்கொண்டு பார்த்தவர்கள் அதிசயிக்கும்படி அபிநயம் காட்டும் சில பேய்கள்.

-------

# 5. உவமை

அவதாரிகை: இப்படிக் கொடிய வெப்பமுற்றதும், பேய்களாற் சூழப்பட்டதும் ஆய வனத்தில் அலகைகளனைத்தும் ஒன்றுக்கொன்று அதீத பரமான்மாவைப் போதிப்பதும், அதனை நிச்சயம் செய்வதும், ஆசாரியரது அருளின்றிப் பெறக் கருதுவதும், பிரமாணாதிகளால் குருவாயிருந்து உபதேசிப்பதும், எதுபோலவெனில் அதற்கு சமானம் கூறுகின்றார்.

**1. சொல்லாலு மநனாலு மறியா வொன்றைச்**
**சொல்லாலே தோற்றுவிப்பத் துணியுஞ் சொற்கள்**
**புல்லாலே யெரிசுடுதல் போலும் போலும்**
**போலாதேற் புகையினெழுங் கனலே போலும்.**

| | |
|---|---|
| சொல்லாலும் | வாக்கியத்தால் சொல்லிக்காட்டுவேன் என்பதும் |
| மனனாலும் | மனதினால் அரியக் காட்டுவேன் என்பதும் |
| அறியா | வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாத ஒன்றாகிய |
| ஒன்றை | அத்வைத பரமான்மாவை |
| சொல்லாலே தோற்றுவிக்கத் துணியுஞ் சொல்லும் | வாக்கியத்தால் சொல்லியும் கையால் பிடித்தும் காட்டுவதைப்போல் காட்டுவேன் என்பது எதைப்போல் இருக்கிறது என்றால், |
| புல்லாலே எரிசுடுதல் போலும் போலும் | துரும்பைக்கொண்டு நெருப்பை எரித்துவிடுவேன் என்றால் எப்படி முடியாதோ அப்படி முடியாத காரியமாம். |
| போலாதே | இதைப் பார்க்கிலும் |
| புகையினெழுங் கனலே போலும் | புகையில் இருந்துதான் நெருப்பு வந்தது என்பது எப்படி முற்றிலும் கூடாதோ அப்படி இதுவும் கூடாததுவேயாம். |

வாக்கியத்தால் சொல்லிக்காட்டுவேன் என்பதும் மனதினால் அரியக் காட்டுவேன் என்பதும் வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாத ஒன்றாகிய அத்வைத பரமான்மாவை வாக்கியத்தால் சொல்லியும் கையால் பிடித்தும் காட்டுவதைப்போல் காட்டுவேன் என்பது எதைப்போல் இருக்கிறது என்றால், துரும்பைக்கொண்டு நெருப்பை எரித்துவிடுவேன் என்றால் எப்படி முடியாதோ அப்படி முடியாத காரியமாம். இதைப் பார்க்கிலும் புகையில் இருந்துதான் நெருப்பு வந்தது என்பது எப்படி முற்றிலும் கூடாதோ அப்படி இதுவும் கூடாததுவேயாம்.

**2. ஒளிதருநூ லோதிமுடி பொருளைக் காணா**
**தோதியநூல் பலவுணர்ந்து பிணங்கும் பேய்கள்**
**களிதருமியா னையைக் குருடர் கையாற் கண்டு**
**கண்டகண்ட வளவுகொடே கழறல் போலும்.**

| | |
|---|---|
| ஒளிதரு நூலோதி | மனத்திற்கு தெளிவைத் தரக்கூடிய அதாவது அறிவை வளர்க்கும் அத்தியான்மசாத்திரங்களை ஞானநூல்கற்று |
| முடிபொருளைக்காயாது | அந்த நூல்களின் முடிந்த பொருளையுணராமல் |
| ஒதிய நூல் | தான்படித்த நூல்களில் ஒரு மடிவின்றி |
| பலவுணர்ந்து | பலவிதமான நிச்சயங்கொண்டு |
| பிணங்கும் பேய்கள் | சண்டையடித்துக்கொள்ளும் பிசாசுக்கள் அது எது போலவெனின் |
| களிதரும் யானையை | மும்மதங்களைப் பொழியும் யானையை |
| குருடர் கையாற் கண்டு | பிறவிக்குருடர்கள் கையால் தடவிப்பார்த்து |
| கண்ட கண்ட வளவு கொடூர கழறல் போலும் | அவரவர்களது மனதின்படி பேசுவார்கள் அதுபோலவும். இது குளகம். |

மனத்திற்கு தெளிவைத் தரக்கூடிய அதாவது அறிவை வளர்க்கும் அத்தியான்மசாத்திரங்களை ஞானநூல்கற்று அந்த நூல்களின் முடிந்த பொருளையுணராமல் தான்படித்த நூல்களில் ஒரு மடிவின்றி பலவிதமான நிச்சயங்கொண்டு சண்டையடித்துக்கொள்ளும் பிசாசுக்கள் அது எது போலவெனின் மும்மதங்களைப் பொழியும் யானையை பிறவிக்குருடர்கள் கையால் தடவிப்பார்த்து அவரவர்களது மனதின்படி பேசுவார்கள் அதுபோலவும். இது குளகம்.

**3. கலைபகருஞ் சமயிகள்கண் காணிற் பீலிக்**
**கண்ணொன்றைக் காணுமெனக் கையிற் கொண்டு**
**தலைபறியே சமயங்க ளென்று தத்தந்**
**தலை பறித்துச் சிலசமண்பேய் சாற்றல் போலும்.**

| | |
|---|---|
| கலை பகரும் | அன்னியசாத்திரங்கற்கும் சாத்திரங்களிற்கூறாநிற்கும் |
| சமயிகள் | சைவ முதலிய சட்சமயிகளும் |
| கண்காணில் | எதிரிற் படில் |
| பீலிக் கண்ணொன்றைக் காணும் என | அத்தோடம் பரிகரிப்பான் மயிற்றோகையினது கண்களைப் பாருங்கள் என்று |
| கையிற்கொண்டு | கையிற்றாங்கித் திரிந்துகொடுண்டு |
| தலைபறியே சமயங்களென்று | நாங்கள்தான் சிரத்திலுள்ள உரோமங்களைப் பிடுங்கும் சமணர்களாம் என்று |
| தந்தந்தலைபறித்துச் சில சமண | தங்களது தங்களது உரோமங்களைப் பிடுங்கிச் சில |

| | |
|---|---|
| பேய் சாற்றல் போலும் | சமணப் பிசாசுக்கள் சொல்லுதல் போலவுமாம். |

அன்னியசாத்திரங்கற்கும் சாத்திரங்களிற்கூறாநிற்கும் சைவ முதலிய சட்சமயிகளும் எதிரிற் படில் அத்தோடம் பரிகரிப்பான் மயிற்றோகையினது கண்களைப் பாருங்கள் என்று கையிற்றாங்கித் திரிந்துகொடுண்டு நாங்கள்தான் சிரத்திலுள்ள உரோமங்களைப் பிடுங்கும் சமணர்களாம் என்று தங்களது தங்களது உரோமங்களைப் பிடுங்கிச் சில சமணப் பிசாசுக்கள் சொல்லுதல் போலவுமாம்.

**4.** **அன்புறுநற் குருபரனுக் கன்வு செய்யா**
**தருவுருவைப் பெறவிருக்குந் தன்மை யையோ**
**வின்புறுநற் கனிபாறே னினித ருந்தா**
**திரதநுகர் வுறவிருப்பா ரியல்பு போலும்.**

| | |
|---|---|
| அன்புறு நற் குருபரனுக் கன்பு செய்யாது | ஜீவர்களிடத்தில் அருள் சிவபக்தி திருந்திய துறவு மெய்ஞானம் ஆவதோர்படிவாகிய பிரஹ்மநிஷ்டையுடைய ஆசாரியருக்கு பணியை இயற்றாது |
| அருவுருவைப் பெறவிருக்கும்தன்மை | அதீதமான பரமாத்மாவை அடைய வேண்டும் அடைய வேண்டும் எனக் கூறித் திரியுங் கூற்று எதுபோலவெனின் |
| ஐயோ | அந்தகோ! ஆச்சரியம்! |
| இன்புறு நற்கனி பால் தேன் இனிது அருந்தாது | பசியையுடையவனுக்கு திருப்தியையுண்டுபண்ணும் மா,பலா,வாழை என்னும் நல்ல முப்பழங்களும், நல்ல பசுவின் பாலும் தேனையும் விருப்பத்தோடு புசியாது |
| இரதநுகர்வுற விருப்பார் இயல்பு போலும் | இரசத்தையநுபவிக்கவேணும் இரசத்தையநுபவிக்கவேணும் எனக் கூறியிருப்பவனுக்கு நிகராகும். |

ஜீவர்களிடத்தில் அருள் சிவபக்தி திருந்திய துறவு மெய்ஞானம் ஆவதோர்படிவாகிய பிரஹ்மநிஷ்டையுடைய ஆசாரியருக்கு பணியை இயற்றாது அதீதமான பரமாத்மாவை அடைய வேண்டும் அடைய வேண்டும் எனக் கூறித் திரியுங் கூற்று எதுபோலவெனின் அந்தகோ! ஆச்சரியம்! பசியையுடையவனுக்கு திருப்தியையுண்டுபண்ணும் மா,பலா,வாழை என்னும் நல்ல முப்பழங்களும், நல்ல பசுவின் பாலும் தேனையும் விருப்பத்தோடு புசியாது இரசத்தையநுபவிக்கவேணும் இரசத்தையநுபவிக்கவேணும் எனக் கூறியிருப்பவனுக்கு நிகராகும்.

**5.** **அருவாய பரனுருவா யருள்வ தொன்றை**
**யஞ்சாதே சிலவளவை கொண்டு தாமுங்**
**குருவாகிச் சிலகுருப்பேய் கூறுந் தன்மை**
**குருடர்க்குக் குருடர்நெறி கூறல் போலும்.**

| | |
|---|---|
| அருவாய பரன் | தனக்கெனவடிவமில்லாத பரம்பொருள் |
| உருவாய் | அன்பர்களுக்காக அருளே உருவாய் வந்து |
| அருள்வதொன்றை | உபதேசிக்கும் ஒன்றாகிய பரமான்ம வடிவத்தை |
| அஞ்சாதே | பயப்படாமல், |
| சில அளவை கொண்டு | பிரத்தியட்சம், அதாவது, காட்சி, கருதல், உவமை, கேள்வி முதலிய சில அளவைகொண்டு |
| மாமுங்குருவாகி | தாமும் குருவாக இருந்து |
| சில குருப்பேய் கூறுந்தன்மை | சில பிசாசுக்கள் உபதேசிக்கும் விதம் எதுபோலவெனின் |
| குருடர்க்கு குருடர் நெறி கூறல் போலும் | கண்ணில்லாதவனுக்கு மற்றொரு கண்ணில்லாத மனிதன் வழிகாட்டுவதற்கு சமமாகும். |

தனக்கெனவடிவமில்லாத பரம்பொருள் அன்பர்களுக்காக அருளே உருவாய் வந்து உபதேசிக்கும் ஒன்றாகிய பரமான்ம வடிவத்தை பயப்படாமல், பிரத்தியட்சம், அதாவது, காட்சி, கருதல், உவமை, கேள்வி முதலிய சில அளவைகொண்டு தாமும் குருவாக இருந்து சில பிசாசுக்கள் உபதேசிக்கும் விதம் எதுபோலவெனின் கண்ணில்லாதவனுக்கு மற்றொரு கண்ணில்லாத மனிதன் வழிகாட்டுவதற்கு சமமாகும்.

——————

# 6. உட் சோலை

(இது பரியந்தம் ஸ்ரீ அம்பாள் வீற்றிருக்கும் ஆலயத்தைச் சுற்றியுள்ள உலகமாகிய புறங்காட்டை மிகவும் அத்தயாத்மிகாதி தாபத்திரையத்தோடு கூடியதென்றும் பேய்கள் வசிக்கும் சுடுகாடு என்றும் பேய்களால் சூழப்பட்டதென்றும் அப்பேய்கள் ஒன்றுக்கொன்று உபதேசிக்கும் விதத்தையும் கூறினார். இனிக்கோயிலைச் சுற்றியுள்ள உட்சோலையாக மஹான்கள் வசிக்கும் இடத்தைப் புகழ்கின்றார்.)

**1. போகாத துயர்மேவு பொல்லாத விப்பேய்கள் புகுமாறிலா**
**யோகால யத்துள்ளி ருப்பாடி ருச்சோலை யுட்சோலையே.**

| | |
|---|---|
| போகாத துயர்மேவு | உண்மையறிவாலன்றி (அழியாத) நீங்காத துன்பத்தோடு கூடிய |
| பொல்லாத | கொடிதாகிய |
| இப்பேய்கள் | இந்தப் பிசாசுக்கள் |
| .குமாறிலா | அடையமுடியாத |
| யோகாலயத்துள் இருப்பாள் | மகான்கள் மனமாகிய வீட்டில் நிர்விகற்ப சமாதி என்ற கோயிலில் வீற்றிருப்பவளது |
| திருச்சோலை | அடியார்கள் வசிக்கும் அழகிய இடமானது |
| உட்சோலையே | கோவிலைச் சுற்றியுள்ள உட்சோலையாகும். |

உண்மையறிவாலன்றி (அழியாத) நீங்காத துன்பத்தோடு கூடிய கொடிதாகிய இந்தப் பிசாசுக்கள் அடையமுடியாத மகான்கள் மனமாகிய வீட்டில் நிர்விகற்ப சமாதி என்ற கோயிலில் வீற்றிருப்பவளது அடியார்கள் வசிக்கும் அழகிய இடமானது கோவிலைச் சுற்றியுள்ள உட்சோலையாகும்.

**2. ஆகாச நீர்பூமி யனல்காலி ரவிசோம ரவி யாதுமூ**
**டேகாச தரநாத னடியார்கள் பயில்வார்க ளிதமாகவே.**

| | |
|---|---|
| ஆகாசம் நீர் பூமி அனல் கால் | நிலம், நீர், நெருப்பு, காற்று, வெளி, |
| இரவி | சூரியன், |
| சோமன் | சந்திரன் |
| ஆவி | ஜீவனும் ஆகிய எக்ஞபுருஷன் |
| யாதுமூடு | இவையாவுமாய் வியாபித்துள்ளயாவையும் |
| ஏகாச தர நாதன் | அடக்கி வஸ்த்திரம் தரித்த தேவி உத்தரீயத்தைத்தரித்த பரமாத்மாவினுடைய |

| | |
|---|---|
| அடியார்கள் | திருவடியைப் பணியும் மஹான்கள் |
| பயில்வார்கள் இதமாக | பிரமத்தியானம் பண்ணிக்கொண்டு சுகமாக வசிப்பார்கள். |

நிலம், நீர், நெருப்பு, காற்று, வெளி, சூரியன், சந்திரன் ஜீவனும் ஆகிய எக்ஞுபுருஷன் இவையாவுமாய் வியாபித்துள்ளயாவையும் அடக்கி வஸ்த்திரம் தரித்த தேவி உத்தரீயத்தைத்தரித்த பரமாத்மாவினுடைய திருவடியைப் பணியும் மஹான்கள் பிரமத்தியானம் பண்ணிக்கொண்டு சுகமாக வசிப்பார்கள்.

**3. ஆறு மிலகலை நீரும றிஞர்க ளாறு நிறைவு மவ் வருளுமே**
**வேறு மிலகலை கூறு பதினது நாலு மலதுவி ளம்பிலே**

| | |
|---|---|
| ஆறுமிலை | அச்சோலையின்கண் நதிகளில்லை. |
| கலைகூறு மறிஞர்கள் | சுருதியாதிகளால் புகழப்பட்ட மஹான்கள் |
| ஆறு நிறைவு | விசிராந்தியடையும் பரிபூர்ண நிலையாய சமுத்திரமே இருக்கிறது. |
| அறியுமே | அதனை அறிமின்கள் |
| விளம்பிலே | சொல்லுமிடத்து |
| பதினாறு நாலு மலது | அறுபத்திநான்கு கலை ஞானமே இருக்கின்றதல்லாமல், |
| குலை | மான்கள் |
| வேறுமிலை | வேறு மிருகங்கள் கிடையாது. |

அச்சோலையின்கண் நதிகளில்லை. சுருதியாதிகளால் புகழப்பட்ட மஹான்கள் விசிராந்தியடையும் பரிபூர்ண நிலையாய சமுத்திரமே இருக்கிறது. அதனை அறிமின்கள் சொல்லுமிடத்து அறுபத்திநான்கு கலை ஞானமே இருக்கின்றதல்லாமல், மான்கள் வேறு மிருகங்கள் கிடையாது.

**4. நிலவிய கிளிக ளுலவிய குயில்க**
**ணிறைபயிலியல்ப திறைவர்தாள்**
**குலவிய மறைக ளிறைவித னருகு**
**குழறுவ குழறுவ மழலையே.**

| | |
|---|---|
| இறைவிதாள் குலவிய மறைகள் | தேவனுடைய திருவடியை அபேதமாக ஒன்றாக துதிக்கும்வேத முதலியவைகள் |
| நிலவிய கிளிகள் | விளங்குகின்ற கிளிகளும், |
| உலவிய குயில்கள் | புராண இதிகாசங்களென்னும் உல்லாசமாகத் திரியும் |

| | |
|---|---|
| | குயில்களும் |
| நிறைபயில் இயல்பது | வரிசை வரிசையாக வசிக்கும் இயல்பினையுடையதாம். |
| இறைவிதன் அருகு | அக்கிளியும் குயிலும் தேவியினது பக்கத்தில் சென்று, |
| குழறுவ துழறுவ மழலையே | இதுவன்று, இதுவன்று என இனிமையான குழந்தைகள் பேசுவது போல் பேசுகின்றனவாம். |

தேவனுடைய திருவடியை அபேதமாக ஒன்றாக துதிக்கும்வேத முதலியவைகள் விளங்குகின்ற கிளிகளும், புராண இதிகாசங்களென்னும் உல்லாசமாகத் திரியும் குயில்களும் வரிசை வரிசையாக வசிக்கும் இயல்பினையுடையதாம். அக்கிளியும் குயிலும் தேவியினது பக்கத்தில் சென்று, இதுவன்று, இதுவன்று என இனிமையான குழந்தைகள் பேசுவது போல் பேசுகின்றனவாம்.

**5. அழ லுற வுடலு மயர்வுற வுயிரு**
**மலம்வர வெருவி யயருநா**
**ணிழலில பிறிதவ் வழகிய கருணை**
**நிகழ்வுறு நிழலொர் நிழலுமே.**

| | |
|---|---|
| உடலும் அழலுற | தேகமும் அதிக வெப்பஜ்வரத்தால் பீடிக்கப்படவும் |
| உயிரும் அயர்வுற | ஜீவன் சோகத்தையடையவும் |
| அலமர | இந்திரியங்கள் பிரமித்து கலக்கத்தையடையவும் |
| வெருவி | பயந்து |
| அயருநாள் | மரண துக்கத்தால் பீடிக்கப்படுங்காலத்து |
| பிறிது நிழலில | அத்துக்கத்தைச் சாந்தி செய்ய வேறு துணையில்லை. |
| இவ்வழகிய கருணை நிகழ்வுறு நிழல் | யாவர் துணையெனின் தேவிக்கு பக்தர்களிடத்து எழும் இந்த சிறப்பு வாய்ந்த கிருபையால் விளங்கும் நிழலாகிய |
| ஓர் நிழலுமே | ஓர் நிழலே துணையாக அச்சோலையில் இருக்கின்றது. |

தேகமும் அதிக வெப்பஜ்வரத்தால் பீடிக்கப்படவும் ஜீவன் சோகத்தையடையவும் இந்திரியங்கள் பிரமித்து கலக்கத்தையடையவும் பயந்து மரண துக்கத்தால் பீடிக்கப்படுங்காலத்து அத்துக்கத்தைச் சாந்தி செய்ய வேறு துணையில்லை. யாவர் துணையெனின் தேவிக்கு பக்தர்களிடத்து எழும் இந்த சிறப்பு வாய்ந்த கிருபையால் விளங்கும் நிழலாகிய ஓர் நிழலே துணையாக அச்சோலையில் இருக்கின்றது.

**6. என்றிவ் வுலகுள தன்று முதலெதி**
**ரின்று வரையிதி னொன்றுதா**
**னின்ற தெனவிலை யென்று மொழிவற**
**நின்ற தொருபொரு ளொன்றுமே.**

| | |
|---|---|
| என்று இவ்வுலகு உளது அன்று முதல் | எக்காலத்து இந்த நாமஉலகம் இருந்ததோ அக்கால முதலாக |
| இன்றுவரை இதில் ஒன்றுதான் | இந்தக்காலம்வரை இந்த உலகத்தில் ஒரு பொருளேனும் |
| எதிர் நின்ற தெனவிலை | முன்னிலையில் ஒரேபடித்தாய் இருந்தது என்று இல்லை. |
| என்றும் ஒழிவற | பின் யாதுஉளது எனில், எப்போதும் நாசமின்றி பரிபூர்ணமாக, |
| ஒரு பொருளொன்றுமே | எங்கு நிறைத்த ஒரு பரமான்மா |
| நின்றது | ஒன்றுதானே இருந்தது. |

எக்காலத்து இந்த நாமஉலகம் இருந்ததோ அக்கால முதலாக இந்தக்காலம்வரை இந்த உலகத்தில் ஒரு பொருளேனும் முன்னிலையில் ஒரேபடித்தாய் இருந்தது என்று இல்லை. பின் யாதுஉளது எனில், எப்போதும் நாசமின்றி பரிபூர்ணமாக, எங்கு நிறைத்த ஒரு பரமான்மா ஒன்றுதானே இருந்தது.

———————————

# 7. கோயில்

**1. ஆதி நாலுமா மறைகள் சூழ்வதற் கரிய**
**கோயிலுக் களவு கூறவோ**
**வோது நாலிரண்டுடனி ரண்டுதிக் குண்ட**
**மேனியக் கோயி லுள்ளதே.**

| | |
|---|---|
| ஆதி நாலு மாமறைகள் சூழுதற்கு அரிய கோயிலுக்கு | ஒரு புருஷனால் செய்யப்படாததாயும், பரமப்பிரமாணமாயும் விளங்கும் முதன்மையா இருக்காதி நான்கு வேதங்களாலும் கருதுதற்கு சொல்வதற்கு அருமையான கோயிலுக்கு |
| அளவு கூறவோ | எல்லையை எடுத்துச் சொல்லவோ |
| ஓதில் | முடியாது. ஓரக்கால் கூறுமிடத்து |
| நாலிரண்டுடன் இரண்டு திக்கு உண்ட மேனி | பத்துத் திக்கையும் தன்னுள் அடக்கிக் கொண்டுள்ள தேவியினது சொரூபம் |
| அக்கோயிலுள்ளது | அந்த ஆலயத்தின் உள்ளே இருக்கின்றது என்றால் எல்லையைக் கூற யாரால் முடியும். |

ஒரு புருஷனால் செய்யப்படாததாயும், பரமப்பிரமாணமாயும் விளங்கும் முதன்மையா இருக்காதி நான்கு வேதங்களாலும் கருதுதற்கு சொல்வதற்கு அருமையான கோயிலுக்கு எல்லையை எடுத்துச் சொல்லவோ முடியாது. ஓரக்கால் கூறுமிடத்து பத்துத் திக்கையும் தன்னுள் அடக்கிக் கொண்டுள்ள தேவியினது சொரூபம் அந்த ஆலயத்தின் உள்ளே இருக்கின்றது என்றால் எல்லையைக் கூற யாரால் முடியும்.

**2. சமய மாறுதா னறைவ தேயலாற்**
**சதுமுகாதிகா ணரிய தார்கொலோ**
**வமையு மாறுதா னறிய வோதுவா**
**ரரிய கோலம்வாழ் பெரியகோயிலே.**

| | |
|---|---|
| சதுமுகாதி | பிரமன் முதலானோரும், |
| சமயமாறுதான் அறைவதே யலால் | ஆறு சமயங்களும், அந்தச் சொரூபத்தை நேரே அடைவதற்கு சாதனமாக கூறுகின்றனவேயன்றி, |
| காணரியது | என்றும் நிலைத்து இருக்கும் வஸ்துவை காண்டற்கு மிகவும் அருமையாம். |
| அமையுமாறு தானறிய | அப்படி இருக்க, அந்நியரது மனதுக்குச் சம்மதம் ஆகும்படி. |
| ஓதுவார் யார்கொலோ | அறிய உபதேசிப்பவர் யாவர் இருக்கின்றனர். |
| அரிய கோலம் வாழ்பெரிய கோயில் | இப்படி மனதுக்கும் வாக்கிற்கும் எட்டாத சொரூபமாக எழுந்தருளியிருக்கும் மஹத்தான அறிதற்கு அறிய ஆலயமாம். |

பிரமன் முதலானோரும், ஆறு சமயங்களும், அந்தச் சொரூபத்தை நேரே அடைவதற்கு சாதனமாக கூறுகின்றனவேயன்றி, என்றும் நிலைத்து இருக்கும் வஸ்துவை காண்டற்கு மிகவும் அருமையாம். அப்படி இருக்க, அந்நியரது மனதுக்குச் சம்மதம் ஆகும்படி அறிய உபதேசிப்பவர் யாவர் இருக்கின்றனர். இப்படி மனதுக்கும் வாக்கிற்கும் எட்டாத சொரூபமாய் எழுந்தருளியிருக்கும் மஹத்தான அறிதற்கு அறிய ஆலயமாம்

**3. மெய்வி ளக்கினார் மேவு கோயிலுக்**
**கெவ்வி ளக்குவே றினிவி ளக்குமே.**

| | |
|---|---|
| மெய்விளக்கினார் | நனவு கனவு துயில் முதலிய எல்லா நிலைகளிலும் |
| மேவு கோயிலுக்கு | உடம்பு முதலியவற்றை விளக்கிக்கொண்டிருக்கும் சொரூபமாய் எழுந்தருளியிருக்கும் ஆலயத்திற்கு |
| எவ்விளக்கு வேறு | அதற்கு அந்நியமாக எந்த தீபமானது |
| இனி விளக்கும் | இனிப் பிரகாசமாக விளக்கவேண்டும் ? வேண்டியதில்லை |

.

நனவு கனவு துயில் முதலிய எல்லா நிலைகளிலும் உடம்பு முதலியவற்றை விளக்கிக்கொண்டிருக்கும் சொரூபமாய் எழுந்தருளியிருக்கும் ஆலயத்திற்கு அதற்கு அந்நியமாக எந்த தீபமானது இனிப் பிரகாசமாக விளக்கவேண்டும் ? வேண்டியதில்லை.

——————

# 8. பலி பீடம்

**1. அண்ட கோடிநூ றாயிரங்களோர்**
**பிண்ட மாவிடும் பெரியபீடமே**

| | |
|---|---|
| நூறாயிரங்கோடி அண்டங்கள் | (நூறாயிரங்கோடி) இலக்ஷங்கோடி அண்டங்கள் சேர்ந்து |
| ஓர் பிண்டமாயிடும் | அப்பலிபீடத்திற்கு ஒரு பிண்டமாகத்தக்கதாக |
| பெரிய பீடமே | வைத்துப் பூஜிப்பதான பெரிய பீடமாம். |

(நூறாயிரங்கோடி) இலக்ஷங்கோடி அண்டங்கள் சேர்ந்து அப்பலிபீடத்திற்கு ஒரு பிண்டமாகத்தக்கதாக வைத்துப் பூஜிப்பதான பெரிய பீடமாம்.

**2. பவத்தி னார்பொடி பட**
**பராவிய தவத்தி னார்**
**பலி கொடுப்பர் தம்மையே**

| | |
|---|---|
| பராவிய தவத்தினார் | மிகுந்த வல்லமையுள்ள மஹான்கள் |
| பவத்தினார் பொடிபட | பிறப்பு இறப்பு வடிவ சத்துருவானவன் நாசமாக |
| தம்மையே பலிகொடுப்பர் | தனது ஜீவனை அகங்கார வடிவத்தைப் பலியாகக் கொடுப்பார்களாம். அத்தகைய பீடமாம். |

மிகுந்த வல்லமையுள்ள மஹான்கள் பிறப்பு இறப்பு வடிவ சத்துருவானவன் நாசமாக தனது ஜீவனை அகங்கார வடிவத்தைப் பலியாகக் கொடுப்பார்களாம். அத்தகைய பீடமாம்.

**3. தமதுரு விறைவடி வுறுதலி னிதநிகர்**
**தருவது மொருபொரு ளிலமிது தகவில**
**தெமதுயி ரெனினுமி தமுதுசெய் வதுகட**
**னெனவடி தொழுதிடு பலிபல பலவே.**

| | |
|---|---|
| தமதுரு | தனது உள்ளிருக்கும் ஆத்ம சொரூபமானது |
| இறைவடிவுறுதலின் | அந்த லட்சிய பிரம, அதாவது பெரும்பொருள் அதனோடு ஒன்றாக பொருந்தி வேறின்றி இருப்பதால் |
| இதன் நிகர் தருவதும் | இதற்குச் சமானமாக கொடுக்கத்தக்க பொருள் |
| ஒரு பொருளிலம் | வேறு ஒன்றுமின்றி இருக்கிறோம். |
| இது தகவிலது | ஆனால் கொடாமலிருப்பது தகுதி அல்லவெனின் இப்படிக் கூறுவதும் தகுதியுடைத்தன்று |

| | |
|---|---|
| எமது உயிரெனினும் | எமது பிராணனையேனும் ஜீவத்துவத்தையேனு |
| இது அமிர்து செய்வது கடன் | இதற்கு அமிர்து செய்து வைக்க வேண்டியது கடமையே |
| என அடிதொழுது | என்று திருவடியைப் பணிந்து |
| இடு பலி பலவே | இடப்பட்ட பலிகள் அநேகமாம். |

தனது உள்ளிருக்கும் ஆத்ம சொரூபமானது அந்த லட்சிய பிரம, அதாவது பெரும்பொருள் அதனோடு ஒன்றாக பொருந்தி வேறின்றி இருப்பதால் இதற்குச் சமானமாக கொடுக்கத்தக்க பொருள் வேறு ஒன்றுமின்றி இருக்கிறோம். ஆனால் கொடாமலிருப்பது தகுதி அல்லவெனின் இப்படிக் கூறுவதும் தகுதியுடைத்தன்று. எமது பிராணனையேனும் ஜீவத்துவத்தையேனுஇதற்கு அமிர்து செய்து வைக்க வேண்டியது கடமையே என்று திருபடியைப் பணிந்து இடப்பட்ட பலிகள் அநேகமாம்.

**4. உடையன வுடலுயி ருறும்வினை யுளமுணர்**
**வுலகு தனிலின முரைசெய வருபொரு**
**ளடையவு மமிர்துசெய் தனையினி யமிர்துசெய்**
**வதுமில தெனுமொலி யவைபல பலவே.**

| | |
|---|---|
| உடையன | எமக்குள்ள பெண்டிர் முதலிய மமதைக்கு விஷயமாகும் குடும்பமும் |
| உடல் உயிர் | நான் என அகந்தைக்கு விஷயமான தேகமும் பிராணனும் |
| வினை | பொருந்திய நல்வினை தீவினைகளும் |
| உளம் | மனமும் |
| உணர்வும் | புத்தியும் |
| உலகுதனில் | உலகத்தின்கண் |
| இனம் உரை செய வரு பொருள் | இன்னும் சொல்லப்பட்ட வஸ்துக்கள் யாவும் |
| அமிர்து செய்தனை | அமிர்தமாகப் பலியாய் விட்டன. |
| இனி அமிர்து செய்வதுமிலது | இனிமேல் புசிக்கத்தக்கதாக ஒரு பொருளுலகத்து இல்லை |
| எனும் ஒலி பல பலவே | என்னும் கூக்குரலானது பலவாக அப்பலிபீடத்தின் சமீபத்தேயுள்ளனவாம். அத்தகைய மஹிமைவாய்ந்ததாம் அப்பீடம். |

எமக்குள்ள பெண்டிர் முதலிய மமதைக்கு விஷயமாகும் குடும்பமும் நான் என அகந்தைக்கு விஷயமான தேகமும் பிராணனும் பொருந்திய நல்வினை தீவினைகளும் மனமும் புத்தியும் உலகத்தின்கண் இன்னும் சொல்லப்பட்ட வஸ்துக்கள் யாவும் அமிர்தமாகப் பலியாய் பிட்டன. இனிமேல் புசிக்கத்தக்கதாக ஒரு பொருளுலகத்து

இல்லை என்னும் கூக்குரலானது பலவாக அப்பலிபீடத்தின் சமீபத்தேயுள்ளனவாம். அத்தகைய மஹிமைவாய்ந்ததாம் அப்பீடம்.

---------

# 9. ஆல்

1. **மருவிதய கமலமுறை வாளென்றும் வாழ்வதொரு**
**வடமுமுள ததனளவை யாமிங்கு நாடளவி**
**னொருவிதையி னளவளவி லோரண்ட மாகுமதி**
**னுளகனியி னளவையினி யார்கண்டு கூறவரே.**

| | |
|---|---|
| மருவு இதய கமலம் உறைவாள் | மஹான்களது மைத்ரியாதி கல்யாண குணங்கள் பொருந்திய ஹ்ருதய தாமரையின்கண் எழுந்தருளியிருக்கும் எனின் தேவிக்கு |
| என்றும் வாழ்வதொரு வடமும் உளது | எப்பொழுதும் பக்தானுக்ரஹார்த்தம் திவ்யமங்கள ஸ்வதாங்கி வசித்து வரும் ஒரு வடவாலவிருக்ஷம் மணித்வீபத்தின்கண் இருக்கின்றது. |
| அதன் அளவையாம் இங்கு நாடளவில் | அதனது எல்லையை நாம் ஈண்டு பார்க்குமிடத்து |
| ஒரு விதையின் அளவு அளவில் | ஒரு விதையினுடைய அளவையே. அளக்குமிடத்து |
| ஓரண்டமாகும் | ஓரண்டத்திற்குச் சமானமாகுமென்றால் |
| அதில்உள கனியின் அளவை | அவ்விருக்ஷத்தின்கண் உள பழங்களது கணக்கை |
| இனியார் கண்டு கூறுவரே | இனிமேல் யாவரால் பார்த்துக் கூறமுடியாதபோது அவ்விருக்ஷத்தின் எல்லையை எவ்வாறு கூற முடியும் என்றவாறு |

மஹான்களது மைத்ரியாதி கல்யாண குணங்கள் பொருந்திய ஹ்ருதய தாமரையின்கண் எழுந்தருளியிருக்கும் எனின் தேவிக்கு எப்பொழுதும் பக்தானுக்ரஹார்த்தம் திவ்யமங்கள ஸ்வதாங்கி வசித்து வரும் ஒரு வடவாலவிருக்ஷம் மணித்வீபத்தின்கண் இருக்கின்றது. அதனது எல்லையை நாம் ஈண்டு பார்க்குமிடத்து ஒரு விதையினுடைய அளவையே. அளக்குமிடத்து ஓரண்டத்திற்குச் சமானமாகுமென்றால் அவ்விருக்ஷத்தின்கண் உள பழங்களது கணக்கை இனிமேல் யாவரால் பார்த்துக் கூறமுடியாதபோது அவ்விருக்ஷத்தின் எல்லையை எவ்வாறு கூற முடியும் என்றவாறு.

2. **அயனையுல கடையவரு மோருந்தி மாமலரி**
**னருளியறி வரியபர யோகொன்றி மாறுயில்கொள்**
**சயநமென மொழிவதொரு தாழ்கொம் பின் மேவுசிறு**
**தளிரினொரு தலையினுநி யேதென்பர் சாகையையே.**

| | |
|---|---|
| அயனை | பிரமதேவரை |
| உலகடையவர் | உலகனைத்தும் சிருஷ்டிக்கும் பொருட்டு |
| அருளி | ஒப்பற்ற உந்தியந்தாமரையினின்றும் தோற்றுவித்த |
| அறிவரிய பரயோகென்று | அறிதற்கு அருமையான மேலான நனவில் துயில் என்னும் |
| துயில்கொள் மால் | யோக நித்திரையைப் பொருந்தியுள்ள மகாவிஷ்ணுவின் |
| சயனமென மொழிவது | படுக்கையென்று சொல்லப்படும் |
| ஒரு தாழ் கொம்பின்மேவு | அவ்விருக்ஷத்தின் சிறிய தாழ்ந்த கிளையிற் பொருந்திய |
| சிறு தளிரின் ஒரு தலையினுனி | சிறிய இலையின் ஒப்பற்ற நுனிய பாகத்தினும் நுனிப்பாகமாம் என்றால் |
| யாதென்பர் சாகையையே | அதனது பெரிய கிளைகளை எப்படிப்பட்டது என்று கூறமுடியும் ? |

பிரமதேவரை உலகனைத்தும் சிருஷ்டிக்கும் பொருட்டு ஒப்பற்ற உந்தியந்தாமரையினின்றும் தோற்றுவித்த அறிதற்கு அருமையான மேலான நனவில் துயில் என்னும் யோக நித்திரையைப் பொருந்தியுள்ள மகாவிஷ்ணுவின் படுக்கையென்று சொல்லப்படும் அவ்விருக்ஷத்தின் சிறிய தாழ்ந்த கிளையிற் பொருந்திய சிறிய இலையின் ஒப்பற்ற நுனிய பாகத்தினும் நுனிப்பாகமாம் என்றால் அதனது பெரிய கிளைகளை எப்படிப்பட்டது என்று கூறமுடியும் ?

**3. செறியும்வகை யரியதென வேதங்க ளோதுபொரு**
**டெரியவிர கொருவரறி யாதன்பி னாலரனொ**
**டறியும்வகை யகிலவுல காய்வந்து கூடியது**
**மதனில்விடு சிறியதொரு வீழ்நின்ற நீழலிலே.**

| | |
|---|---|
| செரியும் வகை அரியதென | மனப்பக்குவம் இல்லாதவர்களால் அடைவதற்கு முடியாதது என்று |
| வேதங்கள் ஒது பொருள் | வேதங்கள் சொல்லுகின்ற பொருளை |
| தெரியவிரகு ஒரு வரறியாது | அறியும் சாமர்த்தியத்தை ஒருவரும் அறிந்து கொள்ள முடியாதவராய் |
| அன்பினால் | பக்தியினால் |
| அரனோடு | பரமனுடன் |
| அறியும்வகை | தெரிந்து கொள்வதற்கு |
| அகில உலகாய் வந்து கூடியதும் | சனகாதி சர்வ மஹரிஷிகளும் ஒன்றுசேர்ந்து வந்து கூடி நின்றதும் |
| அதனில் விடு சிறியதொரு வீழ்நின்ற | அந்த மரத்தின்கண் விடப்பட்ட சிறிதான ஒரு இலையால் விழப்பட்டிருக்கும் நிழலிலேதானே கூடினார்கள் என்றால் அந்த |

| | |
|---|---|
| நீழலிலே | ஆலமரத்தின் மகிமையை என்னவென வியம்பலாம் ? |

மனப்பக்குவம் இல்லாதவர்களால் அடைவதற்கு முடியாதது என்று வேதங்கள் சொல்லுகின்ற பொருளை அறியும் சாமர்த்தியத்தை ஒருவரும் அறிந்து கொள்ள முடியாதவராய் பக்தியினால் பரமனுடன் தெரிந்து கொள்வதற்கு சனகாதி சர்வ மஹரிஷிகளும் ஒன்றுசேர்ந்து வந்து கூடி நின்றதும் அந்த மரத்தின்கண் விடப்பட்ட சிறிதான ஒரு இலையால் விழப்பட்டிருக்கும் நிழலிலேதானே கூடினார்கள் என்றால் அந்த ஆலமரத்தின் மகிமையை என்னவென வியம்பலாம் ?

**4. இரையுமெழு கடலும்வளை யாநின்ற வேழ்புவியு**
**மெழுமலையு முலகுபதி னாலுந்த னூடுருவும்**
**வரையுமிரு சுடரடைய வோரண்ட மாகுமிது**
**வடவிதையி னளவுமில தாலென்கொ லோதுவதே.**

| | |
|---|---|
| இரையும் எழுகடலும் | சப்திக்கின்ற ஏழுகடலும் |
| வளையாநின்ற ஏழ் புவியும் | அந்நீரை சுற்றியுள்ள ஏழுபூமிகளும் |
| எழுமலையும் | திசைகள் தோறும் உள்ள சப்தகுல பர்வதங்களும், |
| உலகு பதினாலும் | உலகங்கள் பதினான்கும், மேலே பூலோகம், பவர்கலோகம், சுகர்கலோகம், ஜனலோகம், தபோலோகம், மஹாலோகம், சத்யலோகம் என ஏழும், கீழே அதல,விதல, சுதல, தராதல, ரசாதல, மஹாதல, பாதாளமென ஏழும் ஆகப் பதினான்கும் |
| ஊடுருவுவரையும் | இவைகளின் மத்தியில் ஊடுருவியுள்ள பொன்மேருகிரி பர்வதமும் |
| இரு சுடர் | இரண்டு தீபமாகிய சந்திர சூரியர்களும் |
| அடைய | இவையாவும் |
| ஓரண்டமாகும் | ஒரு அண்டத்தின் இலக்கணமாம். |
| இது | இவ்வண்டவிலக்கணம் தேவி எழுந்தருளியுள்ள |
| வடவிதையின் அளவுமிலது | வடஆலமரத்தின் ஒருவிதையினது அளவும் இல்லாம் எனின் |
| ஆல் என் கொல் ஓதுவது | அந்த வட ஆலமரம் எப்படிப்பட்டது என்று சொல்ல முடியும் ? |

சப்திக்கின்ற ஏழுகடலும் அந்நீரை சுற்றியுள்ள ஏழுபூமிகளும் திசைகள் தோறும் உள்ள சப்தகுல பர்வதங்களும், உலகங்கள் பதினான்கும், மேலே பூலோகம், பவர்கலோகம், சுகர்கலோகம், ஜனலோகம், தபோலோகம், மஹாலோகம், சத்யலோகம் என ஏழும், கீழே அதல,விதல, சுதல, தராதல, ரசாதல, மஹாதல, பாதாளமென ஏழும் ஆகப் பதினான்கும் இவைகளின் மத்தியில் ஊடுருவியுள்ள பொன்மேருகிரி பர்வதமும் இரண்டு தீபமாகிய

சந்திர சூரியர்களும் இவையாவும் ஒரு அண்டத்தின் இலக்கணமாம். இவ்வண்டவிலக்கணம் தேவி எழுந்தருளியுள்ள வடஆலமரத்தின் ஒருவிதையினது அளவும் இல்லாம் எனின் அந்த வட ஆலமரம் எப்படிப்பட்டது என்று சொல்ல முடியும் ?

**5. நெரியமுய லகன்முதுகு நாகன்ப ணாமகுட**
**நெறுநெறென முறியநட மாடுஞ்ச டாதரனு**
**மரியுமல ரவனுமதி லேநின்ற வூசல்மிசை**
**யணையவரி னவர்கள்விசை போயன்றி மீள்விலரே.**

| | |
|---|---|
| முயல்கள் முதுகு நெறுநெறென முறிய நடமாடுஞ் சடாதரனும் | தாருகாவனத்து ரிஷிகளால் ஏவப்பட்ட முயலகனென்னும் அரக்கனது முதுகானது நெறுநெறு என்று முறியும்படி நர்த்தனம் செய்யும் ஸ்ரீநடராஜப் பெருந்தகையும் |
| நாகன் பணா மகுடம் நெரிய நடமாடும் அரியும் | காளிங்கனென்னும் சர்ப்பத்தின் படமானது நெரியும்படி நர்த்தனம் செய்யும் மஹாவிஷ்ணுவும் |
| மலரவனும் | கமலாசனனாகிய பிரமதேவரும் |
| அனையவர் இல் | தங்கள் தங்களது பத்தினியுடன் |
| அதிலே நின்ற ஊசல்மிசை | அவ்விருக்ஷத்திலுள்ள ஊஞ்சலின் கண்ணே இருந்து |
| அவர்கள் விசை போயன்றி மீள்விலர் | அம்மும்மூர்த்திகளும் அறுவரும் உந்தி ஆடும் வேகமானது போய்க்கொண்டே இருக்கின்றதில்லாமல் இன்னும் திரும்பவில்லை என்றால் எவ்வளவு பிரம்மாண்டமானது அந்த ஆலமரம் என்று கூறமுடியாது. |

தாருகாவனத்து ரிஷிகளால் ஏவப்பட்ட முயலகனென்னும் அரக்கனது முதுகானது நெறுநெறு என்று முறியும்படி நர்த்தனம் செய்யும் ஸ்ரீநடராஜப் பெருந்தகையும் காளிங்கனென்னும் சர்ப்பத்தின் படமானது நெரியும்படி நர்த்தனம் செய்யும் மஹாவிஷ்ணுவும் கமலாசனனாகிய பிரமதேவரும் தங்கள் தங்களது பத்தினியுடன் அவ்விருக்ஷத்திலுள்ள ஊஞ்சலின் கண்ணே இருந்து அம்மும்மூர்த்திகளும் அறுவரும் உந்தி ஆடும் வேகமானது போய்க்கொண்டே இருக்கின்றதில்லாமல் இன்னும் திரும்பவில்லை என்றால் எவ்வளவு பிரம்மாண்டமானது அந்த ஆலமரம் என்று கூறமுடியாது.

**6. மாறாத வருளுடையான் மாறென்றா லன்றிவிசை**
**யாறாத வவ்வூச லதிலூாச லல்லவோ**

| | |
|---|---|
| முறாத அருளுடையான் | பக்தர்களிடத்து மாறுபாடு இன்றிய கிருபையையுடைய |

| | |
|---|---|
| | தேவியானவள் |
| மாறென்றால் அன்றி | சென்ற ஊசலை திரும்பி வரட்டும் என்று அருளினால் அல்லாமல் |
| விசை ஆறாத அவ்வூஞ்சல் அல்லவே | வேகம் குறையாத அந்த ஊஞ்சலல்லவா |
| அதில் ஊசல் | அந்த ஆலமரத்தில் இருக்கும் ஊஞ்சல். |

பக்தர்களிடத்து மாறுபாடு இன்றிய கிருபையையுடைய தேவியானவள் சென்ற ஊசலை திரும்பி வரட்டும் என்று அருளினால் அல்லாமல் வேகம் குறையாத அந்த ஊஞ்சலல்லவா அந்த ஆலமரத்தில் இருக்கும் ஊஞ்சல்.

**7. மேனோக்கி வீழோட்டி விரிதிசையே கவடோட்டிக்**
**கீழ்நோக்கிக் கிளையோட்டிக் கிளரவளர் வடமிதுவே.**

| | |
|---|---|
| மேனோக்கி வீழோட்டி | காரணபிரமமே மூலமானதால் மேலே விழுதுகளை ஓடச் செய்தும், |
| விரிதிசையே கவடோட்டி | விரிந்த பத்துத்திக்கின்கண்ணும் கிளைகளைப் பரப்பியும் |
| கீழ்நோக்கி கிளையோட்டி | அதோமுகமாகக் கிளைகளை ஓடச் செய்தும் |
| கிளர வளர் வடமிதுவே | விளங்கும்படி விருத்தியடைந்துள்ள சம்சார விருக்ஷமாய வட ஆலம் என்பது இது. |

காரணபிரமமே மூலமானதால் மேலே விழுதுகளை ஓடச் செய்தும், விரிந்த பத்துத்திக்கின்கண்ணும் கிளைகளைப் பரப்பியும் அதோமுகமாகக் கிளைகளை ஓடச் செய்தும் விளங்கும்படி விருத்தியடைந்துள்ள சம்சார விருக்ஷமாய வட ஆலம் என்பது இது.

**8. ஆசையெனுந் தளையிட்டே யமையாமற் பறந்திந்தப்**
**பாசம்விடப் பறவாத பறவையதிற் பறவைகளே.**

| | |
|---|---|
| ஆசையெனுந் தளையிட்டே | அருந்தல் பொருந்தல்களால் அமைதியடையாமல் பறந்து மீண்டுமதிற் சென்று முடியாத பறவை ஆசையாகிய விலங்கால் பூட்டப்பட்டதாய் |
| அமையாமல் பறந்து | திருப்தியுறாமல் வேண்டு வேண்டுமென அலைந்து |
| இந்தப் பாசம் விடப்பறவாத | இந்தப் பந்தத்தை நிவர்த்திக்க வேண்டுமென்று முயற்சி செய்யாத |

| | |
|---|---|
| பறவை அதில் பறவைகள் | பறவைகள் அந்த ஆலமரத்திலிருக்கும் பறவைகளாம். |

அருந்தல் பொருந்தல்களால் அமைதியடையாமல் பறந்து மீண்டுமதிற் சென்று முடியாத பறவை ஆசையாகிய விலங்கால் பூட்டப்பட்டதாய் திருப்தியுறாமல் வேண்டு வேண்டுமென அலைந்து இந்தப் பந்தத்தை நிவர்த்திக்க வேண்டுமென்று முயற்சி செய்யாத பறவைகள் அந்த ஆலமரத்திலிருக்கும் பறவைகளாம்.

--------

# 10. தேவி

1. **அன்னையென வெழுந்தருளு மருளுடைய திருமேனி**
**தன்னையினி யாமறியுந் தன்மையினைச் சாற்றுவாம்.**

| | |
|---|---|
| அன்னையென எழுந்தருளும் | சர்ஜீவர்களுக்கும் மாதா என்று ஆவிர்ப்பாவித்து தேவி அநுக்கிரகம் செய்யும் |
| அருளுடைய திருமேனிதன்னை | கருணையே வடிவாகவுடைய அழகிய திவ்ய மங்களசொரூபம் |
| யாம் இனி | நாம் இனிமேல் |
| அறியுந் தன்மையினைச்சாற்றுவாம் | தெரிந்து கொள்ளும் விதத்தினைக் கூறுவாம். |

சர்ஜீவர்களுக்கும் மாதா என்று ஆவிர்ப்பாவித்து தேவி அநுக்கிரகம் செய்யும் கருணையே வடிவாகவுடைய அழகிய திவ்ய மங்களசொரூபம். நாம் இனிமேல்தெரிந்து கொள்ளும் விதத்தினைக் கூறுவாம்.

2. **மதுர வாரி யாய்ஞாந மயமதாகி வாடாத**
**மலர தாகி நாடாத மணம தாகி யானாத**
**சதுமு காதி வானோர்கள் சகல வேத கீதாதி**
**தகும நாதி யான்மீது தடவொணாத தாளாளே.**

| | |
|---|---|
| மதுரவாரியாய் | சுகம் கடல் ஆகியும் |
| ஞானமயமதாகி | அறிவுவடிவமாகியும் |
| வாடாத மலரதாகி | வாட்டமில்லாத பூவாகியும் |
| நாடாத மணமதாகி | யாரும் கொண்டு செல்ல முடியாத வாசனை பரிமளிப்பதாயும், |
| ஆனாத சதுமுகாதி வானோர்கள் | கற்பகாலத்தன்றியில் அழியாத பிரமன் முதலான தேவர்களும் |
| சகல வேத கீதாதி | சர்வ சுருதியாதிகளும் கீத முதலானதும் |
| தகும் மனாதியான் மீது | தகுதியுடைய மன முதலியவற்றாலும் |
| தடவொணாத | மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாமல் எறியவும் சொல்லவும் முடியாத |
| தாளாளே | திருவடியையுடையவள். |

சுகம் கடல் ஆகியும் அறிவுவடிவமாகியும் வாட்டமில்லாத பூவாகியும் யாரும் கொண்டு செல்ல முடியாத வாசனை பரிமளிப்பதாயும், கற்பகாலத்தன்றியில் அழியாத பிரமன் முதலான தேவர்களும் சர்வ சுருதியாதிகளும் கீத முதலானதும் தகுதியுடைய மன முதலியவற்றாலும் மனதிற்கும் வாக்கிற்கும் எட்டாமல் எறியவும் சொல்லவும் முடியாத திருவடியையுடையவள்.

**3. தொழுதெ ழாவி ழாவாறு சுழலு மாற றாமாயைத்**
**துயரி னால்வி டாதாறு சொரிய வாய்வி டாநாளு**
**மழுத பாலர்சீறாமலமிர்த வாரியா யூறி**
**யருள்ப யோத ரீயாகி யமிர்த பாநமீவாளே.**

| | |
|---|---|
| சுழுமால் அருமாயைத் துயரினால் | பிறப்பதும், இறப்பதும், மீண்டும் பிறந்து இறந்து சுற்றுவதும், வண்டிச்சக்கரம்போல் சுற்றுகின்ற மயக்கத்தை நீங்காத மாயையினது துன்பத்தினால் |
| விடாது தொழுது | சகியாதவராய் இடைவிடாமல் முக்கரணத்தாலும் வழிபட்டு |
| எழா | சம்சாரச் சுழற்சியினின்றும் எழுந்து மீண்டும் அதில் |
| வீழா ஆறு | வண்ணம் |
| ஆறு சொரிய | கண்ணினின்றும் ஆனந்த பாஷ்பமொழுக |
| வாய்விடா | வாய்விட்டு |
| நாளும் அழுத பாலர் | எப்போதும் புலம்பிக்கொண்டுள்ள சீவர்களாகிய குழந்தைகளுக்கு |
| சீறாமல் | கோபியாமல் |
| அமிர்தவாரியா யூறி | அமிர்தப்பெருக்கைச் சுரந்து |
| அருள் | கொடுக்கும் |
| பயோதரியாகி | பால் சுரக்கும் ஸ்தன்னியத்தையுடைய தேவி |
| அமிர்த பானமீவாள் | அமிர்தத்தையுண்ணும்படி அருளுவாள். |

பிறப்பதும், இறப்பதும், மீண்டும் பிறந்து இறந்து சுற்றுவதும், வண்டிச்சக்கரம்போல் சுற்றுகின்ற மயக்கத்தை நீங்காத மாயையினது துன்பத்தினால் சகியாதவராய் இடைவிடாமல் முக்கரணத்தாலும் வழிபட்டு சம்சாரச் சுழற்சியினின்றும் எழுந்து மீண்டும் அதில் வீழா வண்ணம் கண்ணினின்றும் ஆனந்த பாஷ்பமொழுக வாய்விட்டு எப்போதும் புலம்பிக்கொண்டுள்ள சீவர்களாகிய குழந்தைகளுக்கு கோபியாமல் அமிர்தப்பெருக்கைச் சுரந்து கொடுக்கும் பால் சுரக்கும் ஸ்தன்னியத்தையுடைய தேவி அமிர்தத்தையுண்ணும்படி அருளுவாள்.

**4. கதியி லாத நாயான கடைய னேனை வாசூடு**
**கழலெ னாவே னூடுறு கருணை வாரி யோர்போல**
**மதியி லாமை யான்ஞாந வடிவை வேறுகூறாக**
**வகைசெய் தேறு மாறாக மலைவதோடு காதாளே.**

| | |
|---|---|
| கதியிலாத நாயான கடையனேனை | தேவியினது திருவடியன்றியில் வேறு கதியில்லாத நாயினுங்கடையனான அடியேனை |
| வா | சமீபத்தில் வருவாய், |
| கழல் சூடு எனா | திருவடியை இந்த உனது முடியில் சூட்டிக் கொள்வாய் என்று திருவடிதீக்ஷை செய்து |
| என் ஊடு ஊறு கருணை வாரி | என்னிடத்து ஊற்றெடுக்கும் கருணா சமுத்திரமாயதேவியை அத்வைத சொரூபி என்னும் புத்தியின்மையால் |
| ஞான வடிவை வகைசெய்து | சித் ரூபியை வெவ்வேறு விதமாக கூறுபாடு செய்து |
| ஏறுமாறாக | குதர்க்கமாக உயர்வு தாழ்வு என்று கருதும் |
| மலைவ | மயக்கத்தை |
| தோடுகாதாள் | காதிலணியும் ஓர் ஓலையாகச் செய்து அணிந்து கொண்டிருக்கும் காதையுடையவளாம். |

தேவியினது திருவடியன்றியில் வேறு கதியில்லாத நாயினுங்கடையனான அடியேனை சமீபத்தில் வருவாய், திருவடியை இந்த உனது முடியில் சூட்டிக் கொள்வாய் என்று திருவடிதீக்ஷை செய்து என்னிடத்து ஊற்றெடுக்கும் கருணா சமுத்திரமாயதேவியை அத்வைத சொரூபி என்னும் புத்தியின்மையால் சித் ரூபியை வெவ்வேறு விதமாக கூறுபாடு செய்து குதர்க்கமாக உயர்வு தாழ்வு என்று கருதும் மயக்கத்தை காதிலணியும் ஓர் ஓலையாகச் செய்து அணிந்து கொண்டிருக்கும் காதையுடையவளாம்.

**5. மருவு மாக மான்மேவி வருகுணாதி நேராக**
**மநனின் மாறி மீளாத மநந மாதி வேரோடு**
**மொருவ மாறி மேனாடு முணர்வு நானு நேராகி**
**யொழிய ஞாந மேயாக வொருசொ லோதும்வாயாளே.**

| | |
|---|---|
| மருவும் ஆகாமல் மேவி வரு குணாதி | வினைக்கீடாகப் பொருந்தும் தேகத்தின்கண் யான்,எனது என மயக்கம் பொருந்தி அதனால் உண்டாகும் ஆசை கோப முதலிய பதின்மூன்று குணங்களையும் |
| மனனின் நேராக மாறி | மனத்தின்கண் நன்றுகெடுத்து |
| மீளாத மனனும் | விஷயங்களினின்றும் திரும்புதலின்றிய மனத்தையும் |
| ஆதி | சர்வத்திற்கும் மூலமான அஞ்ஞானத்தையும் |
| வேரோடும் ஒருவ மாறி | மூலத்தோடும் நாசமாகச் செய்து |
| மேல்நாடும் உணர்வு நானும் | அடிக்கடி விசாரிக்கில் உண்டாகும் பிரமாகாரவிருத்தி ஞானமும் ஜீவத்துவமும் |
| நேறாகி ஒழிய | கிரமமாக நாசத்தையடையும் பொருட்டு |

| | |
|---|---|
| ஞானமேயாக | சர்வமும் சித்மயமாக, ஜீவத்வம் நீங்கி ஐக்கியமாக |
| ஒரு சொலோதும் வாயாள் | ஒப்பற்ற மஹாவாக்யத்தை உபதேசிக்கும் வாயையுடைய தேவியாம். |

வினைக்கீடாகப் பொருந்தும் தேகத்தின்கண் யான்,எனது என மயக்கம் பொருந்தி அதனால் உண்டாகும் ஆசை கோப முதலிய பதின்மூன்று குணங்களையும் மனத்தின்கண் நன்றுகெடுத்து விஷயங்களினின்றும் திரும்புதலின்றிய மனத்தையும் சர்வத்திற்கும் மூலமான அஞ்ஞானத்தையும் மூலத்தோடும் நாசமாகச் செய்து அடிக்கடி விசாரிக்கில் உண்டாகும் பிரமாகாரவிருத்தி ஞானமும் ஜீவத்துவமும் கிரமமாக நாசத்தையடையும் பொருட்டு சர்வமும் சித்மயமாக, ஜீவத்வம் நீங்கி ஐக்கியமாக ஒப்பற்ற மஹாவாக்யத்தை உபதேசிக்கும் வாயையுடைய தேவியாம்.

**6. விகட நாம ரூபாதி விததி யோரொ ரோர் கோடி**
**விரியு மாக மீதோடி விரிவொ ணாதமேலான**
**மகுட நாடி லோர்கோடி மலருதாள்க ளோர்கோடி**
**மநனு நாவு மேவாத வடிவ தான மாயாளே.**

| | |
|---|---|
| விகட நாம ரூபாதி விததி | நானாவிதமான நாம உருவங்களின் விஸ்தாரம் |
| ஓர் ஓர் கோடி | ஒவ்வோர் கோடியாம். |
| விரியும் மாக மீது ஓடி | விசாலமான விஸ்வ ரூபமாக விண்ணுலகெல்லாம் கடந்து |
| விரவொணாது | இப்படிப்பட்டதென்று சிந்திக்க முடியாததாய் |
| மேலான மகுட நாடில் | உயர்ந்த கிரீடங்களை பார்க்கும்போது |
| ஓர் கோடி | ஓர் கோடியாகும். |
| மலருதாள்கள் ஓர் கோடி | விரிந்த தாமரைமலர் போன்ற திருவடிகள் ஓர் கோடியாம். |
| மனனு நாவு மேவாத | இப்படி வாக்குமனங்களுக்கு எட்டாத |
| வடிவதான மாயாள் | அதீதமாய வடிவுடைய தேவியாம். |

நானாவிதமான நாம உருவங்களின் விஸ்தாரம் ஒவ்வோர் கோடியாம். விசாலமான விஸ்வரூபமாக விண்ணுலகெல்லாம் கடந்து இப்படிப்பட்டதென்று சிந்திக்க முடியாததாய் உயர்ந்த கிரீடங்களை பார்க்கும்போது ஓர் கோடியாகும். விரிந்த தாமரைமலர் போன்ற திருவடிகள் ஓர் கோடியாம். இப்படி வாக்குமனங்களுக்கு எட்டாத அதீதமாய வடிவுடைய தேவியாம்.

**7. வெருவ ராமனாடோறும் வினையின் மூழ்கி வாளாரும்**
**விழியி னார்கள் பாலோடி விளைவதோர்வு றாதேனை**
**யருவ ராம னாயேனு ளமரரானு மாரானு**
**மறியொ ணாத தோர்கோல மருளு காதல் கூர்வாளே.**

| | |
|---|---|
| நாள்தோறும் வினையின் மூழ்கி | சதாகாலமும் நிஷித்த(பாப) மார்க்கத்தின்கண்ணேயே மூழ்கியவனாய் |
| வெருவராமல் | சாஸ்திரங்களும் பெரியோர்களுக்கும் பயப்படாமல் |
| வாளாரும் விழியினார்கள் பாலோடி | வாளாயுதம் போன்ற கூர்மையான விழிகளுடைய மங்கையர்கள்வசம் சென்று |
| விளைவது ஓர் உரு தேனை | அதனாலுண்டாகும் துன்பத்தை விசாரியாத கொடியவனான என்னை |
| அருவராமல் | தேவரீர் சீ! என்று இகழ்ந்து தள்ளிவிடாமல் |
| நாயேனுள் | கடையேனது மனத்தின்கண் |
| அமரராலும் ஆராலும் அறிய ஒணாத ஓர் கோலம் | இந்திராதி தேவர்களாலும் பிரமன் முதலிய திரிமூர்த்திகளாலும் காணமடியாத ஒப்பற்று எங்கும் நிறைந்த வடிவத்தை |
| அருளு காதல் கூர்வாள் | மிகுந்த விருப்பத்தோடு அநுக்ரஹம் செய்பவளாம் அவ்வம்மையார். |

சதாகாலமும் நிஷித்த(பாப) மார்க்கத்தின்கண்ணேயே மூழ்கியவனாய் சாஸ்திரங்களும் பெரியோர்களுக்கும் பயப்படாமல் வாளாயுதம் போன்ற கூர்மையான விழிகளுடைய மங்கையர்கள்வசம் சென்று அதனாலுண்டாகும் துன்பத்தை விசாரியாத கொடியவனான என்னை தேவரீர் சீ! என்று இகழ்ந்து தள்ளிவிடாமல் கடையேனது மனத்தின்கண் இந்திராதி தேவர்களாலும் பிரமன் முதலிய திரிமூர்த்திகளாலும் காணமடியாத ஒப்பற்று எங்கும் நிறைந்த வடிவத்தை மிகுந்த விருப்பத்தோடு அநுக்ரஹம் செய்பவளாம் அவ்வம்மையார்.

**8. அவனி நீரி னான்மாள வநலின் மாளநீர் காலி**
**னநலு மாள வாகாய மதனின் மாள வூடாடு**
**பவநன் வாந மேலான பரமதேசி லேயானபடியின்**
**மாள மாளாத பழைய பாழில் வாழ்வாளே.**

| | |
|---|---|
| ஆனபடியின் | (உண்டானகிரமமாக) உற்பத்திக்கிரமமாக |
| அவனி நீரின்மாள | பிருதிவி (பூமி) தனக்குக் காரணமான அப்பூதத்தின் (நீரின்) அவச்சின்னசைதன்யத்தில் ஒடுங்கவும், |
| நீர் அனலின் மாள | நீரானது நெருப்பில் ஒடுங்கவும், |
| அனலும் காலின் மாள | அக்கியும் காற்றில் ஒடுங்கவும், |
| ஊடாடு பவனன் ஆகாய மதனின் மாள | சலிக்கும் காற்று ஆகாயவெளியில் ஒடுங்கவும், |
| வானம் மேலான | வெளியும் எல்லாவற்றிற்கும் மேலான பரமாத்மாவினிடத்தில் |

| | |
|---|---|
| பரதேசில் மாள | ஒடுங்கவும், |
| மாளாத பழைய பாழில் வாழ்வாள் | தனக்குக் காரணமில்லாததால் ஒன்றிலும் ஒடுங்காமல் உற்பத்தியற்றதாயும், நாமசொரூபமாய தன் மஹிமையில் வீற்றிருப்பவள் அவ்வம்மையாம். |

(உண்டானகிரமமாக) உற்பத்திக்கிரமமாக பிருதிவி (பூமி) தனக்குக் காரணமான அப்பூதத்தின் (நீரின்) அவச்சின்னசைதன்யத்தில் ஒடுங்கவும், நீரானது நெருப்பில் ஒடுங்கவும், அக்கியும் காற்றில் ஒடுங்கவும், சலிக்கும் காற்று ஆகாயவெளியில் ஒடுங்கவும், வெளியும் எல்லாவற்றிற்கும் மேலான பரமாத்மாவினிடத்தில் ஒடுங்கவும், தனக்குக் காரணமில்லாததால் ஒன்றிலும் ஒடுங்காமல் உற்பத்தியற்றதாயும், நாமசொரூபமாய தன் மஹிமையில் வீற்றிருப்பவள் அவ்வம்மையாம்.

**9. ஒருவி கார மோர்காலு முறநிலாம லியாதானு**
**முளது மாசிலாமேனி யொழிய வேறொராதார**
**நிருபி யான வோர்போது நிருபி யாத வோர்போது**
**நிகழ்வு றாம லோர்போத நிலையதாக நேர்வாளே.**

| | |
|---|---|
| ஓர் காலும் ஒரு விகாரமுற நிலாமல் | ஓர் காலமும் ஒருவித மாறுபாடு இல்லாமலும், |
| மாசிலா மேனி யொழிய | மாயையின்களங்கமற்ற சுத்த சொரூபமேயன்றி |
| யாதானுமுளது | ஏதாவது பெயர்வடிவம் இருக்கின்றதா என்றால் இல்லை. |
| நிருபியான ஓர் போதும் | சாஸ்திரங்களாலும் பெரியோர்களாலும் நிர்ணயம் செய்தாலும், செய்யாவிட்டாலும் |
| ஓர் விகாரம் நிகழ்வுறாள் | ஒருவித பெயர், வடிவ, மாறுபாடு இல்லாமல் |
| ஓர் போத நிலையதாக நேர்வாள் | ஒப்பற்ற ஞானமே(அறிவு) சொரூபமாய் விளங்குகின்ற தேவியாம் அவ்வம்மையார். |

ஓர் காலமும் ஒருவித மாறுபாடு இல்லாமலும், மாயையின்களங்கமற்ற சுத்த சொரூபமேயன்றி ஏதாவது பெயர்வடிவம் இருக்கின்றதா என்றால் இல்லை. சாஸ்திரங்களாலும் பெரியோர்களாலும் நிர்ணயம் செய்தாலும், செய்யாவிட்டாலும் ஒருவித பெயர், வடிவ, மாறுபாடு இல்லாமல் ஒப்பற்ற ஞானமே(அறிவு) சொரூபமாய் விளங்குகின்ற தேவியாம் அவ்வம்மையார்.

**10. அநுப வந்தனி னறிவ தன்றியோ**
**ரளவை கொண்டறி வுறுவதோ**
**தநுப வந்தனை யொழிய வின்றிய**
**தகமை நின்றதொர் தனியையே.**

| | |
|---|---|
| தனுபவம் | தேகாதியின் உற்பத்தி நாசத்தோடு கூடிய இச்சம்சார |
| தனையொழிய வின்றிய | ஆரோபங்களுக்கு அதிஷ்டானத்தினும் வேற்றுச் சத்தையின்று என்னும் வாக்கியப்படி ஆரோபமாய இச்சம்சாரத்திற்கு அதிஷ்டானமாய தன்னைத்தவிர இல்லாத |
| தகமை நின்ற தொர் தனிமை(யே) | தன்மையினையுடைய ஒப்பற்ற அத்வைத சொரூபியை |
| அனுபவந்தனின் அறிவதன்றி | சுவாநுபவத்தாலறிவதேயல்லாமல் |
| ஓர் அளவை கொண்டு | காண்டல் முதலிய அளவைகளால் யாதேனும் ஓர் அளவை கொண்டு |
| அறிவுறுவதோ | உணர முடியாத அத்தகைய சொரூபியாகிய அவ்வம்மையார் தனது ஆன்மாவிற்கு அன்னியமின்மையாம். |

தேகாதியின் உற்பத்தி நாசத்தோடு கூடிய இச்சம்சார ஆரோபங்களுக்கு அதிஷ்டானத்தினும் வேற்றுச் சத்தையின்று என்னும் வாக்கியப்படி ஆரோபமாய இச்சம்சாரத்திற்கு அதிஷ்டானமாய தன்னைத்தவிர இல்லாத தன்மையினையுடைய ஒப்பற்ற அத்வைத சொரூபியை சுவாநுபவத்தாலறிவதேயல்லாமல் காண்டல் முதலிய அளவைகளால் யாதேனும் ஓர் அளவை கொண்டு உணர முடியாத அத்தகைய சொரூபியாகிய அவ்வம்மையார் தனது ஆன்மாவிற்கு அன்னியமின்மையாம்.

**11. உருவ மென்பது மருவ மென்பது**
**முணர்வு கொண்டுணர வொண்ணுமோ**
**வருவமிங்கொரு வடிவு கொண்டது**
**விதுவெ னும்பொரு டன்னையே.**

| | |
|---|---|
| அரூபம் | ரூபமின்றிய பரமான்மா |
| இங்கு | இங்கே |
| ஒரு வடிவு கொண்டு | ஒருஉருவத்தை எடுத்து வந்து |
| அதுவிது எனும் பொருள்தன்னை | அந்த எங்கும் நிறைந்த (பிரஹ்மமே) பரம்பொருளே இந்த நீயெனும் சலனமில்லாத ஆன்மாவே, அந்த அது என்னும் பிரம்மப்பொருளாக இருக்கிறாய் என்று உபதேசிக்கும் |

| | |
|---|---|
| | பொருளை |
| உருவமென்பதும் | வேத முதலியவற்றில் ரூபமுடைய என்று சொல்வதையும் |
| அருவமென்பதும் | அருவமுடையது என்று சொல்வதையும் |
| உணர்வு கொண்டு | மனதில் எண்ணுவதைக் கொண்டு |
| உணரவொண்ணுமோ | அறிய முடியுமோ ? முடியாது. |

பரமான்மா இங்கே ஒருஉருவத்தை எடுத்து வந்து அந்த எங்கும் நிறைந்த (பிரஹ்மமே) பரம்பொருளே இந்த நீயெனும் சலனமில்லாத ஆன்மாவே, அந்த அது என்னும் பிரம்மப்பொருளாக இருக்கிறாய் என்று உபதேசிக்கும் பொருளை வேத முதலியவற்றில் என்று சொல்வதையும் அருவமுடையது என்று சொல்வதையும் மனதில் எண்ணுவதைக் கொண்டு அறிய முடியுமோ ? முடியாது.

**12. பொருது திரிபல சமய மதிவழி**
**புரிவு தருகலை புகல்வதோ**
**கருது பொருடொரு மருவி யவையவை**
**கழல நிலவிய கண்ணையே.**

| | |
|---|---|
| கருதுபொருள் தொறு மருவி | மனதினால் நினைத்துபார்த்தபோது தோன்றும் நாம பொருள்கள்தோறும் பொருந்தி |
| அவையவையகல | அத்திருசியங்களை விட்டவிடத்து |
| நிலவிய கண்ணை | விளங்கும் திருக்குபரமான்மாவை |
| பொருதுதிரி | சண்டையடித்துத்திரியும் |
| பலசமயமதிவழிபுரிவுதரு | நாநாசமயிகளின் புத்தியின் அநுசாரம் செய்துள்ள பொருளைக் கொடுக்கும் |
| கலை புகல்வதோ | சமய சாஸ்திரங்களால் கூறு முடியாததாகும். |

மனதினால் நினைத்துபார்த்தபோது தோன்றும் நாம பொருள்களிடம் பொருந்தி அத்திருசியங்களை விட்டவிடத்து விளங்கும் திருக்குபரமான்மாவை சண்டையடித்துத்திரியும் நாநாசமயிகளின் புத்தியின் அநுசாரம் செய்துள்ள பொருளைக் கொடுக்கும் சமய சாஸ்திரங்களால் கூறு முடியாததாகும்.

**13. தத்த மதிகொடு தர்க்க சமயிகள்**
**சத்த மறிவதொர் தத்வமோ**
**சித்த மயலது கெட்ட வவர்தெரி**
**சிக்க வுரியதொர் சித்தையே.**

| | |
|---|---|
| சித்தமயலது கெட்டவவர் | மனோ மயக்கம் நீங்கிய அல்லது காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களும் அற்ற மஹான்களால் |
| தெரிசிக்கவுரியதோர் சித்தையே | சாட்சாத்கரித்தற்கு (நேரே அறிதற்கு) யோக்கியமாகிய ஒப்பற்ற சித்தை |
| தத்தம் மதி கொடு | தங்கள் தங்கள் புத்திவலி கொண்டு |
| தர்க்கசமயிகள் தத்தம் | குதர்க்கப்பற்றுடையராய ஆறு சமயத்தவர்களும் தாம் தாமே |
| அறிவுறு தத்வமோ | உணரும்படியான உண்மைப் பொருளல்ல என்பதாம். |

மனோ மயக்கம் நீங்கிய அல்லது காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களும் அற்ற மஹான்களால் சாட்சாத்கரித்தற்கு (நேரே அறிதற்கு) யோக்கியமாகிய ஒப்பற்ற சித்தங்கள் தங்கள் புத்திவலி கொண்டு குதர்க்கப்பற்றுடையராய ஆறு சமயத்தவர்களும் தாம் தாமே உணரும்படியான உண்மைப் பொருளல்ல என்பதாம்.

**14. மருவுறாத தற்கு ரைக்கும்**
**வடிவுமில்லையென்னவோ**
**கருவு றாம லாள வந்த**
**கருணை மேனி கண்டுமே.**

| | |
|---|---|
| கருவுறாமை யாள வந்த | மாதாவினது கெற்பத்தையடையாது ஆட்கொண்டருள எழுந்தருளி வந்த |
| கருணை மேனி கண்டும் | கருணாமூர்த்தியைத் தெரிசித்தும் |
| மருவுறாததற்கு | வாக்கு மனங்களால் கோசரிக்கமுடியாத வஸ்துவிற்கு |
| ஊரைக்கும் | சொல்லுதற்குரிய வடிவமில்லை. |
| என்னவோ | இல்லை என்று சொல்லலாமா ?(சொல்லக்கூடாது) |

மாதாவினது கெற்பத்தையடையாது ஆட்கொண்டருள எழுந்தருளி வந்த கருணாமூர்த்தியைத் தெரிசித்தும் வாக்கு மனங்களால் கோசரிக்கமுடியாத வஸ்துவிற்கு சொல்லுதற்குரிய வடிவமில்லை. இல்லை என்று சொல்லலாமா ?(சொல்லக்கூடாது)

**15. தொல்லை யாகிநின்ற துய்ய**
**துணைம லர்ப்ப தங்களுக்**
**கெல்லை யான தில்லை**
**யோவென் னுச்சி மீதி ருக்கவே.**

| | |
|---|---|
| தொல்லையாகிநின்ற | அநாதியாக இருக்கப்பட்ட |
| துய்ய துணை மலர்ப்பதங்களுக்கு | பரிசுத்தமான முக்திவடிவ திருவடித்தாமரைக்கு |
| எல்லையானது இல்லையோ | அளவு இல்லையா என்றால் இருக்கிறது. |
| | |
| என் உச்சி மீதிருக்கவே | எங்கே எப்படி இருக்கிறது என்றால் எனது சிரசின்கண் இருக்கிறபடியால் இல்லையென்று சொல்லக்கூடாது. |

அநாதியாக இருக்கப்பட்ட பரிசுத்தமான முக்திவடிவ திருவடித்தாமரைக்கு அளவு இல்லையா என்றால் இருக்கிறது. எங்கே எப்படி இருக்கிறது என்றால் எனது சிரசின்கண் இருக்கிறபடியால் இல்லையென்று சொல்லக்கூடாது.

**16. விளம்பு மெப்பொ ருட்கு மேல்மி குத்த நீண்மு டிப்பரப்**
**புளம்பு குந்தி ருக்க வெல்லையுன்ன வில்லை யென்னவோ.**

| | |
|---|---|
| விளம்பும் எப்பொருட்கும் | மேல்சொல்லப்பட்ட எவ்வஸ்துவிற்கும் அதிஷ்டான சொரூபமாய் |
| மிகுத்த நீண் முடிப்பரப்பு | மேம்பாடுடைய நீண்ட சிகரம் போன்று விளங்கும் எல்லையற்றபரம்பொருள் |
| உளம் புகுந்திருக்க | இருதயத்தில் பிரவேசித்திருக்க |
| எல்லையுன்னவில்லையென்னவோ | எல்லை கருதமுடியாது என்று சொல்லலாமா ? சொல்லக்கூடாது. |

மேல்சொல்லப்பட்ட எவ்வஸ்துவிற்கும் அதிஷ்டான சொரூபமாய் மேம்பாடுடைய நீண்ட சிகரம் போன்று விளங்கும் எல்லையற்றபரம்பொருள் இருதயத்தில் பிரவேசித்திருக்க எல்லை கருதமுடியாது என்று சொல்லலாமா ? சொல்லக்கூடாது.

**17. அடைய மாதி ரம்ப டைத்த வப்பு ரம்பு டுப்பதோ**
**ருடையு மில்லை யென்ன வோவென்னுள்ள டங்க லுற்றுமே**

| | |
|---|---|
| மாதிரம் அடைய படைத்த | ஆகாய முதலிய எல்லாப்பொருள்களையும் உண்டுபண்ணிய |
| ஆடி | பரம்பொருளுக்கு |
| புறம்புடுப்பதோர் உடையுமில்லையென்னவோ | மேலே தரிப்பதற்கு ஒப்பற்ற ஆடைஇல்லையென்று சொல்லலாமா ? ஏன் ? |
| என் உள்ளடங்கலுற்றுமே | எனது இருதயத்தினுள் அடங்கி இருப்பதால் எனது |

| | |
|---|---|
| | இருதயமே ஆடையாம். ஆனதால் சொல்லக்கூடாது. |

ஆகாய முதலிய எல்லாப்பொருள்களையும் உண்டுபண்ணிய பரம்பொருளுக்கு மேலே தரிப்பதற்கு ஒப்பற்ற ஆடைஇல்லையென்று சொல்லலாமா ? ஏன் ? எனது இருதயத்தினுள் அடங்கி இருப்பதால் எனது இருதயமே ஆடையாம். ஆனதால் சொல்லக்கூடாது.

**18. அன்னை யாகி யத்த னாகி யஞ்ச லஞ்ச வென்றுவந்**
**தென்னை யாளு கோல நீர்மை யென்ன தாவி யம்பவே.**

| | |
|---|---|
| அன்னையாகி | தாயாகியும் |
| அத்தனாகி | தந்தையாகியும் |
| அஞ்சலஞ்சலென்று வந்து | பயப்படாதே, பயப்படாதே என்று அபயஸ்த்தமளித்து வந்து |
| என்னையாளு கோல நீர்மை | என்னையாட்கொள்ளும் சொரூபத்தன்மையை |
| யென்னதாவியம்பவே | என்னவென்று சொல்வது. |

தாயாகியும் தந்தையாகியும் பயப்படாதே, பயப்படாதே என்று அபயஸ்த்தமளித்து வந்து என்னையாட்கொள்ளும் சொரூபத் தன்மையை என்னவென்று சொல்வது.

(தேவி விஷ்ணு பிரஹ்மா உருத்திரன் சுத்தப்பிரம்ம வடிவமாயிருக்குந்தன்மையை சூசிப்பித்தனர்)

**19. மாசுணமோ மறைத்தலையோ மாயாநமோ வாக்கிறந்த**
**தேசுணர்ந்த மெய்யடியார் சிந்தையோ திருந்தமளி.**

| | |
|---|---|
| மாசுணமோ | ஆதிசேஷனோ, |
| மறைத்தலையே | வேதமுடிவாய உபநிடதமோ |
| மயானமோ | சுடலையின் கண்ணோ, |
| வாக்கிறந்த தேசுணர்ந்த மெய்யடியார் சிந்தையோ | மனவாக்குகளிறந்தவரும், பிரமசொரூபத்தை தன் வடிவமாகச் சாட்சாத்கரிக்கப்பெற்றவருமாய மகான்களது மனமோ |
| திருந்தமளி | அழகிய படுக்கையான வாசஸ்தானம். (யோகிகள் உள்ளத்தில் என்றும் தூங்குபவன்) |

ஆதிசேஷனோ, வேதமுடிவாய உபநிடதமோ சுடலையின் கண்ணோ, மனவாக்குகளிறந்தவரும், பிரமசொரூபத்தை தன் வடிவமாகச்

சாட்சாத்கரிக்கப்பெற்றவருமாய மகான்களது மனமோ அழகிய படுக்கையான வாசஸ்தானம். (யோகிகள் உள்ளத்தில் என்றும் தூங்குபவன்)

**20. சாத்தும்பூ மாலையினுந் தமையுணர்ந்த மெய்யடியா**
**ரேத்தும்பா மாலையிலே யெப்போதுந் திருவுளமே.**

| | |
|---|---|
| சாத்தும் பூமாலையினும் | அன்பின்றி அணியப்பட்ட பூமாலையைக் காட்டிலும் |
| தமையுணர்ந்த மெய்யடியார் | தங்கள் சொரூபத்தை நேரே அறிந்த மகான்கள் |
| ஏத்தும் பாமாலை | துதிக்கும் கவிமாலையிலே |
| எப்போதும் திருவுளமே | சதாவும் பிரியமுடைய அழகிய சித்தத்தையுடைய தேவியே. |

அன்பின்றி அணியப்பட்ட பூமாலையைக் காட்டிலும் தங்கள் சொரூபத்தை நேரே அறிந்த மகான்கள் துதிக்கும் கவிமாலையிலே சதாவும் பிரியமுடைய அழகிய சித்தத்தையுடைய தேவியே.

பாமாலை– பாக்களால் தொடுத்து பாடுவது மிகப்பிரியம். ஆதலால் சிவபெருமான் பாட்டே நமக்கு அர்ச்சனையாம் என்று கூற நால்வரும் பாடினார்கள்.

**21. பாதாதி கேசாந்த முவந்தணியும் பணியருளே**
**ஞாதாதி யாமூன்று முவந்தயிலு நல்லமிர்தே.**

| | |
|---|---|
| பாதாதி கேசாந்தம் | பாதமுதல் முடிபரியந்தம் |
| உவந்து அணியும் பணி | பிரியத்துடன் அணிந்துகொள்ளும் ஆபரணம் |
| அருளே | ஜீவகாருண்யமே, |
| ஞாதாதியா மூன்றும் | காண்பான், காட்சி, காணப்படும் பொருள் என்னும் திருபுடியே |
| உவந்து | சந்தோசத்துடன் |
| அயிலும் | புசிக்கும் |
| நல்லமிர்தே | நல்ல அமிர்தமாம். |

பாதமுதல் முடிபரியந்தம் பிரியத்துடன் அணிந்துகொள்ளும் ஆபரணம் ஜீவகாருண்யமே, காண்பான், காட்சி, காணப்படும் பொருள் என்னும் திருபுடியே சந்தோசத்துடன் புசிக்கும் நல்ல அமிர்தமாம்.

**22. வேத மவடிரு வாயி லோது கீதம்**
**வேறு நினைவிலர் காணு மேனி மேனி**
**பூத மவடிரு வாசல் காவலாகும்**

**போத மவடிரு மேனி காவற்றானே.**

| | |
|---|---|
| அவள் திருவாயில் ஓது கீதம் வேதம் | அம்பிகை அழகிய வாக்கால் சொல்லும் வாக்கியம் வேதமாம். |
| வேறு நினைவிலார் காணும் மேனி | தனக்கு வேறாக நினைவில்லாத (தன்மயமாகக்காணும்) மஹான்கள் தரிசிக்கும் சொரூபம் |
| மேனி | அவ்வம்பிகையினது திருமேனியாம். |
| அவள் திருவாசல் | அவ்வம்பிகையினது அழகிய வாசல் |
| பூதம் காவலாகும் | உள்சுத்தம் என்னும் பஞ்சபூதங்களே (பஞ்சகோசங்களே) ஆகிய இவைகளே காவலாகும் அல்லது மோக்ஷத்துவார பாலகர்கள் என்னும், சாந்தி சந்தோசம் விசாரம் சாது சங்கம் |
| அவள் திருமேனி காவல் | அவ்வம்பிகையினது அழகிய சொரூபத்திற்கு காவல் |
| போதம் | அகண்ட பிரமாகார விருத்தி ஞானமாம். |

அம்பிகை அழகிய வாக்கால் சொல்லும் வாக்கியம் வேதமாம். தனக்கு வேறாக நினைவில்லாத (தன்மயமாகக்காணும்) மஹான்கள் தரிசிக்கும் சொரூபம் அவ்வம்பிகையினது திருமேனியாம். அவ்வம்பிகையினது அழகிய வாசல் உள்சுத்தம் என்னும் பஞ்சபூதங்களே (பஞ்சகோசங்களே) ஆகிய இவைகளே காவலாகும் அல்லது மோக்ஷத்துவார பாலகர்கள் என்னும், சாந்தி சந்தோசம் விசாரம் சாது சங்கம் அவ்வம்பிகையினது அழகிய சொரூபத்திற்கு காவல் அகண்ட பிரமாகார விருத்தி ஞானமாம்.

**23. யோகி நிகள்கரு ணாதி யான மாதர்**
**யோக மருநில மாசின் ஞாந யோகங்**
**கோக னகனறி யாத கோயில் கோயில்**
**கூற ரியபெரு வாழ்வை யாவர் கூற.**

| | |
|---|---|
| யோகினிகள் | அவ்வம்மைக்குத் தோழி(பாங்கி)களோவெனில், |
| கருணாதி மாதர் | மைத்ரி, கருணை, முதிதை, உபேக்ஷை ஆகிய சற்குணப் பெண்களேயாம். |
| யோகமருநிலம் | மகான்கள் சித்தத்தை (நிலைக்க) பொருத்திவைக்க ஞான சத்தபூமிகளே (சுபேட்சை முதலியவையே) |
| மாசில் | குற்றமில்லாத |
| ஞானயோகம் | அம்பிகையின் ஞான சமாதியாம். |
| கோகனகன் அறியாத கோயில் | தாமரைமலரில் எழுந்தருளியிருக்கும் பிரமாவினாலும் அறிய முடியாத ஆலயமே |

| | |
|---|---|
| கோயில் | அவ்வம்மைக்கு ஆலயமாம். |
| கூறரிய பெருவாழ்வை | சொல்லுதற்கரிய பேரானந்தத்தை |
| யாவர் கூற | எவரால் கூறமுடியும். |

அவ்வம்மைக்குத் தோழி(பாங்கி)களோவெனில், மைத்ரி, கருணை, முதிதை, உபேக்ஷை ஆகிய சற்குணப் பெண்களேயாம். மகான்கள் சித்தத்தை (நிலைக்க) பொருத்திவைக்க ஞான சத்தபூமிகளே (சுபேட்சை முதலியவையே) குற்றமில்லாத அம்பிகையின் ஞான சமாதியாம். தாமரைமலரில் எழுந்தருளியிருக்கும் பிரமாவினாலும் அறிய முடியாத ஆலயமே அவ்வம்மைக்கு ஆலயமாம். சொல்லுதற்கரிய பேரானந்தத்தை எவரால் கூறமுடியும்.

**24.** **கலையே றுவணங் களியன் னமெனக்**
**கற்பித் திடவோ சொற்பித் ததுவா**
**மலையே றுவணங் கிளியன் புறவந்**
**தருள்போ தகமே யவள்வா கநமே.**

| | |
|---|---|
| கலையேறு | அவ்வம்பிகைக்கு வாகனம் ஏது என்றால் வெள்விடையும் |
| களியன்னம் | கருடனும் மகிழ்வைத்தரும் அன்னமும் |
| எனக் கற்பித்திடவோ | என்று கற்பிக்கலாமா |
| சொற்பித்ததுவாம் | என்றால் அப்படிக் கற்பித்தால் அது மயக்கவசனமாம். |
| மலையேறுவணம் | சம்சார சலனமான சங்கடத்தினின்றும் மோக்ஷமார்க்கத்தில் ஏறும் பிரகாரம் |
| களி அன்புற வந்து அருள் போதகமே | சந்தோஷமான கருணையுடன் வந்து அநுக்கிரஹிக்கும் உபதேசக்ஞானமே |
| அவள் வாகனம் | அவ்வம்பிகையின் வாகனமாம். |

அவ்வம்பிகைக்கு வாகனம் ஏது என்றால் வெள்விடையும் கருடனும் மகிழ்வைத்தரும் அன்னமும் என்று கற்பிக்கலாமா என்றால் அப்படிக் கற்பித்தால் அது மயக்கவசனமாம். சம்சார சலனமான சங்கடத்தினின்றும் மோக்ஷமார்க்கத்தில் ஏறும் பிரகாரம் சந்தோஷமான கருணையுடன் வந்து அநுக்கிரஹிக்கும் உபதேசக்ஞானமே அவ்வம்பிகையின் வாகனமாம்.

**25.** **பஞ்சா யுதமே திரிசூ லமழுப்**
**படையே யெனவோ பகைவெம் பிறவிக்**
**கஞ்சா முன்னெழுந் தருளா வெறியு**
**மன்பே திருவா யுதமா வதுவே.**

| | |
|---|---|
| பஞ்சாயுதம்திரிசூல முழுப்படை | இனி அவ்வம்மைக்கு ஆயுதமோ எனின் சங்கு, சக்ரம், கயிறு, வில், கதை, முச்சூலம், முழுப்படை |
| எனவோ | என்று கூறலாமோ என்றால் அதுவல்ல. |
| பகைவெம்பிறவிக்கு அஞ்சாமுன் | சத்துருவாய கொடிய பிறவிக்குப்பயந்து வருந்துவதற்கு முன்னம் |
| எழுந்து | ஈண்டு குருமூர்த்தமாக தோன்றி |
| அருளா | வந்து அநுக்ரஹம் செய்து |
| எறியும் அன்பே | நம்மீது வீசும் இரக்கமே |
| திருவாயுதம் | அழகிய ஆயுதமாம். |

இனி அவ்வம்மைக்கு ஆயுதமோ எனின் சங்கு, கச்ரம், கயிறு, வில், கதை, முச்சூலம், முழுப்படை என்று கூறலாமோ என்றால் அதுவல்ல. சத்துருவாய கொடிய பிறவிக்குப்பயந்து வருந்துவதற்கு முன்னம் ஈண்டு குருமூர்த்தமாக தோன்றி வந்து அநுக்ரஹம் செய்து நம்மீது வீசும் இரக்கமே அழகிய ஆயுதமாம்.

********

# 11. உட்பரிவாரம்

1. **அரணே யறிவே செறிவே யழகே**
**யருளே வடிவா கவமைந் துவருஞ்**
**சரணே யெனவந் தடையு மடியார்**
**தங்கோ லமெலா மிங்கோ துதுமே.**

| | |
|---|---|
| அரணே | சகல பிராணிகளையும் ரக்ஷிப்பவளே |
| அறிவே | ஞான சொரூபியே. |
| செறிவே | சர்வமும் லயித்தற்கு ஸ்தானமே, |
| ஆழகே | சொந்தரி நாயகியே , |
| அருளே வடிவாக அமைந்து வருஞ் சரணே | கருணையே, சொரூபமாகப் பொருந்தி வரா நின்ற அடைக்கல ஸ்தானமே |
| என | என்று |
| வந்தடையும் அடியார் தங்கோலமெலாம் | வந்து நெருங்கும் மஹான்களது சொரூபமெல்லாம் (திருவிளையாட லெல்லாம்) |
| இங்கோதுதுமே | ஈண்டுக் கூறுவாம். |

சகல பிராணிகளையும் ரக்ஷிப்பவளே ஞான சொரூபியே. சர்வமும் லயித்தற்கு ஸ்தானமே, சொந்தரி நாயகியே ,கருணையே, சொரூபமாகப் பொருந்தி வரா நின்ற அடைக்கல ஸ்தானமே என்று வந்து நெருங்கும் மஹான்களது சொரூபமெல்லாம் (திருவிளையாட லெல்லாம்) ஈண்டுக் கூறுவாம்.

2. **புரம யோகமுற பேதமறு போத முடனே**
**பரம யோகமுறு வாரிறைவி பயிர வர்களே**

| | |
|---|---|
| புரம யோகமுற | சரீராதிகளில் யானெனதென அபிமானமின்றி |
| பேதமறு போதமுடனே | அஞ்ஞான சந்தேக விபரீத மாயயாதொரு குற்றமு மின்றிய ஞானத்துடன் |
| பரமயோகமுறுவார் | மேலான நிர்விகற்ப நிட்டையைப் பொருந்தியிருப்பார்கள் |
| இறைவி பைரவர்கள் | தேவியினது அடியார்கள். |

சரீராதிகளில் யானெனதென அபிமானமின்றி அஞ்ஞான சந்தேக விபரீத மாயயாதொரு குற்றமு மின்றிய

ஞானத்துடன் மேலான நிர்விகற்ப நிட்டையைப் பொருந்தியிருப்பார்கள் தேவியினது அடியார்கள்.

**3. புணரு மைத்ரிமுத லானபொரு ளுள்ள பரிசே**
**யுண ருமார்க்கம்வரு மாதவர்கள் யோகி நிகளே.**

| | |
|---|---|
| மைத்ரி முதலான புணரும் | மைத்திரி கருணை முதிதை உபேக்ஷை முதலிய கல்யாண குணம் உடையவரும் |
| பொருள் | வஸ்துவை |
| உள்ள பரிசே | யதார்த்தமாகஅறியும் குரு சாஸ்திரங் கூறும் மார்க்கங்களை அப்யசிக்கும் |
| மாதவர்கள் | மஹா தப சிரேட்டர்களும் ஆகிய அவர்களே |
| யோகிநிகள் | யோகினிகளாம். |

மைத்திரி கருணை முதிதை உபேக்ஷை முதலிய கல்யாண குணம் உடையவரும் வஸ்துவை
யதார்த்தமாகஅறியும் குரு சாஸ்திரங் கூறும் மார்க்கங்களை அப்யசிக்கும் மஹா தப சிரேட்டர்களும் ஆகிய அவர்களே யோகினிகளாம்.

**4. நித்திரை சாகரத மற்றதொரு நீர்மையினரே**
**நிட்டை யாதுமில தானதொரு நீதியினரே**
**முத்திரை ஞாநமெனு முத்ரையல தேதுமிலரே**
**முத்தி நாயகர்க ளானபவ மோசகர்களே**

| | |
|---|---|
| நித்திரை சாகரமதற்றதொரு நீர்மையினர் | நனவிற் சுழுத்தியடைந்த தன்மையினராம். |
| நிட்டை யாதுமிலதானதொரு நீதியினர் | திருசியங்களில் தற்பரத் தன்மை யற்றதான ஒப்பற்ற நீதிமான்களாம். |
| ஞானமெனு முத்திரையலாது | சிந்முத்திரை யேயல்லாமல் |
| முத்திரை ஏதும் இலரே | வேறு சங்கு சக்ர முதலான முத்திரை யாதும் இன்றியவர்களாம். |
| முத்தி நாயகர்களான | மோக்ஷ ஸ்திதியில் திறமை யுடையவரான |
| பவமோசகர்கள் | ஜனன மரண சத்துருவை நாசஞ் செய்பவர்களாம். (பிறவியை விமோசனம் செய்பவர்கள்) (ஜன்ம பாவனம் செய்பவர்கள் பாவம்–சுத்தி) |

நனவிற் சுழுத்தியடைந்த தன்மையினராம். திருசியங்களில் தற்பரத் தன்மை யற்றதான ஒப்பற்ற நீதிமான்களாம். சிந்முத்திரை யேயல்லாமல் வேறு சங்கு சக்ர முதலான முத்திரை யாதும் இன்றியவர்களாம். மோக்ஷ ஸ்திதியில் திறமை யுடையவரான ஜனன மரண சத்துருவை நாசஞ் செய்பவர்களாம். (பிறவியை விமோசனம் செய்பவர்கள்) (ஜன்ம பாவனம் செய்பவர்கள் பாவம்–சுத்தி)

**5. பெத்த முத்தியில தானதொரு சாதகர்களே**
**பித்து நற்கழலொ டானதொரு பாவகர்களே**
**பத்தி சித்தியென நாடிவரு தாபதர்களே**
**பத்த ரெய்ப்பிலருள் கோலமிகு பைரவர்களே.**

| | |
|---|---|
| பெத்த முத்தியில்தான | பந்த மோக்ஷ மின்றியதான |
| ஒரு சாதகர்களே | ஒப்பற்ற சொரூப நிலையை யுடையவர் |
| பிச்சு பாதத்தில் | குருவின் (பித்து) நல்ல திருவடியைத் தியானித்தலில் யுடையவரான |
| ஒரு பாவகர்களே | ஒப்பற்ற பாவனையை யுடையவர்கள். |
| பத்தி சித்தி என நாடிவரு | அனன்யபத்தி வேண்டும் ஞான சித்தி (சமாதி) வேண்டும் என்று கருதி வராநின்ற |
| தாபதர்களே | தபசிகளாம். |
| நற்கழலொடு பித்து ஆன | நல்ல திருவடியில் பித்துப் பிடித்தவர்களாம். |
| பத்தர் எய்ப்பில் | முமுட்சுக்கள் சம்சார தாபத்திற்கு வருந்தி இளைப்பையடையில், அவர்களுக்கு இளையாவண்ணம் |
| அருங்கோலமிகு பைரவர்கள் | கருணையே வடிவமாக வந்து அநுக்ரஹம் செய்யும் தன்மை மிகுந்துள்ளஅடியார்களாம். |

பந்த மோக்ஷ மின்றியதான ஒப்பற்ற சொரூப நிலையை யுடையவர் குருவின் (பித்து) நல்ல திருவடியைத்
தியானித்தலில் யுடையவரான ஒப்பற்ற பாவனையை யுடையவர்கள். அனன்யபத்தி வேண்டும் ஞான சித்தி (சமாதி) வேண்டும் என்று கருதி வராநின்ற தபசிகளாம். நல்ல திருவடியில் பித்துப் பிடித்தவர்களாம். முமுட்சுக்கள் சம்சார தாபத்திற்கு வருந்தி இளைப்பையடையில், அவர்களுக்கு இளையாவண்ணம் கருணையே வடிவமாக வந்து அநுக்ரஹம் செய்யும் தன்மை மிகுந்துள்ளஅடியார்களாம்.

**6. உரையிறந் துணர்விறந் திடமுணர்ந் திடுவரே**
**யுணவுமங் கையில்வரும் பலியுகந் திடுவரே**
**திரையிறந் தளவிறந் துளபரங் கடலுளே**
**செறிதரும் படிவருந் திருவகம் படியரே**

| | |
|---|---|
| உரையிறந்து உணர்விறந்து | வாக்கிற்கு (சக்தி விருத்திக்கு) விஷயமின்றியதாயும் மனத்தால்அறிய முடியாததாயும் (பல வியாப்தி யின்றியதாயும்) உள்ள |
| இடம் | அதீத வஸ்துவை |
| உணர்ந்திடுவர் | இலட்சணா விருத்தி, விருத்தி வியப்தியால் சாட்சாத்கரித்துள்ள மஹான்களாம் |
| உணவும் | போஜனமும் |
| அங்கையில் | அழகிய கையின்கண் |
| வரும்பலி | பிராரத்த வசத்தால் வாராநின்ற பிண்டத்தை |
| உகந்திடுவர் | பூஜித்துத் திருப்தியுடனிருப்பார். |
| திரையிறந்து | சுக துக்கங்களாகிய அலையின்றி |
| அளவிறந்து உள | எவ்விதத்தாலும் வரையறுக்க முடியாத |
| பரங்கடலுளே | பரசு கோததியின் கண்ணே |
| செறி தரும்படி | மூழ்கி பரமசீதளத் தன்மையைப் பொருந்தும்படிக்கு |
| வரும் | அப்யசித்து வாராநின்ற |
| திருவகம்படியரே | சிவோஹமென்னு பாவனை யுடையவர்கள். |

வாக்கிற்கு (சக்தி விருத்திக்கு) விஷயமின்றியதாயும் மனத்தால்அறிய முடியாததாயும் (பல வியாப்தியின்றியதாயும்) உள்ள அதீத வஸ்துவை இலட்சணா விருத்தி, விருத்தி வியப்தியால் சாட்சாத்கரித்துள்ள மஹான்களாம் .போஜனமும் அழகிய கையின்கண் பிராரத்த வசத்தால் வாராநின்ற பிண்டத்தை பூஜித்துத் திருப்தியுடனிருப்பார். சுக துக்கங்களாகிய அலையின்றி எவ்விதத்தாலும் வரையறுக்க முடியாத பரசு கோததியின் கண்ணே மூழ்கி பரமசீதளத் தன்மையைப் பொருந்தும்படிக்கு அப்யசித்து வாராநின்ற சிவோஹமென்னு பாவனை யுடையவர்கள்.

7. **அழுதன்மா றுதலிலா விழியர்பா லருள்வரே**
**யவர்களா கமுமெலாம் விழியதா மொழிவரே**
**யெழுதன்மா றுதலிலா விரவியா முருவரே**
**யிகலுமார் வமுமிலா திலகுபை ரவர்களே**

| | |
|---|---|
| அழுதல் மாறுதல் இல்லா விழியர் பால் | சம்சார தாபத்தை நினைந்து நினைந்து நிவர்த்திப்பான் விசாரமாகிய புலம்புதலைச் சதாவும் செய்து கொண்டிருக்கும் திருஷ்டியை யுடைய வரிடத்து |
| அருள்வர் | அநுக்ரஹம் செய்பவராம். |
| அவர்கள் | அந்த மஹான்கள் |
| அகமுமெலாம் | செய்யும் சாத்திரங்க ளனைத்திலும் |
| விழியதாய் மொழிவர் | பார்த்த விட மெல்லாம் பரமன் காண். எங்குஞ் சிவ மொழியவில்லை. சிவனே யுள்ளான் பிறிதில்லை. சின்மாத்திரமாயுள்ள வெறுஞ் சிவனே திகழ்வான். ஒழிந்ததொரு பொருளில்லை, யுள்ளதெல்லாமவனே, என்பன முதலியவாய் |

| | |
|---|---|
| | பரமான்ம திருஷ்டியையே போதிப்பார்கள். |
| உருவர் | உதயாஸ்தமனமின்றி சதோயமாய பரமாதித்த வடிவமாவர். |
| இகலும் ஆர்வமும் இலாது | இராகத்வேஷ மின்றி |
| இலகு பைரவர்கள் | சற்குணங்களால் விளங்கும் அடியார்களாம். |

சம்சார தாபத்தை நினைந்து நினைந்து நிவர்த்திப்பான் விசாரமாகிய புலம்புதலைச் சதாவும் செய்து
கொண்டிருக்கும் திருஷ்டியை யுடைய வரிடத்து அநுக்ரஹம் செய்பவராம்.அந்த மஹான்கள் செய்யும் சாத்திரங்க ளனைத்திலும் பார்த்த விட மெல்லாம் பரமன் காண். எங்குஞ் சிவ மொழியவில்லை. சிவனே யுள்ளான் பிறிதில்லை. சின்மாத்திரமாயுள்ள வெறுஞ் சிவனே திகழ்வான். ஒழிந்ததொரு பொருளில்லை, யுள்ளதெல்லாமவனே, என்பன முதலியவாய் பரமான்ம திருஷ்டியையே போதிப்பார்கள். உதயாஸ்தமனமின்றி சதோயமாய பரமாதித்த வடிவமாவர். இராகத்வேஷ மின்றி சற்குணங்களால் விளங்கும் அடியார்களாம்.

**8. அவனிவா னடையவோ ரணுவதா நெடியரே**
**யணுவுமே ருகிரியா யறவுநே ரியர்களே**
**புவனிவா னடையவோர் பவநிபோ துவர்களே**
**புகலுகோ மளவியா மளைபுரா தநர்களே.**

| | |
|---|---|
| அவனி வான் அடைய | பிருதிவி முதல் ஆகாய மீறாய சர்வ அண்டமும் |
| ஒரு அணுவதா நெடியர் | ஒரு அணுவென்று சொல்லும்படி மஹத் வடிவத்தை யுடையவர். (அதாவது பிரஹ்மவித் பிரஹ்மைவ பவதி என்பதால்) பிரஹ்ம வடிவமாகவே நிற்றலால் அதன்கண் ஏகதேசம் நிகழும் ஆகாயாதிகள் அணுவென்பதில் ஐயமின்று) |
| அணுவுமேரு கிரியாய் | கண்ணுக்கு புலனின்றிய அணுவையும் மேரு கிரிக்குச் சமமாகச் சொல்லும்படி அவ்வளவு சூட்சும சொரூபமாதலால் |
| அறிவு நேரியர்கள் | மிகவும் சூட்சுமத் தன்மை வாய்ந்தவர். |
| புவனி வான் அடைய | பூமி ஆகாய முதலிய சர்வ அண்டங்களையும் |
| ஓர் பவனி போதுவர்கள் | ஒரு நொடியின் வலம் வருபவர். அதாவது தனது சொரூபத்தில் ஏகாம்சமாய் நிகழும் தோற்றமாத்திரமாய பிரபஞ்சத்தை அதிக்கிரமித்த வியாபக சொரூபமுடையர். |
| வியாமளை புராதனர்கள் | சொல்லா நின்றமிர்துவாகிய திருமேனி யையுடைய தேவியினது பழைய அடியார்களாம். |

பிருதிவி முதல் ஆகாய மீறாய சர்வ அண்டமும் ஒரு அணுவென்று சொல்லும்படி மஹத் வடிவத்தை
யுடையவர். (அதாவது பிரஹ்மவித் பிரஹ்மைவ பவதி என்பதால்) பிரஹ்ம வடிவமாகவே நிற்றலால் அதன்கண் ஏகதேசம் நிகழும் ஆகாயாதிகள் அணுவென்பதில் ஐயமின்று) கண்ணுக்கு புலனின்றிய அணுவையும் மேரு கிரிக்குச் சமமாகச் சொல்லும்படி அவ்வளவு சூட்சும சொரூபமாதலால் மிகவும் சூட்சுமத் தன்மை வாய்ந்தவர். பூமி ஆகாய முதலிய சர்வ அண்டங்களையும் ஒரு நொடியின் வலம் வருபவர். அதாவது தனது சொரூபத்தில் ஏகாம்சமாய் நிகழும் தோற்றமாத்திரமாய பிரபஞ்சத்தை அதிக்கிரமித்த வியாபக சொரூபமுடையர். சொல்லா நின்றமிர்துவாகிய திருமேனி யையுடைய தேவியினது பழைய அடியார்களாம்.

**9. அலைபொறா மலொருகா றலையெடா தமைவரே**
**யருள்பொறா மலுருகா வருவிபாய் நயநரே**
**கலைபொறா மலொருகோ வணவராய் விடுவரே**
**கவலைதீர் பலிகொணீள் கரகபா லியர்களே.**

| | |
|---|---|
| அலை பொறாமல் | சித்தம் திருசியாம் முகமாச்சென்று சாஞ்சல்ய மடைதலைச் சகியாதவராய் |
| ஒருகால் | ஒவ்வொருகாலும் (சங்கபம்) |
| தலையெடாது | எழும்பாது நிரோதஞ் செய்து அமைதியுடனிருப்பர். |
| அருள் பொறாமல் | பக்தி(கருணை) மேலீட்டால் (உலகுபடும்பாட்டை) சகியாதவராய் |
| உருகா | நெக்கு நெக்காக உருகி (இரக்கமுற்று) |
| அருவிபாய் நயனரே | கண்ணினின்றும் தாரைதாரையாக ஜலத்தை (ததும்பச்செய்து) விட்டுக் கொண்டிருப்பவராம். |
| கலைபொறாமல் | நல்ல சோமன் பட்டாடைகளைத் தரித்தா லுளவாகும் துன்பத்தை சகியாதவராய் |
| ஒரு கோவணவராய் வடுவர் | ஒப்பற்ற (ஒரு) கௌபீனத்தையே தரித்துக் கொண்டிருப்பராம், |
| கவலைதீர் பலி கொள் | துயரம் சிறிதுமின்றிய பிக்ஷாசனத்தை ஏற்கும் |
| நீள் கர கபாலியர்கள் | நீண்டகையாகிய பிக்ஷாபாத்திர முடையவராம். |

சித்தம் திருசியாம் முகமாச்சென்று சாஞ்சல்ய மடைதலைச் சகியாதவராய் ஒவ்வொருகாலும் (சங்கபம்) எழும்பாது நிரோதஞ் செய்து அமைதியுடனிருப்பர். பக்தி(கருணை) மேலீட்டால் (உலகுபடும்பாட்டை) சகியாதவராய் நெக்கு நெக்காக உருகி (இரக்கமுற்று) கண்ணினின்றும் தாரைதாரையாக ஜலத்தை (ததும்பச்செய்து) விட்டுக் கொண்டிருப்பவராம். நல்ல சோமன் பட்டாடைகளைத் தரித்தா லுளவாகும் துன்பத்தை சகியாதவராய் ஒப்பற்ற (ஒரு) கௌபீனத்தையே தரித்துக் கொண்டிருப்பராம், துயரம் சிறிதுமின்றிய பிக்ஷாசனத்தை ஏற்கும் நீண்டகையாகிய பிக்ஷாபாத்திர முடையவராம்.

**10. சகலலோ கமுமெடா வயிலும்வா யுடையரே**
**சதிரெலா மழியமா றருவதா ளுடையரே**
**புகலுலோ கமுமலோ கமுமெலாம் விழியரே**
**புகலுமா றரியதாள் புணருபை ரவர்களே**

| | |
|---|---|
| சகல லோகமும் எடா | சர்வ உலகங்களையும் எடுத்து |
| அயிலும் | புசிக்கும் |
| வாயுடையர் | வாயையுடையவர் (புசித்தலாவது பாத சமானாதி கரண்ய சம்பந்தத்தால் சர்வ ஆரோபங்களையும் அதிட்டானத்தின்கண் பாதித்து அதிட்டானமாய தன்வடிவமாகவே காண்பர் என்பதாம்) |
| சதிரெலாம் | அத்தியாச வடிவமான குலத்திற் பெரியன் முதலிய அகங்கார மனைத்தும் |
| அழிய | கெடும்படி |
| மால் மருவ | சொரூபத்தில் பக்தியை கொடுக்கும் |
| தாளுடையர் | திருவடியை யுடையவர் |
| புகலு லோகமும் அலோகமும் எலாம் | சொல்லா நின்ற பிருதிவி தத்துவ மீறாக சர்வ பிரபஞ்சமும் |
| விழியரே | திருக்கு வென்னும் ஞானமுடையவர். |
| புகலு மாறரிய தாள் | சொல்லுதற்கு அருமையான தேவியின் திருவடியை பொருந்தியிருக்கும் |
| பைரவர்கள் | அடியார்களாம் . |

சர்வ உலகங்களையும் எடுத்து புசிக்கும் வாயையுடையவர் (புசித்தலாவது பாத சமானாதி கரண்ய சம்பந்தத்தால் சர்வ ஆரோபங்களையும் அதிட்டானத்தின்கண் பாதித்து அதிட்டானமாய தன்வடிவமாகவே காண்பர் என்பதாம்) அத்தியாச வடிவமான குலத்திற் பெரியன் முதலிய அகங்கார மனைத்தும் கெடும்படி சொரூபத்தில் பக்தியை கொடுக்கும் திருவடியை யுடையவர் சொல்லா நின்ற பிருதிவி தத்துவ மீறாக சர்வ பிரபஞ்சமும் திருக்கு வென்னும் ஞானமுடையவர். சொல்லுதற்கு அருமையான தேவியின் திருவடியை பொருந்தியிருக்கும் அடியார்களாம் .

**11. உருகுவா சகமெலா முடையசா கிநிகளே**
**யுயிரெலாம் விழியினா லயில்வர்யோ கிநிகளே**
**பருகியா ரமிர்தையா டுவர்கண்மோ கிநிகளே**
**பகருமா றரியநா யகிபதா கிநிகளே**

| | |
|---|---|
| உருகு வாசக மெலாம் உடைய | மனமானது நெக்கு நெக்காக கசிந்து இளகும்படி வசனித்த லனைத்தினும் துதியையுடைய |

| | |
|---|---|
| சாகினிகளே | தோழிப் பெண்களாம் அடியார்களாம் |
| உயிரெலாம் | (தம்மை சரணா கதியாக வடைந்த முமுட்சுக்களது) ஜீவத்துவம் அனைத்தையும் |
| விழியினால் | தனது ஞான திருஷ்டியினால் |
| அயில்வர் | புசிப்பவர். |
| யோகினிகள் | யோகினியர்களாம். |
| ஆர் அமிர்தத்தைப் பருகி | நிறைந்த பூர்ணானந்தத்தை |
| ஆடுவர்கள் | அநுபவித்து நர்த்தனம் செய்பவர்கள். |
| மோகினிகளே | மோகினி யென்னும் மஹான்களாம். |
| பகருமாறரிய | சொல்லுதற் கருமையான |
| நாயகி | தேவியினது |
| பதாகினிகளே | பாத சேவையை யுடைய மஹான்களாம். |

மனமானது நெக்கு நெக்காக கசிந்து இளகும்படி வசனித்த லனைத்தினும் துதியையுடைய தோழிப் பெண்களாம் அடியார்களாம் (தம்மை சரணா கதியாக வடைந்த முமுட்சுக்களது) ஜீவத்துவம் அனைத்தையும் தனது ஞான திருஷ்டியினால் புசிப்பவர். யோகினியர்களாம். நிறைந்த பூர்ணானந்தத்தை அநுபவித்து நர்த்தனம் செய்பவர்கள். மோகினி யென்னும் மஹான்களாம். சொல்லுதற் கருமையான தேவியினது பாத சேவையை யுடைய மஹான்களாம்.

**12. தமர்பிற ரற்றார் சகயமு மற்றார்**
**சகவியல் பற்றார் தமையொழி வற்றா**
**ரமர்விட மற்றா ரறமற மற்றா**
**ரறிவயர் வற்றா ரவளடி யாரே.**

| | |
|---|---|
| தமர் பிறர் அற்றார் | உறவினர் பகையினர் இல்லாதவர். |
| சமயமுமற்றார் | ஷட் சமயங்களையுங் கடந்தவர். |
| சகவியல் பற்றார் | மறையும் உலகயியற்கை யினின்றும் நீங்கியவர். |
| தமை யொழிவற்றார் | சர்வமுந் தானாகக் காணும் தன்மைய பாவனை யுடையவரே யல்லது அன்னியத்தைப் பார்ப்பதி னின்றும் விலகியவர் |
| அமர்விட மற்றார் | பொருந்தி வசித்தற்கு நிலையாக ஓர் ஸ்தானத்தை யுமுடையவ ரல்லர். |
| அறமறம் அற்றார் | புண்ணிய பாபங்களி னின்றும் விடுபட்டவர். |
| அறிவு அயர்வு அற்றார் | சகல கேவல மின்றியவர் (நனவிற் சுழுத்தி யையுடையவர்) |
| அவள் அடியார் | அவ்வம்பிகை யினது பக்தர்கள். |

உறவினர் பகையினர் இல்லாதவர். ஷட் சமயங்களையுங் கடந்தவர். மறையும் உலகயியற்கை யினின்றும் நீங்கியவர். சர்வமுந் தானாகக் காணும் தன்மைய பாவனை

யுடையவரே யல்லது அன்னியத்தைப் பார்ப்பதி னின்றும் விலகியவர் பொருந்தி வசித்தற்கு நிலையாக ஓர் ஸ்தானத்தை யுமுடையவ ரல்லர். புண்ணிய பாபங்களி னின்றும் விடுபட்டவர். சகல கேவல மின்றியவர் (நனவிற் சுழுத்தி யையுடையவர்) அவ்வம்பிகை யினது பக்தர்கள்.

**13. இருணெறி விட்டா ரிருமையும் விட்டா**
**ரிலகந டப்பா ருலகுக டப்பா**
**ரருணெறி நிற்பா ரமரவி ருப்பா**
**ரறிவுரு வுற்றா ரவளடி யாரே**

| | |
|---|---|
| இருள் நெறி விட்டவர் | அஞ்ஞான வந்தகாரத்தை குரு சாஸ்திரக் கிரமமாக நீத்தவர். |
| இருமையும்விட்டார் | இம்மை மறுமை இரண்டையும் வாந்தாசன புரீஷ முதலியவைகளிற் போல் அருவருப்புற்று நீத்தவர். |
| இலக நடப்பார் | தன்னொழுக்கத்தைக் கொண்டு மற்றைய ரொழுகும்படி சன் மார்க்கங்களை அனுட்டிப்பவர். |
| உலகு கடப்பார் | உலகைக் கடந்தவர். |
| அருள் நெறி நிற்பார் | ஜீவ கருணையை மேற்கொள்ளும் நன்மார்க்க நிலையுள்ளவர் அல்லது ஞான மார்க்கங்களில் நிலைத்து நிற்பவர் |
| அமர இருப்பார் | மைத்திரி முதலிய குணங்கள் பொருந்தி சாந்தமாய் இருப்பார்கள். |
| அறிவுருவுற்றார் | ஞான சொரூபமாக வுடையவர். |
| அவள் அடியாரே | அவ்வம்பிகையின் திருவடித் தொண்டர்கள். |

அஞ்ஞான வந்தகாரத்தை குரு சாஸ்திரக் கிரமமாக நீத்தவர். இம்மை மறுமை இரண்டையும் வாந்தாசன புரீஷ முதலியவைகளிற் போல் அருவருப்புற்று நீத்தவர். தன்னொழுக்கத்தைக் கொண்டு மற்றைய ரொழுகும்படி சன் மார்க்கங்களை அனுட்டிப்பவர். உலகைக் கடந்தவர். ஜீவ கருணையை மேற்கொள்ளும் நன்மார்க்க நிலையுள்ளவர் அல்லது ஞான மார்க்கங்களில் நிலைத்து நிற்பவர் மைத்திரி முதலிய குணங்கள் பொருந்தி சாந்தமாய் இருப்பார்கள். ஞான சொரூபமாக வுடையவர். அவ்வம்பிகையின் திருவடித் தொண்டர்கள்

**14. பொருளைவி ரிப்பார் புகழுதி றத்தார்**
**புளகித முற்றார் புரளுத லுற்றா**
**ரருளைவி யப்பா லறியவு ரைப்பா**
**ரதிசய மிக்கா ரவளடி யாரே**

| | |
|---|---|
| பொருளை விரிப்பார் | ஞானார்த்தங்களை விரித்துக் கூறுவார். |
| புகழுதிறத்தார் | யாவராலும் புகழுதற்குரிய வல்லமை யுடையவர் அல்லது பரமான்மாவை சதாவும் ஏத்தித் துதிக்கும் வல்லமை |

| | |
|---|---|
| | யுடையவர். |
| புளகித முற்றார் | சர்வாங்கமும் சந்தோஷத்தால் பூரிதமானவர். |
| புரளுதலுற்றார் | தெருவுதோறும் (அழகிய மாடவீதிகளைச் சுற்றிலும்) பரமான்மாவை நினைந்து நினைந்து புரண்டு கொண்டிருப்பார். |
| அருளை வியப்பால் அறிய உரைப்பார் | அத்வைத ஞானத்தைக் கேட்போர் ஆச்சரியப் படும்படி திருஷ்டாந்த தாஷ்டாந்தங் களுடன் உணரும் வண்ணம் உபதேசிப்பர். |
| அதிசயமிக்கார் | பார்ப்பவருக்குப் பரமப் பிரியத்தையுண்டு பண்ணும் குணாதிசயத்தை மிகுதியாக உடையவர். |
| அவள் அடியார் | அவ்வம்மைக்குப் பக்தர்களாம். |

ஞானார்த்தங்களை விரித்துக் கூறுவார். யாவராலும் புகழுதற்குரிய வல்லமை யுடையவர் அல்லது பரமான்மாவை சதாவும் ஏத்தித் துதிக்கும் வல்லமை யுடையவர். சர்வாங்கமும் சந்தோஷத்தால் பூரிதமானவர். தெருவுதோறும் (அழகிய மாடவீதிகளைச் சுற்றிலும்) பரமான்மாவை நினைந்து நினைந்து புரண்டு கொண்டிருப்பார். அத்வைத ஞானத்தைக் கேட்போர் ஆச்சரியப் படும்படி திருஷ்டாந்த தாஷ்டாந்தங் களுடன் உணரும் வண்ணம் உபதேசிப்பர். பார்ப்பவருக்குப் பரமப் பிரியத்தையுண்டு பண்ணும் குணாதிசயத்தை மிகுதியாக உடையவர். அவ்வம்மைக்குப் பக்தர்களாம்.

**15. தெளியுமு ளத்தார் சிலவர்தெ ளிப்பார்**
**சிலவர்க ளிப்பார் சிலவர்தி கைப்பா**
**ரளியுமு ளத்தோ டழுதுசி ரிப்பா**
**ரவர்கள் செயற்பா டறியவொ ணாதே.**

| | |
|---|---|
| தெளியும் உளத்தார் | அசம்பாவனை விபரீத பாவனையின்றி நிர்மலமான சித்தத்தையுடையவர். |
| சிலவர் தெளிப்பர் | சிலபேரை தெளிவிக்கச் செய்வார்கள். |
| சிலவர் களிப்பார் | சிலமஹான்கள்(திருப்தர்களாயிருப்பர்) சந்தோஷத்துட னிருப்பார். |
| சிலவர் திகைப்பர் | சிலபேர் திகைத்து (பிரமித்து) நிற்பவர்போல் இருப்பர். |
| அளியும் | அன்புடைய |
| உளத்தோடு | மனதுடன் |
| அழுது சிரிவார் | சம்சார தாபத்தை நினைந்து புலம்பிக் கொண்டும் அது மித்தையா யிருப்பதை யறிந்து சிரித்துக் கொண்டும் இருப்பார். |
| அவர்கள் செயற்பாடு அறிய ஒணாது | இப்படி அம்மஹான்களது செய்கையை உணர முடியாது. |

அசம்பாவனை விபரீத பாவனையின்றி நிர்மலமான சித்தத்தையுடையவர். சிலபேரை தெளிவிக்கச் செய்வார்கள். சிலமஹான்கள்(திருப்தர்களாயிருப்பர்) சந்தோஷத்துட னிருப்பார். சிலபேர் திகைத்து (பிரமித்து) நிற்பவர்போல் இருப்பர். அன்புடைய மனதுடன் சம்சார தாபத்தை நினைந்து புலம்பிக் கொண்டும் அது மித்தையா யிருப்பதை யறிந்து சிரித்துக் கொண்டும் இருப்பார். இப்படி அம்மஹான்களது செய்கையை உணர முடியாது.

******

# 12. லீலை

1. **ஆதி மூலமொரு கோலமுமி லாதவடிவிவ்**
**வகில லோகமும றிந்தடையும் வண்ணமழகார்**
**சோதி மூவடிவு கொண்டருளி யந்தமறைமுன்**
**சொன்ன தன்மைதெரி யும்பரிசு சொன்ன துணிவும்.**

| | |
|---|---|
| ஆதி மூலம் | சர்வத்திற்கும் முதன்மையாய மாயைக்கும் காரணமான (அதிஷ்டானமான) சொரூபம் |
| ஒரு கோலமும் இலாத வடிவு | தனக்கென பரமார்த்தமாக ஒரு வித நாம ரூபமு மிலாத வடிவத்தை யுடையதாம் |
| அழகார் சோதி | (இத்தன்மைய மஹிமை வாய்ந்த அந்த ஜோதி சொரூபம்) |
| இவ்வகில லோகமும் அறிந்து அடையும் வண்ணம் | இந்த சர்வ பிரபஞ்சத்திலுள்ள அதிகாரிகளும் தன் சொரூபத்தைத் தெரிந்து அடைகுவான் வேண்டி |
| மூவடிவு கொண்டு | பிரஹ்ம விஷ்ணு ருத்ரனென்னும் திரிமூர்த்திகளாக ஆவிர்ப்பாவித்து |
| மறை அந்த | வேதங்களின் முடிவாய உபநிடதங்களின் ஞானகாண்டத்தை |
| முன் தெரியும் பரிசு | முன்னர் தெரிந்து கொள்ளும்படி |
| சொன்ன தன்மை | உபதேசித்த விதத்தை |
| சொன்ன துணிவும் | ஈண்டு அடியேங்களுக்கும் அருளே திருவுருவாக வந்து அநுக்ரஹம் செய்ததும் அதாவது அடிக்கடி சொல்லிச் சொல்லி நிச்சயம் செய்ததும். |

சர்வத்திற்கும் முதன்மையாய மாயைக்கும் காரணமான (அதிஷ்டானமான) சொரூபம் தனக்கென பரமார்த்தமாக ஒரு வித நாம ரூபமு மிலாத வடிவத்தை யுடையதாம் (இத்தன்மைய மஹிமை வாய்ந்த அந்த ஜோதி சொரூபம்) இந்த சர்வ பிரபஞ்சத்திலுள்ள அதிகாரிகளும் தன் சொரூபத்தைத் தெரிந்து அடைகுவான் வேண்டி பிரஹ்ம விஷ்ணு ருத்ரனென்னும் திரிமூர்த்திகளாக ஆவிர்ப்பாவித்து வேதங்களின் முடிவாய உபநிடதங்களின் ஞானகாண்டத்தை முன்னர் தெரிந்து கொள்ளும்படி உபதேசித்த விதத்தை ஈண்டு அடியேங்களுக்கும் அருளே திருவுருவாக வந்து அநுக்ரஹம் செய்ததும் அதாவது அடிக்கடி சொல்லிச் சொல்லி நிச்சயம் செய்ததும்.

2. **கயிலை மாமலையின் மேலினிதி ருந்தருளியக்**
**கமல யோநிமுத லெக்கடவு ளர்க்குமருளான்**
**மயிலை யேறிவரு மைந்தனுட னந்திமுதலா**
**மற்றும் வந்தடைப வர்க்குமருள் செய்த வகையும்**

| | |
|---|---|
| கயிலை மாமலையின் மேல் இனிது இருந்து அருளி | ஆயிரத்தெட்டு மாற்றுடைய ஜாம்புவமாய பொன் மேருகிரியினில் சந்தோஷத்துடன் எழுந்தருளியிருந்து (சுத்தப் பிரஹ்மாஹம் என்னுங் களிப்பினால் எழுந்தருளி யிருந்து) |
| அருளால் | கிருபையால் |
| அக்கமல யோனி முதலெக் கடவுளர்க்கு | அந்த உந்தியத் தாமரை மலரினின்றும் ஜன்னியமாய் கமலாசனத்திலேயே வீற்றிருப்பவராய பிரமன் முதலிய எல்லாத் தேவர்களுக்கும் |
| மயிலை ஏறிவரும் மைந்தனுடன் | மயில் வாகனத்தில் எழுந்தருளி வரும் சுப்பிரமணியராய மைந்தனுடனும் |
| நந்தி முதலாம் மற்றும் வந்து அடைபவர்க்கும் | நந்தி எம்பெருமானே முதல் இன்னும் ஆண்டு வந்த சகல மகரிஷிகளுக்கும் |
| அருள் செய்த வகையும் | அனுக்ரஹம் செய்த ஓர் தன்மையும். |

ஆயிரத்தெட்டு மாற்றுடைய ஜாம்புவமாய பொன் மேருகிரியினில் சந்தோஷத்துடன் எழுந்தருளியிருந்து (சுத்தப் பிரஹ்மாஹம் என்னுங் களிப்பினால் எழுந்தருளி யிருந்து) கிருபையால் அந்த உந்தியத் தாமரை மலரினின்றும் ஜன்னியமாய் கமலாசனத்திலேயே வீற்றிருப்பவராய பிரமன் முதலிய எல்லாத் தேவர்களுக்கும் மயில் வாகனத்தில் எழுந்தருளி வரும் சுப்பிரமணியராய மைந்தனுடனும் நந்தி எம்பெருமானே முதல் இன்னும் ஆண்டு வந்த சகல மகரிஷிகளுக்கும் அனுக்ரஹம் செய்த ஓர் தன்மையும்.

**3. ஆல நீழலினி ருந்தருளி யன்றுசுரரோ**
**டசுரர் நெஞ்சினள விற்களவ றைந்தறிவுசேர்**
**நாலு பேரறிய நாலுமறை சொன்னபரிசே**
**ஞாந மானநய நந்தனைந யந்தநலனும்.**

| | |
|---|---|
| அன்று | முன்னொரு காலத்து |
| ஆலநீழலி னிருந்தருளி | வட வால விருக்ஷத்தின் நிழலின் எழுந்தருளி யிருந்து |
| சுரரோடு அசுரர் நெஞ்சின் அளவிற்கு | (அறிவுசேர்) தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் அவர்களது புத்தியிற் கொளுமாறு தொகுத்துக் கூறியும் |
| அறிவு சேர் | நிராநித்ய வஸ்த்து முதலிய சாதன சதுஷ்டய சம்பன்னர்களும் புத்தியில் அதி குசலத்தன்மை வாய்ந்தவருமாய |
| நாலு பேர் அறிய | பிரஹ்மாவின் மானஸீக புதல்வராய சனகர் சனாதனர் சனந்தனர் சனத்குமாரர் என்னும் நான்கு பேரும் சம்சய விபரியய மின்றி உணர |
| நாலு மறை சொன்ன பரிசே | இருக்காதி நான்கு வேதங்களும் கூறிய பிரகாரமே பரிபூர்ண பிரம்ம திருஷ்டியை அநுக்ரஹித்த நன்மையும் (தன்மையும்) |

முன்னொரு காலத்து வட வால விருக்ஷத்தின் நிழலின் எழுந்தருளி யிருந்து (அறிவுசேர்) தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் அவர்களது புத்தியிற் கொளுமாறு தொகுத்து கூறியும் நிராநித்ய வஸ்த்து முதலிய சாதன சதுஷ்டய சம்பன்னர்களும் புத்தியில் அதி குசலத்தன்மை வாய்ந்தவருமாய பிரஹ்மாவின் மானஸீக புதல்வராய சனகர் சனாதனர் சனந்தனர் சனத்குமாரர் என்னும் நான்கு பேரும் சம்சய விபரியய மின்றி உணர இருக்காதி நான்கு வேதங்களும் கூறிய பிரகாரமே பரிபூர்ண பிரம்ம திருஷ்டியை அநுக்ரஹித்த நன்மையும் (தன்மையும்)

4. **இசைய வையனொரு பாரதமு டிப்பவர்கள்போ**
**லிப்பி றப்புமுடி யும்பரிசி யம்புமியல்பும்**
**விசைய னையமுறு நெஞ்சினைய றிந்தருளியே**
**விசுவ ரூபவியல் காட்டிவெருள்வித்தவிரகும்**

| | |
|---|---|
| இசைய | சிட்டர்களுக்குப் பொருந்தும்படி (அல்லது நர நாராயணராய இருவரும்) |
| ஐயன் | ஸ்ரீமகாவிஷ்ணு |
| ஒரு பாரத முடிப்பவர்கள் போல் | ஒரு பாரதப் போரை நடத்த வந்தவர் போல் வந்து |
| இப்பிறப்பு முடியும் பரிசு இயம்பும் | சர்வப் பிராணிகளினது இந்த ஜனன மரண சங்கடம் ஒழியும்படிக்கு 700 சுலோக வடிவ ஸ்ரீபகவற்கீதையை உபதேசித்த தன்மையும் |
| விசயன் ஐயமுறு நெஞ்சினையறிந்து அருளி | அருச்சுனனது சம்சயமுடைய மனதைத் தெரிந்து தனது வாக்கியாமிர்தமாகிய கீதையை உபதேசித்து |
| விசுவ ரூபவியல் காட்டி வெருள்வித்த விரகும் | மீண்டும் தனது விராட் வடிவத்தின் தன்மையைத் தெரிசிப்பித்து பயப்படும்படி செய்த ஓர் சாமர்த்தியமும் . |

சிட்டர்களுக்குப் பொருந்தும்படி (அல்லது நர நாராயணராய இருவரும்) ஸ்ரீமகாவிஷ்ணு ஒரு பாரதப் போரை நடத்த வந்தவர் போல் வந்து சர்வப் பிராணிகளினது இந்த ஜனன மரண சங்கடம் ஒழியும்படிக்கு 700 சுலோக வடிவ ஸ்ரீபகவற்கீதையை உபதேசித்த தன்மையும் அருச்சுனனது சம்சயமுடைய மனதைத் தெரிந்து தனது வாக்கியாமிர்தமாகிய கீதையை உபதேசித்து மீண்டும் தனது விராட் வடிவத்தின் தன்மையைத் தெரிசிப்பித்து பயப்படும்படி செய்த ஓர் சாமர்த்தியமும் .

5. **ஆயர் தம்மனையி னோர்வடிவு கொண்டு பதினா**
**றாயி ரந்திரும டந்தையரு டன்புணரினுந்**
**தூய பிரமச்சர்ய மத்தில்வழு வாமலோழுகுஞ்**
**சுத்த ஞாநசரி தத்தியல்பு சொன்ன துணிவும்**

| | |
|---|---|
| ஆயர்தம் மனையின் ஓர்வடிவு கொண்டு பதினாயிரந் திருமடந்தையருடன் புணரினும் | வாசுதேவரது சுதனாகப் பிறந்து (நந்தகோபனது வீட்டில் அளவிறந்த திருவிளையாடல் (செய்து) அஷ்டலக்ஷிமியுடனும், பதினாராயிரம் பேரிடம் கூடி இருந்தும் |
| தூய பிரமச்சரியத்தில் | பரிசுத்தமாய பிரமசரியத்தின் கண் |
| வழுவாமல் | நழுவுதலின்றி |
| ஒழுகும் இயல்பு | நிலைபெற்று அனுஷ்டிக்கும் தன்மையால் பரம முனிவர் முன்னே பரிச்சித்தை தீண்டி அன்று |
| சத்த ஞான சரிதத்து | பரிசுத்தமாகிய தத்துவ ஞான சொரூப அனுபூதியை அருளிய நிச்சசயமும், |

(அஷ்டலக்ஷிமி, பட்டமஸ்த்ரீகள் பதினாராயிரம் பெண்கள், நரகாசுரனிடம் சத்தியபாமாவைக் கொண்டு அவனைக் கொன்று பெற்ற பெண்கள்.)

வாசுதேவரது சுதனாகப் பிறந்து (நந்தகோபனது வீட்டில் அளவிறந்த திருவிளையாடல் (செய்து) அஷ்டலக்ஷிமியுடனும், பதினாராயிரம் பேரிடம் கூடி இருந்தும் பரிசுத்தமாய பிரமசரியத்தின் கண் நழுவுதலின்றி நிலைபெற்று அனுஷ்டிக்கும் தன்மையால் பரம முனிவர் முன்னே பரிச்சித்தை தீண்டி அன்று பரிசுத்தமாகிய தத்துவ ஞான சொரூப அனுபூதியை அருளிய நிச்சசயமும், (அஷ்டலக்ஷிமி, பட்டமஸ்த்ரீகள் பதினாராயிரம் பெண்கள், நரகாசுரனிடம் சத்தியபாமாவைக் கொண்டு அவனைக் கொன்று பெற்ற பெண்கள்.)

**6. வாத வூரனையொ ழிந்தவர்கள் பொன்னடியிலே**
**மன்ன வென்னுடலை மாற்றுகென வாற்ற லிலனா**
**யோத வூறுமமிர் தஞ்செவிக ளார்வுறமுகந்**
**துண்டி வையகமு முய்யும் வகை செய்த வுறவும்**

| | |
|---|---|
| வாத வூரனை யொழிந்தவர்கள் | ஸ்ரீஆத்மநாதன் திருப்பெருந்துறையில் குருந்த மரத்தினிழலிலே யிருந்து ஆயிரக்கணக்கான மாணாக்கர்களுக்கு அனுக்ரஹம் செய்து கொண்டிருப்ப ஆண்டு (வாதவூரர் என்னும் திருநாமம் வாய்ந்த மணிவாசகப் பெருந்தகை சென்று அனுக்ரஹம் பெற்ற அனந்தரம்) மணிவாசகப் பெருந்தகையார் நீங்கலாக ஏனைய அடியார் குழாங்களை தமது திவ்ய சொரூபத்தில் கரந்தருள |
| என்னுடலை மாற்றுகென | அப்போது எனது உடலையும் அந்த அடியார் கூட்டத்துடன் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று |
| ஆற்றலிலனாய் | சகியாதவராய் |
| ஓத | (மனமுருக திருவாசகத்தை) பாடியருள |

| | |
|---|---|
| ஊறு அமிர்தம் | அதனா லுளவாகும் அமிர்தப் பெருக்கை |
| செவிகள் ஆர்வுற முகந்து உண்டு | பரமேஸ்வரன் தனது செவிக ளனைத்தினாலும் நிரம்ப மொண்டு புசித்து |
| இவ்வையகமும் உய்யும் வகை செய்த உறவும் | இந்த உலகிலுள்ள சகல மாக்களும் இந்த திருவாசகத்தைப் பாடி தங்களது ஜனன மரண சம்சார துன்பத்தினின்றும் பிழைக்கும் வண்ணம் வாதவூராரிடம் தாமே சிதம்பரத்தில் விருத்தப் பிராமணராக வந்து திருவாசகத்தை ஓதச் சொல்லி அதை எழுதி நம்மனோருக்கு அருளிச் செய்த ஓர் பெருங் கருணையும். |

ஸ்ரீஆத்மநாதன் திருப்பெருந்துறையில் குருந்த மரத்தினிழலிலே யிருந்து ஆயிரக்கணக்கான மாணாக்கர்களுக்கு அனுக்ரஹம் செய்து கொண்டிருப்ப ஆண்டு (வாதவூரர் என்னும் திருநாமம் வாய்ந்த மணிவாசகப் பெருந்தகை சென்று அனுக்ரஹம் பெற்ற அனந்தரம்) மணிவாசகப் பெருந்தகையார் நீங்கலாக ஏனைய அடியார் குழாங்களை தமது திவ்ய சொரூபத்தில் கரந்தருள அப்போது எனது உடலையும் அந்த அடியார் கூட்டத்துடன் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று சகியாதவராய் (மனமுருக திருவாசகத்தை) பாடியருள அதனா லுளவாகும் அமிர்தப் பெருக்கை பரமேஸ்வரன் தனது செவிக ளனைத்தினாலும் நிரம்ப மொண்டு புசித்து இந்த உலகிலுள்ள சகல மாக்களும் இந்த திருவாசகத்தைப் பாடி தங்களது ஜனன மரண சம்சார துன்பத்தினின்றும் பிழைக்கும் வண்ணம் வாதவூராரிடம் தாமே சிதம்பரத்தில் விருத்தப் பிராமணராக வந்து திருவாசகத்தை ஓதச் சொல்லி அதை எழுதி நம்மனோருக்கு அருளிச் செய்த ஓர் பெருங் கருணையும்.

7. **தன்ப ராபரம தானதிரு மேனிநிலையிற்**
**சலந மின்றியொரு தன்மையினி னின்றருளியே**
**யன்ப ரானவர்க ணெஞ்சினிலு வந்தவடிவா**
**யங்கு வந்தவர்க ளுய்யும்வகை செய்தவருளும்.**

| | |
|---|---|
| தன் பரா பரமதான திருமேனி நிலையில் | அனைத்தினும் மேன்மை மிக்க மாயையையும் தாழ்மை யென்று சொல்லும் படியாயுள்ள தனது ஸ்வரூப ஸ்திதியில் |
| சலனமின்றி | அசைவில்லாமல் |
| ஒரு தன்மையினில் நின்றருளியே | ஒரேவிதமாக இருந்தபடி இருந்தே விவர்த்தமாக |
| அன்பரானவர்கள் | பக்தி மகான் |
| நெஞ்சில் | மனதில் |
| உவந்த வடிவாய் | அன்பினால் தியானித்த அந்தந்த மூர்த்தி வடிவாய் |
| அங்கு வந்து | ஆண்டு எழுந்தருளி வந்து |
| உள்ளும் வகை செய்தவருளும் | அப்பக்தர்கள் பிழைக்கும் வண்ணம் செய்த ஓர் அநுக்கிரஹத்தையும் |
| | |

அனைத்தினும் மேன்மை மிக்க மாயையையும் தாழ்மை யென்று சொல்லும் படியாயுள்ள தனது ஸ்வரூப ஸ்திதியில் அசைவில்லாமல் ஒரேவிதமாக இருந்தபடி இருந்தே விவர்த்தமாக பக்தி மகான் மனதில் அன்பினால் தியானித்த அந்தந்த மூர்த்தி வடிவாய் ஆண்டு எழுந்தருளி வந்து அப்பக்தர்கள் பிழைக்கும் வண்ணம் செய்த ஓர் அநுக்கிரஹத்தையும்

**8. உலகமயக் குறாவண்ண முகந்தோறு**
**முகந்தோறு முதிப்ப னானென்**
**றிலகியமெய்த் திருவார்த்தை யாவர்க்கு**
**மேறும்வகை யிக்கா லத்தே.**

| | |
|---|---|
| உலக மயக்குறா வண்ணம் | சென்ற துவாபர யுகத்தே விஜயனை நோக்கி சாவாது பிறவாது தனி முதலா யிருந்த நான்ஆ ஆ இவ்வுலகம் படும்துயர் தீர்ப்பதற்காக |
| உகந்தோறும் உகந்தொறும் உதிப்பன் நான் | மேவாது நின்றே என் மாயையினால் மெய்யேபோல் ஓவாது பிறந்திடுவேன் உகந்தோறும் உகந்தோறும் |
| என்றிலகிய மெய்த்திரு வார்த்தை யாவர்க்கும் வகை இக்காலத்தே | என்று கீதையிலருளிச் செய்த உண்மையான வாக்கியத்தை உலகிலுள்ள சகலமான பேரும் நம்பும்படிக்கு இந்தக் கலி யுகத்தே |

சென்ற துவாபர யுகத்தே விஜயனை நோக்கி சாவாது பிறவாது தனி முதலா யிருந்த நான்ஆ ஆ இவ்வுலகம் படும்துயர் தீர்ப்பதற்காக மேவாது நின்றே என் மாயையினால் மெய்யேபோல் ஓவாது பிறந்திடுவேன் உகந்தோறும் உகந்தோறும் என்று கீதையிலருளிச் செய்த உண்மையான வாக்கியத்தை உலகிலுள்ள சகலமான பேரும் நம்பும்படிக்கு இந்தக் கலி யுகத்தே

**9. பெருமான்வந் தவதரித்துப் பீடுடைய**
**தரணியுளோர் பிழைக்கும் வண்ணஞ்**
**சொருபாநந் தச்சுடர்தன் றுணைமலர்த்தா**
**டரும்பரிசு சொல்லிச் சொல்லி.**

| | |
|---|---|
| பெருமான் வந்து அவதரித்து | சாட்சாத் எங்கும் நிறைந்த கடவுள் அவதாரம் செய்து எழுந்தருளி வந்து |
| பீடு உடைய தரணியுளோர் | பெருமை பொருந்திய ஸ்ரீபகவானும் குருமூர்த்தியும் தோன்றினதால்தான் பெருமை பொருந்தியது ஆகும் உலகு. அல்லது இழிவிற் சிறப்பு(துன்பம் பொருந்திய) உலகின் கண் உள்ளவர்கள் உய்யும்படிக்கு |

| | |
|---|---|
| சொரூபானந்தச் சுடர் | சொரூபானந்த சுவாமிகள் என்னும் திருப்பெயர் பூண்டு |
| தன் துணை மலர்த்தாள் தரும் பரிசும் | தனது உபய திருவடித் தாமரையை அளித்த தன்மையையும் துதித்துத் துதித்து வணங்குகிறேன். |

சாட்சாத் எங்கும் நிறைந்த கடவுள் அவதாரம் செய்து எழுந்தருளி வந்து பெருமை பொருந்திய ஸ்ரீபகவானும் குருமூர்த்தியும் தோன்றினதால்தான் பெருமை பொருந்தியது ஆகும் உலகு. அல்லது இழிவிற் சிறப்பு(துன்பம் பொருந்திய) உலகின் கண் உள்ளவர்கள் உய்யும்படிக்கு சொரூபானந்த சுவாமிகள் என்னும் திருப்பெயர் பூண்டு தனது உபய திருவடித் தாமரையை அளித்த தன்மையையும் துதித்துத் துதித்து வணங்குகிறேன்.

**10. அண்டரெலா மலமாக்க வருட்சொருபா**
**நந்தன்றன் னடியார் வாழப்**
**புண்டரிக மலர்ப் பாதம் பொறித்தருளுந்**
**திருக்கருணை போற்றி போற்றி**

| | |
|---|---|
| அண்டரெலாம் அலமாக்க | தேவர்களெல்லாம் இந்தப் பாக்கியம் இல்லையே என்று பிரமிக்கவும் (துக்கிக்கவும்) |
| அருள் சொரூபானந்தன் அடியார் வாழ | கருணையே திருவுருவாக பொருந்திய சொரூபானந்தம் என்னும் திருப்பெயர் பூண்ட எமது ஆண்டவன் தமது பக்தர்கள் எல்லாம் சம்சார துன்பத்தினின்றும் விடுபட்டு பேரானந்தத்தை யடையவும் |
| புண்டரிக மலர்பாதம் | தாமரை மலர்போலும் உள்ள திருவடியை |
| பொறித்தருளும் | அவர்களது சிரசின்கண் கிரீடமாக சூட்டி வைக்கும் |
| திருக்கருணை போற்றி போற்றி | அழகிய கிருபைக்கு நமஸ்காரம். நமஸ்காரம். |

தேவர்களெல்லாம் இந்தப் பாக்கியம் இல்லையே என்று பிரமிக்கவும் (துக்கிக்கவும்) கருணையே திருவுருவாக பொருந்திய சொரூபானந்தம் என்னும் திருப்பெயர் பூண்ட எமது ஆண்டவன் தமது பக்தர்கள் எல்லாம் சம்சார துன்பத்தினின்றும் விடுபட்டு பேரானந்தத்தை யடையவும் தாமரை மலர்போலும் உள்ள திருவடியை அவர்களது சிரசின்கண் கிரீடமாக சூட்டி வைக்கும் அழகிய கிருபைக்கு நமஸ்காரம். நமஸ்காரம்.

**11. கூசாதே நாமுமெலாங் கொண்டாடும் படியிந்தக் குவல யத்தே**
**வாசாம கோசரனோர் வடிவாகி வந்தவருள் வாழ்த்தி வாழ்த்தி**

| | |
|---|---|
| கூசாதே | பயப்படாமல் |
| நாமுமெலாம் | அபக்குவர்களாகிய நாமெல்லோரும் |
| கொண்டாடும்படி | கண்டு களிக்கும் வண்ணம் |
| இந்தக் குவயத்தே | இப் பூமண்டலத்தே |
| வாசாமகோசரன | வாக்கு மனங்களுக்கு எட்டாத பரம்பொருள் |
| ஓர் வடிவாகி | ஒரு திரு வுருவாகி |
| வந்த அருள் போற்றி போற்றி | எழுந்தருளி வந்த கிருபையைத் துதித்துதித்து வணங்குகிறேன். |

பயப்படாமல் அபக்குவர்களாகிய நாமெல்லோரும் கண்டு களிக்கும் வண்ணம் இப் பூமண்டலத்தே வாக்கு மனங்களுக்கு எட்டாத பரம்பொருள் ஒரு திரு வுருவாகி எழுந்தருளி வந்த கிருபையைத் துதித்துதித்து வணங்குகிறேன்.

**12. கரைத்தல் தீர வந்து தித்த கருணை மேனிகாதலோ**
**டுரைத்து வாழு மிவ்வி நோதமிடைவி டாமலுடையரே**

| | |
|---|---|
| கரைத்தல் தீர | சம்சார துன்பம் ஒழிவிக்க |
| வந்து உதித்த கருணை மேனி | ஈண்டு வந்து ஆவிர்பவித்த கிருபையை வடிவமாக உள்ள தனது ஆண்டவனை |
| காதலோடு | அன்புடன் |
| உரைத்து வாழும் | துதித்துப் பேரானந்த மடையும் |
| இவ்வினோதம் | இவ் விளையாட்டையே |
| இடைவிடா மலுடையவரே | நிரந்தரம் மேற்கொண்டவர் |

சம்சார துன்பம் ஒழிவிக்க ஈண்டு வந்து ஆவிர்பவித்த கிருபையை வடிவமாக உள்ள தனது ஆண்டவனை அன்புடன் துதித்துப் பேரானந்த மடையும் இவ் விளையாட்டையே நிரந்தரம் மேற்கொண்டவர்

**13. சாத லாதல் வாழ்த லாதல் தரைய தாதல் சயநமாதல்**
**காத லாதல் காய்த லாதல் கருது றார்கள் கணமுமே.**

| | |
|---|---|
| சாதலாதல் | மரணம் வரும் என்பதைப் பற்றியும் பயப்படார், |
| வாழ்தலாதல் | சுகமாக வசித்தலைப் பற்றியும் விரும்பார் |
| தரையதாதல் | பூமியிற் கிடப்பதை (விருப்பதை) பற்றியும் வாடார், |

| | |
|---|---|
| சயனமாதல் | பஞ்சு மெத்தையில் படுத்தலால் மகிழார் |
| காதலாதல் | ஒன்றினும் விருப்பத்தை யடையார் ஒன்றினும் வெறுப்பு உறார் (விருப்பு வெறுப்பு உபேட்சையாக இருப்பார்) என்றபடி |
| கருதுனார்கள் கணமுமே | ஒரு க்ஷண நேரம் கூட அது வேண்டும் இது வேண்டும் என்று யாதொரு சிந்தனையும் அற்றவர்களாம். |

மரணம் வரும் என்பதைப் பற்றியும் பயப்படார், சுகமாக வசித்தலைப் பற்றியும் விரும்பார் பூமியிற் கிடப்பதை (விருப்பதை) பற்றியும் வாடார், பஞ்சு மெத்தையில் படுத்தலால் மகிழார் ஒன்றினும் விருப்பத்தை யடையார் ஒன்றினும் வெறுப்பு உறார் (விருப்பு வெறுப்பு உபேட்சையாக இருப்பார்) என்றபடி ஒரு க்ஷண நேரம் கூட அது வேண்டும் இது வேண்டும் என்று யாதொரு சிந்தனையும் அற்றவர்களாம்.

**14. வந்த விச்ச கத்து தித்து வந்த வாறு மாறுமா**
**றிந்த விச்சை பாரு மென்றி ருந்த விச்சை காட்டியே**

| | |
|---|---|
| வந்த | (இன்னும் என்ன திருவிளையாடல்கள் செய்வார்களெனில் தம்மை யடைந்த முமுட்சுக்களுக்கு) தோன்றாநின்ற |
| இச்சகத்துதித்துதித்த வந்தவாறும் | இந்த உலகம் உற்பத்தியான விதத்தையும் |
| மாறு மாறும் | மீண்டும் லயம் அடையும் தன்மையையும் |
| இந்த விச்சை பாரும் என்று | (போதித்து) எஞ்சியுள்ள ஞான சொரூபத்தைத் தெரிசியுங்கள் என்றும் (இவ்வுலகம் தோன்று முன்னும் மத்தியிலும் அழிந்த பின்னும் யாதொரு சத் சொரூப பரமான்ம வஸ்து உண்டோ அதனையே உங்கள் வடிவமாக உணருங்கள் என்றும்) |
| இருந்த விச்சை காட்டவே | விஸ்தாரமாக விருந்த ஜனன மரண சம்சாரமாகி யவித்தை உன்னிடத்தில் மூன்று காலத்திலும் இல்லவே இல்லை என்று தெரிசிப்பிக்கவும் செய்து கொண்டு மஹான்கள் வீற்றிருக்கின்றார்கள். |

இன்னும் என்ன திருவிளையாடல்கள் செய்வார்களெனில் தம்மை யடைந்த முமுட்சுக்களுக்கு தோன்றாநின்ற இந்த உலகம் உற்பத்தியான விதத்தையும் மீண்டும் லயம் அடையும் தன்மையையும் (போதித்து) எஞ்சியுள்ள ஞான சொரூபத்தைத் தெரிசியுங்கள் என்றும் (இவ்வுலகம் தோன்று முன்னும் மத்தியிலும் அழிந்த பின்னும் யாதொரு சத் சொரூப பரமான்ம வஸ்து உண்டோ அதனையே உங்கள் வடிவமாக உணருங்கள் என்றும்) விஸ்தாரமாக விருந்த ஜனன மரண சம்சாரமாகி யவித்தை உன்னிடத்தில் மூன்று காலத்திலும் இல்லவே இல்லை என்று தெரிசிப்பிக்கவும் செய்து கொண்டு மஹான்கள் வீற்றிருக்கின்றார்கள்.

*******

# 13. பேய் முறைப்பாடு

1. **அண்ட முண்ட கண்டர் நிற்க வடைய வுண்ண வாதரங்**
**கொண்ட பேய்க ளகல வந்து குறைக ணின்று கூறுமே**

| | |
|---|---|
| அண்டம் உண்ட கண்டர் | சர்வ பிரமாண்டங்களையும் பாதி தானு விருத்தியால் சொரூபமாகப் பருகிய களத்தினையுடைய மஹான்கள் |
| நிற்க | இருப்ப |
| அடைய உண்ண ஆதரங் கொண்ட பேய்கள் | யாவற்றையும் தனது வடிவமாக அனுபவிக்க வேண்டி அன்பு நிறைந்துள்ள முமுட்சுபிசாசுக்கள் |
| வந்து | தேவியின் சன்னிதானத்தில் வந்து |
| அகல குறைகள் நின்று கூறும் | விஸ்தாரமாக தனது குறைவு பாடுகளை முறையிடும். |

சர்வ பிரமாண்டங்களையும் பாதி தானு விருத்தியால் சொரூபமாகப் பருகிய களத்தினையுடைய மஹான்கள் இருப்பயாவற்றையும் தனது வடிவமாக அனுபவிக்க வேண்டி அன்பு நிறைந்துள்ள முமுட்சுபிசாசுக்கள் தேவியின் சன்னிதானத்தில் வந்து விஸ்தாரமாக தனது குறைவு பாடுகளை முறையிடும்.

2. **உலகி லேச நித்து நின்று ழைத்து நீர்பி ழைப்பிலா**
**வலகை யாமி னெனவ குத்த தென்கொ லெம்மை யம்மையே**

| | |
|---|---|
| உலகிலே சனித்து நின்று | இப் பிரபஞ்சத்திலே அடிக்கடி பிறந்து இருந்து |
| உழைத்து | பழையபடி கர்மங்களைச் செய்து |
| நீர் பிழைப்பிலா வலகையாமின் | நீங்கள் உய்வில்லா பிசாசுக்களாகப் போங்கள் |
| என எம்மை வகுத்த தென் கொல் | என்று எங்களை வித்தது யாது பொருட்டோ ? |
| அம்மையே | ஏ ! பரமேஸ்வரிஏ ! (ஏ தாயே) |

இப் பிரபஞ்சத்திலே அடிக்கடி பிறந்து இருந்து பழையபடி கர்மங்களைச் செய்து நீங்கள் உய்வில்லா பிசாசுக்களாகப் போங்கள் என்று எங்களை வித்தது யாது பொருட்டோ ? ஏ ! பரமேஸ்வரியே ! (ஏ ! தாயே !)

3. **வாசகத்தா லாவியைநின் றுருக்கு ஞாந**
**மதயானை வாதவூர் வள்ள லோடு**
**மாசகற்றி யாயிரம்பேர்க் கீச னார்நல்**
**லமிர்தளித்தா ரெமக்கிரங்கி யருளா ரிந்நாள்**

| | |
|---|---|
| ஈசனார் | பரமேஸ்வரன் |
| வாசகத்தாலாவியை நின்று | தமது திருவாசகத்தால் கேட்பவரது தற்போதம் அறும்படியாக (ஜீவத்துவத்தையும்) இருந்து |
| உருக்கும் | மனதை கசிந்து இளகும்படி செய்யும் |
| ஞான மத யானை வாதவூர் வள்ளலோடு | ஞான மத யானையென்று சொல்லும் ஸ்ரீமாணிக்க வாசக பெருந்தகையாய தலை வள்ளளுடன் |
| ஆயிரம் பேர்க்கு மாசகற்றி | ஆயிரக்கணக்கான மாணாக்கர்களுக்கு அவர்களது மும்மலங்களையும் களைந்து |
| நல் அமிர்தளித்தார் | நல்ல பிரமாநந்தத்தைப் பருகும்படி செய்தார் |
| இந்நாள் எமக் கிரங்கி அருளார் | நாங்கள் இதுநாள் பரியந்தம் எதிர்பார்த்திருந்தும் அப்பேர்ப்பட்ட பேரானந்தத்தை எங்களுக்கு கொடுத்தாரில்லை. தேவியே அருள வேண்டும். |

பரமேஸ்வரன் தமது திருவாசகத்தால் கேட்பவரது தற்போதம் அறும்படியாக (ஜீவத்துவத்தையும்) இருந்து மனதை கசிந்து இளகும்படி செய்யும் ஞான மத யானையென்று சொல்லும் ஸ்ரீமாணிக்க வாசக பெருந்தகையாய தலை வள்ளளுடன் ஆயிரக்கணக்கான மாணாக்கர்களுக்கு அவர்களது மும்மலங்களையும் களைந்து நல்ல பிரமாநந்தத்தைப் பருகும்படி செய்தார் நாங்கள் இதுநாள் பரியந்தம் எதிர்பார்த்திருந்தும் அப்பேர்ப்பட்ட பேரானந்தத்தை எங்களுக்கு கொடுத்தாரில்லை. தேவியே அருள வேண்டும்.

**4. தலைப்பான்மைமிகப்பெரிய காழி ஞாந**
**சம்பந்தர் தாம்பிள்ளைத் தனத்தி னாலே**
**முலைப்பாலைப் பகிராதே தாமே யுண்டு**
**முத்தமிழும் பாடியற முதிய ரானார்.**

| | |
|---|---|
| தலைப்பான்மை மிகப் பெரிய காழி | பெருமைமிக்க ஸ்ரீசிவ பெருமான் எழுந்தருளியுள்ள சிவ ஸ்தலமனைத்தினும் சிரேஷ்டத்தன்மை மிகுந்த பெரிதாகிய சீர்காழியென்னும் திவ்ய க்ஷேத்திரத்தின்கண் அவதரித்த |
| ஞான சம்பந்தர் தாம் பிள்ளைத் தனத்தினாலே | சாட்சாத் சண்முகக் கடவுளினது அவதார ரூபமாய திருஞான சம்பந்த சுவாமிகள் சிறு பிள்ளைத்தனத்தால் |
| முலைப் பாலைப் பகிராதே தாமேயுண்டு | தனக்கு ஞானம்பிகையாய தங்களால் கொடுத்த ஞானப் பாலை எல்லோருக்கும் பகுந்து கொடுக்காமல் தாமே பருகி |
| முத்தமிழும் பாடி | இயல் இசை நாடகமென்னும் மூன்றுக்கும் இயைய அநேக திருப்பாசுரங்களை இயற்றி(பாடி) |
| அறமுதியரானார் | மிகவும் பெரியோராயினர். ஆனதால் எங்களுக்கும் |

| | |
|---|---|
| | தேவியாய தாங்களே கருணையால் ஞானப்பாலைத் தந்து இரக்ஷிக்கவும். |

பெருமைமிக்க ஸ்ரீசிவ பெருமான் எழுந்தருளியுள்ள சிவ ஸ்தலமனைத்தினும் சிரேஷ்டத்தன்மை மிகுந்த பெரிதாகிய சீர்காழியென்னும் திவ்ய க்ஷேத்திரத்தின்கண் அவதரித்த சாட்சாத் சண்முகக் கடவுளினது அவதார ரூபமாய திருஞான சம்பந்த சுவாமிகள் சிறு பிள்ளைத்தனத்தால் தனக்கு ஞானம்பிகையாய தங்களால் கொடுத்த ஞானப் பாலை எல்லோருக்கும் பகுந்து கொடுக்காமல் தாமே பருகி இயல் இசை நாடகமென்னும் மூன்றுக்கும் இயைய அநேக திருப்பாசுரங்களை இயற்றி(பாடி) மிகவும் பெரியோராயினர். ஆனதால் எங்களுக்கும் தேவியாய தாங்களே கருணையால் ஞானப்பாலைத் தந்து இரக்ஷிக்கவும்.

**5. திருநாவிற் கரசர்மிகத் தெள்ளத் தேறித்**
**தெளிந்துதித் திக்குமருட் டேறன் முன்ன**
**மொருநாளிற் பெற்றெம்மை யொழியப் போயுண்**
**டொளியுருவா யினர்நாங்க ளுலர்ந்தே போனோம்.**

| | |
|---|---|
| திருநாவிற்கரசர் மிகத் தெள்ளத் தேரி | பரமேஸ்வரன் மீதில் பாமாலை சாத்த அதற்குப் பரமேஸ்வரனால் திருநாவுக்கரசு என்னும் திருநாமம் வாய்ந்த பெரியார் மிகவும் பல புற பதங்களை வெல்லும் விற்பன்னம் உடையவராய் |
| தெளிந்து தித்திக்கும் அருட்டேறல் முன்னம் ஒரு நாளில் பெற்று | முன்னொரு காலத்து தனக்கு சூலை நோயுற்றபோது தமக்கையாகிய திலகவதியாரிடம் நிர்மல ஆனந்த ஞான தேனை (விபூதி உருத்திராக்கம் அஞ்செழுத்துன்மையும் அறிந்து |
| எம்மை ஒழிய | எங்களை விட்டு |
| போய் உண்டு | தாமே அருந்தி |
| ஒளியுருவாயினர் | சிதாகாசத்தில் ஜோதி ஸ்வரூபமாக ஆய் விட்டார்கள். |
| நாங்கள் உலர்ந்தே போனோம் | நாங்கள் சம்சாரத்தில் அகப்பட்டு அத்தியந்தம் தவிக்கலானோம். ஆதலால் தேவரீர் கிருபை செய்ய வேண்டும். |

பரமேஸ்வரன் மீதில் பாமாலை சாத்த அதற்குப் பரமேஸ்வரனால் திருநாவுக்கரசு என்னும் திருநாமம் வாய்ந்த பெரியார் மிகவும் பல புற பதங்களை வெல்லும் விற்பன்னம் உடையவராய் முன்னொரு காலத்து தனக்கு சூலை நோயுற்றபோது தமக்கையாகிய திலகவதியாரிடம் நிர்மல ஆனந்த ஞான தேனை (விபூதி உருத்திராக்கம் அஞ்செழுத்துன்மையும் அறிந்து எங்களை விட்டு தாமே அருந்தி சிதாகாசத்தில் ஜோதி

ஸ்வரூபமாக ஆய் விட்டார்கள். நாங்கள் சம்சாரத்தில் அகப்பட்டு அத்தியந்தம் தவிக்கலானோம். ஆதலால் தேவரீர் கிருபை செய்ய வேண்டும்.

**6. அடுத்தனவே செய்துதிரிந் தற்றநம்பி**
**யாரூரிற் கிறைவர்திரு வருளினாலே**
**தடுத்தவரை யாட்கொண்டா ரமிர்த முண்ணத்**
**தாமளித்தா ரெம்மளவுந் தாயே காணேம்.**

| | |
|---|---|
| அடுத்தனவே | திருக்கயிலாயத்தில் பரமேஸ்வரனுக்கு வேண்டிய கைங்கரியங்களை |
| செய்து | இயற்றி |
| திரிந்து அற்ற நம்பி ஆரூரற்கு | மனது ஆண்டுள்ள பார்வதி தேவியாரின் பணிப் பெண்களிடத்து விபரீதமடைந்ததனால் (அநிந்திகை, கமலினிஎன்னும் பெண்களிடத்தில் இச்சை கொண்ட சுந்தர மூர்த்திக்கு ) கைலாயத்தினின்றும் நீங்கிய பரமேஸ்வரரின் தோழரான சுந்தர மூர்த்தி சுவாமிகளுக்கு பூர்வம் தடுத்தாட் கொள்கிறேனென்று கூறிய வண்ணம் |
| இறைவன் | பரமேஸ்வரன் |
| மிக அருளினாலெ | மிகவும் கிருபையினாலே |
| தடுத்து அவரை ஆட்கொண்டார் | அவரது சுந்தர (மூர்த்தி சுவாமிகள்) திருமணத்தில் விருத்தப் பிராமணராய் சென்று தனக்கு அடிமை என்று கூறி சம்சாரச் சுழலில் வீழா வண்ணம் மறித்து அந்த சுவாமிகளை அடிமையாகக் கொண்டனர். |
| அமிர்தம் உண்ணத் தாம் அளித்தார் | ஜனித்தல் தரித்தல் என்னும் துன்பம் அடையா வண்ணம் பேரானந்தமாய பிரமானந்த அமிர்தத்தைப் புசிக்கும் படிக்குத் தாமே (அவர் கேட்காமலே) கொடுத்தார். |
| எம்மளவும் | எம்மிடத்தும் அவ்வாறு கொடுப்பாரென எதிர்பார்த்திருந்தோம். |
| தாயே காணேம் | தேவியே அந்த அமிர்த தெரிசன மின்றெனின் புசிப்பது யாங்கணம். கிருபை செய்வாயாக. |

திருக்கயிலாயத்தில் பரமேஸ்வரனுக்கு வேண்டிய கைங்கரியங்களை இயற்றி மனது ஆண்டுள்ள பார்வதி தேவியாரின் பணிப் பெண்களிடத்து விபரீதமடைந்ததனால் (அநிந்திகை, கமலினிஎன்னும் பெண்களிடத்தில் இச்சை கொண்ட சுந்தர மூர்த்திக்கு ) கைலாயத்தினின்றும் நீங்கிய பரமேஸ்வரரின் தோழரான சுந்தர மூர்த்தி சுவாமிகளுக்கு பூர்வம் தடுத்தாட் கொள்கிறேனென்று கூறிய வண்ணம் பரமேஸ்வரன் மிகவும் கிருபையினாலே அவரது சுந்தர (மூர்த்தி சுவாமிகள்) திருமணத்தில் விருத்தப் பிராமணராய் சென்று தனக்கு அடிமை என்று கூறி சம்சாரச் சுழலில் வீழா வண்ணம் மறித்து அந்த சுவாமிகளை அடிமையாகக் கொண்டனர். ஜனித்தல் தரித்தல் என்னும்

துன்பம் அடையா வண்ணம் பேரானந்தமாய பிரமானந்த அமிர்தத்தைப் புசிக்கும் படிக்குத் தாமே (அவர் கேட்காமலே) கொடுத்தார். எம்மிடத்தும் அவ்வாறு கொடுப்பாரென எதிர்பார்த்திருந்தோம். தேவியே அந்த அமிர்த தெரிசன மின்றெனின் புசிப்பது யாங்கணம். கிருபை செய்வாயாக.

**7. சாந்தியினை நேராக வுடைய நல்ல**
**சடகோபர் பராவமிர்தைத் தாமே யுண்டு**
**தீந்தமிழென் றொருகோடி வேத மாகச்**
**செய்யதிரு வாய்மலர்ந்தார் தேர மாட்டோம்.**

| | |
|---|---|
| சாந்தியினை நேராக உடைய நல்ல சடகோபர் | பொறுமை முதலிய குணங்களை சாட்சாத்தாக பொருந்திய (அவைகளின் வடிவமேயாக) சிறந்த சடகோபாழ்வார் என்னும் நம்மாழ்வார் (பிறந்ததும் சட சொரூபமாய தேகாதிப் பிரபஞ்சங்களை துச்சமெனக் கண்டகற்றியதால் சடகோபரென்னும் சர்வ மத சம்மத முடையவராதலால்எல்லோராலும் நம்மாழ்வாரென்னும் காரணப் பெயர் வாய்ந்த பெரியார்) |
| பராவமிர்தைத் தானேயுண்டு | பேரானந்த பெரு வாழ்வை தான் தானே அநுபவித்து |
| ஒரு கோடி பாசுரம் யென்று | அநேக சாகைகளோடு கூடியுள்ளன வென்று சொல்லும்படி |
| தீந்தமிழ் | செந்தமிழ் |
| வேதமாக | தமிழ் வேதமாக திருவாய்மொழியென்னும் நூலை |
| செய்ய | நன்றாக |
| திருவாய் மலர்ந்தார் | அருளிச் செய்தார். |
| தேரமாட்டோம் | நாங்கள் அதனால் தெளிவடைய மாட்டோம். நாங்களும் பாடும் வண்ணம் போதாமிர்தம் ஈய வேண்டும். |

பொறுமை முதலிய குணங்களை சாட்சாத்தாக பொருந்திய (அவைகளின் வடிவமேயாக) சிறந்த சடகோபாழ்வார் என்னும் நம்மாழ்வார் (பிறந்ததும் சட சொரூபமாய தேகாதிப் பிரபஞ்சங்களை துச்சமெனக் கண்டகற்றியதால் சடகோபரென்னும் சர்வ மத சம்மத முடையவராதலால்எல்லோராலும் நம்மாழ்வாரென்னும் காரணப் பெயர் வாய்ந்த பெரியார்) பேரானந்த பெரு வாழ்வை தான் தானே அநுபவித்து அநேக சாகைகளோடு கூடியுள்ளன வென்று சொல்லும்படி செந்தமிழ் தமிழ் வேதமாக திருவாய்மொழியென்னும் நூலை நன்றாக அருளிச் செய்தார். நாங்கள் அதனால் தெளிவடைய மாட்டோம். நாங்களும் பாடும் வண்ணம் போதாமிர்தம் ஈய வேண்டும்.

**8. சீவாக்கர் முதலாக முன்னந் தாந்தாஞ்**
**செய்தகாக் கியத்தானித் தியக்கந் தீர்ந்தார்**

**நீபார்க்கப் பட்டவரே கண்டா யெங்க**
**ணிர்ப்பாக்கி யத்தையினி நீங்கப் பாராய்.**

| | |
|---|---|
| சீவாக்கர் முதலாக | சிவ வாக்கியர் திருமழிசையாழ்வார் என்றும் செந்நாப் புலவர் என்றும் கும்பகோண சமீபமுள்ள குருக் குடந்தை க்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ள ஆராவமுதப் பிரானிடம் தெரிசிக்க சென்ற காலம் சுவாமிக்குத் திருமழிசை பிரானென்னும் இவருக்கு ஆராவமுத ஆழ்வாரென்றும் சொல்லப் பட்டது. இத்யாதி சிறப்பு நாமங்களோடு கூடிய அவரது மாணாக்கர் கணிகண்ணண் முதலிய பெரியாரே |
| முன்னர்தாம் செய்த பாக்கியத்தால் | முன்னம் கீழ்போன அனேக ஜனனங்களில் செய்துவந்த நிஷ்காமிய புண்ணிய புஞ்ச பரிபாக பலத்தினால் |
| இத்தியக்கந்தீர்ந்தார் | இந்த சம்சார மயக்கத்தினின்றும் நீங்கினார்கள் (நிவர்த்தியடைந்தனர்) |
| நீ பார்க்கப் பட்டவரே கண்டாய் | தேவரீரது கிருபா வீட்சன்யத்தினாலல்லவா (உனது பூர்ண அனுக்கிரஹத்தையடைவர்.) ஆகையினாலே |
| எங்கள் நிர்ப்பாக்கியத்தை | எங்களது பாக்கியமின்றி, அபாக்கியமான நிலையையும் |
| நிங்கப்பாராய் | நீங்கும்படி கிருபை பாவிப்பாய். |

சிவ வாக்கியர் திருமழிசையாழ்வார் என்றும் செந்நாப் புலவர் என்றும் கும்பகோண சமீபமுள்ள குருக் குடந்தை க்ஷேத்திரத்தில் எழுந்தருளியுள்ள ஆராவமுதப் பிரானிடம் தெரிசிக்க சென்ற காலம் சுவாமிக்குத் திருமழிசை பிரானென்னும் இவருக்கு ஆராவமுத ஆழ்வாரென்றும் சொல்லப் பட்டது. இத்யாதி சிறப்பு நாமங்களோடு கூடிய அவரது மாணாக்கர் கணிகண்ணண் முதலிய பெரியாரோ முன்னம் கீழ்போன அனேக ஜனனங்களில் செய்துவந்த நிஷ்காமிய புண்ணிய புஞ்ச பரிபாக பலத்தினால் இந்த சம்சார மயக்கத்தினின்றும் நீங்கினார்கள் (நிவர்த்தியடைந்தனர்) தேவரீரது கிருபா வீட்சன்யத்தினாலல்லவா (உனது பூர்ண அனுக்கிரஹத்தையடைவர்.) ஆகையினாலே எங்களது பாக்கியமின்றி, அபாக்கியமான நிலையையும் நீங்கும்படி கிருபை பாவிப்பாய்.

**9. முத்திவரும் படியன்றி முற்றுடலம் விடுமளவுங்**
**கத்திவரும் படியாகக் கற்பித்தா யெங்களையே.**

| | |
|---|---|
| முக்தி வரும் படியன்றி | ஆனந்த நிவர்த்தி ஆனந்தப் பிராப்தி ரூபமான மோக்ஷ சாதனங்களை அனுஷ்டிப்பதை (விடுத்து) அல்லாமல் |
| உடலம் விடு மளவும் | சரீர பரித்யாகம் வரையும் யாவையும் |
| முற்று | (எவையும்) |

| | |
|---|---|
| கத்தி வரும்படியாகக் கற்பித்தாய் | யானேசெய்கின்றனன். சுக துக்கங்கள் என் செய்வேன் என்று) பிதற்றித் திரியும் வண்ணம் சிருட்டித்தனை |
| எங்களையே | அடியேங்களை. |

ஆனந்த நிவர்த்தி ஆனந்தப் பிராப்தி ரூபமான மோக்ஷ சாதனங்களை அனுஷ்டிப்பதை (விடுத்து) அல்லாமல் சரீர பரித்யாகம் வரையும் யாவையும் (எவையும்) யானேசெய்கின்றனன். சுக துக்கங்கள் என் செய்வேன் என்று) பிதற்றித் திரியும் வண்ணம் சிருட்டித்தனை அடியேங்களை.

**10. ஆராத வூணுண்டுன் னடியகலும் வகையெமக்குத்**
**தூராத குழிதூர்க்கை தொழிலாகச் செய்தனையே.**

| | |
|---|---|
| உன்னடி அகலும் வகை | தேவரீரது திருவடியை(சொரூபத்தை) மறந்திருக்கும் வண்ணம் (நீங்கியிருக்கும் படிக்கு) |
| ஆராத ஊணுண்டு | போதுமென்று திருப்தியின்றிய உணவாதிகளைப் புசித்து |
| தூராத குழி தூர்க்கை | நிரம்பாத வயிற்றுப் பள்ளத்தை நிரப்புதலையே |
| எமக்கு | எங்களுக்கு |
| தொழிலாகச் செய்தனையே | வேலையாக அமர்த்தினையே. ஆகையால் இனியாவது தேவரீரது திருவடியை பூஜிக்கும் வண்ணம் கிருபை பாலிப்பீராக. |

தேவரீரது திருவடியை(சொரூபத்தை) மறந்திருக்கும் வண்ணம் (நீங்கியிருக்கும் படிக்கு) போதுமென்று திருப்தியின்றிய உணவாதிகளைப் புசித்து நிரம்பாத வயிற்றுப் பள்ளத்தை நிரப்புதலையே எங்களுக்கு வேலையாக அமர்த்தினையே. ஆகையால் இனியாவது தேவரீரது திருவடியை பூஜிக்கும் வண்ணம் கிருபை பாலிப்பீராக.

**11. பாகாய மொழியாயிப் படுதுயர மொருகாலும்**
**போகாத வுடலம்வெறும் பொய்யாலே செய்தனையே**

| | |
|---|---|
| பாகாய | வெல்லப் பாகுக்குச் சமானமாகிய |
| மொழியாய் | இன்சொற்களையுடைய தேவியே |
| இப் படு துயரம் போகாத வுடலம் | இப்போது அனுபவிக்கும் இந்த ஜனனமும் மரணமும் இடை துன்பமும் அவையாவும் ஒருபோதும் நீங்காத |
| வெறும் பொய்யாலே செய்தனையே | சரீரத்தை அத்தியந்தம் கற்பிதமாகத்தானே தந்தனையே. இனியாவது இப்பிறவியை யொழிப்பீராக. |

வெல்லப் பாகுக்குச் சமானமாகிய இன்சொற்களையுடைய தேவியே இப்போது அனுபவிக்கும் இந்த ஜனனமும் மரணமும் இடை துன்பமும் அவையாவும் ஒருபோதும்

நீங்காத சரீரத்தை அத்தியந்தம் கற்பிதமாகத்தானே தந்தனையே. இனியாவது இப்பிறவியை யொழிப்பீராக.

**12. உங்கட்குத் தகுமிதுவென் றுள்ளபடி யுனையுணரா
வெங்கட்கு வடிவுவெறு மிடும்பையினா லெடுத்தனையே**

| | |
|---|---|
| உள்ளபடி உனை உணரா எங்கட்கு | யதார்த்தமாகத் தேவரீரை அறியாத எங்களுக்கு என்னை நினையாத |
| உங்கட்கு தகும் இது வென்று | உங்களுக்கு இப்படித் தான் வேண்டும் ஜனித்தல் மறித்தலாகிய இத்துன்பமடைதல் தகும் தகும் என்று |
| வடிவை | சரீரத்தை |
| வெறும் இடும்பையினால் | அத்தயந்தம் துக்கத்தோடுகூட |
| எடுத்தனையே | எடுப்பித்தனையே இனி உன்னை நினையா பெரும்பிழையைப் பொறுத்து க்ஷமை செய்வாயாக. |

யதார்த்தமாகத் தேவரீரை அறியாத எங்களுக்கு என்னை நினையாத உங்களுக்கு இப்படித் தான் வேண்டும் ஜனித்தல் மறித்தலாகிய இத்துன்பமடைதல் தகும் தகும் என்று சரீரத்தை அத்தயந்தம் துக்கத்தோடுகூட எடுப்பித்தனையே இனி உன்னை நினையா பெரும்பிழையைப் பொறுத்து க்ஷமை செய்வாயாக.

**13. இப்பரிசே பலவியம்பி யிலகுமொரு பேயினையுன்
மெய்பரிசே விளைந்தகுறி விண்ணப்பஞ் செய்கெனவே.**

| | |
|---|---|
| இப்பரிசே பல வியம்பி | இவ்விதம் நாநாவிதமாக முறையிட்டு |
| இலகும் ஒரு பேயினை | தலைமையாக விளங்கும் ஒரு முமுட்சுப் பிசாசை |
| உன் மெய்ப் பரிசே | உனது சரீரத்தின் கண்ணே |
| குறி விண்ணப்பம் செய்க எனவே | உண்டாய (மோட்ச சித்தி உண்டாகும் என்னும் நிச்சயத்தை அறிவிக்கும்) இலக்கணங்களை சொல்லும் பார்ப்போமென்று தேவி வினவ பேய் முறைப்பாடு முற்றிற்று. |

இவ்விதம் நாநாவிதமாக முறையிட்டு தலைமையாக விளங்கும் ஒரு முமுட்சுப் பிசாசை உனது சரீரத்தின் கண்ணே உண்டாய (மோட்ச சித்தி உண்டாகும் என்னும் நிச்சயத்தை அறிவிக்கும்) இலக்கணங்களை சொல்லும் பார்ப்போமென்று தேவி வினவ பேய் முறைப்பாடு முற்றிற்று.

************

# 14. குறி

**1. அடியறிகின் றிலனடியே னறிவதொரு குறியல்ல**
**குடிபறியும் படிவந்து தோன்றியதோர் குறியுண்டே.**

| | |
|---|---|
| அடியறிகின்றிலன் அடியேன் | திருவடியைக் காண்கின்றிலன்(இருந்தாலும்) அதனைக் காண்குதற்கு நாயினுங் கடையேனாகிய அடியேன் |
| அறிவதொரு குறியல்ல | காண்பது ஒரு இலக்கணமல்ல (ஒரு அடையாளமன்று) (பல குறிகளைக் காண்கின்றனன்). |
| குடி அறியும் படி | அவைகளில் சம்கார தொம்சமாகும்படி |
| வந்து தோன்றியதோர் குறியுண்டே | உண்டாகிக் காணப்படும் ஓர் சகுணக் குறி இச்சை இருக்கிறது. |

திருவடியைக் காண்கின்றிலன்(இருந்தாலும்) அதனைக் காண்குதற்கு நாயினுங் கடையேனாகிய அடியேன் காண்பது ஒரு இலக்கணமல்ல (ஒரு அடையாளமன்று) (பல குறிகளைக் காண்கின்றனன்). அவைகளில் சம்கார தொம்சமாகும்படி உண்டாகிக் காணப்படும் ஓர் சகுணக் குறி இச்சை இருக்கிறது.

**2. பூண்கின்ற வுடலாதி யாமிந்தப் புவநத்திற்**
**காண்கின்ற பொருளெல்லாங் கனவாகக் கண்டனனே**

| | |
|---|---|
| பூண்கின்ற உடலாதியாம் இந்தப் புவனத்தில் | பொருந்தியுள்ள தேக முதலிய இந்தப் பிரபஞ்சத்தில் |
| காண்கின்ற பொருளெல்லாம் | என்னாலறியப்படும் வஸ்து வனைத்தையும் |
| கனவாகக் கண்டனனே | சொப்பன துல்யமென்று காண்கின்றேன். இப்படி மித்தையாகக் காண்பதால் வாசனையின்றி நிர்வாசனையாய மோக்ஷ சித்தியுண்டாகும் என தேவரீர்பால் சரணாகதி அடைந்தேன். |

பொருந்தியுள்ள தேக முதலிய இந்தப் பிரபஞ்சத்தில் என்னாலறியப்படும் வஸ்து வனைத்தையும் சொப்பன துல்யமென்று காண்கின்றேன். இப்படி மித்தையாகக் காண்பதால் வாசனையின்றி நிர்வாசனையாய மோக்ஷ சித்தியுண்டாகும் என தேவரீர்பால் சரணாகதி அடைந்தேன்.

**3. உடலை யொன்றிய வுயிர்வி டும்பொழு துணர்வ தன்றியிலே**

**நடலை கொண்டுட னழுவல் கண்டுள நடுந டுங்கிடுமே.**

| | |
|---|---|
| உடலை ஒன்றிய உயிர் விடும் பொழுது | உடலின்கண் ததாமியாக பொருந்தும் பிராணன் நீங்குங் காலத்து உண்டாகும் |
| உணர்வதன்றியில் | விவேக புத்தியல்லாமல் சர்வகாலமும் |
| நடலை கொண்டு | சலித்துக் கொண்டு |
| உடல் நழுவல் | தேகங்கள் நழுவுவதைக் |
| கண்டு உளம் | கண்டு மனமானது |
| நடு நடுங்கிடுமே | நடுநடுங்கிக் கொண்டிருக்கும். |

உடலின்கண் ததாமியாக பொருந்தும் பிராணன் நீங்குங் காலத்து உண்டாகும் விவேக புத்தியல்லாமல் சர்வகாலமும் சலித்துக் கொண்டு தேகங்கள் நழுவுவதைக் கண்டு மனமானது நடுநடுங்கிக் கொண்டிருக்கும்.

**4. அழியு மென்றம ருலகி லின்பமி தமையு மென்றிடுமே**
**கழியு மென்றம ருலக மென்பது கருது கின்றிலமே.**

| | |
|---|---|
| உலகில் அமர் இன்பம் அழியுமென்று | இவ்வுலகத்திற் பொருந்திய சிற்குச்சந்தன வனிதையாதி போகங்களால் உளவாகும் ஆனந்தம் நாசமாகும் எனக்கருதி |
| இது அமையு மென்றிடுமே | இது போதும் போதும் இனி வேண்டாம் எனச் சொல்லும். |
| அமர் உலக மென்பது கழியுமென்று கருது கின்றிலமே | இதுபோலவே தேவலோகத்தின்கண் உள்ள அப்சர ஸ்த்ரீ அமிர்தாதி போகங்களும் கர்ம ஜன்னியமானதால் அவசியம் நாசமாகும் எனச் சொப்பனத்திலுங்கூட நினைக்க மாட்டோம். இதுவெல்லாம் மோக்ஷ சாதனமாகத் தோற்றுதலால் அவசியம் சுயராஜ்ய சித்தி உண்டாகும் என மகிழ்வுறுகிறோம். |

இவ்வுலகத்திற் பொருந்திய சிற்குச்சந்தன வனிதையாதி போகங்களால் உளவாகும் ஆனந்தம் நாசமாகும் எனக்கருதி இது போதும் போதும் இனி வேண்டாம் எனச் சொல்லும். இதுபோலவே தேவலோகத்தின்கண் உள்ள அப்சர ஸ்த்ரீ அமிர்தாதி போகங்களும் கர்ம ஜன்னியமானதால் அவசியம் நாசமாகும் எனச் சொப்பனத்திலுங்கூட நினைக்க மாட்டோம். இதுவெல்லாம் மோக்ஷ சாதனமாகத் தோற்றுதலால் அவசியம் சுயராஜ்ய சித்தி உண்டாகும் என மகிழ்வுறுகிறோம்.

**5. சமத மங்களை முதல்வ ருஞ்சில தலைமை வந்திடுமே**
**மமதை கொண்டிது நமதெ னும்பெரு மயன்ம டங்கிடுமே.**

| | |
|---|---|
| சம தமங்களை முதல் வரும் சில தலைமை வந்திடுமே | சமம், தமம், விடல் சகித்தல், சமாதானம், சிரத்தை யென்னும் சமாதி ஷட்க சம்பத்தியையும், அதற்கு முதலாவதாக வரும் சிற்சில அதாவது இயம, நியமாதியும், நிஷ்காம கர்மம்,சித்த சுத்தி, விவேகம், விராகம் முதலிய இவைகள் அக்ரகண்யமாக வந்துள்ளது. அல்லது சம தமங்களை முதலாவதாகவும் பின்வரும் உபரதி, திதீக்ஷை, சமாதானம், சிரத்தை, முமுட்சுத்வம், குருசேவை, அத்யாத்ம சிரவணம் இவை முதலிய சில உத்க்ருஷ்டமான சாதனங்கள் வந்து கொண்டே யிருக்கின்றன. ஆதலால் அவசியம் மோக்ஷமுண்டாம். இது ஒரு குறியாம். |
| மமதை கொண்டு | என்னுடையதென அபிமானித்து |
| இது நமதெனும் | இது நம்முடையதென்று சொல்லும் |
| பெருமயல் | பெருமயக்கமானது |
| மடங்கிடுமே | உபரமமடையும்.(நாசமடைந்திருக்கிறது). |

சமம், தமம், விடல் சகித்தல், சமாதானம், சிரத்தை யென்னும் சமாதி ஷட்க சம்பத்தியையும், அதற்கு முதலாவதாக வரும் சிற்சில அதாவது இயம, நியமாதியும், நிஷ்காம கர்மம்,சித்த சுத்தி, விவேகம், விராகம் முதலிய இவைகள் அக்ரகண்யமாக வந்துள்ளது. அல்லது சம தமங்களை முதலாவதாகவும் பின்வரும் உபரதி, திதீக்ஷை, சமாதானம், சிரத்தை, முமுட்சுத்வம், குருசேவை, அத்யாத்ம சிரவணம் இவை முதலிய சில உத்க்ருஷ்டமான சாதனங்கள் வந்து கொண்டே யிருக்கின்றன. ஆதலால் அவசியம் மோக்ஷமுண்டாம். இது ஒரு குறியாம். என்னுடையதென அபிமானித்து இது நம்முடையதென்று சொல்லும் பெருமயக்கமானது உபரமமடையும்.(நாசமடைந்திருக்கிறது).

**6. அழிவ றும்பொருள் பொருளெ னும்படி யறுதி வந்திடுமே**
**யொழிவ றும்பொரு ளுணர்வ தென்றிடு முணர்வு வந்திடுமே.**

| | |
|---|---|
| அழிவுறும் பொருள் பொருளெனும்படி | நாச ரகிதமான பரம் பொருளே பொருளாம். என்று சொல்லும்படி |
| அறுதி வந்திடுமே | நிச்சயம் வந்திருக்கின்றது. (முமுட்சுத்வம்) |
| யொழிவரும் பொருள் | நீக்கமின்றி பரிபூரணமாயுள்ள வஸ்துவே |
| உணர்வது என்றிடும் | அறியத் தக்கது என்று சொல்லும் |
| உணர்வு வந்திடுமே | முமுட்சுத்வம் வந்துள்ளது. இதுகளெல்லாம் மோக்ஷ நிச்சயித்தல் குறிகளாம். |

நாச ரகிதமான பரம் பொருளே பொருளாம். என்று சொல்லும்படி நிச்சயம் வந்திருக்கின்றது. (முமுட்சுத்வம்) நீக்கமின்றி பரிபூரணமாயுள்ள வஸ்துவே அறியத்

தக்கது என்று சொல்லும் முமுட்சுத்வம் வந்துள்ளது. இதுகளெல்லாம் மோக்ஷ நிச்சயித்தல் குறிகளாம்.

**7. தெருளுறுங்கலை பலவு ணர்ந்தொரு சிறித லம்பிறவா**
**வருளுறுங்குரு பரனி ருந்திட மறிய வென்றெழுமே**

| | |
|---|---|
| தெருளுங் கலை பல உணர்ந்து | ஞான சாஸ்திரங்களில் அசேஷ பாண்டித்யமுடையவராய் |
| ஒரு சிறிது அலம் பிறவா | ஒரு சிறிதேனும் சொரூபத்தினின்றும் சஞ்சலியமின்றி (பிரம நிஷ்டையுடையவராய், |
| அருள் உரும் | ஜீவ காருண்யம், ஈசுவர பக்தி, பாச வைராக்கியம், பிரம ஞானம் எனும் நான்கும் திருவுருவாகப் பொருந்திய |
| குருபரனிருந்திடம் | ஆசாரியன் வசிக்கும் அமல ஆரண்யத்தை நாடி நமது தாபத்திரையங்களைச் சாந்தி செய்யும் குருபரன் எங்குளன்? அவரைத் தெரிந்து சரணாகதி அடைவேன் என்று அதிவிரைவாகச் செல்வன். குருபரன் வசிக்கும் இருப்பிடத்தை நாடி அவரது சன்னிதியில் |
| அறிய என்று | எனது நிஜ சொரூபத்தைத் தெரிந்துகொள்வேன் என |
| எழும் | அதிவிரைவாகத்தானே எழுந்து செல்வன். |

ஞான சாஸ்திரங்களில் அசேஷ பாண்டித்யமுடையவராய் ஒரு சிறிதேனும் சொரூபத்தினின்றும் சஞ்சலியமின்றி (பிரம நிஷ்டையுடையவராய், ஜீவ காருண்யம், ஈசுவர பக்தி, பாச வைராக்கியம், பிரம ஞானம் எனும் நான்கும் திருவுருவாகப் பொருந்திய ஆசாரியன் வசிக்கும் அமல ஆரண்யத்தை நாடி நமது தாபத்திரையங்களைச் சாந்தி செய்யும் குருபரன் எங்குளன்? அவரைத் தெரிந்து சரணாகதி அடைவேன் என்று அதிவிரைவாகச் செல்வன். குருபரன் வசிக்கும் இருப்பிடத்தை நாடி அவரது சன்னிதியில் எனது நிஜ சொரூபத்தைத் தெரிந்துகொள்வேன் என அதிவிரைவாகத்தானே எழுந்து செல்வன்.

**8. அழுத கண்களு முருகு நெஞ்சமு மலரு மன்புவிடா**
**தெழுத ரும்படி மொழிதலிங்கரி திதுசெ யுங்குறியே**

| | |
|---|---|
| அழுத கண்களும் | நீர் சோரும் கண்களும், |

| | |
|---|---|
| உருகு நெஞ்சமும் | கசிந்துருகும் மனமும், |
| அலரும் அன்பும் | விரிந்த பக்தியும் |
| விடாது எழுதரும்படி | நீங்காமல் உண்டாகும் வண்ணம் |
| இது செயுங் குறி | இது செய்யுங் குறிகளை |
| இங்கு மொழிதல் அரிது | ஈண்டு கூறுதற்கு அரியதாம். இப்படி மோக்ஷம் உண்டாகும் என்பதில் அனந்தங் குறிகள் எம்மிடத்துக் காணப் படுகின்றன.(இதைப் பார்த்து) |

நீர் சோரும் கண்களும், கசிந்துருகும் மனமும், விரிந்த பக்தியும் நீங்காமல் உண்டாகும் வண்ணம் இது செய்யுங் குறிகளை ஈண்டு கூறுதற்கு அரியதாம். இப்படி மோக்ஷம் உண்டாகும் என்பதில் அனந்தங் குறிகள் எம்மிடத்துக் காணப் படுகின்றன.(இதைப் பார்த்து)

**9. அளியு நெஞ்சுடை யடிய ரிங்கிவை யழகி தென்றனரே**
**தெளிவை யின்றிய வலகை யுஞ்சில திகைம யங்கினவே**

| | |
|---|---|
| அளியு நெஞ்சுடை அடியர் | அன்பு நிறைந்த மனதையுடைய அடியார்கள் |
| இங்கு இவை அழகிதென்றனர் | ஈண்டு இந்தக் குறிகள் மிக அழகாம் என்று சொல்கிறார்கள். |
| சில தெளிவையின்றிய அலகையும் | சில அறியாமையோடு கூடிய பிசாசுக்களோவெனின் |
| திகை மயங்கினவே | நமக்குமிப்படி வரவில்லையேயென்று மயங்குகின்றனவாம். |

அன்பு நிறைந்த மனதையுடைய அடியார்கள் ஈண்டு இந்தக் குறிகள் மிக அழகாம் என்று சொல்கிறார்கள். சில அறியாமையோடு கூடிய பிசாசுக்களோவெனின் நமக்குமிப்படி வரவில்லையேயென்று மயங்குகின்றனவாம்.

**10. அழகி தென்றிடு மதுகொ டுஞ்சில வழகி தென்றனவே**
**பழகி வந்ததொர் பரிச யங்கொடு பலப யந்தனவே.**

| | |
|---|---|
| அழகிதென்றிடும் அது கொடுஞ்சில | அழகென்று சொல்லும் மேலே கூறிய குறிகளைக் கொண்டு சில பிசாசுக்கள் |
| அழகு இது என்றன | இது மிக அழகாம் என்றனவாம். |

| | |
|---|---|
| ஓர் பரிசயங் கொடு பல | மேலே கூறிய குறிகளைப் பழகி வரும் ஒரு தன்மையைக் கொண்டு பல பிசாசுக்கள் |
| பயந்தன | நாம் எப்போது எவ்வாறு இக்குறிகளைச் சம்பாதிப்போம் என்று பயப்படுகின்றனவாம். |

அழகென்று சொல்லும் மேலே கூறிய குறிகளைக் கொண்டு சில பிசாசுக்கள் இது மிக அழகாம் என்றனவாம். மேலே கூறிய குறிகளைப் பழகி வரும் ஒரு தன்மையைக் கொண்டு பல பிசாசுக்கள் நாம் எப்போது எவ்வாறு இக்குறிகளைச் சம்பாதிப்போம் என்று பயப்படுகின்றனவாம்.

*************

# 15. விசேஷப் பேய் வரவு

**1. வெருவ ருந்திற னுரைசெய் தங்கடி வீழ்வு றும்பொழுதே**
**குருப ரன்பொரு களமறிந்தொரு குணலை வந்ததுவே**

| | |
|---|---|
| வெருவரும் திறம் உரை செய்து | இந்த விதம் சாமானியப் பிசாசுக்கள் தாங்கள் சம்சார தாபத்தினால் பயப்படுந் தன்மையைக் கூறி, |
| அங்கு அடி வீழ்வுறும் போது | அத்தேவியினது திருவடியில் நமஸ்கரித்து வீழ்கின்ற காலத்து |
| குருபரன் பொரு கள மறிந்து | குருமூர்த்தியினது யுத்த களமாய மோக்ஷ சொரூபத்தில் அஞ்ஞனது வரவு நாசத்தை (இருப்பு இன்மையை) அறிந்து |
| குணலை | ஒரு விசேஷப் பேய் |
| வந்ததுவே | ஆண்டு வந்தது. |

இந்த விதம் சாமானியப் பிசாசுக்கள் தாங்கள் சம்சார தாபத்தினால் பயப்படுந் தன்மையைக் கூறி, அத்தேவியினது திருவடியில் நமஸ்கரித்து வீழ்கின்ற காலத்து குருமூர்த்தியினது யுத்த களமாய மோக்ஷ சொரூபத்தில் அஞ்ஞனது வரவு நாசத்தை (இருப்பு இன்மையை) அறிந்து ஒரு விசேஷப் பேய் ஆண்டு வந்தது.

**2. கடுக வந்திடு மலகை வெம்பவங் கருவ றும்படிநீ**
**படுக ளம்புக வினைவி ளைந்தமை பகரு கென்றலுமே**

| | |
|---|---|
| கடுக வந்திடும் அலகை | இப்படி அதிசீக்கிரமாகத்தானே அங்கு வந்த விசேஷப்பேய் (ஞான வேந்தனைப் பார்த்து) |
| வெம்பவங் கருவறும்படி | எங்களது கொடிய ஜனன மரண துன்பம் நீங்கும் வண்ணம் |
| நீர் களம் புக வென | ஞான வேந்தனாகிய தாங்கள் சொரூபமாகிய யுத்த களத்திற்கு முமுட்சுக்களே சீக்கிரம் செல்ல வேண்டும் என்று கூற |
| விளைந்தமை | ஆண்டு யாது விளைந்தது (நடந்தது) |
| பகருகென்றலுமே | அதனைக் கூறும் என்று (ஞான வேந்தன் சொன்னதும்) |

இப்படி அதிசீக்கிரமாகத்தானே அங்கு வந்த விசேஷப்பேய் (ஞான வேந்தனைப் பார்த்து) எங்களது கொடிய ஜனன மரண துன்பம் நீங்கும் வண்ணம் ஞான வேந்தனாகிய தாங்கள் சொரூபமாகிய யுத்த களத்திற்கு முமுட்சுக்களே சீக்கிரம் செல்ல வேண்டும் என்று கூற ஆண்டு யாது விளைந்தது (நடந்தது) அதனைக் கூறும் என்று (ஞான வேந்தன் சொன்னதும்)

(இங்ஙனம் ஞான வேந்தன் நடந்ததைக் கூறு என்று சொல்லிய அனந்தரம் படுகளத்தில் நடந்ததை சொன்னால் நமக்கு வாரியம் கைகூடும் என்னும் சந்தோஷப் பெருக்கால் சொல்லத் தொடங்கியது)

**3. செயிரற மிக்கதி யங்குமு டற்றுயர் சிறிதுத ணித்தெமதா**
**ருயிரைய ளித்தம ருரையுமெ னச்சில வுதடுது டித்தனவே**

| | |
|---|---|
| செயிர் | துன்பம் |
| அறமிக்க | மிக மிகவும் |
| தியங்கும் உடல்துயர் | விளையும் தேகத் துன்பத்தை (அத்யாத்மீகாதி தாபத்தை) |
| சிறிது தணித்து | கொஞ்சம் சாந்தி செய்து |
| எமது ஆருயிரை அளித்து | எங்களது பொருந்திய பிராணனை நீங்கா வண்ணம் காத்து அருளிய தங்களிடத்தில் |
| அமர் உரையும் | யுத்த களத்தைப் பற்றிக் கூறுதும் கேட்கக் கடவீர் |
| எனச் சில உதடு துடித்தன | என்று விசேஷப்பேய் முதலாக சில சொல்லத் தொடங்கியது. |

துன்பம் மிக மிகவும் விளையும் தேகத் துன்பத்தை (அத்யாத்மீகாதி தாபத்தை) கொஞ்சம் சாந்தி செய்து எங்களது பொருந்திய பிராணனை நீங்கா வண்ணம் காத்து அருளிய தங்களிடத்தில் யுத்த களத்தைப் பற்றிக் கூறுதும் கேட்கக் கடவீர் என்று விசேஷப்பேய் முதலாக சில சொல்லத் தொடங்கியது.

**4. அறுதிப டத்தெளி வளவுதெ ரித்திடு மடையவெ னாமுதுபே**
**யுறுதிப டத்தெளி வாலம ருற்றதை யுரையுமெ மக்கெனவே**

| | |
|---|---|
| அறுதிபடத் | சர்வமும் உறுதியாக |
| தெளிவளவு | அறியும் வண்ணம் |
| தெரித்திடும் அடைய | சொல்லுகிறேன் என்று விசேஷப் பேய் கூற, |
| | |
| எனாமுதுபேய் | ஞான வேந்தனாகிய எமக்கு |
| உறுதிபட | நிச்சயமுண்டாக தெளிவால் விளக்கமாக |
| அமருற்றதை | யுத்தம் வந்து பொருந்தியதை |
| உரையும் எனவே | கூறும் என ஞான வேந்தன் கூற. |

சர்வமும் உறுதியாக அறியும் வண்ணம் சொல்லுகிறேன் என்று விசேஷப் பேய் கூற, ஞான வேந்தனாகிய எமக்கு நிச்சயமுண்டாக தெளிவால் விளக்கமாக யுத்தம் வந்து பொருந்தியதை கூறும் என ஞான வேந்தன் கூற.

**5. ஐயப்பா டோகெடுவீ ரஞ்ஞனழிந் தமையின்னம்
வையத்தே வந்ததுநான் மறைதேடும் பொருள்காணும்.**

| | |
|---|---|
| நான்மறை தேடும் பொருள் | தேவாதிகளாலும் தேடு (சொல்லு)தற்கரிய பரவஸ்துவே |
| வையத்தே வந்து | இப்பூமியின்கண் குருமூர்த்தமாக வந்திருக்கிறதென்றால் |
| இன்னம் அஞ்ஞனழிந்தமை | பரம்பொருள் குருவாய் வந்ததும் கூட இன்னமும் அஞ்ஞன் தொம்சமானான் |
| ஐயப்பாடோ | என்பது சம்சயமோ. |
| கெடுவீர் | அச்சமுசயத்தை அடையாதீர். (அச்சமுசயமிருந்தால் சம்சயாத்மா விநஸ்யதி என்றாற்போல் முமுட்சுக்களே கெட்டு விடுவீர். ஆனதால் அச்சமுசயத்தை நீங்கள் அடையாதீர்கள்). |
| காணும் | இதனை நன்கு விசாரித்துப் பார்ப்பீர்களாக. |

தேவாதிகளாலும் தேடு (சொல்லு)தற்கரிய பரவஸ்துவே இப்பூமியின்கண் குருமூர்த்தமாக வந்திருக்கிறதென்றால் பரம்பொருள் குருவாய் வந்ததும் கூட இன்னமும் அஞ்ஞன் தொம்சமானான் என்பது சம்சயமோ. அச்சமுசயத்தை அடையாதீர். (அச்சமுசயமிருந்தால் சம்சயாத்மா விநஸ்யதி என்றாற்போல் முமுட்சுக்களே கெட்டு விடுவீர். ஆனதால் அச்சமுசயத்தை நீங்கள் அடையாதீர்கள்). இதனை நன்கு விசாரித்துப் பார்ப்பீர்களாக.

**6. பசியும்போ முங்கள்பெரும் பாவமும்போ மிப்பத்துத்
திசையும்போய் முடிந்தபடு களத்தினொரு தினைத்துணையில்**

| | |
|---|---|
| இப் பத்துத் திசையும் போய் முடிந்த படு களத்தினொடு தினைத் துணையில் | இந்தப் பத்துத் திக்கையும் அதிக்கிரமித்திருக்கும் (தனது) ஏக தேசத்திற் கொண்டுள்ள மோக்ஷ சொரூபத்தில் உள்ள ஆனந்தத்தில் |
| பசியும் போம் உங்கள் பெரும் பாவமும் போம் | ஒரு தினையளவு புசித்தாலே ஜனன மரண வியாதிகளே அற்று விடுகிறபடியால், பசி எங்குளது ? பாவம் எங்குளது ? சர்வமும் நசித்து விடும். |

இந்தப் பத்துத் திக்கையும் அதிக்கிரமித்திருக்கும் (தனது) ஏக தேசத்திற் கொண்டுள்ள மோக்ஷ சொரூபத்தில் உள்ள ஆனந்தத்தில் ஒரு தினையளவு புசித்தாலே ஜனன மரண வியாதிகளே அற்று விடுகிறபடியால், பசி எங்குளது ? பாவம் எங்குளது ? சர்வமும் நசித்து விடும்.

**7. பல்லாயி ரத்தாண்டு பலகோடி யண்டத்தா**
**ரெல்லாரு முண்டாலு மித்தனை யுங்குறையாதே**

| | |
|---|---|
| பல்லாயிரத்தாண்டு பல கோடி அண்டத்தார் எல்லாரும் | ஆனதினாலே பல்கோடி வருஷங்களாக பலகோடி அண்டங்களிலுள்ள சர்வ ஜீவர்களும் |
| உண்டாலும் | புசித்தாலும் |
| இத்தனையும் | இவ்வளவேனும் (அணுக்கூட) |
| குறையாதே | குறையாது. (சர்வத்திற்கும் இவ்வானந்தம் வடிவமாகவே நிற்றலால் புசிப்பானே இன்று) |

ஆனதினாலே பல்கோடி வருஷங்களாக பலகோடி அண்டங்களிலுள்ள சர்வ ஜீவர்களும் புசித்தாலும் இவ்வளவேனும் (அணுக்கூட) குறையாது. (சர்வத்திற்கும் இவ்வானந்தம் வடிவமாகவே நிற்றலால் புசிப்பானே இன்று)

**8. பாருண்ட மாலுண்டென் படைப்பவனோ டரனுண்டெ**
**னாருண்டெ னாரொழிந்தெ னருகாது பெருகாது**

| | |
|---|---|
| பாருண்ட மால் உண்டு என்(ன ?) | பூமியையுண்ட திருமால் புசித்தாலும் குறையாது. |
| படைப்பவனோடு அரனுண்டென் | பிரம்மாவும் சங்கரனும் புசித்தால்தான் என்ன குறையுமோ ? |
| ஆருண்டென் | யார் புசித்தாலென்ன ? |
| ஆரொழிந்தென் | யார் புசியாவிட்டால் தான் என்ன ? |
| அருகாது பெருகாது | புசித்தலால் குறைதலும், புசிக்காவிட்டால் பெருகுதலும் கூடாது. |

பூமியையுண்ட திருமால் புசித்தாலும் குறையாது. பிரம்மாவும் சங்கரனும் புசித்தால்தான் என்ன குறையுமோ ? யார் புசித்தாலென்ன ? யார் புசியாவிட்டால் தான் என்ன ? புசித்தலால் குறைதலும், புசிக்காவிட்டால் பெருகுதலும் கூடாது.

**9. ஒழிந்து போன காணு மஞ்ஞ னாமமென்று ரைக்கவே**
**மொழிந்த வாயை யோடிவந்து முத்த முண்டு நிற்குமே.**

| | |
|---|---|
| அஞ்ஞ நாமம் ஒழிந்து போன காணும் என்று உரைக்கவே | அஞ்ஞான வேந்தன் பேர் கூட இல்லாமல் நசித்துப் போயினன் என்று சொன்னதும் |
| மொழிந்த வாயை | அப்படிக் கூறிய அந்த வாயினை |
| ஓடி வந்து | அதிசீக்கிரமாகத்தானே வந்து |

| | |
|---|---|
| முத்தம் உண்டு நிற்குமே | முத்தமிட்டு நிற்குமாம். |

அஞ்ஞான வேந்தன் பேர் கூட இல்லாமல் நசித்துப் போயினன் என்று சொன்னதும் அப்படிக் கூறிய அந்த வாயினைஅதிசீக்கிரமாகத்தானே வந்து முத்தமிட்டு நிற்குமாம்.

**10. தொல்லை யுள்ள பரிசு சொன்ன சுருதி யைக்கொண் டாடுமே**
**யில்லை யென்ற பேயின்வாயி னெரியை வையு மென்னுமே**

| | |
|---|---|
| தொல்லையுள்ள பரிசு | அநாதியாக உள்ள வஸ்து தன்மையைக் |
| சொன்ன சுருதியைக் கொண்டாடுமே | கூறிய வேதத்தைப் புகழுமாம். |
| இல்லை என்ற பேயின் | சுருதிப் பிரமானத்தை இல்லை என்று சொல்லிய பேயினது |
| வாயின் | வாயில் |
| எரியை வையும் என்னவே | நெருப்பை வையுங்கள் என்று சொல்லுமாம். |

அநாதியாக உள்ள வஸ்து தன்மையைக் கூறிய வேதத்தைப் புகழுமாம். சுருதிப் பிரமானத்தை இல்லை என்று சொல்லிய பேயினது வாயில் நெருப்பை வையுங்கள் என்று சொல்லுமாம்.

**11. மாயை நாம மஞ்ஞ னாம மாளு மாறுவந்துநம்**
**நாய னார ழித்த வாறு நவிலு கென்ன நவிலுமே.**

| | |
|---|---|
| நம் நாயனார் | நமது குருமூர்த்தி |
| வந்து | ஈண்டு எழுந்தருளி வந்து |
| மாயை நாம அஞ்ஞ நாம மாளுமாறு | மாயை என்னும் நாமமும், அஞ்ஞானம் என்னும் நாமமும் நாசமடையும்படி |
| அழித்தவாறு | யதார்த்த தத்துவத்தை உபதேசித்து நாசம் செய்த தன்மையை |
| நவிலு கென்ன | சொல்லுங்கள் என்று சொன்னவுடன் |
| நவிலுமே | சொல்லுமாம். |

நமது குருமூர்த்தி ஈண்டு எழுந்தருளி வந்து மாயை என்னும் நாமமும், அஞ்ஞானம் என்னும் நாமமும் நாசமடையும்படி யதார்த்த தத்துவத்தை உபதேசித்து நாசம் செய்த தன்மையை சொல்லுங்கள் என்று சொன்னவுடன் சொல்லுமாம்.

**12. வாயொரு கோடி கொண்டு மலரேலானு தித்த**
**முதலாக விற்றை வரையா**
**வாயிரங் கோடி கோடி மறையோதி யோதி**
**முடியாது காணு மளவே,**

| | |
|---|---|
| வாய் ஒரு கோடி கொண்டு | ஒரு கோடி வாய்கொண்டு |
| மலரோன் | பிரமன் |
| உதித்த முதலாக | உதித்த நாள் தொடங்கி |
| இற்றை வரையா | இன்று வரைக்கும் |
| ஆயிரங் கோடி கோடி மறையோதி | ஆயிரம் கோடி கோடி வேதங்கள் பிரதிபாதித்து பிரதிபாதித்து |
| காணுமளவே முடியாது | காண்பதற்கு முடியாமலிருக்கிறது. |
| காணுமளவோ | விசாரிக்குமிடத்து அல்லது பிரமம் உதித்த நாள் தொடங்கி இன்றுவரை வாய் ஒரு கோடி கொண்டு கோடானுகோடி வேதங்களைப் படித்துப் படித்தும் காண்பதற்கு முடியாமற் போனான் என்றால் அதன் பெருமையை என்னவென்று சொல்வது. |

ஒரு கோடி வாய்கொண்டு பிரமன் உதித்த நாள் தொடங்கி இன்று வரைக்கும் ஆயிரம் கோடி கோடி வேதங்கள் பிரதிபாதித்து பிரதிபாதித்து காண்பதற்கு முடியாமலிருக்கிறது. விசாரிக்குமிடத்து அல்லது பிரமம் உதித்த நாள் தொடங்கி இன்றுவரை வாய் ஒரு கோடி கொண்டு கோடானுகோடி வேதங்களைப் படித்துப் படித்தும் காண்பதற்கு முடியாமற் போனான் என்றால் அதன் பெருமையை என்னவென்று சொல்வது.

**13. ஞாநம லாத பாத முரையாடி ஞாந**
**முரையாடு காலை யரனார்**
**மோநம லாது கூற முடியாம லியாது**
**மொழியாரி தியாவர் மொழிவார்.**

| | |
|---|---|
| அரனார் | பரமேஸ்வரனே தக்ஷிணா மூர்த்தமாக எழுந்தருளி |
| ஞான மலர் பாதம் | ஞான பாதமன்றி ஏனைய (சரியை கிரியை யோகம் என்னும் திரிபாதத்தினை) கர்மம் பக்தி முதலியவற்றை உபதேசித்து |
| ஞான முரையாடு காலை | ஞானத்தை உபதேசிக்குங்கால் |
| மோன மலாது | மௌனமாக இருந்து உபதேசித்தாரேயல்லாமல் |
| கூறமுடியாமல் | வாக்கால் சொல்ல முடியாது. |

| | |
|---|---|
| யாதும் மொழியார் | ஒன்றும் பேசாது இருந்துவிட்டான் எனின் |
| இது யாவர் மொழிவார் | இந்த ஞானபாகத்தை யாவரால் கூற முடியும். |

பரமேஸ்வரனே தக்ஷிணா மூர்த்தமாக எழுந்தருளி ஞான பாதமன்றி ஏனைய (சரியை கிரியை யோகம் என்னும் திரிபாதத்தினை) கர்மம் பக்தி முதலியவற்றை உபதேசித்து ஞானத்தை உபதேசிக்குங்கால் மௌனமாக இருந்து உபதேசித்தாரேயல்லாமல் வாக்கால் சொல்ல முடியாது. ஒன்றும் பேசாது இருந்துவிட்டான் எனின் இந்த ஞானபாகத்தை யாவரால் கூற முடியும்.

**14. வாயுரை யாடு மெல்லை யலநாய னாரென்**
**மநமே புகுந்த மொழியிப்**
**பேயுரை யாடு கின்ற தெனநீர்கொ ளாது**
**பெரிதாக வுன்னு மிதுவே.**

| | |
|---|---|
| வாயுரையாடு மெல்லையல | வாக்கால் இவ்வளவாயிற்று என்று சொல்ல முடியாத அகணித குணங்கள் நிறைந்த |
| நாயனார் | குரு மூர்த்தியானவர் |
| என் மனமே புகந்த மொழி | எனது மனதின் கண் இருந்து கூறிய மொழியாம். |
| இது | இவ் வாக்கியம் |
| பேயுரை யாடுகின்றதென | பேய் பிதற்றுகிறது என்று |
| நீர் கொளாது | நீங்கள் கருதாது |
| பெரிதாக வுன்னு மிதுவே | மஹத்தாக கருதத் தக்கது |

வாக்கால் இவ்வளவாயிற்று என்று சொல்ல முடியாத அகணித குணங்கள் நிறைந்த குரு மூர்த்தியானவர் எனது மனதின் கண் இருந்து கூறிய மொழியாம். பேய் பிதற்றுகிறது என்று நீங்கள் கருதாது மஹத்தாக கருதத் தக்கது.

*********

# 16. அஞ்ஞன் சரிதை

1. **நாயக னாளு கோல வருண்மேவ நீரு**
**நலனோடு கேண்மி னெடுநா**
**ளாயக னாவென் மாயா புரமேவி நாளு**
**மரசாளு மஞ்ஞ னாளவே**

| | |
|---|---|
| ஆளும் நாயகன் | அநுக்ரஹிக்கும் குரு மூர்த்தியினது |
| கோல அருள் | வடிவாக உள்ள ஞானத்தை |
| நீரு மேவ | நீங்களும் அடையும் வண்ணம் |
| நலனோடு கேண்மின் | விருப்பத்தோடு கேளுங்கள். |
| நெடு நாளைய கனா வென் மாயா புர மேவி | நீண்ட கனா நீண்ட மனோராஜ்யம் என்னும் மாயா பட்டணத்தைப் பொருந்தி |
| நாளும் | எப்போதும் |
| அரசாளும் | அரசாண்டு வரும் |
| அஞ்ஞ னாளவே | அஞ்ஞனது காலத்தே. |

அநுக்ரஹிக்கும் குரு மூர்த்தியினது வடிவாக உள்ள ஞானத்தை நீங்களும் அடையும் வண்ணம் விருப்பத்தோடு கேளுங்கள். நீண்ட கனா நீண்ட மனோராஜ்யம் என்னும் மாயா பட்டணத்தைப் பொருந்தி எப்போதும் அரசாண்டு வரும் அஞ்ஞனது காலத்தே.

2. **மாயாபு ரத்துள்ள வலிகூறு மளவோ**
**மாதாபி தாமாது லன்றார மகவென்**
**றாயாவ ருஞ்சுற்றம் வீழ்வோர்க ளேறற்**
**காதார மேபோல வமிழ்விக்கு மகழே**

| | |
|---|---|
| மாயாபுரத்து உள்ள வலி கூறுமளவோ | மாயாபுரம் என்னும் பட்டணத்தின் கண் அஞ்ஞான மென்னும் அரசன் அரசாட்சி செய்யும் சாமர்த்தியம் சொல்ல முடியுமா. |
| மாதா பிதா மாதுலன் தாரம் மகவு என்று | தாய், தந்தை, மாமன், மனைவி, மைந்தன் என இப்படி |
| ஆயா வரும் சுற்றம் | விசாரிக்காததினால் வராநின்ற பந்துக்களானவர் |
| வீழ்வோர்கள் | சம்சாரத்தினால் சுகமென வீழும் மாந்தருக்கு |
| ஏறற்கு | (அதனின்றும்) கரையேறுதற்கு |
| ஆதாரமேபோல் | துணைபோல் இருந்து |
| அமிழ்விக்கும் | இராகாதியால் மூழ்குவிக்கும் |
| அகழே | பெரும் ஆழம் வாய்ந்த அகழியாம். |

மாயாபுரம் என்னும் பட்டணத்தின் கண் அஞ்ஞான மென்னும் அரசன் அரசாட்சி செய்யும் சாமர்த்தியம் சொல்ல முடியுமா. தாய், தந்தை, மாமன், மனைவி, மைந்தன் என இப்படி விசாரிக்காததினால் வராநின்ற பந்துக்களானவர் சம்சாரத்தினால் சுகமென வீழும் மாந்தருக்கு (அதனின்றும்) கரையேறுதற்கு துணைபோல் இருந்து இராகாதியால் மூழ்குவிக்கும் பெரும் ஆழம் வாய்ந்த அகழியாம்.

**3. இன்னானி யானின்ன னிவனென்று யர்த்தா**
**தியானென்ன தென்கின்ற பதனஞ் செய் தீசன்**
**றன்னாலு மிதுபோக விடுமாறு முடியாச்**
**சங்கற்ப மாமென்பர் சலியாத மதிலே.**

| | |
|---|---|
| இன்னான் யான் | நான் இன்ன பெயருடையன், இன்ன சாதியுடையன், நான் இன்ன வருண ஆஸ்ரமமுடையன் என்றும், |
| இன்னன் இவன் | இவாள், இன்னவராம் என்று உயருடையதாய் (கூறி), |
| யான் என்னதென்கின்ற பதனஞ் செய்து | தேகாதிகளில் யான் என்றும் மற்றவைகளில் என்னுடையதென்றும் அபிமானிக்கிற மதிலுள் மேடைசெய்து |
| ஈசன்றன்னாலும் | சாட்சாத் பரமசிவனாலும் |
| இது போக விடுமாறு | இதைத் தாண்டமுடியாத |
| முடியா | மிகவும் திடமான மதிலானது சங்கற்பமென்று கூறுவர். |

நான் இன்ன பெயருடையன், இன்ன சாதியுடையன், நான் இன்ன வருண ஆஸ்ரமமுடையன் என்றும், இவாள், இன்னவராம் என்று உயருடையதாய் (கூறி), தேகாதிகளில் யான் என்றும் மற்றவைகளில் என்னுடையதென்றும் அபிமானிக்கிற மதிலுள் மேடைசெய்து சாட்சாத் பரமசிவனாலும் இதைத் தாண்டமுடியாத மிகவும் திடமான மதிலானது சங்கற்பமென்று கூறுவர்.

**4. ஓராத வாமூடி யுணர்வென்கு டார**
**முள்ளூடொ றுத்தற்கு மொண்ணாம லியாரும்**
**பாராத பொல்லாவொ முக்காமி முக்கே**
**படைவீடு சூழப்ப டுங்காடு தானே.**

| | |
|---|---|
| ஓராது | விசாரிப்பதற்கு முடியாது |
| அவா மூடி | ஆசாபாசங்களால் மறைத்து |
| உணர்வென் குடாரம் | ஞானமென்னும் கோடாரியால் |
| உள்ளூடு ஒறுத்தற்கு ஒண்ணாமல் | வனத்துள் பிரவேசித்து சேதித்தற்கு முடியாமல், |
| யாரும் பாராத | பெரியோர்களும் சாஸ்திரங்களும் திரும்பிப் பார்ப்பதற்குச் சகியாத, |

| | |
|---|---|
| பொல்லா வொழுக்கா மிழுக்கே | கொடிதாகிய கூடா ஒழுக்கமாகிய குற்றங்களே நிறைந்த காமாதி என்னும் படைவீடுகள் சூழ்ந்துள்ள விஷயாதிகள் காடு என்று சொல்லப்படும். |

ஆசாபாசங்களால் மறைத்து ஞானமென்னும் கோடாரியால் வனத்துள் பிரவேசித்து சேதித்தற்கு முடியாமல்,பெரியோர்களும் சாஸ்திரங்களும் திரும்பிப் பார்ப்பதற்குச் சகியாத, கொடிதாகிய கூடா ஒழுக்கமாகிய குற்றங்களே நிறைந்த காமாதி என்னும் படைவீடுகள் சூழ்ந்துள்ள விஷயாதிகள் காடு என்று சொல்லப்படும்.

**5. அலகற்ற விபரீதம் விளைவிக்க வுரியா**
**ரளவற்ற படைவீர ரவர்சுற்ற முடனே**
**யுலகத்தை முழுதாளு முணர்வற்ற கெடுவா**
**னுருவத்தை யிருள்வேறொ டுவமிக்க வரிதே**

| | |
|---|---|
| அளவற்ற படைவீரர் | அளவின்றி யுத்த வீரர்கள் |
| அவர் சுற்றமுடனே | அவரவரது பந்துக்களுடன் கூடி, |
| அவகற்ற | இவ்வளவிற்றென்று கூற முடியாத |
| விபரீதம் | எதிர்மறையான விபரீதங்களை |
| விளைவிக்க | உண்டாக்க |
| உரியார் | உரியவர்களாய் ஆங்கு உள்ளனர். இவர்களோடுங்கூட |
| உலகத்தை முழுதாளும் | உலக முழுமையும் தனதாட்சியில் செலுத்தும் |
| உணர்வற்ற கெடுவான் உருவத்தை | விவேகம் சிறிதுமின்றியவனும், தனது நாசத்திற்குத் தானே உபாயம் தேடுபவனுமாய அந்த அஞ்ஞ வேந்தனது வடிவத்தை |
| இருள் வேறொடுவ மிக்க வரிதே | மழை நிசி இருளுக்குச் சமானமென்றே கூற வேண்டும். அதற்கு மாறாக வேறு உவமை கிடைப்பது துர்லபமாம். |

அளவின்றி யுத்த வீரர்கள் அவரவரது பந்துக்களுடன் கூடி, இவ்வளவிற்றென்று கூற முடியாத எதிர்மறையான விபரீதங்களை உண்டாக்க உரியவர்களாய் ஆங்கு உள்ளனர். இவர்களோடுங்கூட உலக முழுமையும் தனதாட்சியில் செலுத்தும் விவேகம் சிறிதுமின்றியவனும், தனது நாசத்திற்குத் தானே உபாயம் தேடுபவனுமாய அந்த அஞ்ஞ வேந்தனது வடிவத்தை மழை நிசி இருளுக்குச் சமானமென்றே கூற வேண்டும். அதற்கு மாறாக வேறு உவமை கிடைப்பது துர்லபமாம்.

**6. கருதுமோரு பொருளையொரு கணமளவி**
**லடையவிகல் கடவுமவன்விடயரதமே**
**வருதி சைகள் முழுதுமொரு நொடியளவில்**
**வலிசுழல வருகமந மநதுரகமே**

| | |
|---|---|
| கருதும் ஒரு பொருளை | மனத்தால் நினைக்கும் ஒரு வஸ்துவை |
| வொருகணமளவில் | ஒரு க்ஷண நேரத்தில் |
| அடைய | அடைவான். |
| இகல் கடவுமவன் | பகைவரின்மீது செலுத்தும் அவனுடைய |
| ரதம் | ரதமாவது |
| விடயம் | விஷயரதமென்று சொல்லப்படும் |
| வருதிசைகள் முழுதும் | வராநின்ற பத்துத் திக்குகளையும் |
| ஒரு நொடியளவில் | ஒரு க்ஷண நேரத்தில் |
| வலி சுழல | (சுழன்று வரும் சாமர்த்தியத்தால் வாயுவும் பின்னடையும்படி அதி சீக்கிரமாக சுற்றிவரும் |
| மன | மனமாகிய |
| துரகமே | குதிரையாம். |

மனத்தால் நினைக்கும் ஒரு வஸ்துவை ஒரு க்ஷண நேரத்தில் அடைவான். பகைவரின்மீது செலுத்தும் அவனுடைய ரதமாவது விஷயரதமென்று சொல்லப்படும் வராநின்ற பத்துத் திக்குகளையும் ஒரு க்ஷண நேரத்தில் (சுழன்று வரும் சாமர்த்தியத்தால் வாயுவும் பின்னடையும்படி அதி சீக்கிரமாக சுற்றிவரும் மனமாகிய குதிரையாம்

**7. பரனொளிசெ யருமறைகள் பகருமல**
**ரடியிணைகள் பரவநினை கிலர்களெனவோ**
**வரனொடரி யயனெனினு மிலதகில**
**மடையவெறு மஞ்ஞகுல பதியாணையே**

| | |
|---|---|
| பரனொளி செய் | நிர்க்குண பரமான்மாவை (விளக்குவிக்கும்) பிரதிபாதிக்கும், |
| அருமறைகள் பகரும் | அரிய வேதங்கள் கூறாநிற்கும் |
| மலரடி இணைகள் | தாமரை மலர் போலும் உபய திருவடிகளை |
| பரவ நினைகிலர்கள் | பரவசப்பட்டு நினையவில்லை |
| யெனவோ | யென்று சொல்லவோ, ஏன் பிரம்மா விஷ்ணு ருத்ராதிகளேஇல்லையென்கிறார்கள். (சிருட்டியாதி செய்வதில் மும்மூர்த்திகளே வேண்டாம்) இயல்பாயுண்டாம் என்று மொழியக் கொண்டே கடவுளை வணங்கார் என்பதைத் தெரிந்துகொள்ளலாம். |
| அகிலமடைய | இப்படி சர்வ உலகங்களிலும் |
| வெறும் அஞ்ஞ குல பதி | அஞ்ஞ வேந்தன் ஆட்சியேயல்லாமல் வேறு ஆட்சிக்கு இடமில்லை. |

| | |
|---|---|
| ஆணையே | |

நிர்க்குண பரமான்மாவை (விளக்குவிக்கும்) பிரதிபாதிக்கும், அரிய வேதங்கள் கூறாநிற்கும் தாமரை மலர் போலும் உபய திருவடிகளை பரவசப்பட்டு நினையவில்லையென்று சொல்லவோ, ஏன் பிரம்மா விஷ்ணு ருத்ராதிகளேஇல்லையென்கிறார்கள். (சிருட்டியாதி செய்வதில் மும்மூர்த்திகளே வேண்டாம்) இயல்பாயுண்டாம் என்று மொழியக் கொண்டே கடவுளை வணங்கார் என்பதைத் தெரிந்துகொள்ளலாம். இப்படி சர்வ உலகங்களிலும் அஞ்ஞ வேந்தன் ஆட்சியேயல்லாமல் வேறு ஆட்சிக்கு இடமில்லை.

**8. அந்தக னாகுஞ் செய்நன்றிக் காகாப் பழிநல் வழியளவி**
**னிந்திர னாகும் பிறிரொருவ ரேதங் காணுமி டத்திலே,**

| | |
|---|---|
| செய் நன்றிக்கு அந்தகனாகும் | ஒருவர் (செய்த நன்றியைக் கொல்வதில் எமனாகும்) செய்த நன்மையை நாடாததினால் குருடனாகும். |
| ஆகாப் பழி நல்வழி | ஆகாத (நிஷித்த மார்க்கமெல்லாம் நன்மார்க்கமாம். |
| பிறரொருவர் | அந்நியரது |
| ஏதம் | குற்றத்தைப் |
| காணுமிடத்தில் | பார்ப்பதில் |
| அளவில் | அளவில்லாத |
| இந்திரனாகும் | இந்திரர்களது கண்களை யுடையவராம். |

ஒருவர் (செய்த நன்றியைக் கொல்வதில் எமனாகும்) செய்த நன்மையை நாடாததினால் குருடனாகும். ஆகாத (நிஷித்த மார்க்கமெல்லாம் நன்மார்க்கமாம். அந்நியரது குற்றத்தைப் பார்ப்பதில் அளவில்லாத இந்திரர்களது கண்களை யுடையவராம்.

உதாரணம் திருவள்ளுவரின் குறள்

என்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு.

**9. மெய்யென் றிருப்பது டம்பினையும்**
**விளங்கிழை யார்தம் வார்த்தையுமே**
**பொய்யென் றிருப்ப தீசனையும்**
**புரையற் றோர்கள் புகல்வதுமே.**

| | |
|---|---|
| உடம்பினையும் | தேகத்தையும் |

| | |
|---|---|
| விளங்கிழையார் | பிரகாசியா நின்ற ஆபரணத்தையணிந்த மங்கையர்களது |
| தம் வார்த்தையும் | சொற்களையும் |
| மெய்யென்றிருப்பது | உண்மையென்று கருதுபவராம். |
| ஈசனையும் | சர்வேஸ்வரனையும் |
| புரையற்றோர்கள் | காமம் வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றமும் அற்ற மஹான்கள் |
| புகல்வதும் | கூறும் மொழிகளையும் |
| பொய்யென்றிருப்பது | அசத்தியமென்று கூறுபவராம். |

தேகத்தையும் பிரகாசியா நின்ற ஆபரணத்தையணிந்த மங்கையர்களது சொற்களையும் உண்மையென்று கருதுபவராம். சர்வேஸ்வரனையும் காமம் வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றமும் அற்ற மஹான்கள் கூறும் மொழிகளையும் அசத்தியமென்று கூறுபவராம்.

**10. நசையு ரைக்கிலவ னாவூம னாகுமே**
**வசையு ரைக்கிலவன் வாய்கோடி யாகுமே**

| | |
|---|---|
| நசையுரைக்கில் | மஹான்களது கீர்த்தியைக் கூறுமிடத்து |
| அவன் நா | அவனது இருந்த நாக்கும் |
| ஊமனாகும் | இல்லாமல் ஊமனாய் விடுவன். |
| வசையுரைக்கில் | அக்கீர்த்தியைக் குற்றங் கூறுமிடத்தோ |
| அவன் வாய் | அவனது வாய் |
| கோடியாகுமே | கோடி கோடியாகப் பெருகுமாம். |

மஹான்களது கீர்த்தியைக் கூறுமிடத்து அவனது இருந்த நாக்கும் இல்லாமல் ஊமனாய் விடுவன். அக்கீர்த்தியைக் குற்றங் கூறுமிடத்தோ அவனது வாய் கோடி கோடியாகப் பெருகுமாம்.

**11. எவ்வத் தேற்பவர்க் கீயக்கை யில்லனே**
**கௌவத் தேடினொ ருகோடி கையனே**

| | |
|---|---|
| எவ்வத்து ஏற்பவர்க்கு | ஏற்பது இகழ்ச்சியென்று தாழ்வில்லாது வாங்குபவருக்கு |
| ஈயக்கையில்லனே | இருந்த கையும் முடமாய் விடுகிறது. |
| கௌவத் தேடின் | அன்னியரது பொருளைக் கவருமிடத்து |
| ஒருகோடி கையனே | ஒரு கோடானு கோடி கைகள் உடையவராயிருக்கின்றனர்.(வளருகிறதாம்) |

ஏற்பது இகழ்ச்சியென்று தாழ்வில்லாது வாங்குபவருக்கு இருந்த கையும் முடமாய் விடுகிறது. அன்னியரது பொருளைக் கவருமிடத்து ஒரு கோடானு கோடி கைகள் உடையவராயிருக்கின்றனர்.(வளருகிறதாம்)

**12. இளமை யும்மிடும் பைக்கிட மாகிய**
**வளமை யும்பெரி தென்றேம திக்குமே**

| | |
|---|---|
| இடும்கைக் கிடமாகிய | துன்பத்திற்கு ஸ்தானமாய |
| இளமையும் | வாலிப கோலத்தையும் |
| வளமையும் | ஐஸ்வர்யங்களையும் |
| பெரிதென்றே | உயர்வென்று |
| மதிக்குமே | கருதுமாம். |

துன்பத்திற்கு ஸ்தானமாய வாலிப கோலத்தையும் ஐஸ்வர்யங்களையும் உயர்வென்று கருதுமாம்.

**13. சாயை போலுஞ்ச கட்டுருள் போலுமா**
**மாய வாழ்க்கைநி லையாய்ம திக்குமே**

| | |
|---|---|
| சாயை போலும் | தேக நிழலைப் போலவும், |
| சகட்டு உருள் போலும் | சக்கரம் போலவும் மாறி மாறி வரும் |
| மாமாய வாழ்க்கை | பெரிய மாயையினது வாழ்வை |
| நிலையாய் | ஸ்திரமென்று |
| மதிக்குமே | கருதும். |

தேக நிழலைப் போலவும், சக்கரம் போலவும் மாறி மாறி வரும் பெரிய மாயையினது வாழ்வை ஸ்திரமென்று கருதும்.

**14. மின்ற னெல்லைவி தியற்ற யாக்கைகொண்**
**டென்று மிங்கிருப் பார்போலி ருக்குமே.**

| | |
|---|---|
| மின்றனெல்லை | மின்னலுக்குச் சமானமான |
| விதியற்ற | நிலையில்லா |
| ஆக்கை கொண்டு | சரீரத்தைக் கொண்டு |
| என்றும் | எப்பொழுதும் |
| இங்கு | ஈண்டு |
| இருப்பார்போல் | ஸ்திரமாக இருப்பவரைப்போல் |

| | |
|---|---|
| இருக்குமே | கருதி வந்த காரியத்தை மறந்து இருப்பார்கள் |

.

மின்னலுக்குச் சமானமான நிலையில்லா சரீரத்தைக் கொண்டு எப்பொழுதும் ஈண்டு ஸ்திரமாக இருப்பவரைப்போல் கருதி வந்த காரியத்தை மறந்து இருப்பார்கள்.

**15. அறஞ்சு ருக்கும வலம்பெ ருக்குமே**
**புறம்பெ ருக்கும்பு கழுஞ்சு ருக்குமே**

| | |
|---|---|
| அறஞ் சுருக்கும் | தர்மங்களைக் குறுக்கியும் |
| அவலம் பெருக்கும் | அதர்மங்களை விரித்தும் வாழ்வாராம். |
| புறம் பெருக்கும் | அகீர்த்தியைப் பெருக்கியும் |
| புகழுஞ் சுருக்குமே | கீர்த்தியை சுருக்கியும் வாழ்வர். |

தர்மங்களைக் குறுக்கியும் அதர்மங்களை விரித்தும் வாழ்வாராம். அகீர்த்தியைப் பெருக்கியும் கீர்த்தியை சுருக்கியும் வாழ்வர்.

**16. நிரயத் தோடுநெ டுவான்மு கட்டொடுந்**
**தரையத் தோடுந்த னியூச லாடுமே**

| | |
|---|---|
| நிரையத்தோடும் | பாபமிகுதியால் நரகத்தின் கண்ணும், |
| நெடுவான் முகட்டொடும் | புண்ணிய மிகுதியால் பரந்த சொர்க்க போகங்களிலும் |
| தரையத்தோடும் | மிஸ்ர கர்மத்தால் பூமியின் கண்ணும் |
| தனி ஊசலாடுமே | கேவலம் இப்படி ஊசலாடுபவரைப் போல் சம்சார சுழலில் ஆடிக்கொண்டே யிருப்பார்கள். |

பாபமிகுதியால் நரகத்தின் கண்ணும், புண்ணிய மிகுதியால் பரந்த சொர்க்க போகங்களிலும் மிஸ்ர கர்மத்தால் பூமியின் கண்ணும் கேவலம் இப்படி ஊசலாடுபவரைப் போல் சம்சார சுழலில் ஆடிக்கொண்டே யிருப்பார்கள்.

**17. ஓதலுமுணர்த்தலு முணவு சுட்டியே**
**சாதலும் பிறத்தலுந் தவிர்க்க வல்லவே**

| | |
|---|---|
| ஓதலும் | தான் படித்தலும் |
| உணர்தலும் | தான் பிறருக்கு அதனை ஓதுவித்தலும் |
| உணவு சுட்டியே | சாண் வயிற்றை நிரப்புவான் வேண்டியே |

| | |
|---|---|
| சாதலும் பிறத்தலும் | ஜனன மரணத்தைத் |
| தவிர்க்க அல்லவே | தொலைத்தற் பொருட்டல்ல என்று பிதற்றிக் கொண்டு திரிவார்கள். |

சாத்திரங்களைப் படிப்பவரையும், அதனைக் கேட்பவரையும் பார்த்து என்ன நீங்கள் படிக்கிறதும் அதைப் பிறருக்குக் கூறுவதும் அவர்கள் அதைக் கேட்பதும் எல்லாம் சாப்பாட்டுக்குத்தானே, ஜனன மரணம் ஒழிவதற்கல்லவே, அல்லது அப்படி யாராவது அத்தியான்ம சாஸ்திரங்களைப் படித்தாலும், படிப்பித்தாலும் அதனை அஞ்ஞ வேந்தனது அரசாட்சியில் உட்பட்டவர் என்ன கூறுகின்றார்கள் என்றால் என்ன அது பாப்பானும் பரதேசியும் சாப்பாட்டுக்காக கூப்பாடு போடுகிறார்களேயல்லாமல் ஜனன மரணத்தைத் தொலைத்தற் பொருட்டல்ல என்று பிதற்றிக் கொண்டு திரிவார்கள்.

**18. இந்த மன்னனுக் கென்றும் பவங்கொள**
**வந்த துன்மதி மந்திரி யாகுமே**

| | |
|---|---|
| இந்த மன்னனுக்கு | இந்த அஞ்ஞ வேந்தனுக்கு |
| என்றும் பவங் கொள | எப்பொழுதும் ஜனன மரணத்தை மாறாமல் அடைவித்தற் பொருட்டு |
| வந்த துன்மதி | வாராநின்ற விஷயா சக்தி மந்தத்தன்மை முதலிய தோஷத்தோடு கூடிய கெட்ட புத்தியானது |
| மந்திரியாகும் | முதன் மந்திரி என்று சொல்லப்படும். |

இந்த அஞ்ஞ வேந்தனுக்கு எப்பொழுதும் ஜனன மரணத்தை மாறாமல் அடைவித்தற் பொருட்டு வாராநின்ற விஷயா சக்தி மந்தத்தன்மை முதலிய தோஷத்தோடு கூடிய கெட்ட புத்தியானது முதன் மந்திரி என்று சொல்லப்படும். நீதி—துர்ப்புத்தி மந்திரியால் அரசுக்கீனம். சொற்கேளா பிள்ளை பெற்றால் குலத்துக்கீனம்.

**19. அற்ப மில்லைய ருந்தவ மாதரார்**
**கற்பு மில்லைக ழிந்தானொ ழுக்கமே**

| | |
|---|---|
| கழிந்தான் ஒழுக்கமே | சர்வ ஒழுக்கங்களினின்றும் நீங்கியவனான அஞ்ஞ வேந்தனென்னும் |
| அற்பமில்லை அருந்தவம் | இவனது இராஜ்யத்தில் புருடர் களிடத்தோவெனின் மனம் பொறிகட்கு ஒருமை என்று கூறும் அரிய தவம் என்பது எள்ளளவேனும் இல்லை. |
| மாதரார் கற்பு மில்லை | அதேபோல் பெண்களிடத்தோ கற்புத்தன்மையும் இல்லாமற் போய் விட்டது. |

| | |
|---|---|
| கழிந்தனன் ஒழுக்கமே | என்று இப்படி அஞ்ஞ வேந்தனது ஆட்சியில் உட்பட்டவரெல்லாம் பிதற்றிக் கொண்டே திரிவார்கள் என்றுமாம். |

சர்வ ஒழுக்கங்களினின்றும் நீங்கியவனான அஞ்ஞ வேந்தனென்னும் இவனது இராஜ்யத்தில் புருடர் களிடத்தோவெனின் மனம் பொறிகட்கு ஒருமை என்று கூறும் அரிய தவம் என்பது எள்ளளவேனும் இல்லை. அதேபோல் பெண்களிடத்தோ கற்புத்தன்மையும் இல்லாமற் போய் விட்டது. என்று இப்படி அஞ்ஞ வேந்தனது ஆட்சியில் உட்பட்டவரெல்லாம் பிதற்றிக் கொண்டே திரிவார்கள் என்றுமாம்.

**20. ஆக மேவடி வாகிய மைந்துள**
**முக னீதிமு டியாமொ ழியவே**

| | |
|---|---|
| ஆகமே வடிவாகி அமைந்துள | தேகமே ஆத்மா, போகமே மோக்ஷம் என்று நிச்சயம் பொருந்தியுள்ள |
| முகன் நீதி மொழிய முடியா | நிர்மூடனாய இந்த அஞ்ஞ வேந்தனது இராஜ்ய அதர்மத்தை கூற முடியாது. |

தேகமே ஆத்மா, போகமே மோக்ஷம் என்று நிச்சயம் பொருந்தியுள்ள நிர்மூடனாய இந்த அஞ்ஞ வேந்தனது இராஜ்ய அதர்மத்தை கூற முடியாது.

**21. முறைமை யற்றமை மூவுல கத்தினு**
**மிறைய வர்க்கறி விப்பாரு மில்லையே.**

| | |
|---|---|
| மூவுலகத்திலும் | சொர்க்கம், மத்தியம், பாதாளம் என்னும் திரிலோகங்களிலும் |
| முறைமையற்றமை | அதர்மம் பெருத்த (அதிகரித்த)மையை |
| இறையவர்க்கு | பரமேஸ்வரனுக்குத் |
| அறிவிப்பாரும் | தெரியப்படுத்துவாரும் |
| இல்லையே | இல்லாமற் போய்விட்டது. |

சொர்க்கம், மத்தியம், பாதாளம் என்னும் திரிலோகங்களிலும் அதர்மம் பெருத்த (அதிகரித்த)மையை பரமேஸ்வரனுக்குத் தெரியப்படுத்துவாரும் இல்லாமற் போய்விட்டது.

************

# 17. திரு வவதாரம்

(இப்படி அஞ்ஞனது அரசாட்சியில் உட்பட்ட ஜீவர்கள் விவேகமின்றி துன்புறுவதை எவரொருவர் சர்வஜீவர்களது ஹ்ருதயமாகிய குகையில் அந்தர்யாமியாக எழுந்தருளியிருந்து சாமான்யமாகவும் விசேஷமாகவும் உணர்ந்து கொண்டிருத்தலால், சர்வக்ஞ சர்வதித் என்று சுருதியாதிகளால் புகழப் படுகின்றனரோ, அத்தகைய நமது இறைவன் அறிந்து ஈண்டு உலகத்தின்கண் மானைக்காட்டி மானைப் பிடிப்பது போல் மானுட ஆக்கையைத் தரித்து வந்து நம்மனோரை ஆட்கொண்ட திருவவதாரச் சிறப்பை இனிமேற் கூறுவாம்.)

**1. உண்மை யன்றியு லகத்து ளோர்படுந்**
**தன்மை தம்பிரான் றானேய றியுமே**

| | |
|---|---|
| உண்மையின்றி | வாய்மையிழந்து (ஆன்மானான்மா விசாரம் சிறிதுமில்லாமல்) |
| உலகத்துளோர் படுந் தன்மை | ஜகத்திலுள்ள சர்வ ஜீவர்களும் அனுபவிக்கும் இழிவை |
| தம்பிரான் | பசுபதியாயுள்ள (திருக்கூட்டத் தலைவன்) இறைவன் |
| தானே அறியுமே | தனது சர்வக்ஞத் தன்மையால் தானே அறிந்து கொண்டான். |

வாய்மையிழந்து (ஆன்மானான்மா விசாரம் சிறிதுமில்லாமல்) ஜகத்திலுள்ள சர்வ ஜீவர்களும் அனுபவிக்கும் இழிவை பசுபதியாயுள்ள (திருக்கூட்டத் தலைவன்) இறைவன் தனது சர்வக்ஞத் தன்மையால் தானே அறிந்து கொண்டான்.

**2. அவப்பிர காசவ வலம்பெ ருத்தமை**
**சிவப்பிர காசன்றி ருவுளஞ் சென்றதே**

| | |
|---|---|
| அவப் பிரகாச அவலம் | அறியாமையென்னும் அந்த கார மய இந்த அஞ்ஞ வேந்தனது அதர்மம் |
| பெருத்தமை | அதிகரித்திருப்பது |
| சிவப்பிரகாசன் | எமது பரமாச்சாரியராய் சிவப்பிரகாச னென்னும் திருநாமம் பூண்டு எழுந்தருளி வந்த பரமேஸ்வரனது |
| திருவுளம் | அழகிய உள்ளத்தில் |
| சென்றதே | போய்த் தாக்கியது. (உணர்ந்து இரக்கமுறலானார்) |

அறியாமையென்னும் அந்த கார மய இந்த அஞ்ஞ வேந்தனது அதர்மம் அதிகரித்திருப்பது எமது பரமாச்சாரியராய் சிவப்பிரகாச னென்னும் திருநாமம் பூண்டு எழுந்தருளி வந்த பரமேஸ்வரனது அழகிய உள்ளத்தில் போய்த் தாக்கியது. (உணர்ந்து இரக்கமுறலானார்)

**3. வன்பே யனையான்மேல் வரமெய்ப் பரனுக்குத்**
**தன்பே ரருண்முற்றுந் தானோர் வடிவாயே**

| | |
|---|---|
| வன் பேயனையான் | கொடிய பேய்க்குச் சமானமான அஞ்ஞ வேந்தனுடன் |
| மேல்வர | யுத்தஞ் செய்ய |
| மெய்ப் பரனுக்குத் | சச்சிதானந்த வடிவுடைய பரமேஸ்வரனுக்கு (உண்டாகிய இரக்கத்தால்) |
| தன் பேர் அருள் முற்றும் | தனது பெருமை வாய்ந்த கிருபை முழுவதும் |
| தான் ஓர் வடிவாயே | ஒப்பற்ற திருவுருவமாகத் தாங்கி அவதரித்தார். |

கொடிய பேய்க்குச் சமானமான அஞ்ஞ வேந்தனுடன் யுத்தஞ் செய்ய சச்சிதானந்த வடிவுடைய பரமேஸ்வரனுக்கு (உண்டாகிய இரக்கத்தால்) தனது பெருமை வாய்ந்த கிருபை முழுவதும் ஒப்பற்ற திருவுருவமாகத் தாங்கி அவதரித்தார்.

**4. ஆரா வமிர்தின்சே வடியைப்பிரியாவச்**
**சீரா ரடியாருந் திருமே னிகள்கொண்டே**

| | |
|---|---|
| ஆரா அமிர்தின் | உண்ண உண்ணத் தெவிட்டாத தெள்ளமிர்தம் என்று கூறும் |
| சேவடியை | தனது சொரூபத்தை |
| பிரியா | விட்டு நீங்காத |
| சீர் ஆர் அடியாரும் | சிறப்புப் பொருந்திய மஹான்களும் (தேவர்களும்) |
| திரு மேனிகள் கொண்டே | அழகிய திருவுருவத்தைத் தாங்கி ஈண்டு அவதரித்தனர். |

உண்ண உண்ண தெவிட்டாத தெள்ளமிர்தம் என்று கூறும் தனது சொரூபத்தை விட்டு நீங்காத சிறப்புப் பொருந்திய மஹான்களும் (தேவர்களும்) அழகிய திருவுருவத்தைத் தாங்கி ஈண்டு அவதரித்தனர்.

**5. குருநா யகனார்தங் கோலங் கூறப்பண்**
**டருநான் மறைகாணா தறிவா ரினியாரே**

| | |
|---|---|
| குரு நாயகனார் தம் | மேலான கிருபையே வடிவமாக அவதரித்த அத்தகைய |

| | |
|---|---|
| கோலங் கூறு | குருமூர்த்தியினது சொரூபத்தைச் சொல்வதற்கு |
| பண்டு | முன்னர் |
| அரு நான் மறை காணாது | அரிதாகிய இருக்காதி நான்கு வேதங்களுமே உணராதது |
| அறிவார் இனி யாரே | என்றால் அவரது வடிவத்தைச் சொல்வதற்கு அறிந்தவர் யாரேயுளர். ஒருவருமிலர் என்றவாறாம். |

மேலான கிருபையே வடிவமாக அவதரித்த அத்தகைய குருமூர்த்தியினது சோரூபத்தைச் சொல்வதற்கு முன்னர் அரிதாகிய இருக்காதி நான்கு வேதங்களுமே உணராதது என்றால் அவரது வடிவத்தைச் சொல்வதற்கு அறிந்தவர் யாரேயுளர். ஒருவருமிலர் என்றவாறாம்.

(இப்படி திரு அவதரித்த அனந்தரம் குழவிப் பருவத்திலே காலிலிட்டிருக்கும் கழல்கள் (எவ்வாறுளது) எப்படி சப்திக்கிறது என்றால் அதனைக் கூறுகிறார்)

**6. பிறவிப்பகைவெல்வார் பிறிதற் றொருதானா**
**யறிவுற் றவரென்றே யரையுங் கழலிட்டே**

| | |
|---|---|
| பிறிதற்று | வேறுபாடின்றி |
| ஒரு தானாய் | பிரத்யக பின்ன பிரஹ்மமே தான் என்று |
| அறிவுற்றவர் | உணர்ந்த மஹான்கள் |
| பிறவிப் பகை | ஜனன மரண சத்துருவை |
| வெல்வார் என்று | ஜெயிப்பார்கள். என்று |
| அறையும் | சப்திக்கும் |
| கழலிட்டே | வீர கண்டையைத் தரித்தும் அல்லது இப்படிக் கூறுதலையே கழலாக அணிந்திருந்தாரேயொழிய லௌகீகமான கழலனிய வில்லை என்றவாறாம். |

வேறுபாடின்றி பிரத்யக பின்ன பிரஹ்மமே தான் என்று உணர்ந்த மஹான்கள் ஜனன மரண சத்துருவை ஜெயிப்பார்கள். என்று சப்திக்கும் வீர கண்டையைத் தரித்தும் அல்லது இப்படிக் கூறுதலையே கழலாக அணிந்திருந்தாரேயொழிய லௌகீகமான கழலனிய வில்லை என்றவாறாம்.

**7. ஞாந மேதிரு வாபர ணங்களு**
**ஞாந மேதிரு மாலையுஞ் சாந்தமு**
**ஞாந மேதிரு வானவக் கோலமு**
**ஞாந மேயருண் மேனியு ஞாநமே**

| | |
|---|---|
| ஞானமே திரு ஆபரணங்களும் | ஆபரணம் யாதெனின் ஞானமே அழகிய ஆபரணமாம். |
| ஞானமே திரு மாலையும் | மாலையோவெனின் ஞானமே அழகிய மாலையாம். |
| சாந்தமும் | சந்தனமோவெனின் ஞானமே சந்தனமாம். |
| ஞானமே திருவான அக் கோலமும் | வடிவமோவெனின் ஞானமே அழகிய அறிவு வடிவமாம். |
| ஞானமே அருள் மேனியும் | சரீரமோவெனின் வடிவான சரீரமும் சுயம்பிரகாச ஞானமென்றே சொல்லப்படும். |

ஆபரணம் யாதெனின் ஞானமே அழகிய ஆபரணமாம். மாலையோவெனின் ஞானமே அழகிய மாலையாம். சந்தனமோவெனின் ஞானமே சந்தனமாம். வடிவமோவெனின் ஞானமே அழகிய அறிவு வடிவமாம். சரீரமோவெனின் வடிவான சரீரமும் சுயம்பிரகாச ஞானமென்றே சொல்லப்படும்.

**8. ஞாந மேயுடை யாடையுங் கூரிய**
**ஞாந மேயுடை வாளுந லம்புனை**
**ஞாந மேவரு மூர்த்தியு மியாவையு**
**ஞாந மேபிற வுஞ்சில நல்கியே**

| | |
|---|---|
| ஞானமே உடை ஆடையும் | தரித்திருக்கும் உடையும் மேலே அணிந்துள்ள அங்க வஸ்திரமும் ஞானமே. |
| கூரிய ஞானமே உடை வாளும் | சொல்லிய அத்வைதக் ஞானமே இடையில் தரித்துள்ள வாளாயுதமும். |
| நலம்புனை ஞானமே வரும் ஊர்தியும் | நன்றாகப் பொருந்தி ஏறிவரா நின்ற வாகனமும் ஞானமே. |
| யாவையும் ஞானமே | சொல்லாதொழிந்த அனைத்தும் ஞானமே. |

தரித்திருக்கும் உடையும் மேலே அணிந்துள்ள அங்க வஸ்திரமும் ஞானமே. சொல்லிய அத்வைதக் ஞானமே இடையில் தரித்துள்ள வாளாயுதமும். நன்றாகப் பொருந்தி ஏறிவரா நின்ற வாகனமும் ஞானமே. சொல்லாதொழிந்த அனைத்தும் ஞானமே. இன்னும் இப்படி அனேகமான சிற்சிலவற்றைப் பொருந்தியிருந்தார்.

**9. கமல நான்முக னார்தங்க ருத்தையுங்**
**கடந்து லோகம டங்கக்க விப்பதோர்**
**விமல மாகிவி ரிந்தோடுங் காமலே**
**விளங்கு தண்கொற்ற வெண்குடை காப்பவே**

| | |
|---|---|
| கமல நான்முகனார் தங் | சர்வ லோகங்களையும் சங்கற்ப மாத்திரத்தாற் உண்டாக்கிய |

| | |
|---|---|
| கருத்தையும் | தாமரை மலரிலெழுந்தருளியுள்ள சதுர்முகனாகிய பிரம்ம தேவரது மனத்தையும் |
| கடந்து | அதிக்ரமித்து |
| லோக மடங்கக் கவிப்பது | சர்வ உலகங்களையும் தனக்குள்ளே ஏக காலத்தில் அடக்கிக் கொண்டும் |
| ஓர் விமலமாகி விரிந்து ஒடுங்காமலே விளங்கும் | ஒப்பற்ற நிர்மலமாகி பரந்து சுருங்காமல் விளங்குவதாகிய |
| தண் கொற்ற வெண்குடை | குளிர்ச்சி பொருந்திய வெண்கொற்ற குடையானது |
| காப்பவே | சர்வ ஜீவர்களையும் சமுசார தாபத்தினின்றும் நீக்குவான் சூடப்பட்டிருந்தது.( நீக்கிக் காக்கப் பட்டிருக்கிறது) |

சர்வ லோகங்களையும் சங்கற்ப மாத்திரத்தாற் உண்டாக்கிய தாமரை மலரிலெழுந்தருளியுள்ள சதுர்முகனாகிய பிரம்ம தேவரது மனததையும் அதிக்ரமித்து சர்வ உலகங்களையும் தனக்குள்ளே ஏக காலத்தில் அடக்கிக் கொண்டும் ஒப்பற்ற நிர்மலமாகி பரந்து சுருங்காமல் விளங்குவதாகிய குளிர்ச்சி பொருந்திய வெண்கொற்ற குடையானது சர்வ ஜீவர்களையும் சமுசார தாபத்தினின்றும் நீக்குவான் சூடப்பட்டிருந்தது.( நீக்கிக் காக்கப் பட்டிருக்கிறது)

**10. பூவி லேறியும் போதக மேறியும்**
**புள்ளி லேறியும் போர்மயி லேறியுஞ்**
**சேவி லேறியுந் தேரினி னேறியுஞ்**
**செய்ய பொன்னடி சேரச்சே விக்கவே**

| | |
|---|---|
| பூவிலேறியும் | பிரம்மாவானவர் தாமரை மலரிலெழுந்தருளியும், |
| போதகமேறியும் | இந்திரனானவர் ஐராவதத்தின் மீது ஆரோகணித்தும், |
| புள்ளிலேறியும் | சாட்சாத் விஷ்ணு பகவான் கருடப் பக்ஷியின் மீது எழுந்தருளியும், |
| போர் மயிலேறியும் | தேவ சேனாபதியாய சண்முகப் பெருமான் யுத்தத்தில் வெற்றியடைய மயில் வாகனத்தில் ஆரோகணித்தும், |
| சேவிலேறியும் | சாட்சாத் பரமேஸ்வரன் ரிஷப வாகனத்தில் எழுந்தருளியும் |
| தேரினின் ஏறியும் | சஹஸ்ர கிரணங்களையுடைய சூரிய பகவான் சுவேத அஸ்வங்களைப் பூட்டிய ரதத்தின் மீது ஆரோகணித்தும் |
| செய்ய பொன்னடி சேவிக்க | குருமூர்த்தியினது அழகிய திருவடித் தாமரைகளைச் சேவிக்கும் பொருட்டு |
| சேர | (அக்குருமூர்த்தியிருக்குமிடத்து) ஆண்டு வந்து சேர்ந்தனர். |

பிரம்மாவானவர் தாமரை மலரிலெழுந்தருளியும்,இந்திரனானவர் ஐராவதத்தின் மீது ஆரோகணித்தும், சாட்சாத் விஷ்ணு பகவான் கருடப் பக்ஷியின் மீது எழுந்தருளியும்,

தேவ சேனாபதியாய சண்முகப் பெருமான் யுத்தத்தில் வெற்றியடைய மயில் வாகனத்தில் ஆரோகணித்தும், சாட்சாத் பரமேஸ்வரன் ரிஷப வாகனத்தில் எழுந்தருளியும் சஹஸ்ர கிரணங்களையுடைய சூரிய பகவான் சுவேத அஸ்வங்களைப் பூட்டிய ரதத்தின் மீது ஆரோகணித்தும் குருமூர்த்தியினது அழகிய திருவடித் தாமரைகளைச் சேவிக்கும் பொருட்டு (அக்குருமூர்த்தியிருக்குமிடத்து) ஆண்டு வந்து சேர்ந்தனர்.

**11. உம்பர் தானவர்க் கரிய தாணுவிவ்**
**வுணர்வி லானையொன் றாக வுன்னியே**
**தம்பி ரானருட் கருணை யாலையன்**
**றானும் வந்தனன் றரணி தன்னிலே.**

| | |
|---|---|
| உம்பர் தானவர்க்கு அரிய | தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் காண்டற்கரிய |
| தாணுவும் | அசஞ்சல வடிவ பரமான்மாவும், |
| இவ்வுணர்விலான் | இந்த அஞ்ஞ வேந்தனை |
| ஒன்றாக எண்ணியே | ஒரு (புருஷனாக) பொருளாகக் கருதி |
| தம்பிரான் | அடியார்களுக்குத் தலைவனாகிய பரமேஸ்வரன் எமது குரு மூர்த்தியும் |
| அருட் கருணையினால் | ஜீவர்கள் மீது வைத்த பெருங் கருணையினால் |
| தரணி தன்னிலே | பூவுலகத்தின் கண்ணே (இவ்விடத்திலே) |
| இவன்றானும் | ஈதோ இவர்தான் என்று சுட்டிக்காட்டும்படி |
| வந்தனர் | வந்தனர். |

தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் காண்டற்கரிய அசஞ்சல வடிவ பரமான்மாவும், இந்த அஞ்ஞ வேந்தனை ஒரு (புருஷனாக) பொருளாகக் கருதி அடியார்களுக்குத் தலைவனாகிய பரமேஸ்வரன் எமது குரு மூர்த்தியும் ஜீவர்கள் மீது வைத்த பெருங் கருணையினால் பூவுலகத்தின் கண்ணே (இவ்விடத்திலே) ஈதோ இவர்தான் என்று சுட்டிக்காட்டும்படி வந்தனர்.

**12. மம்ம ரங்குழந் தமரர் தேடவிம்**
**மண்ணின் வந்ததா ளினைவ மூத்தியே**
**யெம்ம ருங்குநின் றடியர் போற்றவே**
**யெம்பி ரானிருந் தருளு மெல்லையே**

| | |
|---|---|
| அமரர் அங்கு | தேவர்களெல்லாம் ஆண்டு |
| மம்மர் உழந்து | மயங்கி திரிந்து வருந்தி |
| தேட | தேடவும், |

| | |
|---|---|
| படி | இம்மண்ணினிடத்து (இப்புவியின்கண்) |
| வந்த தாளினை வழுத்தியே | எழுந்தருளிய உபய திருவடித் தாமரைகளைப் போற்றி செய்யவும், |
| யெம் மருங்கும் நின்று அடியார் போற்ற | அடியார்கள் எங்கணும் சூழ்ந்து இருந்து துதிக்கவும் |
| எம்பிரான் இருந்தருளும் எல்லையே | எமது தலைவனாகிய குருமூர்த்தியானவர் எழுந்தருளியிருக்குந் தன்மையானது இருந்தது. |

தேவர்களெல்லாம் ஆண்டு மயங்கி திரிந்து வருந்தி தேடவும், இம்மண்ணினிடத்து (இப்புவியின்கண்) எழுந்தருளிய உபய திருவடித் தாமரைகளைப் போற்றி செய்யவும், அடியார்கள் எங்கணும் சூழ்ந்து இருந்து துதிக்கவும் எமது தலைவனாகிய குருமூர்த்தியானவர் எழுந்தருளியிருக்குந் தன்மையானது இருந்தது.

**************

## 18. காமாதி படைச் செருக்கு

( காம, கோப, லோப, மோக, அகங்காரம், மதம், பொறாமை என்னும் படைத்தலைவர்கள் அவரவர்கள் கூறும் வல்லபம் கொண்டு பேசி அகங்காரன் செருக்குற்றிருக்குந் தன்மையைக் கூறுகிறார்)

**1. புணர்வினோ டருந்த லென்றும் போற்றுத லன்றி வேறோ**
**ருணர்வறு மரசன் றன்டா லொற்றரு மோடிச் சென்றே**

| | |
|---|---|
| புணர்வினோடு அருந்தல் | உணவாதிகளை அருந்துதலும், மகளிர்களைப் புணர்தலும் ஆகிய இருவகைத் தொழிலையே |
| என்றும் | எப்பொழுதும் |
| போற்றுதலின்றி | பேணுவதே யல்லாமல் |
| வேறு ஓர்உணர்வு அறும் | அன்னியமாக ஒருவித பிரக்ஞையும் சிறிதுமின்றிய |
| அரசன்தன்பால் | அஞ்ஞ வேந்தனிடத்து |
| ஒற்றரும் | தூதரும் |
| ஓடிச் சென்று | அதிவேகமாகச் சமீபத்திற் சென்று கூறுவது |

ஹே ராஜன். உலகத்தின்கண் ஓர் வதந்தியானது காணப்படுகின்றது. அது யாதெனின்–

(இருக்காதி வேதங்களால் புகழப்படும் பரம்பொருளாயுள்ள இறைவன் தங்களை வெல்லும் பொருட்டு மனிதனாக வந்துதித்தனன் என்னும் இந்த வார்த்தை ஒன்று உண்டு என்று கேள்விப்பட்டது உண்டு என்றான்.)

**2. மதித்தல்விண் ணவர்க்கு மொண்ணா**
**மறைப் பொருள் மநுட னாய்வந்**
**துதித்தன னென்னும் வார்த்தை**
**யுண்டென வுரைத்த போதே**

| | |
|---|---|
| விண்ணவர்க்கும் | இந்திராதி தேவர்களுக்கும் |
| மதித்தல் ஒண்ணா | இதுதான் பரம்பொருள் என்று தங்கள் மனதால் தாங்களே நிச்சயித்தற்கு முடியாத, |
| மறைப்பொருள் | இருக்காதி நான்கு வேதங்களிலுள்ள (பிரதிபாதிக்கும் படியான) பரவஸ்துவானது |
| மனிதனாய் வந்துதித்தனன் | (தங்களை வெல்லும் பொருட்டு) மனிதனாகத்தானே எழுந்தருளித் தோன்றினன் |

| | |
|---|---|
| என்னும் வார்த்தை உண்டு | என்பதோர் வதந்தியானது கேட்கப்படுகிறது |
| என உரைத்த போதே | என்று ஒற்றர்கள்(தூதுவர்கள்) சொல்ல அப்பொழுதே. |

இந்திராதி தேவர்களுக்கும் இதுதான் பரம்பொருள் என்று தங்கள் மனதால் தாங்களே நிச்சயித்தற்கு முடியாத, இருக்காதி நான்கு வேதங்களிலுள்ள (பிரதிபாதிக்கும் படியான) பரவஸ்துவானது (தங்களை வெல்லும் பொருட்டு) மனிதனாகத்தானே எழுந்தருளித் தோன்றினன் என்பதோர் வதந்தியானது கேட்கப்படுகிறது என்று ஒற்றர்கள்(தூதுவர்கள்) சொல்ல அப்பொழுதே.

**3. இனிதினால் வாழு மென்னை யீசனென் றொருவன் வெல்ல**
**மனிதனாய் வந்தா னென்னும் வார்த்தையும் வார்த்தையாமே**

| | |
|---|---|
| இனிதினால் வாழும் என்னை | தேகமே ஆத்மா, போகமேமோக்ஷமென்று மகா களிப்புடன் இன்புற்றிருக்கும் காமன் முதலிய அநேக வித சேனாதிபதிகளோடு கூடிய என்னை, |
| ஈசன் என்று ஒருவன் | பரமேஸ்வரன் என்னும்அவன் |
| வெல்ல | ஜயிக்கும் பொருட்டு |
| மனிதனாய் வந்தான் என்னும் | மானுடனாக அவதரித்திருக்கின்றனன் என்ற |
| வார்த்தையும் வார்த்தையாமே | ஓர் வதந்தியும் உண்மையாமோ. யாரோ கூறினான் என்று இங்கு வந்து கூறினீர்களே. உங்களுக்கு பயித்தியமா என்ன ? |

தேகமே ஆத்மா, போகமேமோக்ஷமென்று மகா களிப்புடன் இன்புற்றிருக்கும் காமன் முதலிய அநேக வித சேனாதிபதிகளோடு கூடிய என்னை, பரமேஸ்வரன் என்னும்அவன் ஜயிக்கும் பொருட்டு மானுடனாக அவதரித்திருக்கின்றனன் என்ற ஓர் வதந்தியும் உண்மையாமோ. யாரோ கூறினான் என்று இங்கு வந்து கூறினீர்களே. உங்களுக்கு பயித்தியமா என்ன ?

**4. ஒன்றில்லை யெனுநீரு மொன்றுண்டு**
**போலேயு ரைத்தீர்க ளெனவொற்றர்தா**
**மின்றில்லை யென்னாதி ரோமிந்த**
**வுலகத்தி னியல்கூறி னோமென்னவே.**

| | |
|---|---|
| ஒன்று இல்லை எனும் நீரும் | இதுநாள்வரையில் உம்மைத்தவிர உண்மையாக ஒருவரேனும் உயர்ந்தவர்கள் இல்லை. நீர்தான் சார்வபௌம சக்கரவர்த்தி என்று கூறிக் கொண்டிருந்த நீங்களும் |

| | |
|---|---|
| இன்று ஒன்று உண்டு போல உரைத்தீர்கள் என | யாரோ ஒரு புருடன் தங்களை வெல்ல அவதரித்திருக்கின்றனன் என்று கூறுகிறீர்கள். இதனால் பித்தம் தலையிலேறி பயித்தியம் பிடித்திருப்பவர் போல் காணப்படுகிறீர்கள். அரசன் கூற, |
| ஒற்றர் தாம் | தூதுவரும் (பயந்து நடுங்கி) |
| இன்றும் இல்லை என்னாது இரோம் | சுவாமின் இப்பொழுதும் முன்போலவே தங்களை ஒருவரும் இல்லை என்று கூறாமலிருக்க மாட்டோம். அதே பிரகாரம் தான் கூறிக்கொண்டிருக்கிறோம். |
| இந்த உலகத்தின் | அதற்குத் தடையில்லை. (ஆனால் ஓடிவந்து ஏன் கூறினீர்கள் என) இந்த உலகத்தில் |
| இயல் கூறினோம் எனனவே | பேசிக் கொள்ளும் சுபாவத்தை சொன்னோம் என்று தூதுவர் கூற. |

இதுநாள்வரையில் உம்மைத்தவிர உண்மையாக ஒருவரேனும் உயர்ந்தவர்கள் இல்லை. நீர்தான் சார்வபௌம சக்கரவர்த்தி என்று கூறிக் கொண்டிருந்த நீங்களும் யாரோ ஒரு புருடன் தங்களை வெல்ல அவதரித்திருக்கின்றனன் என்று கூறுகிறீர்கள். இதனால் பித்தம் தலையிலேறி பயித்தியம் பிடித்திருப்பவர் போல் காணப்படுகிறீர்கள். அரசன் கூற, தூதுவரும் (பயந்து நடுங்கி) சுவாமின் இப்பொழுதும் முன்போலவே தங்களை ஒருவரும் இல்லை என்று கூறாமலிருக்க மாட்டோம். அதே பிரகாரம் தான் கூறிக்கொண்டிருக்கிறோம். அதற்குத் தடையில்லை. (ஆனால் ஓடிவந்து ஏன் கூறினீர்கள் என) இந்த உலகத்தில் பேசிக் கொள்ளும் சுபாவத்தை சொன்னோம் என்று தூதுவர் கூற.

**5. அளவில்லை சமயங்க ளவரேயு ரைப்பார்க**
**ளழையென்ன லவர்வந்து மெய்**
**யுளவில்லை வேறொன்று மறியோ**
**முரைப்பார்க ளுரையோதி னோமென்னவே**

(உலகத்தில் யார் கூறிக்கொண்டிருக்கிறார்கள் கூறுங்கள் என்று அஞ்ஞு அரசன் உரத்த குரலில் கேட்ப தூதுவர் கூறுகிறார்.)

| | |
|---|---|
| சமயங்கள் அளவில்லை | சைவ முதலிய மதங்களோ கணக்கற்றிருக்கின்றன. |
| அவரேயுரைப்பார்கள் | அந்தந்த மதத்திற்குரிய ஆச்சாரியமார்களே (குரு) கூறிக் கொண்டிருக்கிறார்கள் என்று தூதுவர் கூற, |
| அவர்களை அழை என | உடனே அஞ்ஞு வேந்தன் அப்படிக் கூறுபவர்களை அழைத்துக் கொண்டு வாருங்களென்று கட்டளையிட, |
| அவர் வந்து | உடனே தூதுவர் ஓடோடியும் சென்று அழைத்து வர அவர்கள் அஞ்ஞு வேந்தன் சமீபம் வந்து |
| மெய் உளவில்லை | உண்மையான இரகசியமில்லை ? |
| வேறொன்றும் அறியோம் | பிறிதொன்றும் தெரியமாட்டோம். |
| உரைப்பார்கள் உரைப்பு | சொல்வார் பேச்சைக் கெட்டுச் சொன்னோம் |

| | |
|---|---|
| ஓதினோம் | |
| என்னவே | என்று அவர்களும் அப்படியே கூறினார்கள். |

சைவ முதலிய மதங்களோ கணக்கற்றிருக்கின்றன. அந்தந்த மதத்திற்குரிய ஆச்சாரியமார்களே (குரு) கூறிக் கொண்டிருக்கிறார்கள் என்று தூதுவர் கூற, உடனே அஞ்ஞ வேந்தன் அப்படிக் கூறுபவர்களை அழைத்துக் கொண்டு வாருங்களென்று கட்டளையிட, உடனே தூதுவர் ஓடோடியும் சென்று அழைத்து வர அவர்கள் அஞ்ஞ வேந்தன் சமீபம் வந்து உண்மையான இரகசியமில்லை ? பிறிதொன்றும் தெரியமாட்டோம். சொல்வார் பேச்சைக் கெட்டுச் சொன்னோம் என்று அவர்களும் அப்படியே கூறினார்கள்.

**6.. சொன்னார்கள் சொன்னத்தை மெய்யென்**
**றுரைத்தார்கள் சுற்றஞ்சி றைச்செய்யவே**
**யென்னாதன் முன்னேவர் பொருளாக**
**விக்காவ லெனமார னிகல் கூறுமே**

| | |
|---|---|
| மாரன் | அஞ்ஞ வேந்தனுடைய முதற் சேனாதிபதியாய காமன் படபட எனக் கோபித்து, இவர்களெல்லாம் |
| சொன்னதைச் சொன்னார்கள் | யாரோ கூறியதை ஈண்டும் வந்து கூறினார்கள். |
| சுற்றம் சிறைச் செய்யவே | இது பெருந் தவறானதால் இப்பந்துக்களையெல்லாம் ஜெயிலில் போட்டு மூட வேண்டியதே. |
| என்னாதன் முன் | ஏன் எனின் எமது இறைவனானவன் முன்பாக |
| ஏவர் பொருளாக | யாவர்தான் வீரமுடையவனென்று வருவான் ? |
| இக்காவல் | வந்தாலல்லவா இவர்களுக்கு இந்த இரக்ஷிப்பு வேண்டும். அப்படிக் கன்றியில் தேவரீர்சன்னிதானத்தில் விருதாவாகக் கூறியமையால் எல்லோரையும் ஜெயிலில் போட்டு விடுங்கள் |
| என | என்று கூறி உடனே தனது வல்லபத்தை இராஜ சந்நிதானத்தில் கூற ஆரம்பித்தான். |

அஞ்ஞ வேந்தனுடைய முதற் சேனாதிபதியாய காமன் படபட எனக் கோபித்து, இவர்களெல்லாம் யாரோ கூறியதை ஈண்டும் வந்து கூறினார்கள். இது பெருந் தவறானதால் இப்பந்துக்களையெல்லாம் ஜெயிலில் போட்டு மூட வேண்டியதே. ஏன் எனின் எமது இறைவனானவன் முன்பாக யாவர்தான் வீரமுடையவனென்று வருவான் ? வந்தாலல்லவா இவர்களுக்கு இந்த இரக்ஷிப்பு வேண்டும். அப்படிக் கன்றியில் தேவரீர்சன்னிதானத்தில் விருதாவாகக் கூறியமையால் எல்லோரையும் ஜெயிலில் போட்டு விடுங்கள் என்று கூறி உடனே தனது வல்லபத்தை இராஜ சந்நிதானத்தில் கூற ஆரம்பித்தான்.

7. மண்ணோரி னெனையேவர் மலைவார்கண்
முத்தேவர் மாறாகி யானபடிபோய்
விண்ணேறி னானொருவன் மலையேறி
னானொருவன் வேலைக்கு ளானொருவனே

(தேவரீரது சேனாதிபதியில் தலைமை (மன்மதன் நாமம்) பூண்டஎமது வல்லபம் யாதெனின் சிறிது கூறுகின்றனம், இராஜன் கேண்மின் என்று கூறுகின்றனன்)

| | |
|---|---|
| முத்தேவர் | திரி மூர்த்திகளே |
| மாறாகியான படி போய் | எனது ஒரு புஷ்ப பாணத்தால் மாறுபட்ட சித்தமுடையவராய், |
| விண்ணேறினான் ஒருவன் | எனது தாபம் பொறாதவராய் பிரம்மாவானவர் சரஸ்வதி தேவியுடன் சத்திய லோகத்திற்குச் சென்று விட்டனர். |
| மலையேறினான் ஒருவன் | உருத்திர பகவானானவர் தனது பார்வதி தேவியுடன் லட்ச யோசனை விஸ்தீரணமுடைய கைலயங்கிரிக்குச் சென்று விட்டனன். |
| வேளைக் குள்ளானான் ஒருவன் | விஷ்ணு பகவான் மகாலட்சுமியுடன் திருப்பாற்கடலில் பள்ளி கொண்டு விட்டனர். |
| மண்ணோரின் ஏனை ஏவர் மலைவார்கள் | இப்படி மும்மூர்த்திகளே ஆனார் எனில், பூவுலகத்தின்கண் உள்ள சாதாரண மனிதர்தானா எம்மைக் கடப்பவர்? ஆனதால் தாங்கள் அஞ்ச வேண்டாம் கெம்பீரமாக ராஜ்ஜியத்தைப் பரிபாலிக்கலாம். |

திரி மூர்த்திகளே எனது ஒரு புஷ்ப பாணத்தால் மாறுபட்ட சித்தமுடையவராய், எனது தாபம் பொறாதவராய் பிரம்மாவானவர் சரஸ்வதி தேவியுடன் சத்திய லோகத்திற்குச் சென்று விட்டனர். உருத்திர பகவானானவர் தனது பார்வதி தேவியுடன் லட்ச யோசனை விஸ்தீரணமுடைய கைலயங்கிரிக்குச் சென்று விட்டனர். விஷ்ணு பகவான் மகாலட்சுமியுடன் திருப்பாற்கடலில் பள்ளி கொண்டு விட்டனர். இப்படி மும்மூர்த்திகளே ஆனார் எனில், பூவுலகத்தின்கண் உள்ள சாதாரண மனிதர்தானா எம்மைக் கடப்பவர்? ஆனதால் தாங்கள் அஞ்ச வேண்டாம் கெம்பீரமாக ராஜ்ஜியத்தைப் பரிபாலிக்கலாம்.

8. பண்டொர் நாண்மலர்ப் பட்டின்று மக்கறைக்
கண்டர் மேனிசெம் பாகங்க றுத்ததே

| | |
|---|---|
| பண்டு ஓர் நாள் | முன்னம் ஒரு தினத்தில் |
| மலர்பட்டு | என்னால் புஷ்ப பாணம் விடப்பட்டு |
| இன்றும் | (அதனால்) மோகிதராய் இப்பொழுதும் |

| | |
|---|---|
| அக்கறைக் கண்டார் மேனி | அந்த நீல கண்டத்தையுடைய பரமேஸ்வரனது திருமேனியில் |
| செம் பாகம் கருத்ததே | அழகிய வாமபாகமானது அம்பிகைக்குக் கொடுக்கப்பட்டு கருப்பாக (நீல நிறமாக) இருக்கின்றதைக் காணலாம். |

முன்னம் ஒரு தினத்தில் என்னால் புஷ்ப பாணம் விடப்பட்டு (அதனால்) மோகிதராய் இப்பொழுதும் அந்த நீல கண்டத்தையுடைய பரமேஸ்வரனது திருமேனியில் அழகிய வாமபாகமானது அம்பிகைக்குக் கொடுக்கப்பட்டு கருப்பாக (நீல நிறமாக) இருக்கின்றதைக் காணலாம்.

**9. வேலை ஞாலத்த வரென்னை மீறவோ**
**மாலின் மாரிபின்வ டுக்கண்டு வைத்துமே**

| | |
|---|---|
| மாலின் மார்பில் | மஹா விஷ்ணுவினது நெஞ்சில் |
| வடுக் கண்டு வைத்தும் | லக்ஷிமி இருத்தலாகிய அடையாளத்தால் ஸ்ரீவத்சலன் என்னும் நாமம் பூண்டு விளங்குவதைத் தெரிசித்தும் (அறிந்தும்) |
| வேலை ஞாலத்தவர் | சமுத்திரம் சூழ்ந்த பூமியின்கண் உள்ளவர்கள் |
| என்னை | மன்மதனாகிய என்னையும் |
| மீறவோ | தாண்டவோ (வெற்றி கொள்ளவோ) கடந்து செல்ல மாட்டார்கள் என்பதாம். |

மஹா விஷ்ணுவினது நெஞ்சில் லக்ஷிமி இருத்தலாகிய அடையாளத்தால் ஸ்ரீவத்சலன் என்னும் நாமம் பூண்டு விளங்குவதைத் தெரிசித்தும் (அறிந்தும்) சமுத்திரம் சூழ்ந்த பூமியின்கண் உள்ளவர்கள் மன்மதனாகிய என்னையும் தாண்டவோ (வெற்றி கொள்ளவோ) கடந்து செல்ல மாட்டார்கள் என்பதாம்.

**10. விதியு மென்றன்வி தியினை வெல்லுமோ**
**மதிய ழிந்தும கட்கும யங்குமே**

| | |
|---|---|
| விதியும் | பிரம்மாவும் |
| என்றன் | என்னுடைய |
| விதியினை | நியமத்தை |
| வெல்லுமோ | வெற்றி கொள்ள முடியுமா. முடியாது. ஏன் ? |
| மதியிழந்து | விவேகமின்றி |
| மகட்கு | பூர்வம் திலோத்தமையைச் சிருட்டித்து அதனனந்தரம் |
| மயங்குமே | அவளது சௌந்தரியத்தில் மயங்கி மோகமடைந்தனரென்பதைக் கேட்கவில்லையோ. ஆனதால் என்னை ஒருவரும் வெற்றி கொள்ள |

| | |
|---|---|
| | முடியாது. |

பிரம்மாவும் என்னுடைய நியமத்தை வெற்றி கொள்ள முடியுமா. முடியாது. ஏன் ? விவேகமின்றி பூர்வம் திலோத்தமையைச் சிருட்டித்து அதனனந்தரம் அவளது சௌந்தரியத்தில் மயங்கி மோகமடைந்தனரென்பதைக் கேட்கவில்லையோ. ஆனதால் என்னை ஒருவரும் வெற்றி கொள்ள முடியாது.

**11. மலரோனு மாலு மதிசூடு வானும்**
**வடிவோடு கூடி வருமியாருமோ**
**ரலரோடு போத மழியாவொ ரோர்வு**
**மணுகாமல் மாத ரடி தாழ்வரே**

| | |
|---|---|
| மலரோனும் | பிரம்மாவும், |
| மாலும் | மஹா விஷ்ணுவும், |
| மதி சூடுவானும் | சந்திர சேகரனும், |
| வடிவோடு கூடி வரும் யாரும் | இன்னும் சொல்லாதொழிந்த தேகத்தோடு கூடிய சர்வ தேவதைகளும் |
| ஒரு அலரோடு | ஒரு புஷ்பத்தினாலேயே |
| போத மழியா | அறிவு கெட்டு, |
| ஓரோர்வு மணுகாமல் | ஒரு வித விவேகமுமின்றி |
| மாதரடி தாழ்வரே | மங்கையர்களது பாதமே பரம மோக்ஷமென்று மயக்கிக் கிடப்பார்கள். ஆனதால் என்னை ஜெயிப்பதற்கு முடியாது. தாங்கள் சுகமாக இருங்கள். |

பிரம்மாவும், மஹா விஷ்ணுவும், சந்திர சேகரனும், இன்னும் சொல்லாதொழிந்த தேகத்தோடு கூடிய சர்வ தேவதைகளும் ஒரு புஷ்பத்தினாலேயே அறிவு கெட்டு, ஒரு வித விவேகமுமின்றி மங்கையர்களது பாதமே பரம மோக்ஷமென்று மயக்கிக் கிடப்பார்கள். ஆனதால் என்னை ஜெயிப்பதற்கு முடியாது. தாங்கள் சுகமாக இருங்கள்.

**12. பரியேறும் வீரர் பலகோடி யோட**
**மலைபோல யானை பலமோதியே**
**யரியேறு நூறு மதி சூர ரேனு**
**மலர்வாளி காணி னற மாய்வரே**

| | |
|---|---|
| பரியேறும் வீரர் பல கோடி ஓட | அசுவப் பரீட்சையிற் குசலத் தன்மை வாய்ந்த அநேக கோடி சூர வீரர்களை ஓடும்படியும், |
| மலை போல யானை பல | பர்வதத்துக்குச் சமானமான அநேக யானைகளைத் தாக்கி |

| | |
|---|---|
| மோதியே | வரும் |
| அரியேறு | ஆண் சிம்மத்தையும் |
| நூறும் | நாசஞ் செய்யும் |
| மதி சூரனேனும் | கூரிய மதியுடைய இராவணன், கீசகன் முதலிய சூரர்களாயிருந்த போதிலும், |
| அலர் வாளி காணின் | புஷ்பமாகிய அம்பைக் காண்கில் |
| அற மாய்வரே | பெண்களிடத்து தங்கள் பலமெல்லாம் குன்றி தாசாதி தாசனாகி மிகவும் மயங்கி விடுவர். |

அசுவப் பரீட்சையிற் குசலத் தன்மை வாய்ந்த அநேக கோடி சூர வீரர்களை ஓடும்படியும், பர்வதத்துக்குச் சமானமான அநேக யானைகளைத் தாக்கி வரும் ஆண் சிம்மத்தையும் நாசஞ் செய்யும் கூரிய மதியுடைய இராவணன், கீசகன் முதலிய சூரர்களாயிருந்த போதிலும், புஷ்பமாகிய அம்பைக் காண்கில் பெண்களிடத்து தங்கள் பலமெல்லாம் குன்றி தாசாதி தாசனாகி மிகவும் மயங்கி விடுவர்.

**13. கரும்பெனினு மென்னுடைய கைச்சிலைய சோகங்
கமலநறு முல்லைகழு நீரினொடு சூதத்
தரும்பெனினு மென்கணைசு ரும்பெனினு நாணோ
ராவியுடை யார்களென தேவல்பிழை யாரே**

| | |
|---|---|
| என்னுடைய கைச்சிலை | மன்மதனாகிய என்னுடைய கையில் தரித்துள்ள வில்லானது |
| கரும்பெனினும் | வளைக்கும் போதே ஒடிந்து போகும்படியான கரும்பாயிருந்த போதிலும், |
| என் கணை | எனது அம்பு |
| அசோகம் | அசோக மலர் |
| கமலம் | தாமரை மலர் |
| நறுமலர் | வாசனை பரிமளிக்கா நின்ற முல்லைப்பூ, |
| கழு நீரினொடு | செங்கழுநீர் பூ, |
| சூதத் தரும்பு | சூத மலர் என்பதாய் இருந்தபோதிலும் |
| நாண் | வளைத்துக் கட்டும் போதே டங்காரத் தொனியைக் கிளப்புவதுபோல் தொனியை உண்டாக்குவதாகிய நாணானது |
| சுரும்பு | அறுகாற் பறவை யென்னும் வண்டாயிருந்த போதிலும், |
| ஆவியுடையார்கள் | இத்தகைய பாணத்தால் நான் அடிப்பனே ஆனால், ஜீவிதத்தோடு கூடிய ஜீவர்கள் |
| பிழையாரே | யாவரும் எனக்கு அடிமைப்பட்டு என் வசமாவர் என்பதிற் சிறிதும் |

| | |
|---|---|
| | தவறுதலின்று. |

மன்மதனாகிய என்னுடைய கையில் தரித்துள்ள வில்லானது வளைக்கும் போதே ஒடிந்து போகும்படியான கரும்பாயிருந்த போதிலும், எனது அம்பு அசோக மலர் தாமரை மலர் வாசனை பரிமளிக்கா நின்ற முல்லைப்பூ, செங்கழுநீர் பூ, சூத மலர் என்பதாய் இருந்தபோதிலும் வளைத்துக் கட்டும் போதே டங்காரத் தொனியைக் கிளப்புவதுபோல் தொனியை உண்டாக்குவதாகிய நாணானது அறுகாற் பறவை யென்னும் வண்டாயிருந்த போதிலும், இத்தகைய பாணத்தால் நான் அடிப்பனே ஆனால், ஜீவிதத்தோடு கூடிய ஜீவர்கள் யாவரும் எனக்கு அடிமைப்பட்டு என் வசமாவர் என்பதிற் சிறிதும் தவறுதலின்று.

**14. தேனிலவு பூகவன முந்தடமு மாறுஞ்**
**செய்யவிசை யேழுமுயி ருய்யவரு காலும்**
**வானிலவு மாளிகையும் வானிலவு மென்கை**
**மாமலரு முள்ளளவும் வந்துணர்வு றாதே.**

| | |
|---|---|
| தேனிலவு பூக வனமும் | தேன்கள் சொட்டாநின்ற பூங்காவனமும், |
| தடமும் ஆறும் | தடாகக் கரைகளும், நதி தீரங்களும், |
| செய்ய விசை ஏழும் | அழகிய சரிகமபதநி என்னும் சப்த ஸ்வரங்களும், |
| உயிர் உய்ய வரும் காலும் | பிராண ஜீவிதமாய தென்றற் காற்றும், |
| வானிலவு மாளிகையும் | ஆகாயமளாவிய மாட மாளிகைகளும், |
| வானிலவும் | ஆகாயத்திலுள்ள பூர்ண சந்திரனும், |
| என் கை மாமலரும் | சர்வ விடயங்களிலும் வாசனை பரிமளிக்கா நின்ற எனது கரத்திலுள்ள பெரிய மேலே கூறிய புஷ்பங்களும் |
| உள்ளளவும் | நமது இராஜ்ஜியத்தில் இருக்கும் பர்யந்தம் |
| வந்து உணர்வுறாதே | விவேகமானது ஒருவருக்கேனும் உதிக்க மாட்டாது. |

தேன்கள் சொட்டாநின்ற பூங்காவனமும், தடாகக் கரைகளும், நதி தீரங்களும், அழகிய சரிகமபதநி என்னும் சப்த ஸ்வரங்களும், பிராண ஜீவிதமாய தென்றற் காற்றும், ஆகாயமளாவிய மாட மாளிகைகளும், ஆகாயத்திலுள்ள பூர்ண சந்திரனும், சர்வ விடயங்களிலும் வாசனை பரிமளிக்கா நின்ற எனது கரத்திலுள்ள பெரிய மேலே கூறிய புஷ்பங்களும் நமது இராஜ்ஜியத்தில் இருக்கும் பர்யந்தம் விவேகமானது ஒருவருக்கேனும் உதிக்க மாட்டாது.

**15. தூமனனும் வாய்மையுமு றாதுமட வார்தஞ்**
**சொன்னவில வுள்ளளவு மென்னுமள வேயோ**

**காமனெனு நாமமுள தாமளவு மாடையக்**
**கங்குல் கழி யாதொருவர் கண்ணும்விழி யாரே.**

| | |
|---|---|
| மடவார் தம் சொல் நவில உள்ளளவும் | மகளிர்களது வார்த்தையானது (அவர்களது புகழைப் பற்றியும் அழகைப் பற்றியும் கீர்த்தித்தல் சொல்லுதற்கு) இருக்கும் பர்யந்தம் |
| தூமனனும் வாய்மையும் உறாது | பரிசுத்தமான மனதும் உண்மையான வாக்கும் உண்டாகமாட்டாது |
| என்னும் அளவையோ | என்று கூறும் இவ்வளவுதானா. |
| நாமுள்ளதாமளவும் | மன்மதன் என்னும் பெயரிருக்கும் பர்யந்தம் |
| மாயைக் கங்குல் கழியாது | மாயையென்னும் மோகாந்தகாரமானது நீங்காது. |
| ஒருவர் கண்ணும் விழியாரே | எப்போது மோக இருள் நீங்கவில்லையோ, அப்போது விவேக ரூப திருட்டியும் உண்டாக மாட்டாது. எல்லோரும் குருடராகவேதான் இருப்பார்கள். |

மகளிர்களது வார்த்தையானது (அவர்களது புகழைப் பற்றியும் அழகைப் பற்றியும் கீர்த்தித்தல் சொல்லுதற்கு) இருக்கும் பர்யந்தம் பரிசுத்தமான மனதும் உண்மையான வாக்கும் உண்டாகமாட்டாது என்று கூறும் இவ்வளவுதானா. மன்மதன் என்னும் பெயரிருக்கும் பர்யந்தம் மாயையென்னும் மோகாந்தகாரமானது நீங்காது. எப்போது மோக இருள் நீங்கவில்லையோ, அப்போது விவேக ரூப திருட்டியும் உண்டாக மாட்டாது. எல்லோரும் குருடராகவேதான் இருப்பார்கள்.

**16. அனிச்ச மஞ்சு மடியி னாரை யார்ம றப்ப ரறிவினான்**
**மனிச்சர் முன்பி ருந்து தான்வ டிக்கும் வார்த்தை வார்த்தையே**

| | |
|---|---|
| அனிச்சம் அஞ்சும் அடியினாரை | மிருதுவாகிய அனிச்ச மலரும் நாணும்படி மிருதுவாகவுள்ள பாதத்தை உடைய மகளிரை |
| யார் மறப்பர் | யாவர்தான் மறந்து விடுவர்.(ஒருவரும் மறக்கார்) |
| அறிவினான் | அப்படியிருக்க, தங்கள் புத்தியினால் |
| மனிச்சர் | மனிதர்கள் |
| முன்பு இருந்துதான் | (தேவரீர்) எனது சந்நிதானத்திலிருந்து |
| வடிக்கும் வார்த்தை வார்த்தையே | (பலர் கூடிய சபையில் பேசுபவரே மாதராசையை விட்டேன் என்று வாயளவில்) காமனை ஜெயித்துவிட்டேன் என்று பேசும் வார்த்தையும் வார்த்தையாமோ ? ஆகாது. |

மிருதுவாகிய அனிச்ச மலரும் நாணும்படி மிருதுவாகவுள்ள பாதத்தை உடைய மகளிரை யாவர்தான் மறந்து விடுவர்.(ஒருவரும் மறக்கார்) அப்படியிருக்க, தங்கள்

புத்தியினால் மனிதர்கள் (தேவரீர்) எனது சந்நிதானத்திலிருந்து (பலர் கூடிய சபையில் பேசுபவரே மாதராசையை விட்டேன் என்று வாயளவில்) காமனை ஜெயித்துவிட்டேன் என்று பேசும் வார்த்தையும் வார்த்தையாமோ ? ஆகாது.

** யார் மறப்பர் என்பதற்கு உதாரணம் பிரபோத சந்திரோதயம்.

வள்ளமா முலையினார் வாள்விழிப் பார்வையை
தள்ளுவார் போனெடுஞ் சபையில் வந்தேறியே
கள்ள மோடுரை செய்வார் கலவியூடலதுதம்
முள்ளமோ டவரை விட்டொழிவுளார் யாவரே.

**17. பாவ மேவு கொலையி னோடு படுக னற்செய் கொடுவிழிக்**
**கோப னேயெ ழுந்த போதிவ் வுலகு நின்று குலையுமே.**

(என்று இந்தப்படி காமன் கூறிய அனந்தரம் குரோதம் எழுந்து கூறும் வல்லபமானது)

| | |
|---|---|
| பாவமேவு கொலையினோடு | பாவமென்னும் சந்ததியைப் பெறும் கொலைத் தொழிலென்னும் மனைவியுடன், |
| படு | பொருந்திய |
| கனற்செய் | அக்னிப் பொறியைக் |
| கொடு விழிக் கோபனே | கக்கா நின்ற சிவந்த கொடிய நேத்திரத்தையுடைய கோபனானவன் |
| எழுந்தபோது | தோன்றிய அனந்தரம் |
| இவ்வுலகு நின்று குலையுமே | இவ்வுலகத்திலுள்ள ஜீவர்களெல்லாம் கண்டு வருந்தும். |

பாவமென்னும் சந்ததியைப் பெறும் கொலைத் தொழிலென்னும் மனைவியுடன், பொருந்திய அக்னிப் பொறியைக் கக்கா நின்ற சிவந்த கொடிய நேத்திரத்தையுடைய கோபனானவன் தோன்றிய அனந்தரம் இவ்வுலகத்திலுள்ள ஜீவர்களெல்லாம் கண்டு வருந்தும்.

**18. குலைகுலைந் துளநினைந் திடுநினைந் திடுதொறுங்**
**குடர்கரிந் துலகடங் கலுநடுங் குதலுறத்**
**தலைகுலைந் துடைகுலைந் தறிஞரும் பெரியதந்**
**தலைமைகுன் றிடவெழுஞ் சலமெனுந் தழலதே**

| | |
|---|---|
| நினைந்திடு நினைந்திடுதோறும் | அதனை நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் |
| உளம் குலை குலைந்து | மனமானது தகர்ந்து வருந்தி, |
| குடர் கரிந்து | குடலெல்லாம் வெப்பத்தால் தீய்ந்து |

| | |
|---|---|
| உலகு அடங்கலும் நடுங்குதலுற | உலகத்திலுள்ள சர்வ ஜீவர்களும் நடுக்கமுறும் படி |
| தலை குலைந்து | தலையிலுள்ள ரோமம் விரிந்து, |
| உடை குலைந்து | வஸ்திரங்களெல்லாம் அவிழ்ந்து, |
| அறிஞரும் | விவேக புருடரும் |
| பெரிய தந்தலைமை குன்றிட | மகத்தான தனது பெருந்தன்மையெல்லாம் கெட |
| எழும் சலமென்னும் தழலதே | உதியாநின்ற கோபமென்னும் அக்னியாம். |

அதனை நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் மனமானது தகர்ந்து வருந்தி, குடலெல்லாம் வெப்பத்தால் தீய்ந்து உலகத்திலுள்ள சர்வ ஜீவர்களும் நடுக்கமுறும் படி தலையிலுள்ள ரோமம் விரிந்து, வஸ்திரங்களெல்லாம் அவிழ்ந்து, விவேக புருடரும் மகத்தான தனது பெருந்தன்மையெல்லாம் கெட உதியாநின்ற கோபமென்னும் அக்னியாம்.

**19. தெருடரப் பொருள்விரித் தருடரத் திரிதருந்**
**தெளிஞரைத் தெளிவறத் திசைமயக் குறவெறுங்**
**குருடெனச் செவிடெனக் கொலைசினக் கனலெழுங்**
**கொதிபொறுப் பலர்களெக் குவலயத் தவர்களே**

| | |
|---|---|
| தெருள் தர | கேட்பவர் தெளிவடையும்படி (ஞானத்தைக் கொடுக்கும் பொருட்டு) |
| பொருள் விரித்தருள் தர | அத்தியான்ம சாஸ்திரத்தை ஐயந்திரிபர அர்த்தங்களை விரிவாக உபதேசித்துக்கொண்டு |
| திரிதரும் | சஞ்சரிக்கும் |
| தெளிஞரை | அறிவுடைய மஹான்களை, |
| தெளிவற | விவேகமெல்லாம் கெட்டு |
| திசை மயக்குற | நன்நெறி தீநெறி தெரியாமல் பிரமிக்கும்படி |
| வெறுங்குருடென | அத்தியந்தம் செய்யத் தகுந்தது தகாதது என்று தெரியாமல் குருடு (விவேக திருட்டி இல்லை) என்று சொல்லும் படிக்கும், |
| செவிடு என | (சொல்லத் தகுந்தது தகாதது எனவும், கேட்கத் தகுந்தது தகாததெனவும், செவிடென்று சொல்லும் படிக்கும் |
| கொலை சினக் கனலெழும் | கொலைத் தொழிலென்னும் மனைவியுடன் கோபமென்னும் அக்கினியானது தோன்றுமானால் |
| எக் குவலயத்தவர்கள் | எந்த உலகத்திலுள்ளவர்கள் |
| கொதி பொறுப்பாவர்கள் | கோபாக்கினியினது அதிகரித்ததைத் தாங்க முடியும். |

கேட்பவர் தெளிவடையும்படி (ஞானத்தைக் கொடுக்கும் பொருட்டு) அத்தியான்ம சாஸ்திரத்தை ஐயந்திரிபர அர்த்தங்களை விரிவாக உபதேசித்துக்கொண்டு சஞ்சரிக்கும் அறிவுடைய மஹான்களை, விவேகமெல்லாம் கெட்டு நன்நெறி தீநெறி தெரியாமல் பிரமிக்கும்படி அத்தியந்தம் செய்யத் தகுந்தது தகாதது என்று தெரியாமல் குருடு (விவேக திருட்டி இல்லை) என்று சொல்லும் படிக்கும், (சொல்லத் தகுந்தது தகாதது எனவும், கேட்கத் தகுந்தது தகாததெனவும், செவிடென்று சொல்லும் படிக்கும் கொலைத் தொழிலென்னும் மனைவியுடன் கோபமென்னும் அக்கினியானது தோன்றுமானால் எந்த உலகத்திலுள்ளவர்கள் கோபாக்கினியினது அதிகரிப்பைத் தாங்க முடியும்.

20. **வருசெ ருச்செயா வகைய றத்தையே**
**வடநி ழற்கணே மதிபெ றச்சொனோ**
**னொருச ரத்திலே யொருக ணத்திலே**
**யழல்பு ரத்தைநீ றெழவொ ருக்குமே.**

| | |
|---|---|
| வரு | தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் அடிக்கடி வராநின்ற |
| செரு செயா வகை | யுத்தத்தை செய்யாதவண்ணம் |
| அறத்தை | தர்மத்தை |
| வடநிழற்கணே | வடவால நீழலின்கண்ணே அமர்ந்திருந்து |
| மதி பெறச் சொனோன் | புத்தியானது சமாதானத்தால் சாந்தி அடையும்படிக்கு உபதேசித்த சாட்சாத் பரமேஸ்வரனும் |
| ஒரு சரத்திலே | கோபனாகிய எனது வல்லபத்தால் ஓர் அம்பினாலே |
| ஒரு கணத்திலே | ஒரு க்ஷண நேரத்தில் |
| உழல் புரத்தை | தாருகாக்ஷன், கமலாக்ஷன், வித்தியன், மாலி முதலியோர் சரிக்கும் மூன்று புரங்களையும் |
| நீறெழ ஒறுக்கும் | பஸ்பமாகும்படி நாசஞ் செய்யும். |

தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் அடிக்கடி வராநின்ற யுத்தத்தை செய்யாதவண்ணம் தர்மத்தை வடவால நீழலின்கண்ணே அமர்ந்திருந்து புத்தியானது சமாதானத்தால் சாந்தி அடையும்படிக்கு உபதேசித்த சாட்சாத் பரமேஸ்வரனும் கோபனாகிய எனது வல்லபத்தால் ஓர் அம்பினாலே ஒரு க்ஷண நேரத்தில் தாருகாக்ஷன், கமலாக்ஷன், வித்தியன், மாலி முதலியோர் சரிக்கும் மூன்று புரங்களையும் பஸ்பமாகும்படி நாசஞ் செய்யும்.

21. **மறுக வுக்கிரத் தொழில ரக்கர்தம்**
**மநமும் வாரியு மதிலி யங்கையுந்**
**தெறுக ணற்கொளச் சிலைவ ளைத்ததுஞ்**
**சிரமு திர்த்ததுஞ் சினமி குத்தலே.**

| | |
|---|---|
| உக்கிரத் தொழிலரக்கர் தம் மனமும் மறுக | உக்கிரமான கொலைத் தொழிலாகிய பாப கிருத்தியங்களையே சதாயியற்றும் இராக்ஷதர்களது மனமும் மயங்கும்படி, |
| வாரியும் | சமுத்திரமும் |
| மதில் இலங்கையும் | பெரிய மதில்கள் சூழ்ந்த இலங்காபுரியும் |
| தெற | நாசமாக, |
| கனல் கொளற் | அக்கினியால் தகிக்கும் படி |
| சிர முதிர்த்ததும் | வில்லை வளைத்ததும், அங்குள்ள அரக்கர்களது தலைகளைக் கொய்ததும் எதனால் என்றால், |
| சினமிகுத்தலே | சமதமாதி குணங்கள் நிறைந்த ஸ்ரீராகவருக்கும் கோப மிகுந்ததினாலல்லவா அவ்வாறு செய்தனர். |

உக்கிரமான கொலைத் தொழிலாகிய பாப கிருத்தியங்களையே சதாயியற்றும் இராக்ஷதர்களது மனமும் மயங்கும்படி, சமுத்திரமும் பெரிய மதில்கள் சூழ்ந்த இலங்காபுரியும் நாசமாக, அக்கினியால் தகிக்கும்படி வில்லை வளைத்ததும், அங்குள்ள அரக்கர்களது தலைகளைக் கொய்ததும் எதனால் என்றால், சமதமாதி குணங்கள் நிறைந்த ஸ்ரீராகவருக்கும் கோப மிகுந்ததினாலல்லவா அவ்வாறு செய்தனர்.

**22. கோப மிக்கபோ தேவ ராறுவார்**
**குறுகு வோர்தமைக் கொடிய நோய்புகுஞ்**
**சாப மிட்டுமா தவர்க ளாயினார்**
**தலைமை மிக்கதந் தவமி ழப்பரே**

| | |
|---|---|
| கோபமிக்கபோது | கோபனாகிய யான் அதிகமாக உதயமாகு வேனானால் |
| ஏவர் ஆறுவார் | யாவர்தான் பொறுப்பார் ? ஏன் பொறுக்க முடியாதெனில், |
| கொடியநோய் புகும் | கோபமானது கிட்டியவரிடத்து கொடிதான வியாதியானது(துன்பமானது) வந்தடையும். மிகைபடக் கூறுவான். |
| மாதவர்களாயினார் | ஏன் ? இதனுடைய கொடுமையினால்தான் பெரிய தவமுடைய துருவாசர், விசுவாமித்திரர் முதலிய மஹரிஷிளுங் கூட கோபம் வந்தபோது |
| சாபமிட்டு | இரக்கமின்றி சாபங்களைக் கொடுத்து |
| தலைமை மிக்க | அதனால் அதி உத்கிருஷ்டமான |
| தம் தவம் இழப்பரே | தங்களது தவங்களையெல்லாம் இழந்து விடுகின்றனர். ஆகையினாலே ஒருவரும் எங்களை ஜெயிக்க முடியாததால் தாங்கள் கெம்பீரமாக அரசு செய்து கொண்டிருக்கலாம். |

கோபனாகிய யான் அதிகமாக உதயமாகு வேனானால் யாவர்தான் பொறுப்பார்? ஏன் பொறுக்க முடியாதெனில், கோபமானது கிட்டியவரிடத்து கொடிதான வியாதியானது(துன்பமானது) வந்தடையும். மிகைபடக் கூறுவான். ஏன். இதனுடைய கொடுமையினால்தான் பெரிய தவமுடைய துருவாசர், விசுவாமித்திரர் முதலிய மஹரிஷிளுங் கூட கோபம் வந்தபோது இரக்கமின்றி சாபங்களைக் கொடுத்து அதனால் அதி உத்கிருஷ்டமான தங்களது தவங்களையெல்லாம் இழந்து விடுகின்றனர். ஆகையினாலே ஒருவரும் எங்களை ஜெயிக்க முடியாததால் தாங்கள் கெம்பீரமாக அரசு செய்து கொண்டிருக்கலாம்.

**23. அடலோப னெழிலேவ ரமைவார்க ளடையக்**
**கடலோடு மலையோடு தடுமாறல் காணே**

(இந்தப் பிரகாரம் கோபன் கூறி முடிந்த அனந்தரம் லோபம் என்னும் மூன்றாவது சேனாதிபதி கூறுகின்றனன். ஹே! ராஜன்! லோபனாகிய நான் எத்தகையன் தெரியுமா? சாட்சாத் திரிமூர்த்திகளுமே லோபனாகிய யான் உதயமான அனந்தரம் இருப்பது போதும் என்னும் திருப்தி இன்றியவராய் தெருவுகள் தோறும் பிச்சைக்குச் சென்று விட்டனர்கள் என்றால் யாவர் எம்மைக் கடப்பவர் என்று கூற ஆரம்பிக்கின்றனன்.)

| | |
|---|---|
| அடலோபன் எழில் | வெற்றியுடைய லோபனாகிய யான் உதிக்கில் |
| ஏவர் அமைவார்கள் | யாவர்தான் போதும் என்னும் திருப்தியுடையவராவார்கள்? பின்னரோ திருப்தியின்றியவராய்ப் |
| அடைய | பொருளைப் பெறும் பொருட்டு சர்வ ஜீவர்களும் திரைகடலோடியுந் திரவியம் தேடு என்னும் ஒரு நீதி மொழியை இலக்காகக் கொண்டு |
| கடலோடு | சப்த சமுத்திரமென்ன, |
| மலையோடு | சப்த குல பர்வதமென்ன. |
| தடுமாறல் தானே | இவைகளையெல்லாம் கடந்து தத்தளிக்கின்றனர். |

வெற்றியுடைய லோபனாகிய யான் உதிக்கில் யாவர்தான் போதும் என்னும் திருப்தியுடையவராவார்கள்? பின்னரோ திருப்தியின்றியவராய்ப் பொருளைப் பெறும் பொருட்டு சர்வ ஜீவர்களும் திரைகடலோடியுந் திரவியம் தேடு என்னும் ஒரு நீதி மொழியை இலக்காகக் கொண்டு சப்த சமுத்திரமென்ன, சப்த குல பர்வதமென்ன. இவைகளையெல்லாம் கடந்து தத்தளிக்கின்றனர்.

**24. பேரோத நேரான பேராசை கூர்போ**
**தாரோடு முண்டோவொ ரன்பென்ப தங்கே**

| | |
|---|---|
| பேரான நேரான | பெரிய சமுத்திரத்திற்கு நிகரான |
| பேராசை கூர்போது | திருப்தியின்றிய அதிக ஆசையானது மிகும் காலத்து, |
| அங்கே | அவ்விடத்து |
| ஓர் அன்பு என்பது | ஒப்பற்ற அன்பு (இரக்கம்) என்று சொல்வது |
| ஆரோடும் உண்டோ | யாவரிடத்தானும் தங்கியிருக்குமா அல்லது உதயந்தான் ஆகுமா ? ஆகாது. |

பெரிய சமுத்திரத்திற்கு நிகரான திருப்தியின்றிய அதிக ஆசையானது மிகும் காலத்து, அவ்விடத்து ஒப்பற்ற அன்பு (இரக்கம்) என்று சொல்வது யாவரிடத்தானும் தங்கியிருக்குமா அல்லது உதயந்தான் ஆகுமா ? ஆகாது.

**25. ஆலஞ்சேர் மிடற்றானு மையத்திற் குழன்றிலனோ**
**மாலும்போய் மாவலிபான் மண்வேண்டி நின்றிலனோ**

| | |
|---|---|
| ஆலஞ்சேர் மிடற்றானும் | ஆலகால விஷத்தைக் கண்டத்திற் றரித்துள்ளஸ்ரீபரமேஸ்வரனும் திருப்தியின்றியவராய் |
| ஐயத்திற் குழன்றிலனோ | பிக்சைக்காக ஊரெங்கும் சுற்றவில்லையோ. |
| மாலும்போய் | தவிரவும் சர்வ லோக ரக்ஷகனாய மஹாவிஷ்ணுவும் வாமனரூபமாய் |
| மாவலி பால் | மகாபலிச் சக்கரவர்த்தியிடம் சென்று |
| மண் வேண்டி நின்றிலனோ | மூன்றடி மண் யாசித்ததும் யாரால் ? என்னால்தானே. ஆனதால் லோபமாகிய என்னைக் கடக்க ஒருவராலும் முடியாது. |

ஆலகால விஷத்தைக் கண்டத்திற் றரித்துள்ளஸ்ரீபரமேஸ்வரனும் திருப்தியின்றியவராய் பிக்சைக்காக ஊரெங்கும் சுற்றவில்லையோ. அவிரவும் சர்வ லோக ரக்ஷகனாய மஹாவிஷ்ணுவும் வாமனரூபமாய் மகாபலிச் சக்கரவர்த்தியிடம் சென்று மூன்றடி மண் யாசித்ததும் யாரால் ? என்னால்தானே. ஆனதால் லோபமாகிய என்னைக் கடக்க ஒருவராலும் முடியாது.

**26. உரையாத பொய்யுண்டோ வுலோபனே யுற்றக்காற்**
**றரையாளும் பொருட்டன்றோ தருமனும்பொய் சாற்றியதே**

| | |
|---|---|
| லோபனே யுற்றக்கால் | லோபனா யான் ஒருவரிடத்துட் பொருந்துவனேயானால், |
| உரையாத | சொல்லாத பொய்யும் உலகத்திலிருக்கின்றதோ. |

| | |
|---|---|
| பொய்யுண்டோ | |
| தருமனும் | அதற்கு உதாரணமாக சத்திய வசனமுடைய தர்மராஜரும் |
| தரையாளும் பொருட்டன்றோ | தனக்கு உள்ளதுபோறாமல் பூமியை ஆளவேண்டுமென்னும் இச்சையினாலல்லவா |
| பொய் சாற்றியது | யுத்த களத்தில் பொய்யைக் கூறியதும். தரும ராஜாவே பொய் கூறினாரென்றால் மற்றையர் கதை என்னாகும். ஆனதால் என்னை வெல்ல முடியாது. |

லோபனா யான் ஒருவரிடத்துட் பொருந்துவனேயானால், சொல்லாத பொய்யும் உலகத்திலிருக்கின்றதோ. அதற்கு உதாரணமாக சத்திய வசனமுடைய தர்மராஜரும் தனக்கு உள்ளதுபோறாமல் பூமியை ஆளவேண்டுமென்னும் இச்சையினாலல்லவா யுத்த களத்தில் பொய்யைக் கூறியதும். தரும ராஜாவே பொய் கூறினாரென்றால் மற்றையர் கதை என்னாகும். ஆனதால் என்னை வெல்ல முடியாது.

**27. ஈசனொளி யோரிடத்துநிகழா வண்ண**
**மெவ்வுருவுந் தன்னுருவா யெங்குந்தானா**
**மாசையவ னோர்சேநா பதியின் றேலிவ்**
**வஞ்ஞுகுல பதிபெருமை யறிவா ரியாரே**

| | |
|---|---|
| ஈசன் ஒளி ஓரிடத்தும் | பரமேஸ்வரனது பிரகாசம் (சர்வேஸ்வரன் ஒருவன் இருக்கின்றான் என்பது) ஒரு விடத்திலேனும் |
| நிகழா வண்ணம் | விளங்காத விதம் |
| எவ்வுருவுந் தன்னுருவாய் | எவ்வடிவத்தையும் தன் வடிவமாய், |
| எங்குந் தானாம் ஆசையவன் | அதாவது எதைக் கண்டாலும் ஆசைமயமாய் எவ்விடங்களிலும் தானாக விளங்கும் பேராசையென்னும் பெயருடைய |
| ஓர் சேனாபதியின்றேல் | ஒப்பற்ற சேனாபதியில்லாவிடில் |
| அஞ்ஞு குல பதி பெருமை | அஞ்ஞு வேந்தனது பெருமையை |
| அறிவார் யாரே | யாவர் தான் காண விரும்புவர். ஒருவரும் விரும்பார். ஆனதால் ஹே ராஜன், லோபமென்னும் பேராசையைக் கடந்தல்லவா உம்மிடத்து வர வேண்டும். எம்மையே கடவாத போது தங்களை எப்படி ஜெயிக்க முடியும் ? தாங்கள் அஞ்ச வேண்டாம். தைரியமாகி விடும். |

பரமேஸ்வரனது பிரகாசம் (சர்வேஸ்வரன் ஒருவன் இருக்கின்றான் என்பது) ஒரு விடத்திலேனும் விளங்காத விதம் எவ்வடிவத்தையும் தன் வடிவமாய், அதாவது எதைக் கண்டாலும் ஆசைமயமாய் எவ்விடங்களிலும் தானாக விளங்கும் பேராசையென்னும் பெயருடைய ஒப்பற்ற சேனாபதியில்லாவிடில் அஞ்ஞு வேந்தனது பெருமையை யாவர்

தான் காண விரும்புவர். ஒருவரும் விரும்பார். ஆனதால் ஹே ராஜன், லோபமென்னும் பேராசையைக் கடந்தல்லவா உம்மிடத்து வர வேண்டும். எம்மையே கடவாத போது தங்களை எப்படி ஜெயிக்க முடியும் ? தாங்கள் அஞ்ச வேண்டாம். தைரியமாகி விடும்.

**28. புகர்வெண்டேர் புனலென்று புலன்க ளாரப்**
**போயலையத் திளைத்திளைத்துப் பொய்யே யார்ந்து**
**சகர்திண்டா டச்செய்யு மோக னஞ்ஞன்**
**றானான சமன்வேறோர் தன்மை யின்றே**

| | |
|---|---|
| புகர் வெண்தேர் | தோஷத்தால் தோன்றாநின்ற பேய்த்தேரை |
| புனல் என்று | (கானற் சலத்தை) ஜலமென்று கருதி |
| புலன்களாரப் போய் அலையத் திளைத்து இளைத்து | (போய் வரும் தன்மை போல்) சர்வேந்திரியங்களும் விஷயங்களின்கண் ரமிப்பச் சென்று அலைந்து மயங்கி வருந்தி, |
| பொய்யே யார்ந்து | மித்தையா விஷயத்தையே பொருந்தி, |
| சகர் திண்டாடச் செய்யும் மோகன் | ஜகத்திலுள்ள ஜீவர்களெல்லாம் திண்டாடும்படி செய்விப்பன். மோகன் என்னும் யான் |
| நஞ்சன் | கொடிய விஷம் போன்று மயங்கும்படி செய்பவன். |
| தானான | இத்தகைய சுபாவமுடையவனான எனக்கு |
| சமன் வேறோர் தன்மையின்று | சமானமாக ஒருவித பலமுடையவனும் பிறிதாக இல்லவே இல்லை. |

தோஷத்தால் தோன்றாநின்ற பேய்த்தேரை (கானற் சலத்தை) ஜலமென்று கருதி (போய் வரும் தன்மை போல்) சர்வேந்திரியங்களும் விஷயங்களின்கண் ரமிப்பச் சென்று அலைந்து மயங்கி வருந்தி, மித்தையா விஷயத்தையே பொருந்தி, ஜகத்திலுள்ள ஜீவர்களெல்லாம் திண்டாடும்படி செய்விப்பன். மோகன் என்னும் யான் கொடிய விஷம் போன்று மயங்கும்படி செய்பவன். இத்தகைய சுபாவமுடையவனான எனக்கு சமானமாக ஒருவித பலமுடையவனும் பிறிதாக இல்லவே இல்லை.

**29. மோகமுற வேமுநிவர் மூவர்முதற் றேவர்நர**
**ரியாவர்களு மியாவை யுமெலா**
**மாகமது யானெனது தந்தைதமர்**
**தாரமக வென்பது மொழிந்த திலரே**

| | |
|---|---|
| மோகமுறவே | மோகனாகிய யான் பொருந்த (அதாவது சர்வத்திலும் விபரீதத் தன்மையடைய) |
| முனிவர் | மனன சீலராய் மஹரிஷிகளும், |
| மூவர் முதல் | பிரம்மாதி திரிமூர்த்தியே முதலாக |

| | |
|---|---|
| தேவர் நரர் யாவர்களும் | இந்திராதி தேவர்கள் மனிதர்கள் ஆகிய யாவரும் |
| யாவையும் | (இன்னும்) பசு, பக்ஷி முதலான யாவையும் |
| அகமது யான் | தேகமே நான் என்றும், |
| தமர் தாரம் மகவு | என்னுடைய பிதா, என்னுடைய சுற்றம், என்னுடைய மனைவி, |
| மகவது என்பதெலாம் | என்னுடைய புத்திரன் என்று அபிமானித்து சொல்லப்பட்ட அனைத்தும் |
| ஒழிந்திலர் | நீங்கியவராக இல்லை. |

மோகனாகிய யான் பொருந்த (அதாவது சர்வத்திலும் விபரீதத் தன்மையடைய) மனன சீலராய் மஹரிஷிகளும், பிரம்மாதி திரிமூர்த்தியே முதலாக இந்திராதி தேவர்கள் மனிதர்கள் ஆகிய யாவரும் (இன்னும்) பசு, பக்ஷி முதலான யாவையும் தேகமே நான் என்றும், என்னுடைய பிதா, என்னுடைய சுற்றம், என்னுடைய மனைவி, என்னுடைய புத்திரன் என்று அபிமானித்து சொல்லப்பட்ட அனைத்தும் நீங்கியவராக இல்லை.

**30. மோகமுற வேயெவரு மோகமத னாலிடரின்**
**முந்து வர்மு டிந்த விடமுஞ்**
**சோகமுற வேதுயர முந்துவத**
**லாததுது றந்துணர்வு கூறவிலரே**

| | |
|---|---|
| யெவரும் மேக முறவே | யாவரும் மோகத்தையடைய, |
| மோக மதனால் இடரின் முந்துவர் | அம்மோகத்தால் (விபரீதத்தால்) துன்பத்தில் மூழ்குவர் (அடைவர்). |
| முடிந்த விடமும் | விஷயம் நஷ்டமான இடத்தும் |
| சோக முறவே | சோகத்தையடைந்து |
| துயரமுந்துவதலால் | துன்பத்தில் மூழ்குவரேயன்றியில் |
| அது துறந்து | அவ்விடயங்கள் நம்மை விட்டு நீங்கியதே நலமென்று அவைகளை மீண்டும் அணுகாவண்ணம் நிவர்த்தி செய்து |
| உணர்வு கூறவிலரே | பிரம அத்வைதக் ஞானத்தை அடையவில்லை. |

யாவரும் மோகத்தையடைய, அம்மோகத்தால் (விபரீதத்தால்) துன்பத்தில் மூழ்குவர் (அடைவர்). விஷயம் நஷ்டமான இடத்தும் சோகத்தையடைந்து துன்பத்தில் மூழ்குவரேயன்றியில் அவ்விடயங்கள் நம்மை விட்டு நீங்கியதே நலமென்று அவைகளை மீண்டும் அணுகாவண்ணம் நிவர்த்தி செய்து பிரம அத்வைதக் ஞானத்தை அடையவில்லை.

**31. ஓசையி னிற்பெரியே னோதின்மி கப்பெரியே**
**னுங்களி னெண்மடிநான் வங்கிச மெனிற்பெரியே**
**னீசனெ னக்கெதிரோ வேவரெ னக்கெதிர்வே**

**றென்னும கங்காரத் தெவரெதி ரேறுவரே.**

(இப்படி மோகன் கூறிய அனந்தரம் அடரும் பிறவிக் கடியென்றுணரும் அகங்காரம் கூறுகின்றான். அகங்காரமென்னும் நான் ஒவ்வொருவரிடத்தும் உதயமாவேனேயானால் ஈசன் முதல் எவரும் கடந்து செல்ல மாட்டார்கள்)

| | |
|---|---|
| ஓசையினில் பெரியேன் | கண்டத்தொனியில் என்னை விட யாரிருக்கின்றார் என்றும், |
| ஓதின் மிகப் பெரியேன் | வேத அத்தியயனம் செய்பவருள்ளும் சுரங்களை விடாமல் அத்தியயனம் செய்வதில் என்னைவிட யாரிருக்கின்றார் என்றும், |
| உங்களின் எண் மடி நான் | உங்களெல்லாவரினும் எட்டு மடங்கு என்னை அதிகமென்று சொல்ல வேண்டும். |
| வங்கி சமெனில் | குலத்தில், குணத்தில், பணத்தில் இன்னும் சொல்லா தொழிந்த எதைப் பார்த்தாலும் நான் பெரியவனே, |
| ஈசன் | ஈசுவரனும் |
| எனக் கெதிரோ | எனக்குச் சமானமாகார். |
| வேறு யாவர் எனக் கெதிர் | பரமேஸ்வரனே சமானமில்லாத போது வேறு யாவர் எனது முன்னிலையில் பெரியவனென்று வரமுடியும். |
| என்னும் | ஒருவரும் தலை எடுக்க முடியாதாக்கும் என்றுகூறும் |
| அகங்காரத்து எதிர் | அகங்காரமாகிய என் முன்னிலையில் |
| ஏறுவர் எவர் | கடந்து செல்பவர் யாவர்தான் இருக்கின்றனர். |

கண்டத்தொனியில் என்னை விட யாரிருக்கின்றார் என்றும், வேத அத்தியயனம் செய்பவருள்ளும் சுரங்களை விடாமல் அத்தியயனம் செய்வதில் என்னைவிட யாரிருக்கின்றார் என்றும், உங்களெல்லாவரினும் எட்டு மடங்கு என்னை அதிகமென்று சொல்ல வேண்டும். குலத்தில், குணத்தில், பணத்தில் இன்னும் சொல்லா தொழிந்த எதைப் பார்த்தாலும் நான் பெரியவனே, ஈசுவரனும் எனக்குச் சமானமாகார். பரமேஸ்வரனே சமானமில்லாத போது வேறு யாவர் எனது முன்னிலையில் பெரியவனென்று வரமுடியும். ஒருவரும் தலை எடுக்க முடியாதாக்கும் என்றுகூறும் அகங்காரமாகிய என் முன்னிலையில் கடந்து செல்பவர் யாவர்தான் இருக்கின்றனர்.

**32. என்னளவீசனும்வந் தேற்றொழி யும்பலிசென்**
**றேற்றில னாகினயன் றோற்றமி லன்றிருமா**
**றன்னள வோரவியுஞ் சந்திர னிந்திரனுஞ்**
**சற்றரெ னப்பகருந் தம்படை நம்படையே**

| | |
|---|---|
| என்னளவு | என்னிடத்து |
| ஈசனும் வந்து | பரமசிவனும் வந்து |
| பலி ஏற்றொழியும் | நான் என்னும் பிச்சையை யாசித்து நீங்கும். |
| சென்று ஏற்றிலனாகின் | என்னிடத்து வந்து நான் என்பதை யாசிக்காவிடில், |
| அயன் திருமால் | பிரம்மனும் விஷ்ணுவும் |
| தோற்றமிலன் | தோன்றுதற்கே முடியாது. அதாவது பரமசிவமும் நான் என்பது இல்லாவிட்டால் ஆக்கி அளித்து அழிக்கும் திரிமூர்த்தியாக ஆகார். என்னாலேயே படைத்தளித்தழிப்ப மும்மூர்த்தியாக விளங்குகின்றனர். |
| தன்னளவோ | இன்னும் தேவரீர் முன்பு என்னுடைய பெருமை இவ்வளவுதானா. |
| ரவியும் | சூரியனும் |
| சந்திரன் | மதியும் |
| இந்திரன் | தேவேந்திரனும் இன்னும் யாவரும் |
| சற்றரெனப்பகரும் | துரும்புக்குச் சமானமாகச் சொல்லும்படியான |
| தம்படை | தேவரீரது படையாவும் |
| நம்படையே | அகங்காரமாகிய என்னை தீனமாகவே தான் தங்கள் தங்களது காரியத்தைச் செய்ய வேண்டும். ஆதலால் எல்லாம் நம்முடைய படையேதான். என்னைச் ஜெயிக்க யாவராலும் முடியவே முடியாது. |

என்னிடத்து பரமசிவனும் வந்து நான் என்னும் பிச்சையை யாசித்து நீங்கும். என்னிடத்து வந்து நான் என்பதை யாசிக்காவிடில், பிரம்மனும் விஷ்ணுவும் தோன்றுதற்கே முடியாது. அதாவது பரமசிவமும் நான் என்பது இல்லாவிட்டால் ஆக்கி அளித்து அழிக்கும் திரிமூர்த்தியாக ஆகார். என்னாலேயே படைத்தளித்தழிப்ப மும்மூர்த்தியாக விளங்குகின்றனர். இன்னும் தேவரீர் முன்பு என்னுடைய பெருமை இவ்வளவுதானா. சூரியனும் மதியும் தேவேந்திரனும் இன்னும் யாவரும் துரும்புக்குச் சமானமாகச் சொல்லும்படியான தேவரீரது படையாவும் அகங்காரமாகிய என்னை தீனமாகவே தான் தங்கள் தங்களது காரியத்தைச் செய்ய வேண்டும். ஆதலால் எல்லாம் நம்முடைய படையேதான். என்னைச் ஜெயிக்க யாவராலும் முடியவே முடியாது

**33. கதத்த யானை யைத்த ணிப்பர் களிமி குத்தெ ழுந்தமா**
**மதத்தை யார்த ணிக்க வல்லர் மண்ணி னன்றி விண்ணிலே**

(இப்படி அகங்காரம் கூறி முடிந்ததும், மதம் (செருக்கு) என்பவன் இரண்டு உலகத்திலும் என்னை ஜெயிப்பவர்கள் இல்லை என்று தன்னுடைய பெருமிதம் கூறுகின்றனன்)

| | |
|---|---|
| கதத்த யானையைத் தணிப்பர் | மும்மதங்களும் மிகுந்து அதனால் கோபமிகுந்த யானையையும் சாந்தி செய்வர் இருந்தாலும், |
| களி மிகுந்தெழுந்த | மிகுந்த மகிழ்ச்சியுடன் தோன்றா நின்ற |
| மாமதத்தை | பெரிய செருக்கை |

| | |
|---|---|
| யார் தணிக்க வல்லார் | யாவர்தான் சாந்தி செய்ய இயலும். |
| மண்ணினன்றி | பூமியின்கண் ஐஸ்வர்யத்தால் வந்த செருக்கை தணிக்க முடியாதது போலவே |
| விண்ணிலே | தேவலோகத்திலும் இந்த மதத்தைத் தணிப்பவர் ஒருவருமிலர். |

மும்மதங்களும் மிகுந்து அதனால் கோபமிகுந்த யானையையும் சாந்தி செய்வர் இருந்தாலும்,மிகுந்த மகிழ்ச்சியுடன் தோன்றா நின்ற பெரிய செருக்கை யாவர்தான் சாந்தி செய்ய இயலும். பூமியின்கண் ஐஸ்வர்யத்தால் வந்த செருக்கை தணிக்க முடியாதது போலவே தேவலோகத்திலும் இந்த மதத்தைத் தணிப்பவர் ஒருவருமிலர்.

**34. எச்ச ரங்க ளுந்த மக்கெ திர்ந்து ளோர்க ளைப்படு**
**மச்ச ரன்ற னாவி தன்னை வவ்வு தற்கு வல்லரே**

| | |
|---|---|
| எச்சரங்களும் | சர்வ பாணங்களும் |
| தமக்கு எதிர்ந்துளோர்களைப் படும் | தனக்கு எதிர்ப்பட்டவர்களை நாசமாக்கும். |
| மச்சரன்றன் ஆவிதன்னை | இருந்தாலும் மனதின் கண்ணே மச்சரமாகிய (பொறாமையாகிய) நான் வாசஞ் செய்து அவர்களை துன்புறுத்துகின்ற படியால், மச்சரமாகிய என்னுடைய பிராணனை |
| வவ்வுதற்கு | பிடித்துக் கொல்வதற்கு |
| யாவர் வலியரே | யார்தான் வல்லமை உடையவராக இருக்கின்றனர். ஒருவருமிலர். |

சர்வ பாணங்களும் தனக்கு எதிர்ப்பட்டவர்களை நாசமாக்கும். இருந்தாலும் மனதின் கண்ணே மச்சரமாகிய (பொறாமையாகிய) நான் வாசஞ் செய்து அவர்களை துன்புறுத்துகின்ற படியால், மச்சரமாகிய என்னுடைய பிராணனை பிடித்துக் கொல்வதற்கு யார்தான் வல்லமை உடையவராக இருக்கின்றனர். ஒருவருமிலர்.

**35. தந்த வப்ப யன்பு சித்தல் கண்டு நெஞ்சு தன்னுளே**
**வெந்த வப்பொ றாமை தன்னை வெல்க யாவர் வல்லரே**

| | |
|---|---|
| தம் தவப் பயன் புசித்தல் கண்டும் | தங்கள் தங்களது பூர்வம் செய்த வினைப்பயனை அனுபவித்தலைப் பார்த்தும், |
| நெஞ்சு தன்னுள்ளே | அதனைப் பார்ப்பவர்களது மனத்தின்கண்ணே |
| வெந்த | தகித்துக் கொண்டுள்ள |
| அப்பொறாமைதன்னை | அந்தப் பொறாமை யென்னும் என்னை |

| | |
|---|---|
| யாவர் வெல்ல வல்லர் | யாவர் ஜெயிக்க வல்லவர். ஒருவரும் இல்லை. ஹே ராஜன், நீங்கள் சுகமாக இருங்கள். |

தங்கள் தங்களது பூர்வம் செய்த வினைப்பயனை அனுபவித்தலைப் பார்த்தும், அதனைப் பார்ப்பவர்களது மனத்தின்கண்ணே தகித்துக் கொண்டுள்ள அந்தப் பொறாமை யென்னும் என்னை யாவர் ஜெயிக்க வல்லவர். ஒருவரும் இல்லை. ஹே ராஜன், நீங்கள் சுகமாக இருங்கள்.

**36. ஞாந மாசில் தன்ம வித்த காம நாம நாலையு**
**மீந மாக்கு நம்ப டைக்கொ ரெல்லை சொல்வ தெங்கனே**

| | |
|---|---|
| ஞானம் மாசில் தன்மம் வித்த காம நாம நாலையும் | அறம், பொருள், இன்பம்,குற்றமற்ற வீடு என்னும் பெயருடைய சதுர்வித புருஷார்த்தத்தையும் |
| ஈனமாக்கும் | நாசமாக்கும்.(உண்டாகாமல் செய்யும்) ஆனதால் |
| நம் படைக்கு ஓர் எல்லை சொல்வதெங்கனே | நமது காமனே முதல் பொறாமையீறாகக் கூறிய படைகளுக்கு ஓர் அளவு கூறுவது எவ்வாறு முடியும். ஒரு விதத்தாலும் அளவிட்டுக் கூற முடியாது அபரிமிதமாக இருக்கின்றன. |

அறம், பொருள், இன்பம்,குற்றமற்ற வீடு என்னும் பெயருடைய சதுர்வித புருஷார்த்தத்தையும் நாசமாக்கும்.(உண்டாகாமல் செய்யும்) ஆனதால் நமது காமனே முதல் பொறாமையீறாகக் கூறிய படைகளுக்கு ஓர் அளவு கூறுவது எவ்வாறு முடியும். ஒரு விதத்தாலும் அளவிட்டுக் கூற முடியாது அபரிமிதமாக இருக்கின்றன.

**37. இங்கி யாது மிவனி யம்ப வின்ப மெய்தி யிறைவனைச்**
**சங்கி யாம லஞ்ஞ சேனை தாம கிழ்ந்தி ருக்கவே.**

| | |
|---|---|
| இங்கு | ஈண்டு |
| இவன் | இந்த அகங்காரமானவன் |
| இயம்ப | இந்தப்படி யாவையுங்கூற |
| இன்பமெய்தி | மகானந்தத்தில் மூழ்கினவராய் |
| இறைவனை | இராஜனை |
| சங்கியாமல் | தங்களை யாரோ வெல்ல வந்திருக்கிறார்களாமே என வினவாமல், |
| அஞ்ஞ சேனை | அஞ்ஞ வேந்தனது படைகள் |

| | |
|---|---|
| தாம் மகிழ்ந்திருக்கவே | தங்கள் தங்கள் வேலைகளைத் சரிவரச் செய்து கொண்டு சந்தோஷத்துடன் வீற்றிருந்தனர். |

ஈண்டு இந்த அகங்காரமானவன் இந்தப்படி யாவையுங்கூற மகானந்தத்தில் மூழ்கினவராய் இராஜனை தங்களை யாரோ வெல்ல வந்திருக்கிறார்களாமே என வினவாமல், அஞ்ஞ வேந்தனது படைகள் தங்கள் தங்கள் வேலைகளைத் சரிவரச் செய்து கொண்டு சந்தோஷத்துடன் வீற்றிருந்தனர்.

உட்பகைகள் என்று சொல்லப்பட்ட (புருஷார்த்த விரோதிகளான) காமாதி துர்க் குணங்களை முமுக்ஷு எவ்விதத்திலும் நீக்க வேண்டும் என்பதாம்.

*****************

# 19. ஞாந விநோதன் படைச் செருக்கு

(அஞ்ஞ வேந்தனது படைகளாகிய காமாதி உட்பகைகள் தோன்றிக் கண்ட விடங்களில் தமது வல்லபங்களைப் பேசி இறுமாந்து செருக்குற்றிருப்பதையறிந்து அடியவர் திருக்கூட்டங்கள் அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாகி, உயிர்க்குயிராய் உணர்வுக்குணர்வாய் விளங்கும் சிவப்பிரகாச இறைவர்க்கு அறிவிக்க, அவர் செவிமடுத்து சகல ஜீவர்களும் உய்யும் பொருட்டு உடனே, ஞான விநோதனாகிய சொரூபானந்தரை அழைத்து நீ சென்று, அஞ்ஞ வேந்தனது உயிர்பருகி அடியவர்களுக்கு அருள் செய்க என்றார். அவ்வருளாசி பெற்ற ஞான விநோதன் படை மட்டிலா மகிழ்ச்சியடைந்ததைக் கூறுகிறார்).

**1. எவ்வுயிர்க்கு முயிராய விறைவன் பொற்றா**
**ளெய்தவிருந் தவஞ்செய்தோ ரிறைஞ்சிப் போற்றி**
**வெவ்வுயிர்க்க வருமறியா வேந்தன் றன்னால்**
**விளைந்ததெல்லாம் விண்ணப்பஞ் செய்த போதே**

| | |
|---|---|
| எவ்வுயிர்க்கு முயிராய விறைவன் | சர்வ ஜீவர்களது இருதயமாகிய குகையில் அந்தர்யாமியாயுள்ள சிவப் பிரகாசனின் |
| பொற்றாள் | பொன் போன்ற திருவடியை |
| எய்த | அடையும் பொருட்டு |
| இருந்தவஞ் செய்தோர் | பெருமை பொருந்திய (மனம் பொறிகட்கு ஒருமையாம்) தவத்தையுடைய அடியவர்கள் |
| இறைஞ்சிப்போற்றி | துதித்து வணங்கி |
| வெவ்வுயிர்க்க வரும் அறியா வேந்தன் றன்னால் | கொடிய பிறப்பிறப்பும் பிராண ஹானியும் செய்துவரும் அறியாமை (அஞ்ஞ) அரசனான அவனால் |
| விளைந்ததெல்லாம் | உண்டான துன்பமனைத்தையும் (கேடுகளெல்லாம்) |

| | |
|---|---|
| விண்ணப்பஞ் செய்த போதே | அடியவர்கள் அருளிச் செய்த பொழுதே (அப்பொழுதே) |

சர்வ ஜீவர்களது இருதயமாகிய குகையில் அந்தர்யாமியாயுள்ள சிவப் பிரகாசனின் பொன் போன்ற திருவடியை அடையும் பொருட்டு பெருமை பொருந்திய (மனம் பொறிகட்கு ஒருமையாம்) தவத்தையுடைய அடியவர்கள் துதித்து வணங்கி கொடிய பிறப்பிறப்பும் பிராண ஹானியும் செய்துவரும் அறியாமை (அஞ்ஞ) அரசனான அவனால் உண்டான துன்பமனைத்தையும் (கேடுகளெல்லாம்) அடியவர்கள் அருளிச் செய்த பொழுதே (அப்பொழுதே)

**2. போராரு மஞ்ஞனவன் றன்னால் வையம்**
**புகுந்த பிழை கேட்டருளிப் போத மூர்த்தி**
**சீராரு மடியவரைத் திருக்கண் சாத்தத்**
**திருவடித்தா மரையவர்தஞ் சென்னி கொண்டே**

| | |
|---|---|
| போராரும் அஞ்ஞனவன் றன்னால் | சர்வ ஜீவர்களுக்கும் துன்பத்தைச் செய்யும் அறியாமையென்னும் அரசனவனால் |
| வையம் புகுந்த பிழை கேட்டருளி | உலகத்திலுள்ள அனைவரும் அடைந்த தீமைகளெல்லாம் (அடியவர் வாயிலாக) வினவிய பொழுதே |
| போத மூர்த்தி | ஞான வடிவினர் |
| சீராரும் அடியவரை | சம தமாதி சிறப்புப் பொருந்திய திருக் கூட்டத்தவரை |
| திருக்கண் சாத்த | கிருபா நோக்கஞ் செய்ய |
| திருவடித் தாமரை | அழகிய பாத கமலங்களை |
| யவர் தஞ் சென்னி கொண்டே | சிரசில் அணிந்து கொண்டு கூறுகின்றனர். |

சர்வ ஜீவர்களுக்கும் துன்பத்தைச் செய்யும் அறியாமையென்னும் அரசனவனால் உலகத்திலுள்ள அனைவரும் அடைந்த தீமைகளெல்லாம் (அடியவர் வாயிலாக) வினவிய பொழுதே ஞான வடிவினர் சம தமாதி சிறப்புப் பொருந்திய திருக் கூட்டத்தவரை கிருபா நோக்கஞ் செய்ய அழகிய பாத கமலங்களை சிரசில் அணிந்து கொண்டு கூறுகின்றனர்.

**3. எம்பிரான் றிருக்கடைக்கண் பட்டார்க் கன்றோ**
**வெளிதாகி யிருப்பதுதா னேற்ற மிக்க**
**வும்பருமா யாபுரத்திற் கஞ்சா நிற்ப**
**ரொழிந்தவரோ வினியொழிப்பா ருலகத் துள்ளே**

| | |
|---|---|
| ஏற்ற மிக்கவும்பரும் | அமிர்த பானத்தால் ஜனன மரணாதியற்ற |

| | |
|---|---|
| | சிரேஷ்டமான தேவர்களும் |
| மாயாபுரத்திற்கு | மாயாபுரி பட்டணமென்னும் இத்தேகத்தோடு கூடியிருப்பதற்கு |
| அஞ்சா நிற்பர் | மிகவும் பயப்படுவார்களெனில் |
| ஒழிந்தவரோ | அவர்களே நீங்க |
| இனி இப் பாருலகத்துள்ளே ஒழிப்பர் | மற்றை யாவர்களும் நீங்கி நில்லார் என்பதாம். |
| எம்பெருமான் திருக்கடைக் கண் பட்டோர்க்கன்றோ | ஆனால் எமது குருமூர்த்தியாகிய தங்களது கிருபா வீக்ஷண்யம் பெற்றோர்களுக்கே |
| எளிதாகி இருப்பது | அதி சுலபமாக உள்ளது. |

அமிர்த பானத்தால் ஜனன மரணாதியற்ற சிரேஷ்டமான தேவர்களும் மாயாபுரி பட்டணமென்னும் இத்தேகத்தோடு கூடியிருப்பதற்கு மிகவும் பயப்படுவார்களெனில் அவர்களே நீங்க மற்றை யாவர்களும் நீங்கி நில்லார் என்பதாம். ஆனால் எமது குருமூர்த்தியாகிய தங்களது கிருபா வீக்ஷண்யம் பெற்றோர்களுக்கே அதி சுலபமாக உள்ளது.

**4. வருபாசக் கட்ட றுத்து மாமாயா**
**புரமழித்து மயக்கந் தீர்வார்**
**சொருபாநந் தாவுனக்குத் தொழில்**
**செய்வார் பிறராலுந் தொலைக்கலாமோ.**

| | |
|---|---|
| சொரூபானந்தா உனக்குத் தொழில் செய்வார் | எமது குருமூர்த்தியாகிய (ஞான வினோதனென்னும்) சொரூபானந்த சுவாமிகளான தங்களுக்கு தொண்டு செய்பவர்கள் |
| வரு பாசக் கட்டறுத்து | பிறவிகள் தோறும் தொடர்ந்து வந்த பந்த பாசங்களை நீக்கி மிக |
| மாமாயாபுரமழித்து | விசாலமானதும், இந்திரஜாலத்திற் கொப்பானதுமான தேகாதி(காயாபுரி) பிரபஞ்சத்தை மித்தையென நீக்கி |
| மயக்கந் தீர்வார் | (தேகம் தான் என்றும் ஜெகத் சத்தியமென்றும்) புத்தி மயக்கம் நீங்கி வாழ்வார்கள். |
| பிறராலுந் தொலைக்கலாமோ | குரு புத்திரரல்லாத மற்றவர்கள் (மாயாபாசம்) நீக்க மாட்டாதவர்களே யாவார்கள்). |

எமது குருமூர்த்தியாகிய (ஞான வினோதனென்னும்) சொரூபானந்த சுவாமிகளான தங்களுக்கு தொண்டு செய்பவர்கள் பிறவிகள் தோறும் தொடர்ந்து வந்த பந்த பாசங்களை நீக்கி மிக விசாலமானதும், இந்திரஜாலத்திற் கொப்பானதுமான தேகாதி(காயாபுரி) பிரபஞ்சத்தை மித்தையென நீக்கி (தேகம் தான் என்றும் ஜெகத்

சத்தியமென்றும்) புத்தி மயக்கம் நீங்கி வாழ்வார்கள். குரு புத்திரரல்லாத மற்றவர்கள் (மாயாபாசம்) நீக்க மாட்டாதவர்களே யாவார்கள்).

**5. கச்சொருவுங் கநதநத்தார் கலவியினும்**
**புலவியினுங் கலக்கந் தீர்வார்**
**மெய்ச் சொருபா நந்தநினை மெய்ப்படத்**
**தாம்பெற்றவரே வேறார் வல்லார்.**

| | |
|---|---|
| மெய்ச் சொருபானந்த | சதானந்த (சச்சிதானந்த ) மூர்த்தி |
| நினை மெய்ப்படத்தாம் பெற்றவரே | தங்களை தனது யதார்த்த வடிவ சச்சிதானந்த ஆன்ம ரூப சாட்சாத்காரமாய் அறிந்தவர்களே |
| கச் சொருவுங் கனகத்தார் | கச்சை கிழிய பாய்ந்து நிற்கும் பருத்த தனங்களையுடைய (பெண்களது) |
| கலவியினும் புலவியினும் | சேர்க்கையினும் ஊடலிலும் |
| கலக்கந் தீர்வார் | சுக சாதனமென்னும் மயக்கபுத்தி நீங்குவார். |
| வேறோர் வல்லார் | மற்றையர் ஜெயசாலிகள் ஆகார். குருவை தனது ஆன்ம வடிவாயறிந்து வழிபட்டவர்களே விஷய சுகத்தை வென்றவராவார்கள். மற்றையர் வென்றவராகார் என்பதாம். இதனால்தான் தட்டரப் பாசந் தீர்க்க தற்பரங் குருவே வேண்டும் என்றார். |

சதானந்த (சச்சிதானந்த ) மூர்த்தி தங்களை தனது யதார்த்த வடிவ சச்சிதானந்த ஆன்ம ரூப சாட்சாத்காரமாய் அறிந்தவர்களே கச்சை கிழிய பாய்ந்து நிற்கும் பருத்த தனங்களையுடைய (பெண்களது) சேர்க்கையினும் ஊடலிலும் சுக சாதனமென்னும் மயக்கபுத்தி நீங்குவார். மற்றையர் ஜெயசாலிகள் ஆகார். குருவை தனது ஆன்ம வடிவாயறிந்து வழிபட்டவர்களே விஷய சுகத்தை வென்றவராவார்கள். மற்றையர் வென்றவராகார் என்பதாம். இதனால்தான் தட்டரப் பாசந் தீர்க்க தற்பரங் குருவே வேண்டும் என்றார்.

**6. என்று நின்றுரை செய்ய வெல்லையி**
**னெந்தை ஞாநவி நோதனைச்**
**சென்ற வன்றன தாவி யுண்டுதி**
**ரிந்தி டென்றருள் செய்யவே.**

| | |
|---|---|
| என்று நின்றுரை செய்த | இவ்வாறு அடியவர் குழாங்களருளிச் செய்தபோது அது |

| | |
|---|---|
| வெல்லையில் | கேட்ட (சிவப்பிரகாச இறைவரென்னும்) பரமாச்சாரியர் |
| எந்தை ஞான விநோதனை | எமது தந்தையாகிய ஞான வேந்தரென்னும் சொரூபானந்த சுவாமிகளை |
| சென்று அவன்றனது ஆவியுண்டு | நீ சென்று அந்த அஞ்ஞனுடைய பிராணனைபுசித்து |
| திரிந்திடென்றருள் செய்யவே | மீண்டிடுவாயாக என்று அருளிச் செய்தார்.(சிவப் பிரகாச சுவாமிகளான பரமகுரு) |

இவ்வாறு அடியவர் குழாங்களருளிச் செய்தபோது அது கேட்ட (சிவப்பிரகாச இறைவரென்னும்) பரமாச்சாரியர் எமது தந்தையாகிய ஞான வேந்தரென்னும் சொரூபானந்த சுவாமிகளை நீ சென்று அந்த அஞ்ஞனுடைய பிராணனைபுசித்து மீண்டிடுவாயாக என்று அருளிச் செய்தார்.(சிவப் பிரகாச சுவாமிகளான பரமகுரு)

**7. தம்பி ரானிருப தங்க ளுந்தனது**
**சென்னி கொண்டறிஞர் தம்பிரா**
**னெம்பி ரானைவிடை கொண்ட வன்படையெ**
**ழுந்த வாறெவரி யம்புவார்.**

(அடியவர் மூலப் பொருளான ஸ்ரீசிவப் பிரகாச சுவாமிகளை பரமகுரு மூர்த்தியின் பாதங்களை வணங்கி சிரசிலணிந்து கொண்டு விடைபெற்ற ஞான வேந்தனாம் நமது தலைவரான ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகளது சேனைகளை இம்மட்டென்று இசைக்க வொண்ணாதாம்).

| | |
|---|---|
| தம்பிரானிரு பதங்களும் | நமது பரமகுருவாகிய (சிவப் பிரகாச) மூல பண்டாரத்தின் பொன்னான (இருவர் தேடியுங் காணாத) இரண்டு திருவடிக் கமலங்களையும் |
| அறிஞர் தம்பிரான் | அடியவர்களான திருக்கூட்டத் தலைவராம் (சொரூபானந்த மூர்த்தியானவர் ) |
| தனது சென்னி கொண்டு | தம்முடைய சிரசிற்கு கிரீடமாக சூடிக் கொண்டு, |
| எம்பிரானை விடை கொண்ட | தமது தேசிகர்பால் அருளாசி பெற்றுவிட்டு நீங்கிய |
| அவன் படை எழுந்தவாறு | அந்த ஞான வேந்த (சொரூபானந்த)ருடைய நால்வகைச் சேனைகளும் பெயர்ந்துசெல்வதை |
| எவரியம்புவார் | யாவர்தான் அறிந்து கூற முடியும்.(முடியாது. அபரிமிதமாகையால்) |

நமது பரமகுருவாகிய (சிவப் பிரகாச) மூல பண்டாரத்தின் பொன்னான (இருவர் தேடியுங் காணாத) இரண்டு திருவடிக் கமலங்களையும் அடியவர்களான திருக்கூட்டத் தலைவராம் (சொரூபானந்த மூர்த்தியானவர் ) தம்முடைய சிரசிற்கு கிரீடமாக சூடிக் கொண்டு, தமது தேசிகர்பால் அருளாசி பெற்றுவிட்டு நீங்கிய அந்த ஞான வேந்த

(சொரூபானந்த)ருடைய நால்வகைச் சேனைகளும் பெயர்ந்துசெல்வதை யாவர்தான் அறிந்து கூற முடியும்.(முடியாது. அபரிமிதமாகையால்)

**8. கடலென காம கோப லோப மாறுவ**
**கருணைநி ஷாதி யாய்வி டாது பாய்வன**
**கருவெனு நாம மாள வீதி போவன**
**கலக மறாத வோசை மீள மீள்வன**
**வுடலொடு கோப மேலு மேலு மூள்வன**
**வுணர்வறியாத வேட கூட மோதுவ**
**வுலகிய றூர நாற வேபொ றாதன**
**வொளிமத யானை கோடி கோடி கோடியே**

| | |
|---|---|
| கடலென காம கோப லோப மாறுவ | சமுத்திரம் போன்ற ஆசை துவேஷம் ஈயாமை யாகிய (அஞ்ஞ வேந்தனது சேனாதிபதிகளான) அவர்களையும் அவர்கள் தம் படையினையும் மாறுபட்டோடும்படி செய்து ஆறுதலடைந்து, |
| கருணை நிஷாதியாய் விடாது பாய்வன | இடைவிடாத இரக்கமுடையவர்களாய் காருண்யத்தோடு, |
| கருவெனு நாமமாள வீதி போவன | பிறப்பென்னும் பேதமை (பெயர்) நீங்கும் வழி செல்வனவும், |
| கலக மறாத வோசை மீள மீள்வன | உடுக்கையின் ஓசை போன்ற சமயச் சண்டைகள் நீங்கும்படி நீங்குவன. |
| உடலொடு கோப மேலு மேலு மூள்வன | (அநிர்த ஜட துக்கமாயும், அசுத்தத்திற்கு இருப்பிடமாயுமுள்ள) தேகத்தின்மீது மீண்டும் மீண்டும் நாள்தோறும் உடம்பைப் பார்த்துப் பார்த்து இன்னும் இளைக்கவில்லையே என்று துவேஷம் எழுவனவும் ஆம். |
| வுணர்வறியாத வேட கூட மோதுவ | அறிவை அறியாத வேஷதாரிகளது ரகசிய கூட்டத்தை அடித்துத் தள்ளுவனவும், |
| உலகியல் ஊர நாறவே பொறாதன | உலக சுபாவமான கண்டதே காட்சி கொண்டதே கோலமெனும் ரமணீய தோற்றத்தில் சேராதனவாகிய |
| வொளி மத யானை கோடி கோடி கோடியே | இரக்கம், கருணை, உதாரம் என்னும் மும்மதங்கொண்ட யானைப் (கஜப்) படைகள் மூன்று கோடிகளாம். |

சமுத்திரம் போன்ற ஆசை துவேஷம் ஈயாமை யாகிய (அஞ்ஞ வேந்தனது சேனாதிபதிகளான) அவர்களையும் அவர்கள் தம் படையினையும் மாறுபட்டோடும்படி செய்து ஆறுதலடைந்து, இடைவிடாத இரக்கமுடையவர்களாய் காருண்யத்தோடு, பிறப்பென்னும் பேதமை (பெயர்) நீங்கும் வழி செல்வனவும், உடுக்கையின் ஓசை போன்ற

சமயச் சண்டைகள் நீங்கும்படி நீங்குவன.(அநிர்த ஜட துக்கமாயும், அசுத்தத்திற்கு இருப்பிடமாயுமுள்ள) தேகத்தின்மீது மீண்டும் மீண்டும் நாள்தோறும் உடம்பைப் பார்த்துப் பார்த்து இன்னும் இளைக்கவில்லையே என்று துவேஷம் எழுவனவும் ஆம். அறிவை அறியாத வேஷதாரிகளது ரகசிய கூட்டத்தை அடித்துத் தள்ளுவனவும், உலக சுபாவமான கண்டதே காட்சி கொண்டதே கோலமெனும் ரமணீய தோற்றத்தில் சேராதனவாகிய இரக்கம், கருணை, உதாரம் என்னும் மும்மதங்கொண்ட யானைப் (கஜப்) படைகள் மூன்று கோடிகளாம்.

**9. உறவோடு வேறி லாத வாசியூர்வன**
**வுலகிரு நாலு மாறு மேலு மாவன**
**வுடுபதி சூரி யாதி காணொ ணாதன**
**வுயர்வது வேறு தான லாதி லாதன**
**துறவொடு சாலு ஞாந வீரர் சூழ்வன**
**சுருதிகள் போன நீதி வீதி போவன**
**துணிவுற வேறு பாடு சாடி யோடுவ**
**சுடர்விடு ஞாந வாழி கோடி கோடியே**

| | |
|---|---|
| உறவொடு வேறிலாத வாசியூர்வன | (சர்வ ஜீவர்களிடத்தும்) பேதமற்ற நட்பு என்னும் குதிரைகள் ஊர்ந்து செல்வனவும், |
| வுலகிரு நாலு மாறு மேலுமாவன | ஈரேழு பதினான்கு உலகுக்கும் அப்பாற் கடந்து செல்வனவும், |
| வுடுபதி சூரியாதி காணொணாதன | நக்ஷத்திரக் கூட்டங்களுக்குத் தலைவரான சந்திரனும்,பகலோன் என்னும் சூரியன் முதலிய மற்றைத் தேவர்களாலும் அறிய முடியாததுமானதும் |
| வுயர்வது வேறு தானலாதிலாதன | தனக்கு மேலாக தன்னைவிட வேறொன்றுமில்லை என்று எண்ணும்படி |
| துறவொடு சாலு ஞான வீரர் சூழ்வன | பற்றற்றத் தன்மையும், பூர்வ (ஞானமுடையவர்களும், ஜிதேந்திரியர்களாகிய) வீராதி வீரர்கள் புடைசூழ செல்வனவும், |
| சுருதிகள் போன நீதி வீதி போவன | வேதானுகாரமான வேதாந்த வழியில் செல்வன |
| துணிவுற வேறுபாடு சாடியோடுவ | மிக்க தைரியத்துடன் ஜீவ பேதம் மதபேதம் என்னும் சகல பேதங்களையும் அடித்துச் செல்வனவாகிய |
| சுடர்விடு ஞான வழி கோடி கோடியே | பிரகாசம் பொருந்திய ஞான ரதங்கள் இரண்டு கோடியாம். |

(சர்வ ஜீவர்களிடத்தும்) பேதமற்ற நட்பு என்னும் குதிரைகள் ஊர்ந்து செல்வனவும், ஈரேழு பதினான்கு உலகுக்கும் அப்பாற் கடந்து செல்வனவும், நக்ஷத்திரக் கூட்டங்களுக்குத் தலைவரான சந்திரனும்,பகலோன் என்னும் சூரியன் முதலிய மற்றைத் தேவர்களாலும்

அறிய முடியாததுமானதும் தனக்கு மேலாக தன்னைவிட வேறொன்றுமில்லை என்று எண்ணும்படி பற்றற்றத் தன்மையும், பூர்வ (ஞானமுடையவர்களும், ஜிதேந்திரியர்களாகிய) வீராதி
வீரர்கள் புடைசூழ செல்வனவும், மிக்க தைரியத்துடன் ஜீவ பேதம் மதபேதம் என்னும் சகல பேதங்களையும் அடித்துச் செல்வனவாகிய பிரகாசம் பொருந்திய ஞான ரதங்கள் இரண்டு கோடியாம்.

**10. சிதறவி டாம லியாது மாய நூறுவ**
**செறியவொ ணாத ஞாந வாளி பாய்வன**
**திருகுதல் தீரு மாறு மாறு சேர்வன**
**சிலுகொழி யாது காதி யோதும் வாதிகள்**
**குதறிய கூர்மை வாய்கண் மூட வேறுவ**
**குணமொரு காலி லாத தான நீர்மைய**
**குருபர னார்த மேவல் வீதி போவன**
**குரகத ராசி கோடி கோடி கோடியே**

| | |
|---|---|
| சிதறவிடாமலியாதும் மாய நூறுவ | தப்பி ஓடாத வண்ணம் மாயா காரியமாகிய அஞ்ஞான முழுவதையும் கெடும்படி செய்து |
| செறிய வொணாத ஞான வாளி பாய்வன | சமீபத்தில் நெருங்க முடியாத ஞாந மய சிம்மங்கள் பாய்ந்து செல்வனவாம். |
| திருகுதல் தீருமாறு மாறு சேர்வன | விபரீத (ஜகத் சத்தியம் தேகம் நித்தியம் என்னும்) ஞானம் நீங்கும்படியாக தேகாதி பிரபஞ்சம் அநித்தியம் என்றும் நீக்கி நாம் நித்தியம் என்று சேர்ந்திருப்பனவாம். |
| சிலு கொழியாது காதியோது மீவாதிகள் | ஓயாது சண்டையிட்டுக் கொண்டு அநித்தியப் பொருள்களை நித்தியமென்று கூறித்திரியும் எதிரிகளுடைய |
| குதறிய கூர்மை வாய் கண் மூடவேறுவ | பிதற்றித் திரியும் புத்தி மான்களது மார்க்கம் மண் மூடிப் போக ஏறித் திரிகின்றனவும், |
| குணமொரு காலிலாத தான நீர்மைய | முக்குணத்தோடு கூடாமல் குணாதீதர் என்று சொல்லும்படியான தன்மையையுடைய |
| குருபரனார் தம் ஏவல் வீதி போவன | குருமூர்த்தியினது (சொரூபானந்த சுவாமிகளது) ஏவலின் வழிச் செல்வனவாகிய குதிரைக் கூட்டங்கள் மூன்று கோடிகளாம். |

தப்பி ஓடாத வண்ணம் மாயா காரியமாகிய அஞ்ஞான முழுவதையும் கெடும்படி செய்து சமீபத்தில் நெருங்க முடியாத ஞாந மய சிம்மங்கள் பாய்ந்து செல்வனவாம். விபரீத (ஜகத் சத்தியம் தேகம் நித்தியம் என்னும்) ஞானம் நீங்கும்படியாக தேகாதி பிரபஞ்சம் அநித்தியம் என்றும் நீக்கி நாம் நித்தியம் என்று சேர்ந்திருப்பனவாம். ஓயாது சண்டையிட்டுக் கொண்டு அநித்தியப் பொருள்களை நித்தியமென்று கூறித்திரியும்

எதிரிகளுடைய பிதற்றித் திரியும் புத்தி மான்களது மார்க்கம் மண் மூடிப் போக ஏறித் திரிகின்றனவும், முக்குணத்தோடு கூடாமல் குணாதீதர் என்று சொல்லும்படியான தன்மையையுடைய குருமூர்த்தியினது (சொரூபானந்த சுவாமிகளது) ஏவலின் வழிச் செல்வனவாகிய குதிரைக் கூட்டங்கள் மூன்று கோடிகளாம்.

**11. இனியன கூறும் வாயு மாய வாய்மையு**
**மிறுதிய தான போதும் வாழு போதினு**
**மியல்வழு வாதஞாந தீர பாவமு**
**மிலகிய ஞாநவாளு மோந வீரமு**
**மநியத வூண லாதி லாத வாண்மையு**
**மலரவர் சீல மோடு வாழு நீர்மையு**
**மளவு படாமை யேசு பாவ மாகையு**
**மதிபய மான வீரர் கோடி கோடியே**

| | |
|---|---|
| இனியன கூறும் வாயுமாய | இன்சொல்லே வசனிக்கக்கூடிய வாக்கை உடையவர்களுமாகி |
| வாய்மையும் | கேட்பவர்களுக்கு நன்மை பயப்பனவாகிய சத்திய வசனமுடையவர்களாயும், |
| இறுதியது ஆன போதும் | தனது பிராணஹானி ஏற்பட்ட போதிலும், |
| வாழுபோதினும் | இன்னும் அநேகங் கோடி காலம் வாழ்ந்திருந்தாலும் |
| இயல் வழுவாத | தேகாதி பிரபஞ்சம் அநித்யம் என்றும் தான் சச்சிதானந்த சொரூபமென்னும் சுபாவ அனுபவம் நீங்காத |
| ஞாந தீர பாவமும் | பிரம்மாகாரவிருத்தி ஞானமும், விஷயாகார விருத்தி நீங்கிய (வென்ற) பாவனையுடையவரும் |
| இலகிய ஞான வாளும் | பிரகாசம் பொருந்திய (பற்றின்மை என்னும்) வாளாயுதமுடையவரும், |
| மோந வீரமும் | மௌன நிலையிலிருந்து சப்தாதி விஷயங்களை வென்றிருக்குந் (வீரத்) தன்மையுடையவர்களும் |
| அநியத ஊண் அலாது இலாத ஆண்மையும் | (ஞானம் அம்ருதம் பருகி) தனது யதார்த்த சொரூபத்திற்கு வேறாக தோற்றும் நாம ரூபாதிகளை இல்லை (ஈண்டு நாநாவானவை அற்பமுமில்லை) என்னும் புசிப்பு அல்லது வேறு உணவுஅருந்தாத புருடத்துவம் உடையவர்களும், |
| அவரவர் சீலமொடு வாழு நீர்மையும் | வருணாச்ரம தருமமென்னும் அவரவர்களுக்குரிய ஒழுக்கத்தோடு வாழ்கின்ற சுபாவமுடையவர்களாயும், |
| அளவு படாமையே சுபாவமாகையும் | பரிபூர்ணமாக எங்கும் நிறைந்திருப்பதேநமது வடிவமென்னும் இயல்பு உடையவர்களாயும், |
| அதி பயமான வீரர் கோடி கோடியே | யமன் முதல் யாவரும் அஞ்சத்தக்க மிகவும் பயங்கரமான வீராதி வீரர்கள் இரண்டு கோடியேயாகும். |

இன்சொல்லே வசனிக்கக்கூடிய வாக்கை உடையவர்களுமாகி கேட்பவர்களுக்கு நன்மை பயப்பனவாகிய சத்திய வசனமுடையவர்களாயும், தனது பிராணஹானி ஏற்பட்ட போதிலும்,இன்னும் அநேகங் கோடி காலம் வாழ்ந்திருந்தாலும் தேகாதி பிரபஞ்சம் அநித்யம் என்றும் தான் சச்சிதானந்த சொரூபமென்னும் சுபாவ அனுபவம் நீங்காத பிரம்மாகாரவிருத்தி ஞானமும், விஷயாகார விருத்தி நீங்கிய (வென்ற) பாவனையுடையவரும் பிரகாசம் பொருந்திய (பற்றின்மை என்னும்) வாளாயுதமுடையவரும், மௌன நிலையிலிருந்து சப்தாதி விஷயங்களை வென்றிருக்குந் (வீரத்) தன்மையுடையவர்களும் (ஞானம் அம்ருதம் பருகி) தனது யதார்த்த சொரூபத்திற்கு வேறாக தோற்றும் நாம ரூபாதிகளை இல்லை (ஈண்டு நாநாவானவை அற்பமுமில்லை) என்னும் புசிப்பு அல்லது வேறு உணவுஅருந்தாத புருடத்துவம் உடையவர்களும், வருணாச்ரம தருமமென்னும் அவரவர்களுக்குரிய ஒழுக்கத்தோடு வாழ்கின்ற சுபாவமுடையவர்களாயும், பரிபூர்ணமாக எங்கும் நிறைந்திருப்பதேநமது வடிவமென்னும் இயல்பு உடையவர்களாயும், யமன் முதல் யாவரும் அஞ்சத்தக்க மிகவும் பயங்கரமான வீராதி வீரர்கள் இரண்டு கோடியேயாகும்.

**12. இந்தவுல கந்தரஞ்செய் தெழுகட**
**லெண்டி சைக லங்கிநின்ற குலமலை**
**வந்துவிழு மன்றுமொன்று மசைவிலர்**
**வந்தபடி கண்டிருந்து மகிழ்வரே**

| | |
|---|---|
| நின்ற குலமலை | என்றும் அசைவிலாதிருக்கும் அஷ்ட குல பர்வதங்களும் (எட்டு மலைகள்) |
| அந்தரஞ் செய்து | ஆகாயத்தில் எழுந்து |
| இந்த உலகு | நாம ரூபமாய் விளங்கும் இந்த உலகத்தில் |
| ஏழுகடல் | சப்த சமுத்திரங்களும் (ஏழு கடல்கள்) |
| எண்திசை | எட்டுத் திக்குகளும் |
| கலங்க | கலக்கமெய்தும்படி |
| வந்து விழும் அன்றும் | தமதிடம் வந்து விழுந்த போதிலும் |
| ஒன்றும் அசைவிலர் | அப்பொழுதும் கூட ஒரு சிறிதும் நடுக்கமெய்த மாட்டார்கள். |
| வந்தபடி | தமது பிராரத்தானுசாரம் வருவனவற்றை |
| கண்டிருந்து மகிழ்வரே | அறிந்து அனுபவித்து மகிழ்ச்சியுடனிருப்பார்கள். |

என்றும் அசைவிலாதிருக்கும் அஷ்ட குல பர்வதங்களும் (எட்டு மலைகள்) ஆகாயத்தில் எழுந்து நாம ரூபமாய் விளங்கும் இந்த உலகத்தில் சப்த சமுத்திரங்களும் (ஏழு கடல்கள்) எட்டுத் திக்குகளும் கலக்கமெய்தும்படி தமதிடம் வந்து விழுந்த போதிலும் அப்பொழுதும்

கூட ஒரு சிறிதும் நடுக்கமெய்த மாட்டார்கள். தமது பிராரத்தானுசாரம் வருவனவற்றை அறிந்து அனுபவித்து மகிழ்ச்சியுடனிருப்பார்கள்.

**13. சந்தந குங்குமங்கள் புழுககில்**
**தண்பளி தஞ்சொரிந்து மகிழ்விலர்**
**நொந்தன கொண்டரிந்து நுகரென**
**நொந்திலர் முந்தையென்று நகுவரே**

| | |
|---|---|
| சந்தன குங்குமங்கள் | நல்ல வாசனையுடைய சந்தனமும் பச்சைக் கற்பூரம் குங்குமப்பூ முதலியவற்றோடு |
| புழுகு அகில் | புனுகும் அகில்கட்டை முதலியவற்றை எல்லாம் நன்றாக அரைத்து (அவற்றில் ) |
| தண் பளிதஞ் செய்து | குளிர்ச்சி பொருந்திய பன்னீர் முதலிய வாசனை திரவியங்களோடு கலந்து குளிரும்படி |
| சொரிந்து மகிழ்விலர் | அபிஷேகம் செய்தாலும் அதனால் மகிழ்ச்சி அடைந்திலர். |
| நொந்தன கொண்டரிந்து | கெட்டுப்போன நாய்மாமிச முதலானவற்றை அரிந்து வந்து |
| நுகரென | இவற்றை உண்ண வேண்டும் என்று துன்புறுத்தியபோதும் |
| நொந்திலர் | யாதொரு வருத்தமுமடையார். |
| முந்தையென்று | பழவினையென்று |
| நகுவரே | புன்முறுவல் பூத்திருப்பார்களாம். |

நல்ல வாசனையுடைய சந்தனமும் பச்சைக் கற்பூரம் குங்குமப்பூ முதலியவற்றோடு புனுகும் அகில்கட்டை முதலியவற்றை எல்லாம் நன்றாக அரைத்து (அவற்றில் ) குளிர்ச்சி பொருந்திய பன்னீர் முதலிய வாசனை திரவியங்களோடு கலந்து குளிரும்படி அபிஷேகம் செய்தாலும் அதனால் மகிழ்ச்சி அடைந்திலர். கெட்டுப்போன நாய்மாமிச முதலானவற்றை அரிந்து வந்து இவற்றை உண்ண வேண்டும் என்று துன்புறுத்தியபோதும் யாதொரு வருத்தமுமடையார். பழவினையென்று புன்முறுவல் பூத்திருப்பார்களாம்.

**14. நொந்தனர் கன்றிவந்து நலிபவர்**
**நுந்தன ரென்றமைந்த கடனற**
**வந்தன வென்றிடும்பை வரமகிழ்**
**வந்தன ரங்கிரண்டு முடையரே**

| | |
|---|---|
| நொந்தனர் கன்றி வந்து நலிபவர் | பிறவுயிர்கள் நோகும்படி செய்பவர்கள் நெருங்கி தம்மை துன்புறச் செய்தாலும் |
| நுந்தனரென்ற மைந்த | உம்முடைய உறவினரென பொருந்திய ரணம் நீங்க |

| | |
|---|---|
| கடனற | |
| இடும்பை வந்தன வென்று | மேற்கூறிய துக்கமாகிய போகங்களை அனுபவிக்க இச்சரீரம் வந்ததென்று |
| வர மகிழ்வரே | எண்ணி அவைவர மகிழ்ந்திருப்பர். |
| அங்கு இரண்டும் உடையரே | முந்திய சரீரத்தில் செய்த வினைகளிரண்டும் உள்ளவரே |
| வந்தனர் | இங்கே தோன்றியுள்ளார்கள் என்பதாம். |

பிறவுயிர்கள் நோகும்படி செய்பவர்கள் நெருங்கி தம்மை துன்புறச் செய்தாலும் உம்முடைய உறவினரென பொருந்திய ரணம் நீங்க மேற்கூறிய துக்கமாகிய போகங்களை அனுபவிக்க இச்சரீரம் வந்ததென்று எண்ணி அவைவர மகிழ்ந்திருப்பர். முந்திய சரீரத்தில் செய்த வினைகளிரண்டும் உள்ளவரே இங்கே தோன்றியுள்ளார்கள் என்பதாம்.

**15. செயலினை யற்றிருக்கு முநிவர்கள்**
**செறிவினை யைக்கெடுக்கும் வகையினின்**
**முயல்வினை யைக்கெடுப்ப ரறிவினின்**
**முன்வினை யைப்புசிப்ப ரடையவே**

| | |
|---|---|
| செயலினை யற்றிருக்கும் முனிவர்கள் | மனம் வாக்கு காயம் என்னும் முக்கரணங்களின் செய்கை தவிர்த்து சும்மாவிருக்கும் மனன சீலர்கள் |
| செறிவினையைக் கெடுக்கும் வகையினின் | சஞ்சித கர்மத்தை நீக்கும் பொருட்டு (சும்மா இருப்பர்) |
| அறிவினில் | ஞானத்தினால் |
| முயல் வினையைக் கெடுப்பர் | ஆகாமிய கர்மத்தை அழிப்பார்கள். |
| அடையவே புசிப்பர் | அனைத்தையும் அயில்வர். |
| முன்வினையை | பிராரப்த கர்மமெல்லாம் |
| புசிப்பர் | மீதமின்றி புசிப்பர். |
| அடையவே | மேல் முளையாவகை. |

மனம் வாக்கு காயம் என்னும் முக்கரணங்களின் செய்கை தவிர்த்து சும்மாவிருக்கும் மனன சீலர்கள் சஞ்சித கர்மத்தை நீக்கும் பொருட்டு (சும்மா இருப்பர்) ஞானத்தினால் ஆகாமிய கர்மத்தை அழிப்பார்கள். அனைத்தையும் அயில்வர். பிரரப்த கர்மமெல்லாம் மீதமின்றி புசிப்பர். மேல் முளையாவகை.

**16. எண்ணி லாதவியல் ஞாந வீரர்தமை**
**யெண்ண லாகுமள வெங்ஙனே**
**கண்ணில் வேறுபட வின்மை யாலொருவர்**

**காணுமா றரிய காணுமே**

| | |
|---|---|
| ஒருவரால் காணுமாறரிய | ஒருவரால் கண்டு கருதலளவையால் கணித்தற்கும் அரிதாகும் படைவீரர்) |
| எண்ணி லாதவியல் | இவ்வளவுதானென்று அளவிட்டு சொல்லமுடியாத இயற்கையுடைய |
| ஞான வீரர் தமை | பற்றின்மை யென்னும் வாளாயுதம் கொண்டு (தத்துவ ஞானத்தாலன்றி வெல்ல முடியாத தேகாதி பிரபஞ்சத்தை) இவை மூன்று காலத்தும் இல்லவே இல்லையென வீழ்த்திய வீராதி வீரர்களை |
| யெண்ணலாகு மளவு எங்கனே | இவ்வளவு இவர்கள் படையென்றும் இவ்வளவே. இவர்கள் வீரமென்றும் யாவராலும் எண்ணியும் கூட பார்க்க முடியாவாம். |

ஒருவரால் கண்டு கருதலளவையால் கணித்தற்கும் அரிதாகும் (படைவீரர்) இவ்வளவுதானென்று அளவிட்டு சொல்லமுடியாத இயற்கையுடைய பற்றின்மை யென்னும் வாளாயுதம் கொண்டு (தத்துவ ஞானத்தாலன்றி வெல்ல முடியாத தேகாதி பிரபஞ்சத்தை) இவை மூன்று காலத்தும் இல்லவே இல்லையென வீழ்த்திய வீராதி வீரர்களைஇவ்வளவு இவர்கள் படையென்றும் இவ்வளவே. இவர்கள் வீரமென்றும் யாவராலும் எண்ணியும் கூட பார்க்க முடியாவாம்.

**17. கீழி லாதபடி கீழு மேலுமதின்**
**மேலி லாதபடி கெழுமியே**
**சூழிலாதபடி சூழு தானைநிலை**
**சொல்ல லாகுமள வல்லவே**

| | |
|---|---|
| அதின் கீழிலாதபடி கீழும் | அப்படைகள் எவ்வாறு உளதெனின் கீழே நோக்குமிடத்து பாதாள மேழினுங் கீழ் அதனினும் கீழ் வேறொன்றுமில்லாதிருப்பதுவும், |
| அதன் மேலிலாதபடி மேலுங் கெழுமியே | அதற்கு மேல் மற்றொன்றுமில்லை என்னும்படி ஓங்கி எழுந்திருக்கின்றதும், |
| சூழிலாதபடி சூழு தானை நிலை | சூழ்ந்திருக்கின்ற சேனா சைனியங்களின் இருப்பு (எவ்வாறெனில் ) பத்துத் திக்கும் அதிக்ரமித்து அதற்கப்பால் யாதுமின்றெனும்படி சூழ்ந்திருக்குந் தன்மை |
| சொல்லலாகு மளவு அல்லவே | அதன் அளவு கூறமுடியாததே ஆகும்.(அபரிமிதம்). |

அப்படைகள் எவ்வாறு உளதெனின் கீழே நோக்குமிடத்து பாதாள மேழினுங் கீழ் அதனினும் கீழ் வேறொன்றுமில்லாதிருப்பதுவும், அதற்கு மேல் மற்றொன்றுமில்லை

என்னும்படி ஓங்கி எழுந்திருக்கின்றதும், சூழ்ந்திருக்கின்ற சேனா சைனியங்களின் இருப்பு (எவ்வாறெனில் ) பத்துத் திக்கும் அதிக்ரமித்து அதற்கப்பால் யாதுமின்றெனும்படி சூழ்ந்திருக்குந் தன்மை அதன் அளவு கூறமுடியாததே ஆகும்.(அபரிமிதம்).

**18. நிறைந்தபெரும் படைநோக்கி நீரழிக்கும் பரிசெமக்கிங்**
**கறைந்திடுமென் றருள்செய்ய வரியநிரு பகன்றொழுதே**

(ஞான வேந்தன் தனது சேனாதிபதியைப் பார்த்து ஆசை அகங்காரமென்னும் அஞ்ஞ வேந்தனது படைகளை நீங்கள் எவ்வாறு அழிப்பீர்கள்? அந்தத் தன்மையைக் கூற வேண்டுமென்றார். அதற்கு சேனாதிபதி அடக்கத்துடன் வினயமாக கூறுகின்றார்)

| | |
|---|---|
| நிறைந்த பெரும் படை நோக்கி | சமுத்திர ஜலம் போன்று கண்பார்வை எட்டும் வரை நிறைந்திருக்கின்ற சேனா சைனியங்களைப் பார்த்த |
| நீரழிக்கும் பரிசு எமக்கு இங்கு அறைந்திடு மென்று அருள் செய்ய | (ஞான வேந்தனாகிய) ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகள், தமது சேனாதிபதியிடம் எள்ளத்தனையிடமுமின்றி நிறைந்துள்ள படைகளை எந்த உபாயத்தால் அழிப்பீர்கள் கூறுங்களென்ற போது |
| அரிய நிரபன் றெ தொழுது | கிடைத்தற்கு அரிதான சற் குணமுள்ள நிருபகனென்னும் சேனாதிபதி வணங்கி |
| பகன்றதே | கூறுகின்றான். |

சமுத்திர ஜலம் போன்று கண்பார்வை எட்டும் வரை நிறைந்திருக்கின்ற சேனா சைனியங்களைப் பார்த்த (ஞான வேந்தனாகிய) ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகள், தமது சேனாதிபதியிடம் எள்ளத்தனையிடமுமின்றி நிறைந்துள்ள படைகளை எந்த உபாயத்தால் அழிப்பீர்கள் கூறுங்களென்ற போது கிடைத்தற்கு அரிதான சற் குணமுள்ள நிருபகனென்னும் சேனாதிபதி வணங்கிக் கூறுகின்றான்.

**19. தேராதா ரல்லரோ சேயிழையா ரெனத்தி கைப்பா**
**ராராயு மறிவுடையார்க் கருவருப்பே யல்லவோ**

| | |
|---|---|
| தோராதாரல்லரோ | குரு முன்னிலையில் நித்திய அநித்திய வஸ்துக்களை தேர்ந்து தெளிவடையாதவர்களல்லவா |
| சேயிழையா ரெனத் திகைப்பார் | பெண்களென்று சொன்ன மாத்திரத்தில் அதைக் கேட்டு உடனே திக்பிரமைகொண்டு நிற்பார்கள். |
| ஆராயுமறிவுடையார்க்கு | அந்தப் பெண்ணின் தேகம் நரம்பு, எலும்பு, தோல் பொதிந்து மலமூத்திரம் நிறைந்த பாண்டமென பிரித்துப் பார்க்கும் விவேகம் நிறைந்தவர்களுக்கு |
| அருவருப்பேயல்லவோ | சீச்சீ யென அது மிகவும் அருவருக்கத் தக்கதாகவே |

| | |
|---|---|
| | தோன்றும். |

குரு முன்னிலையில் நித்திய அநித்திய வஸ்துக்களை தேர்ந்து தெளிவடையாதவர்களல்லவா பெண்களென்று சொன்ன மாத்திரத்தில் அதைக் கேட்டு உடனே திக்பிரமைகொண்டு நிற்பார்கள். அந்தப் பெண்ணின் தேகம் நரம்பு, எலும்பு, தோல் பொதிந்து மலமூத்திரம் நிறைந்த பாண்டமென பிரித்துப் பார்க்கும் விவேகம் நிறைந்தவர்களுக்கு சீச்சீ யென அது மிகவும் அருவருக்கத் தக்கதாகவே தோன்றும்

**20. மாலாய வவரன்றி மாசற்றார் மாணிழையார்**
**கோலாக லங்களையு மொன்றாகக் கொள்ளுவரோ**

| | |
|---|---|
| மாலாய வவரன்றி | உலகம் சத்தியம், தேகம் நித்தியம் என்னும் மயக்கமுற்றவர்களேயல்லாமல் |
| மாசற்றார் | (காம வெகுளி மயக்கமென்னும்) முக்குற்றமற்ற விவேகிகள் |
| மாணிழையார் | பெண்களுடைய |
| கோலாகலங்களை | ஆடையாபரண அலங்காரங்களைக் கண்டாலும் |
| ஒன்றாகக் கொள்ளுவரோ | விவேகம் நிறைந்த அறிஞர்கள்அதை ஒரு பொருளாகக் கருத மாட்டார்கள் என்பதாம். |

உலகம் சத்தியம், தேகம் நித்தியம் என்னும் மயக்கமுற்றவர்களேயல்லாமல் (காம வெகுளி மயக்கமென்னும்) முக்குற்றமற்ற விவேகிகள் பெண்களுடைய ஆடையாபரண அலங்காரங்களைக் கண்டாலும் விவேகம் நிறைந்த அறிஞர்கள்அதை ஒரு பொருளாகக் கருத மாட்டார்கள் என்பதாம்.

**21. நரம்பெலும்பு மூளைதசை நவைதருதோ லாற்பொதித்த**
**குரம்பையினைக் கற்றோருங் கொண்டாட லென்கொண்டோ**

| | |
|---|---|
| நரம்பு எலும்பு மூளை தசை | ஆக்கையென்று சொல்லும்படி சரீரத்தில் பிணித்திருக்கும் நரம்பும் கடினத்தன்மையாயிருக்கும் மூளையும் தடித்ததன்மையான மாமிசமும் |
| நவைதரு தோலாற் பொதித்த | இழிவான தோல்கொண்டு மறைக்கப்பட்ட |
| குரம்பையினை | நவத்துவாரங்களிலும் மலங்கசிந்து கொண்டேயிருக்கும் தீயினால் தகிக்கக்கூடிய தேகத்தினை (கூண்டினை) |
| கற்றோரும் | அறிவு நூல் கல்லாது கருவி நூல் கொஞ்சம் கற்றவர்களுங் கூட |
| கொண்டாடலென்கொண்டோ | போற்றிப் புகழ்வது என்ன காரணமோ ? (அறியாமையேயாம்) |

ஆக்கையென்று சொல்லும்படி சரீரத்தில் பிணித்திருக்கும் நரம்பும் கடினத்தன்மையாயிருக்கும் மூளையும் தடித்ததன்மையான மாமிசமும் இழிவான தோல்கொண்டு மறைக்கப்பட்ட நவத்துவாரங்களிலும் மலங்கசிந்து கொண்டேயிருக்கும் தீயினால் தகிக்கக்கூடிய தேகத்தினை (கூண்டினை) அறிவு நூல் கல்லாது கருவி நூல் கொஞ்சம் கற்றவர்களுங் கூட போற்றிப் புகழ்வது என்ன காரணமோ ? (அறியாமையேயாம்)

**22. தசைய றாதமு கத்தை வந்தெழு சந்ர மண்டல மென்பரே**
**வசைய றாமயிர் தன்னை யுங்குழல் மங்கு லென்றும திப்பரே**

| | |
|---|---|
| தசையறாத முகத்தை | மாமிச பிண்டமான வதனத்தைப் பார்த்து |
| வந்தெழு சந்திர மண்டலமென்பரே | இப்பொழுதே உதயமான பூரணச் சந்திரனே என்று சொல்லியும் |
| வசையறா குழல் மயிர் தன்னையும் | கையும் எண்ணையும் கலவாது ஒழியின் வெய்ய ஈறும் பேனும் விளைந்து நாறும்படியான தலையிருக்கும் (கூந்தல்)ரோமத்தினையும் |
| மங்குலென்று மதிப்பாரே | கரியமேகமே யெனக் கருதுவார்கள்(ஆசையுடையவர்கள்) |

மாமிச பிண்டமான வதனத்தைப் பார்த்து இப்பொழுதே உதயமான பூரணச் சந்திரனே என்று சொல்லியும் கையும் எண்ணையும் கலவாது ஒழியின் வெய்ய ஈறும் பேனும் விளைந்து நாறும்படியான தலையிருக்கும் (கூந்தல்)ரோமத்தினையும் கரியமேகமே யெனக் கருதுவார்கள்(ஆசையுடையவர்கள்)

**23. கற்க நாறிம ணந்த குங்கும களப வண்டலு மளவிலாத்**
**துற்க நாறுதல் கண்டி ருந்துஞ்சு கந்த மென்றுது திப்பரே**

| | |
|---|---|
| கற்க நாறி மணந்த | மிகவும் வாசனை பொருந்திய |
| குங்கும களப வண்டலும் | பச்சைகற்பூரம், குங்குமப்பூ, சந்தனம், பன்னீர், களப கஸ்துாரி முதலிய வாசனைத் திரவியங்களைத் தேகத்தில் பூசியிருந்த போதிலும், |
| அளவிலாத் துற்க நாறுதல் கண்டிருந்தும் | மிகவும் துர்நாற்றம் (அப்பெண்களது தேகம்) வீசுவது தெரிந்திருந்தும் கூட |
| சுகந்தமென்று துதிப்பர் | அவற்றில் சுசி புத்தி கொண்டு (அப்பாவையரிடத்தில்) இயற்கையிலேயே கூட நறுமணமுண்டென்று புகழ்ந்து துதி பாடித் திரிவார்கள் உண்டு என்பனவாம். |

மிகவும் வாசனை பொருந்திய பச்சைகற்பூரம், குங்குமப்பூ, சந்தனம், பன்னீர், களப கஸ்துாரி முதலிய வாசனைத் திரவியங்களைத் தேகத்தில் பூசியிருந்த போதிலும், மிகவும் துர்நாற்றம் (அப்பெண்களது தேகம்) வீசுவது தெரிந்திருந்தும் கூட அவற்றில் சுகி புத்தி கொண்டு (அப்பாவையரிடத்தில்) இயற்கையிலேயே கூட நறுமணமுண்டென்று புகழ்ந்து துதி பாடித் திரிவார்கள் உண்டு என்பனவாம்.

**24. பீளையாகிய கண்க ளைச்சில பிணைக ளென்றுபி தற்றியே**
**சூளை யாரையு மொன்றெ னச்சிலர் சொல்லு வாரவர் புல்லரே.**

| | |
|---|---|
| பீளையாகிய கண்களை | காலையிலெழுந்து கண்ணைக் கழுவு என்னும் வாசகமுணராதார் நாளும் பீளை நிறைந்த கண்களைப் பார்த்ததும் |
| சில பிணைகளென்று பிதற்றியே | மருண்ட பார்வையுடைய (பெண்)மான்குட்டி கண் போன்றது என (மதனால்தாக்கப்பட்டு) அவ்வேதனையாறாமல் (விபரீதமாய்) வாய்பிதற்றுவார்கள். |
| சூளை யாரையுமொன்றென | நாடு தெரியாது காடே குடிகொண்ட கலைக்கோட்டு மகரிஷியும் துளபமால் பதமின்றி துரும்பாகு மற்றவெலாம்எனஎண்ணிவாழ்ந்த தொண்டரடிப் பொடியாழ்வார் (விப்ர நாராயணன்) முதலிய மஹான்களையும் தனது சூழ்ச்சியாலும், சப்தத்தாலும் தன்வசமாகச் செய்யும் காரிகையர்களை ஒரு பொருளாகவும் |
| சொல்லுவர் | புகழ்ந்துபேசுபவர் |
| சிலர் | ஒரு சிலரேயாம். |
| அவர் புல்லரே | அவர்கள் அற்பர்களேயாவர். |

காலையிலெழுந்து கண்ணைக் கழுவு என்னும் வாசகமுணராதார் நாளும் பீளை நிறைந்த கண்களைப் பார்த்ததும் மருண்ட பார்வையுடைய (பெண்)மான்குட்டி கண் போன்றது என (மதனால்தாக்கப்பட்டு) அவ்வேதனையாறாமல் (விபரீதமாய்) வாய்பிதற்றுவார்கள். நாடு தெரியாது காடே குடிகொண்ட கலைக்கோட்டு மகரிஷியும் துளபமால் பதமின்றிதுரும்பாகு மற்றவெலாம்எனஎண்ணிவாழ்ந்த தொண்டரடிப் பொடியாழ்வார் (விப்ர நாராயணன்) முதலிய மஹான்களையும் தனது சூழ்ச்சியாலும், சப்தத்தாலும் தன்வசமாகச் செய்யும் காரிகையர்களை ஒரு பொருளாகவும் புகழ்ந்துபேசுபவர் ஒரு சிலரேயாம். அவர்கள் அற்பர்களேயாவர்.

**25. மெய்ம்மை யேகொடி யெனது வேள்கொடி மீன்வி டும்படை மாதரார்**
**தம்மை யேயென தவர்த மைத்துணி செய்த தைர்ய சக்ரமே**

| | |
|---|---|
| மெய்ம்மையே யெனது கொடி | சத்யமேவ ஜெயதே என்றபடி என்னுடைய (துவஜம்) கொடியானது சத்தியமாம் |
| வேள்கொடி மீன் | மன்மதனது கொடியோ மீனக் கொடியாம். |
| விடும் படை மாதரர் தம்மையே | அக்காமன் செலுத்தும் படைகளோவெனின் (ஸ்த்ரீகளே) பெண்களேயாகும். என சொல்லத்தகும். |
| என் தைரிய சக்ரமே அவர் தமைத் துணி செய்தது | அப்பெண்களைச் சேதித்தது (எங்களிடமுள்ள) அது அசுத்தம், துக்கம், அநித்தியம் என்னும் திடசித்தமான நிச்சயமுள்ள சக்ராயுதமேயாகும். |

சத்யமேவ ஜெயதே என்றபடி என்னுடைய (துவஜம்) கொடியானது சத்தியமாம் மன்மதனது கொடியோ மீனக் கொடியாம். அக்காமன் செலுத்தும் படைகளோவெனின் (ஸ்த்ரீகளே) பெண்களேயாகும். என சொல்லத்தகும். அப்பெண்களைச் சேதித்தது (எங்களிடமுள்ள) அது அசுத்தம், துக்கம், அநித்தியம் என்னும் திடசித்தமான நிச்சயமுள்ள சக்ராயுதமேயாகும்.

**26. பாவை மாருடல் பைம றிப்பதொர் பார்வையிற்பொடி பட்டறும்**
**பூவை மார்பொடி யாகவேபொடி யாகி வேளுயிர் போகுமே**

| | |
|---|---|
| பாவைமார் உடல் | பெண்களது தேகத்தை |
| பை மறிப்பதோர் பார்வையில் | மறித்துப் பார்த்தால் |
| பொடிபட்டறும் | துகளாகி(பெண்களது தேகம்) விடும். |
| பூவைமார் பொடியாகவே | பெண்களது தேகம் அழிவெய்திய காலத்து |
| வேளுயிர் பொடியாகி போகுமே | மன்மதனுக்கும் அழிவென்பதில் ஐயமில்லையே. |

பெண்களது தேகத்தை மறித்துப் பார்த்தால் துகளாகி(பெண்களது தேகம்) விடும். பெண்களது தேகம் அழிவெய்திய காலத்து மன்மதனுக்கும் அழிவென்பதில் ஐயமில்லையே.

**27. இறைவன் முன்பற நிருப கன்றொழு**
**திவை விளெம்பிய வெல்லையிற்**
**பொறைவ லஞ்செய்து தொழுது**
**றும்பகை பொடிப டும்படி புகலுமே**

| | |
|---|---|
| இறைவன் முன்புற | ஸ்ரீ சொரூபானந்தசுவாமிகளாகிய ஞான வேந்தன் முன்னிலையில் |
| நிருபகன் தொழுது இவை வியம்பிய எல்லையில் | சேனாதிபதியான நிருபகன் மிகவும் வணங்கி இதுகாறும் தனது வல்லபங் கூற வேண்டிய அனைத்தும் கூறி முடித்த பின்னர் |

| | |
|---|---|
| பொறை வலஞ் செய்து தொழுது | பொறுமை என்று சொல்லப்படும் சேனாதிபதி எழுந்து வணங்கி வலம் வந்து |
| உறும் பகை | பொருந்திய பகைவர்கள் |
| பொடிபடும்படி | அணுவணுவாக சிதைந்து போகும் தன்மையை |
| புகலுமே | கூறுகின்றார். |

ஸ்ரீ சொரூபானந்தசுவாமிகளாகிய ஞான வேந்தன் முன்னிலையில் சேனாதிபதியான நிருபகன் மிகவும் வணங்கி இதுகாறும் தனது வல்லபங் கூற வேண்டிய அனைத்தும் கூறி முடித்த பின்னர் பொறுமை என்று சொல்லப்படும் சேனாதிபதி எழுந்து வணங்கி வலம் வந்து பொருந்திய பகைவர்கள் அணுவணுவாக சிதைந்து போகும் தன்மையை கூறுகின்றார்.

**28. மாசாய நாவுடையார் வாய்திறந்தா லவர்களுடன்**
**பேசாம லிருந்துவிடு மதுவன்றோ பெருந்தகைமை**

| | |
|---|---|
| மாசாய நாவுடையார் | இழிவானவன் சொல் கூறும் வாயையுடையவர்கள் |
| வாய் திறந்தால் | வாய் திறந்து பேச ஆரம்பிப்பார்களானால் |
| அவர்களுடன் | அந்த இன்னாது கூறும் கொடியவர்களுடன் |
| பேசாது இருந்துவிடும் | ஒன்றும் பேசாது மௌனஞ் சாதித்து விட வேண்டும். |
| அதுவன்றோ | அப்போது பேசாமலிருப்பதுவே |
| பெருந்தகைமை | பெரியோர்கள் கூறிய பெருந்தன்மையாகும். |

இழிவானவன் சொல் கூறும் வாயையுடையவர்கள் வாய் திறந்து பேச ஆரம்பிப்பார்களானால் அந்த இன்னாது கூறும் கொடியவர்களுடன் ஒன்றும் பேசாது மௌனஞ் சாதித்து விட வேண்டும். அப்போது பேசாமலிருப்பதுவே பெரியோர்கள் கூறிய பெருந்தன்மையாகும்.

**29. வைதாரை வாழ்த்தினர்போன் மதித்தென்று மறக்கொடுமை**
**செய்தாரை யறியாத செயலன்றோ செயலாதல்**

| | |
|---|---|
| வைதாரை | இழிவான வார்த்தைகளை நிந்தையாக பேசி யேசுபவர்களையும் |
| வாழ்த்தினன் போல் மதித்து | தம்மைத் துதி செய்கிறவர்களைப் போல் எண்ணியும் |
| என்றும் அறக் கொடுமை செய்தாரை | தமக்கு அப்பொழுதும் தாங்கொணாத (மிகவும்) கொடிய துக்கமான செய்கைகளை செய்தவர்களை |
| அறியாத செயலன்றோ | அவர்கள் இவ்விடத்தில் நமக்கு இன்ன கொடுஞ் செயல்கள் செய்தவரென்று தெரியாமலும் எண்ணாமலும் இருப்பதல்லவா |

| | |
|---|---|
| செயலாதல் | பெரியோர்களது செயற்கரிய செயலாகும். |

இழிவான வார்த்தைகளை நிந்தையாக பேசி யேசுபவர்களையும் தம்மைத் துதி செய்கிறவர்களைப் போல் எண்ணியும் தமக்கு அப்பொழுதும் தாங்கொணாத (மிகவும்) கொடிய துக்கமான செய்கைகளை செய்தவர்களை அவர்கள் இவ்விடத்தில் நமக்கு இன்ன கொடுஞ் செயல்கள் செய்தவரென்று தெரியாமலும் எண்ணாமலும் இருப்பதல்லவா பெரியோர்களது செயற்கரிய செயலாகும்.

**30. பொதுவதுவாய் நிறைந்தபரம் பொருளேபோல் யாவர்க்கு**
**மதுவதுவா யிருந்துவிடு மதுவன்றோ வவிரோதம்.**

| | |
|---|---|
| நிறைந்த | பூர்ணமாக |
| யாவர்க்கும் | யாவருக்கும் (எந்த நாட்டவர், எம் மதத்தவர், எச்சாதியினர், எக் குலத்தவர், எவ் வருணத்தார்,எந்த ஆஸ்ரமத்தினர், என்னடையினர், எவ்வொழுக்கத்தினர்) என்று கருதாமல் |
| பொதுவது வாய் | அனைவருக்கும் எல்லோருக்குஞ் சமமாய் |
| பரம்பொருளேபோல் | மேலான பரமாத்மாவைப்போல் |
| அதுவதுவாய் இருந்து விடும் | அவரவர் கருத்துக்கேற்ப அனைத்தும் சம்மதமே என்று இருப்பது |
| அதுவன்றோ | அதுவல்லவா |
| அவிவேகம் | அநேகச் சுருதிகளாலுங் கூறப்பட்ட விரோதமற்ற (பேதமில்லாத) நிலையாகும். |

பூர்ணமாக யாவருக்கும் (எந்த நாட்டவர், எம் மதத்தவர், எச்சாதியினர், எக் குலத்தவர், எவ் வருணத்தார்,எந்த ஆஸ்ரமத்தினர், என்னடையினர், எவ்வொழுக்கத்தினர்) என்று கருதாமல் அனைவருக்கும் எல்லோருக்குஞ் சமமாய் மேலான பரமாத்மாவைப்போல் அவரவர் கருத்துக்கேற்ப அனைத்தும் சம்மதமே என்று இருப்பது அதுவல்லவா அநேகச் சுருதிகளாலுங் கூறப்பட்ட விரோதமற்ற (பேதமில்லாத) நிலையாகும்.

**31. இகழாவ தேது புகழேது தேரி லிவையாவு மாவ துரையே**
**யகழ்வார்க ளியாவ ரருள் வார்க ளியாவ ரநுபோக மாகு மவையே**

| | |
|---|---|
| இகழாவதேது | இகழ்ச்சியென்பது எதுவாகும், |
| புகழேது | புகழ்ச்சியென்பது எது ? |
| தேரில் | நன்றாய் விசாரித்து பார்க்குமிடத்து |
| இவையாவும் ஆவது உரையே | இவைகளெல்லாமாற்றமே (வாய்ச்சொல் மாத்திரமே) யாகும். |
| அகழ்வார்கள் யாவர் | நம்மை இம்சித்து நிந்தையாக நீங்கியிருப்பவர்கள் யாவர், |

| | |
|---|---|
| அருள்வார்கள் யாவர் | நம்மை நெருங்கி அன்பு(அனுக்கிரகம்) செய்பவர்கள் யாவர் |
| அநுபோகமாகுமவையே | தாமே தமக்குச் சுற்றமும் தாமே தமக்குப் பகையும் என்றபடி தமது குணாநுபவங்களேயாகு மவைகளெல்லாம். யிகல் பிறப்பென்றும் புகழ் பிறவாமையென்றும் பெரியோர் கூறுவர். |

இகழ்ச்சியென்பது எதுவாகும், புகழ்ச்சியென்பது எது? நன்றாய் விசாரித்து பார்க்குமிடத்து இவைகளெல்லாமாற்றமே (வாய்ச்சொல் மாத்திரமே) யாகும். நம்மை இம்சித்து நிந்தையாக நீங்கியிருப்பவர்கள் யாவர், நம்மை நெருங்கி அன்பு(அனுக்கிரகம்) செய்பவர்கள் யாவர் தாமே தமக்குச் சுற்றமும் தாமே தமக்குப் பகையும் என்றபடி தமது குணாநுபவங்களேயாகு மவைகளெல்லாம். யிகல் பிறப்பென்றும் புகழ் பிறவாமையென்றும் பெரியோர் கூறுவர்.

**32. எரியான கோப மெழுபோதி னாறி யினிதாய கூறி யெதிரே**
**சிரியாதி ரார்கள் பெரியோர்கள் சீற நினைவார்கள் வேறுசிலரே**

| | |
|---|---|
| எரியான | நெருப்பைப் போன்று |
| கோபமெழுபோதின் | தகிக்கக்கூடிய கோபம் வந்தபொழுது |
| ஆறி | அவர்கள் முன் நாம் ஆறுதலுடன் |
| எதிரே | அக்கோபம் உடையவர்கள் முன்னிலையில் |
| இனிதாய கூறி | இனிய வார்த்தைகள் சொல்வோமானால் |
| பெரியார்கள் சிரியாதிரார்கள் | அந்த கோபத்தைவிட்டு சீரொழுகு சான்றோர் மகிழ்ச்சியுடன் சிரித்து விடுவார்கள். |
| சீற நினைவார்கள் வேறு சிலரே | இன்னும் சில அற்பர்கள் முடியாத காரணத்தால் இவ்வாறு இறங்கி வருகின்றாயோவென கோபமாயெண்ணுவார்கள். |

நெருப்பைப் போன்று தகிக்கக்கூடிய கோபம் வந்தபொழுது அவர்கள் முன் நாம் ஆறுதலுடன் அக்கோபம் உடையவர்கள் முன்னிலையில் இனிய வார்த்தைகள் சொல்வோமானால் அந்த கோபத்தைவிட்டு சீரொழுகு சான்றோர் மகிழ்ச்சியுடன் சிரித்து விடுவார்கள். இன்னும் சில அற்பர்கள் முடியாத காரணத்தால் இவ்வாறு இறங்கி வருகின்றாயோவென கோபமாயெண்ணுவார்கள்.

**33. முகுளி தம்பெருகு முகமொ ழிந்துவிட**
**முறுவல் கொண்டுமுக மலர்வனே**
**வெகுளி தங்குமந வெரிகெ டும்பரிசு**
**மிகவு மங்கினிமை விளைவனே**

| | |
|---|---|
| முகுளி தம் பெருகு முகம் | முகஞ்சுருங்கி பொங்கி எழுந்த கோபமானது |

| | |
|---|---|
| ஒழிந்துவிட | அக்கோபமானது நீங்கிய உடனே |
| முறுவல் கொண்டு முக மலர்வனே | புன்சிரிப்புடன் முகமலர்ச்சியை யடையும். |
| வெகுளி தங்கு மன வெரி | மனத்தில் தங்கிய கோபாக்கினி |
| கெடும் பரிசு | அக்கோபம் நீங்கிய விடத்து கிடைப்பது |
| மிகவும் அங்கு இனிமை விளைவனே | அதிகமாக அவ்விடத்தில் (சொல்லொன்னாத) இன்பமுண்டாகுவனவாம். (எனதறியாமையிலெழுந்த கோபத்தை பொறுத்தருளுமென தாம் வேண்ட அவ்வாறு மற்ற அவர்களும் வேண்ட இன்பஞ் ஜனிக்கும்.) |

முகஞ்சுருங்கி பொங்கி எழுந்த கோபமானது அக்கோபமானது நீங்கிய உடனே புன்சிரிப்புடன் முகமலர்ச்சியை யடையும். மனத்தில் தங்கிய கோபாக்கினி அக்கோபம் நீங்கிய விடத்து கிடைப்பது அதிகமாக அவ்விடத்தில் (சொல்லொன்னாத) இன்பமுண்டாகுவனவாம். (எனதறியாமையிலெழுந்த கோபத்தை பொறுத்தருளுமென தாம் வேண்ட அவ்வாறு மற்ற அவர்களும் வேண்ட இன்பஞ் ஜனிக்கும்.)

**34. மொழித ருங்கனலு மவிய நின்றமிர்த**
**மொழியெ னுந்தடிநி பொழிவனே**
**யழித ரும்படியென் னுடலில் வந்தனவெ**
**னநுப வங்களென வயில்வனே**

| | |
|---|---|
| மொழிதரும் கனலும் | மிகவும் கடுமையான வெப்பம் பொருந்தியதென்று சொல்லும்படியான கோபாக்கினியும் |
| அவிய | தணிந்து (நீங்கும் பொருட்டு) |
| நின்று | இருந்து (மிகவும் அமைதியுடன்) |
| அமிர்தமொழியெனும் | அழிவற்ற இன்சொல்லெனும் |
| தடினி பொழிவனே | (அமிர்த வர்ஷமான) பெருமழை பெய்தல் (மேற்கூறிய வெப்பம் நீங்கும்படி ) |
| என்னுடலில் வந்தன | இது எனது தேகத்தில் உதித்த |
| என் அனுபவங்கள் | எனது அனுபவங்கள் |
| என | என்று |
| அயில்வன | அக்கோபாக்கினியை அருந்திவிடுவனவாம். |

மிகவும் கடுமையான வெப்பம் பொருந்தியதென்று சொல்லும்படியான கோபாக்கினியும் தணிந்து (நீங்கும் பொருட்டு) இருந்து (மிகவும் அமைதியுடன்) அழிவற்ற இன்சொல்லெனும் (அமிர்த வர்ஷமான) பெருமழை பெய்தல் (மேற்கூறிய வெப்பம்

நீங்கும்படி ) இது எனது தேகத்தில் உதித்த எனது அனுபவங்கள் என்று அக்கோபாக்கினியை அருந்திவிடுவனவாம்.

**35. மிகையாவென் பொறைப் படைக்கு விருந்தாக்கி விடுகின்றேன்**
**பகைபாவங் கொடுமைகொலை படையுடைய கோபனையே**

| | |
|---|---|
| மிகையா | தோஷமில்லாத மிகுதியான |
| என் பொறைப் படைக்கு | எனது பொறுமையென்னும் சேனைகட்கு |
| பகை பாவம் கொடுமைக்கொலை | தீராத விரோதம் துன்பத்தைக் கொடுக்கும். இழிவான செயல், பிற உயிரைத் துன்புறுத்தல், ஓர் உடம்பினின்றும் உயிரைப் போக்குதல் (ஐந்து வகைச் சேனைகள்) |
| படையுடைய | பஞ்சமா பாதகங்களானும், ஐம்பெரும் படைகளைக் கொண்ட |
| கோபனை | கோபமென்று சேனாதிபதியை (மேற்கூறிய ) |
| விருந்தாக்கி விடுகின்றேன் | எனது படைகளுக்கு பெரு விருந்தென்னும் உணவருந்தச் செய்து விடுவேன். |

தோஷமில்லாத மிகுதியான எனது பொறுமையென்னும் சேனைகட்கு தீராத விரோதம் துன்பத்தைக் கொடுக்கும். இழிவான செயல், பிற உயிரை துன்புறுத்தல், ஓர் உடம்பினின்றும் உயிரைப் போக்குதல் (ஐந்து வகைச் சேனைகள்) பஞ்சமா பாதகங்களானும், ஐம்பெரும் படைகளைக் கொண்ட கோபமென்று சேனாதிபதியை (மேற்கூறிய ) எனது படைகளுக்கு பெரு விருந்தென்னும் உணவருந்தச் செய்து விடுவேன்.

**36. பொறைபெரிது மிவையோதப் புகழ்பெரிய சந்தோட**
**னிறையுடையா னடியேத்தி நிறை வுடனின் றறைவுறுமே**

| | |
|---|---|
| பொறை பெரிது மிவை யோத | பொறுமையென்று சொல்லும் பெரிய சேனாதிபதி தன்னை பெரிதாக எண்ணி இவ்வாறு கூறிய பின்னர் |
| புகழ் பெரும் சந்தோடன் | பெரும் புகழ் உடைய (திருப்தி) சந்தோஷமென்னும் சேனாதிபதி |
| இறையுடையான் அடியேத்தி | மனத்திட்பமுடைய ஞான வேந்தனது திருவடியை வணங்கித் துதித்து |
| நிறைவுடனின்று | பூர்ணத்துவமாக இருந்து |
| அறைவுறுமே | புகல்கின்றான். |

பொறுமையென்று சொல்லும் பெரிய சேனாதிபதி தன்னை பெரிதாக எண்ணி இவ்வாறு கூறிய பின்னர் பெரும் புகழ் உடைய (திருப்தி) சந்தோஷமென்னும் சேனாதிபதி

மனத்திட்பமுடைய ஞான வேந்தனது திருவடியை வணங்கித் துதித்து பூர்ணத்துவமாக இருந்து புகல்கின்றான்.

**37. என்றும் பொருவரிய வின்பப் பொருளுடையார்**
**பொன்றும் பொருளும் பொருளாகப் போற்றுவரோ**

| | |
|---|---|
| என்றும் பொருவரிய | மூன்று காலத்தும் அழியாத |
| இன்பப் பொருளுடையார் | அனந்தமான மெய்ப்பொருளுடையவர்கள் |
| பொன்னும் | மின்னலுக்குச் சமமாகத் தோன்றி மறையும் |
| பொருளும் | அநித்தியப் பொருள்களையும் |
| பொருளாகப் | ஒரு பெருஞ்செல்வமாக |
| போற்றுவரோ | மதித்து போற்றிக் காக்க மாட்டார்கள். போற்றார் என்பதாம். |

மூன்று காலத்தும் அழியாத அனந்தமான மெய்ப்பொருளுடையவர்கள் மின்னலுக்குச் சமமாகத் தோன்றி மறையும் அநித்தியப் பொருள்களையும் ஒரு பெருஞ்செல்வமாக மதித்து போற்றிக் காக்க மாட்டார்கள். போற்றார் என்பதாம்.

**38. வாணா ளொழிந்தாலும் வாய்விண்டு தாம்வேண்ட**
**நாணா தொழிகுவரோ நன்றாய நாவுடையார்**

| | |
|---|---|
| நன்றாய நாவுடையார் | நல்ல நாவு (சத்திய வசனம்) படைத்தவர்கள் |
| வாழ்நாள் ஒழிந்தாலும் | தனக்கு பிராணஹாணி ஏற்பட்ட போதிலும் |
| வாய் விண்டு தாம் வேண்ட | தனக்கு வேண்டுமென்று ஒரு பொருளை பிறரிடத்தில் வாய் திறந்து தாம் கேட்பதற்கு |
| நாணாது ஒழிகுவரோ | வெட்கத்தை யடையாமலிருப்பார்களோ. அடையவே செய்வார்கள். |

நல்ல நாவு (சத்திய வசனம்) படைத்தவர்கள் தனக்கு பிராணஹாணி ஏற்பட்ட போதிலும் தனக்கு வேண்டுமென்று ஒரு பொருளை பிறரிடத்தில் வாய் திறந்து தாம் கேட்பதற்கு வெட்கத்தை யடையாமலிருப்பார்களோ. அடையவே செய்வார்கள்.

**39. உளம்படு பேராசை நோய்கூர மேன்மே**
**லுழன்றவர் வாழத வாகாண லாமே**
**வளம்பட வாழ்வோமெ னாதார்க ளியாரே**
**வருந்தினும் வாராது வாராது தானே**

| | |
|---|---|
| உளம் படு பேராசை | மனத்திலுள்ள மிகுந்த அவாவென்னும் |
| நோய்கூற | வியாதியை சொல்லுமிடத்து |
| மேன்மேலுழன்றவர் | தனக்கு போதுமான செல்வமிருந்தும் ஆசையினால் அலைபவர்களை |
| வாழாதவா காணலாமே | இதுவே போதுமென்று திருப்தியுடன் இருப்பர். மேலும் பொருள் தேடி உயிரிழந்தவர்களைக் காணலாம். |
| வளம்பட | நன்றாக சகல வளப்பத்துடன் |
| வாழ்வோமெனாதார் களியாரே | யார்தான் இருக்கிறார்கள் ? எல்லா வளமும் பொருந்த வாழ வேண்டுமென்று எண்ணாமல் (அனைவருக்கும் அதுவே எண்ணமாகும்) |
| வராதது தான் வருந்தினும் வாராது தானே | தனக்கு வரவேண்டியது தானே வரும். வராதது வருந்தி வேண்டினாலும் வராது. |

மனத்திலுள்ள மிகுந்த அவாவென்னும் வியாதியை சொல்லுமிடத்து தனக்கு போதுமான செல்வமிருந்தும் ஆசையினால் அலைபவர்களை இதுவே போதுமென்று திருப்தியுடன் இருப்பர். மேலும் பொருள் தேடி உயிரிழந்தவர்களைக் காணலாம். நன்றாக சகல வளப்பத்துடன் யார்தான் இருக்கிறார்கள் ? எல்லா வளமும் பொருந்த வாழ வேண்டுமென்று எண்ணாமல் (அனைவருக்கும் அதுவே எண்ணமாகும்) தனக்கு வரவேண்டியது தானே வரும். வராதது வருந்தி வேண்டினாலும் வராது.

**40. புலன்றலை கொண்டேறு புன்போக மேன்மேற்**
**புணர்ந்திட வுண்டாகி வந்தாலு மாறா**
**வலந்தலை கண்டாசை யொன்றோடு றாதே**
**யறிந்தவர் சந்தோடம் வந்தாறி னாரே**

| | |
|---|---|
| புலன்றலை கொண்டு | ஆகாசாதி விஷயங்கள் நல்லதென மனத்தில் கொண்டு |
| பஞ்சேந்திரிய வழியாக | பஞ்சேந்திரிய வழியாக (புலன்கள் வழியாக கொள்ளப்பட்ட) |
| புன்போக | இழிவாகிய போக வஸ்த்துகள் |
| மேன்மேல் புணர்ந்திட | அதிகமாக தனக்கு அனுபவிக்க வேண்டிக் கிடைத்தாலும் |
| ஆறாவலந்தலை கண்டு | ஆறுதல் அடையாமல் துன்பமடைகின்ற தனவந்தர்களைப் பார்த்து |
| ஆசை யொன்றோடு உருது | சப்தாதி விஷய போகங்களில் இச்சையின்றி சீச்சீ இது என்றும் நமக்கு இன்பமளிக்காதென்று |
| அறிந்தவர் | இது நித்தியம், இது அநித்தியம் என்று அறிந்த அறிஞர்கள் |
| சந்தோடம் வந்து | நித்தியமான ஆன்ம வடிவ இன்பமயன் யாமென சந்தோஷமாக |

| | |
|---|---|
| ஆறினாரே | திருப்தி அடைந்து ஆறுதலுடன் இருப்பார்கள். |

ஆகாசாதி விஷயங்கள் நல்லதென மனத்தில் கொண்டு பஞ்சேந்திரிய வழியாக (புலன்கள் வழியாக கொள்ளப்பட்ட) இழிவாகிய போக வஸ்த்துகள் அதிகமாக தனக்கு அனுபவிக்க வேண்டிக் கிடைத்தாலும் ஆறுதல் அடையாமல் துன்பமடைகின்ற தனவந்தர்களைப் பார்த்து சப்தாதி விஷய போகங்களில் இச்சையின்றி சீச்சீ இது என்றும் நமக்கு இன்பமளிக்காதென்று இது நித்தியம், இது அநித்தியம் என்று அறிந்த அறிஞர்கள் நித்தியமான ஆன்ம வடிவ இன்பமயன் யாமென சந்தோஷமாக திருப்தி அடைந்து ஆறுதலுடன் இருப்பார்கள்.

**41. இல்லாத பொழுதின்ப மிதுவென்று பிறர்பாற்**
**செல்லாத செலவென்ப செலவாய செலவே**

| | |
|---|---|
| இல்லாத பொழுது இது இன்பமென்று | போக வஸ்துக்கள் யாதொரு பொருளும் (செல்வங்கள்) தம்மிடத்து இல்லாத காலத்தில் இதுவே நல்ல சுகமென்று |
| பிறர்பால் செல்லாத | அன்னியரிடம் சென்று கேட்டு வழங்கி வந்துவாழ்வோம் என்று செல்லாமல் |
| செலவென்ப செலவாய செலவே | யாசித்து வாழாமல் (இதுவே போதுமென்று) இதுதான் எமது கொள்கை (இது எமது அநுட்டானம்) யென்றும் சும்மாவிருப்பதுவே உயர்ந்த வாழ்க்கையாம். |

போக வஸ்துக்கள் யாதொரு பொருளும் (செல்வங்கள்) தம்மிடத்து இல்லாத காலத்தில் இதுவே நல்ல சுகமென்று அன்னியரிடம் சென்று கேட்டு வழங்கி வந்துவாழ்வோம் என்று செல்லாமல் யாசித்து வாழாமல் (இதுவே போதுமென்று) இதுதான் எமது கொள்கை (இது எமது அநுட்டானம்) யென்றும் சும்மாவிருப்பதுவே உயர்ந்த வாழ்க்கையாம்.

**42. படைத்தவனி றுந்திசைப டைத்தபொரு ளெங்கே**
**யெடுத்தவன்வி ழிற்சுமைவி ழாமலு மிராதே**

| | |
|---|---|
| படைத்தவன் இறுந்திசை | இந்த விரிந்த உலகை உண்டாக்கிய (சிருஷ்டித்த) பிரம்மதேவனே ஊழிக்காலத்தில் அழிவானென்றால் |
| படைத்த பொருளெங்கே | அந்த பிரம்ம தேவனால் உண்டாக்கப்பட்ட (சிருஷ்டிக்கப்பட்ட) எந்தப் பொருள்தான் அழியாமலிருக்கும் ? அழிந்தேவிடும். எவ்வாறெனில், |
| எடுத்தவன் விழில் | சுமை தூக்கிச் செல்லும் ஒரு வழிப்போக்கன் கால் இடரி கீழே விழுவானேயானால், |
| சுமை வீழாமலும் இராதே | அவன் எடுத்துச் செல்லும் சுமையானது கீழே விழுமென்று கூறவும் வேண்டுமோ. (இவை கைமுதிக நியாயத்தால்) விழுந்தே தீரும் (என்பனவாம்) இதனால் உலகம் நைச்வரம் (அழியக்கூடியது) |

இந்த விரிந்த உலகை உண்டாக்கிய (சிருஷ்டித்த) பிரம்மதேவனே ஊழிக்காலத்தில் அழிவானென்றால் அந்த பிரம்ம தேவனால் உண்டாக்கப்பட்ட (சிருஷ்டிக்கப்பட்ட) எந்தப் பொருள்தான் அழியாமலிருக்கும்? அழிந்தேவிடும். எவ்வாறெனில், சுமை தூக்கிச் செல்லும் ஒரு வழிப்போக்கன் கால் இடரி கீழே விழுவானேயானால், அவன் எடுத்துச் செல்லும் சுமையானது கீழே விழுமென்று கூறவும் வேண்டுமோ. (இவை கைமுதிக நியாயத்தால்) விழுந்தே தீரும் (என்பனவாம்) இதனால் உலகம் நைச்வரம் (அழியக்கூடியது)

**43. ஆமாகும் வழியால ருந்தித்த டையற்**
**றாமாய்தல் பொருள்மாய்த றவிராது பிரிவே**

| | |
|---|---|
| ஆமாகும் வழியா லருந்தி | பிராரத்த கருமானுசாரம் தனக்கு ஆகக்கூடிய (நியாய வழியில்) மார்க்கத்தில் பொருள் சேர்த்து அநுபவிக்கும் காலத்தில் |
| தடையால் | பிராரத்த நாசத்தால் |
| பிரிவே தவிராது | பிரித்துவிடும் என்பது நிச்சயமாகும். |
| தா மாய்தல் பொருள் மாய்தல் | எவ்வாறெனில், தான் சாவன் அல்லது பொருள் போகும். (எவ்விதத்தும்) இரண்டும் பிரிவு உண்மையாகும். |

பிராரத்த கருமானுசாரம் தனக்கு ஆகக்கூடிய (நியாய வழியில்) மார்க்கத்தில் பொருள் சேர்த்து அநுபவிக்கும் காலத்தில் பிராரத்த நாசத்தால் பிரித்துவிடும் என்பது நிச்சயமாகும். எவ்வாறெனில், தான் சாவன் அல்லது பொருள் போகும். (எவ்விதத்தும்) இரண்டும் பிரிவு உண்மையாகும்.

**44. வாதாகி நுகர்கின்ற வயிறுள்ள தொருசா**
**ணேதாலி தமையாதி தென்னேயி தென்னே**

| | |
|---|---|
| வாதாகி நுகர்கின்ற வயிறுள்ளது ஒரு சாண் | எனக்கு முதன்மையாக இடவும், இன்னமும் கொஞ்சம் போடுங்களென்று வாய்பேசி வழக்கிட்டு வாங்கி புசிப்பதெல்லாம் உள்ளது. ஒருசாண் வயிறே தவிர அதற்கு மேலில்லை. |
| இது ஏதால் அமையாது | இந்தப் பசியானது எந்த உணவால் தீராது. உப்பகன்ற கூழ் காடி உண்டால் பசி கெடுமால் என்றபடி மிகவும் எளிய முறையில் பசி தீர்க்கலாம். |
| இது என்னே இது என்னே | அவ்வாறிருக்கும்போது இதுவே மிகவும் ஆச்சரியம் (இதுவும் மனிதவர்க்கமா) என்று வியக்கச் செய்வர். |

எனக்கு முதன்மையாக இடவும், இன்னமும் கொஞ்சம் போடுங்களென்று வாய்பேசி வழக்கிட்டு வாங்கி புசிப்பதெல்லாம் உள்ளது. ஒருசாண் வயிறே தவிர அதற்கு மேலில்லை. இந்தப் பசியானது எந்த உணவால் தீராது. உப்பகன்ற கூழ் காடி உண்டால் பசி கெடுமால் என்றபடி மிகவும் எளிய முறையில் பசி தீர்க்கலாம். அவ்வாறிருக்கும்போது இதுவே மிகவும் ஆச்சரியம் (இதுவும் மனிதவர்க்கமா) என்று வியக்கச் செய்வர்.

**45. ஏசாத பற்றின்மை யெனுமாயு தத்தா**
**லாசாபி சாசோடு மடலோப னிறுமே**

| | |
|---|---|
| ஏசாத | குற்றமற்ற |
| பற்றின்மை | நிராசை (விரும்பாமை) |
| எனும் ஆயுதத்தால் | ஆசையின்மை என்ற வாளாயுதம் கொண்டு |
| ஆசாப சாசோடு | பேராசையென்னும் பெரும் பேயோடும் |
| அட லோபன் இறுமே | மிகவும் வலிமைபொருந்திய லோபன் (ஈயாமை) என்பவன் அழிந்து விடுவான். |

குற்றமற்ற நிராசை (விரும்பாமை) ஆசையின்மை என்ற வாளாயுதம் கொண்டு பேராசையென்னும் பெரும் பேயோடும் மிகவும் வலிமைபொருந்திய லோபன் (ஈயாமை) என்பவன் அழிந்து விடுவான். லோபனது வலிமை யாதெனில் உத்தம குணங்கலெல்லாம் லோபத்தால் சிதையுமாப்போல் என்ற வசிட்டர் வாக்கால் உணர்க. பற்றின்மை என்பதற்குதாரணம் பகவற்கீதை அஸங்க சஸ்த்ரேண த்ருடேன ஷித்வா என்றபடி.

**46. சந்தோ டனிவை யிவை சாற்றவே**
**யந்தோ வென்ற ருளும ளவிலே**

| | |
|---|---|
| சந்தோடன் | வல்லபம் பொருந்திய சந்தோஷன் (திருப்தி) என்றவன் |
| இவைஇவை | இந்தப்பிரகாரம் ஆசையை அழிப்பேன் இன்னும் லோபனையும் ஜெயிப்பேன் என்று |
| சாற்றவே | கூறியவளவில் |
| அந்தோ | இதுவென்ன ஆச்சரியம், |
| என்றருளு காலத்தில் | இவ்வாறு கூறிய காலத்தில் (ஞாந வேந்தன் கூறிய மாத்திரத்தில்) |

வல்லபம் பொருந்திய சந்தோஷன் (திருப்தி) என்றவன் இந்தப்பிரகாரம் ஆசையை அழிப்பேன் இன்னும் லோபனையும் ஜெயிப்பேன் என்று கூறியவளவில் இதுவென்ன ஆச்சரியம், இவ்வாறு கூறிய காலத்தில் (ஞாந வேந்தன் கூறிய மாத்திரத்தில்) இவ்

விரண்டு செய்யுள் குளகம். இவன் மோக்ஷ வீட்டின் துவார பாலகர்கள் நால்வரில் ஒருவன். இவனது தயவில் முத்தி பெறலாம். நால்வர்– சாந்தி, சந்தோடம், சாது சங்கம், விசாரம்.

**47. விவகா ரபரா முகன்மே வரும்**
**பவகா லிபதம் பணிந்தோ துமே**

| | |
|---|---|
| விவகார பராமுகன் | வியவகாரத்தை ஒரு பொருளாக மதித்து மனதிற் கொள்ளாதவன் |
| மேவரும் | பொருதுதற்கு (அபக்குவிகளுக்கு அடைதற்கு) |
| பவகாலி | அரிய எமது பிறவி நாசன் |
| பதம் பணிந்து | திவ்ய திருவடியை வணங்கி |
| ஓதுமே | தனது கருத்தை எடுத்துக் கூறுகின்றான். |

வியவகாரத்தை ஒரு பொருளாக மதித்து மனதிற் கொள்ளாதவன் பொருதுதற்கு (அபக்குவிகளுக்கு அடைதற்கு) அரிய எமது பிறவி நாசன் திவ்ய திருவடியை வணங்கி தனது கருத்தை எடுத்துக் கூறுகின்றான்.

**48. அத்தனொ டன்னைக் கன்பு செய் கின்றா**
**ரளவில் பிறப்புற் றவையவை தோறு**
**மெத்தனை தாயுந் தந்தையு முற்றா**
**ரித்தனை யன்றோ விவர்களு மிங்கே**

| | |
|---|---|
| அத்தனொடு | தந்தையுடன் |
| அன்னைக்கு | தாய்க்கும் |
| அன்பு செய்கின்றார் | பந்தமும் பாசமும் கொண்டு பணி செய்வார்கள். |
| அளவில் பிறப்புற்று | எழுகடல் மணலைஅளவிட லெளிது. என்துயர் பிறவி என்னும் என் பிறப்போ எண்ணத் தொலையாது என்றும் அருணகிரிநாதரும் காளமேகரும் கூறியபடி இவ்வளவு தானென்று கூறமுடியாத பிறப்பெடுத்துள்ளோம். |
| அவைஅவை தோறும் | அந்தந்த பிறப்புக்கள்தோறும் |
| எத்தனை தாயுந் தந்தையும் உற்றார் | எவ்வளவு மாதா பிதாக்கள் (இதற்குமுன்)தோன்றினார்கள். |
| இங்கே | இவ்விடத்தில் |
| இவர்களும் | இப்பொழுது தோன்றிய இந்த உடம்பிற்கு ஏதுவாயிருந்த மாதா பிதா வென்று சொல்லப்பட்ட இவ்விருவர்களும் |
| இத்தனையன்றோ | இதற்கு முன் அனந்தஞ் ஜென்மங்களில் தோன்றிய அவர்களை போன்றுதானே இவர்களும். அவ்வாறிருக்க அவர்களிடத்தில் அன்பு இன்றி இவர்களிடம் என்ன அன்பு செய்வது. |

தந்தையுடன் தாய்க்கும் பந்தமும் பாசமும் கொண்டு பணி செய்வார்கள். எழுகடல் மணலைஅளவிட லெளிது. என்துயர் பிறவி என்னும் என் பிறப்போ எண்ணத் தொலையாது என்றும் அருணகிரிநாதரும் காளமேகரும் கூறியபடி இவ்வளவு தானென்று கூறமுடியாத பிறப்பெடுத்துள்ளோம். அந்தந்த பிறப்புக்கள்தோறும் எவ்வளவு மாதா பிதாக்கள் (இதற்குமுன்)தோன்றினார்கள். இவ்விடத்தில் இப்பொழுது தோன்றிய இந்த உடம்பிற்கு ஏதுவாயிருந்த மாதா பிதா வென்று சொல்லப்பட்ட இவ்விருவர்களும் இதற்கு முன் அனந்தஞ் ஜென்மங்களில் தோன்றிய அவர்களை போன்றுதானே இவர்களும். அவ்வாறிருக்க அவர்களிடத்தில் அன்பு இன்றி இவர்களிடம் என்ன அன்பு செய்வது.

**49. சாலவு திக்கும்பு ழுவுட றன்னிற்**
**றகவின்ம லத்தோ டொழுகுமு டம்பே**
**போலவு திக்கும்பு ழுவினை யென்னே**
**புத்திர னென்றே புந்திசெய் தாரே**

| | |
|---|---|
| சால வுதிக்கும் புழுவுடல் தன்னில் | மிகுதியாகத் தோன்றும் புழுக்கள் (கிருமி) நிறைந்த தோற்பையென்னும் இச்சரீரத்தில் |
| தகவு இல் | தகுதிஇன்றிய |
| மலத்துடன் ஒழுகும் உடம்பே போல் | அமேத்தியம் கசிந்து கொண்டிருக்கும்தேகத்தைப் போன்றே |
| வுதிக்கும் புழுவினை | தோற்றுகின்ற மனித சரீரமென்னும் பெரும் புழுவை |
| புத்திரனென்றே | இது நமது பிள்ளையே என |
| புந்தி செய்தாரே | புத்தி வைக்கிறார்களே |
| யென்னே | இதுதான் எனக்கு மிகவும் ஆச்சரியமாக இருக்கின்றது. இதைவிட மற்றொன்றுமில்லை. |

மிகுதியாகத் தோன்றும் புழுக்கள் (கிருமி) நிறைந்த தோற்பையென்னும் இச்சரீரத்தில் தகுதிஇன்றிய அமேத்தியம் கசிந்து கொண்டிருக்கும்தேகத்தைப் போன்றே தோற்றுகின்ற மனித சரீரமென்னும் பெரும் புழுவை இது நமது பிள்ளையே என புத்தி வைக்கிறார்களே இதுதான் எனக்கு மிகவும் ஆச்சரியமாக இருக்கின்றது. இதைவிட மற்றொன்றுமில்லை.

**50. வந்தவ ழிக்கண் வந்திலர் போகும்**
**வழியினும் வருவா ரிலரிடை வழியார்**
**தந்தைம கத்தாய் தம்மொடு வந்தார்**
**தாரமு முற்றார் தாமுமெ லாமே.**

| | |
|---|---|
| தந்தை | பிதாவும், |
| மகவு | புத்திரனும், |
| தாய் | மாதாவும், |
| தம்மொடு வந்தார் | தனது உடன்பிறந்தாரென்னும் சகோதரர்களும், |
| தாரமும் | மனைவியும், |
| உற்றார் | உறவினர்கள் |
| தாமுமெலாமே | மேற்கூறிய அனைவரும் |
| வந்த வழிக்கண் வந்திலர் | நாம் தோன்றும்போது இவர்களனைவரும் நம்முடன் தோன்றவில்லை. |
| போகும் வழியினும் வருவாரிலர் | நாம் இந்த சரீரத்தை விட்டு நீங்கும் போதாவது வருவார்களாவென்றால் வரவுமாட்டார்கள். |
| இடைவழியர் | (அதனால்) வழிப்போக்கர் இடையில் சந்திப்பதுபோல் மேற்கூறியவர்களும் |

பிதாவும், புத்திரனும், மாதாவும், தனது உடன்பிறந்தாரென்னும் சகோதரர்களும், மனைவியும், உறவினர்கள் மேற்கூறியனைவரும் நாம் தோன்றும்போது இவர்களனைவரும் நம்முடன் தோன்றவில்லை. நாம் இந்த சரீரத்தை விட்டு நீங்கும் போதாவது வருவார்களாவென்றால் வரவுமாட்டார்கள். (அதனால்) வழிப்போக்கர் இடையில் சந்திப்பதுபோல் மேற்கூறியவர்களும் முன்னும் பின்னும் இன்றி (பிறக்கும்போதும் இறக்கும் போதுமில்லாமல்) இடையில் சந்தித்தவர்கள். இதையே சந்தையுறவு என்பார்கள்.

**51. அமருமு டம்போ டழிதுயர் வந்தே**
**யலம்வரு போதங் கநுபவி யாதே**
**தமர்கள்ப கிர்ந்தா ருளரென வுண்டோ**
**தம்முற வாவார் தாமல தின்றே**

| | |
|---|---|
| அமரும் உடம்பொடு | நாம் பொருந்திய தேகத்தோடு |
| அழிதுயர் வந்து அலம் வரும் போது | இத்தேகம் அழியும்படியான கொடிய நோய் வயப்பட்டு துக்கத்தை தாங்க முடியாமல் வருந்துஞ் சமயத்தில் |
| அங்கு அனுபவியாதே | அவ்விடத்தில் அத்துக்கத்தை தாம் அனுபவியாமல் (தானடையாமல்) |
| பகிர்ந்தாருளர் தமர்கள் | நமது துன்பத்தை பங்கிட்டுக் கொண்டார்கள் சுற்றத்தார்கள் |
| என உண்டோ | என்று சொல்வது எங்கேயாவது எப்பொழுதாவது உண்டோ? (சென்ற காலங்களிலாவது) வேறு தேசத்திலாவது இருக்குமோ வென்றால் ஓகாரம் எதிர்மறைப் பொருள். ஆகவே இல்லை என்பதாம். |

| | |
|---|---|
| தம்முறவாவார் | தமக்கு(சுற்றமாக) உறவு இருப்பது |
| தாமலது இன்றே | தமக்குச் சுற்றம் தானன்றி வேறில்லை |

நாம் பொருந்திய தேகத்தோடு இத்தேகம் அழியும்படியான கொடிய நோய் வயப்பட்டு துக்கத்தை தாங்க முடியாமல் வருந்துஞ் சமயத்தில் அவ்விடத்தில் அத்துக்கத்தை தாம் அனுபவியாமல் (தானடையாமல்) நமது துன்பத்தை பங்கிட்டுக் கொண்டார்கள் சுற்றத்தார்கள் என்று சொல்வது எங்கேயாவது எப்பொழுதாவது உண்டோ ? (சென்ற காலங்களிலாவது) வேறு தேசத்திலாவது இருக்குமோ வென்றால் ஓகாரம் எதிர்மறைப் பொருள். ஆகவே இல்லை என்பதாம். தமக்குச் சுற்றமாக இருப்பது வேறு யாருமில்லை.

**52. ஒழிந்தன வேறற வொன்றுட றானு**
**மழிந்தது தம்முட ணாமுற வாரே**

| | |
|---|---|
| ஒழிந்தன வேறற | மூலத்தோடு நீங்கியது, |
| வொன்று உடல் தானும் | பொருந்திய தேகமானது, |
| அழிந்தது | நீங்குமேயானால் |
| தம்முடன் ஆம் உறவு ஆரே | தம்மோடு பொருந்திய சுற்றத்தார் யார் ? (ஒருவருமிலர்) |

மூலத்தோடு நீங்கியது, பொருந்திய தேகமானது, நீங்குமேயானால் தம்மோடு பொருந்திய சுற்றத்தார் யார் ? (ஒருவருமிலர்)

**53. சுற்றமொ டுற்றது வந்துவ மெல்லா**
**மற்றவர் தம்முட னற்றவர் தாமே**

| | |
|---|---|
| சுற்றமொடு உற்ற | பொருந்திய பந்துக்களுடன் |
| துவந்துவம் எல்லாம் | சுகம், துக்கம், இலாபம், நஷ்டம், மானம், அவமானம் ஆகிய இரட்டைகளனைத்தும் |
| அற்றவர் தம் முடல் நற்றவர் தாமே | மேலும் பொருந்திய அவர்கள் தமதுடன் சார்ந்தவர்களே (அதற்கு வேறில்லை) என்பதாம். த்வந்துவங்கள்அற்றவர்களே நம்முடன் நட்பாவர் என்பதாம். |

பொருந்திய பந்துக்களுடன் சுகம், துக்கம், இலாபம், நஷ்டம், மானம், அவமானம் ஆகிய இரட்டைகளனைத்தும் மேலும் பொருந்திய அவர்கள் தமதுடன் சார்ந்தவர்களே (அதற்கு வேறில்லை) என்பதாம். த்வந்துவங்கள் அற்றவர்களே நம்முடன் நட்பாவர் என்பதாம்.

**54. கதறிய வாழி யாறி யாடுதல்**
**கருதினர் யாவர் தாமி யாவையு**
**முதறிய றாத போது நாடொறு**

**மொழுகவி டாதவ் வார வாரமே**

| | |
|---|---|
| கதறி ஆழி | சப்திக்கின்ற சமுத்திரத்தில் |
| ஆறியாடுதல் | அலை முதலியன இன்றி நீராடுதல் |
| கருதினர் யாவர்தாம் | கருத்தில் கொண்ட ஒவ்வொருவரும் |
| யாவையு முதறி யறாத போது | சப்த முதலியவற்றை நீக்கிவிடாத காலத்தில் |
| அவ்வாரவாரம் | அந்த அலை முதலிய கோஷங்கள் |
| நாள்தொறும் ஒழுக விடாது | தினந்தினமும் நம்மை செல்ல ஒட்டாது. |

சப்திக்கின்ற சமுத்திரத்தில் அலை முதலியன இன்றி நீராடுதல் கருத்தில் கொண்ட ஒவ்வொருவரும் சப்த முதலியவற்றை நீக்கிவிடாத காலத்தில் அந்த அலை முதலிய கோஷங்கள் தினந்தினமும் நம்மை செல்ல ஒட்டாது.ஆதலால் அலை முதலியன கருதாமல் நீராடிச் செல்லுதல் ஒருதலையாயது.

**55. கழியநி லாதபோது சேறது**
**கழுவியு மிலாப மேது யாவையு**
**மொழியநி லாதபோது மாசற**
**வுதறவொ ணாது பாச மூடுமே**

| | |
|---|---|
| கழிய நிலாத போது | நடந்த வழி பாக்கியிருப்பதால், |
| சேறது கழுவியும் லாபம் ஏது | காலில் பற்றிய சேற்றை சுத்தஞ் செய்வதால் என்ன பயன்? (யாதுமில்லை என்பதாம்) மேற்கூறிய உதாரணத்தின்படி |
| யாவையும் ஒழிய நிலாத போது | அகப்பற்று புறப்பற்று முதலியவைகளை விட்டு நீங்காத காலத்தில் |
| பாசம் மாசற வுதற வொண்ணாது மூடும் | ஆசையைக் குற்றமற நீக்க முடியாது. மறைக்கும் (தன்னை மறக்கும்) |

நடந்த வழி பாக்கியிருப்பதால், காலில் பற்றிய சேற்றை சுத்தஞ் செய்வதால் என்ன பயன்? (யாதுமில்லை என்பதாம்) மேற்கூறிய உதாரணத்தின்படி அகப்பற்று புறப்பற்று முதலியவைகளை விட்டு நீங்காத காலத்தில் ஆசையைக் குற்றமற நீக்க முடியாது. மறைக்கும் (தன்னை மறக்கும்)

**56. உறவாடு பந்தங்க ளெல்லாமு திர்ப்பன்**
**துறவாகும் வச்ராயு தத்திற்று ணித்தே**

| | |
|---|---|
| துறவாகும் வஜ்ராயுதத்தில் | பற்றிலாமை (சங்கமின்மை) என்னும் மந்திர வாளாயுதத்தினால் |

| | |
|---|---|
| உறவாடு பந்தங்களெல்லாம் | பொருந்திய பந்த பாச மென்னும் ஆசைகளனைத்தையும் |
| துணித்தே உதிர்ப்பன் | வெட்டிச் சிதறி விடுவேன். (இதுவே நிச்சயம்) துறவாகும். |

பற்றிலாமை (சங்கமின்மை) என்னும் மந்திர வாளாயுதத்தினால் பொருந்திய பந்த பாச மென்னும் ஆசைகளனைத்தையும் வெட்டிச் சிதறி விடுவேன். (இதுவே நிச்சயம்) துறவாகும்.

**57. வடிவற்ற கோன்மைந்தன் முன்னின்று மறைநா**
**முடிவற்ற பலகோடி மொழியாத முன்னே**

| | |
|---|---|
| வடிவற்ற கோன் மைந்தன் முன் நின்று | நாமரூப (ரகித) இல்லாத (நிராகார) அரச குமாரன் எதிரிலிருந்து |
| மறை நா முடிவற்ற | இருக்காதி வேதங்களின் முடிவில்லாத |
| பலகோடி | அநேகங்கோடி (உபநிடதங்கள்) |
| மொழியாத முன்னே | அத்வைத பிரதிபாதகமான சுருதி கூறா முன்னரே உளன். சுயம்பிரகாசன் என்பதாம். |

நாமரூப (ரகித) இல்லாத (நிராகார) அரச குமாரன் எதிரிலிருந்து இருக்காதி வேதங்களின் முடிவில்லாத அநேகங்கோடி (உபநிடதங்கள்) அத்வைத பிரதிபாதகமான சுருதி கூறா முன்னரே உளன். சுயம்பிரகாசன் என்பதாம்.

**58. தத்தந்தொ ழிற்கொண்டு தாழ்வின்மை யின்னே**
**முத்தன்பெ ருஞ்சேனையெல்லாமொ ழிந்தே**

| | |
|---|---|
| முத்தன் பெருஞ்சேனை யெல்லாம் | ஞான வேந்தனது அபரிமிதமான சேனா சைன்யங்கள் அனைத்தும் |
| தந்தந் தொழிற்கொண்டு | அவரவர்களுக்குரிய கர்மங்களைச் செய்து |
| தாழ்வின்மையின்னே மொழிந்து | தனது மேம்பாடான வல்லமைகளை இப்பொழுது எடுத்தியம்பினார்களாம். |

ஞான வேந்தனது அபரிமிதமான சேனா சைன்யங்கள் அனைத்தும் அவரவர்களுக்குரிய கர்மங்களைச் செய்து தனது மேம்பாடான வல்லமைகளை இப்பொழுது எடுத்தியம்பினார்களாம்.

******************

# 20. ஞாந வேந்தன் படையெழுச்சி

**1. தஞ்சேனை கண்டன்பு தாமுற்றிவ் வாறே**
**நஞ்சேய னான்மேன டக்கின்ற பொழுதே**

| | |
|---|---|
| தாம் தன் சேனை கண்டு | ஞான வேந்தனாகிய (ஸ்ரீ சொரூபானந்தர்) தாம் தம்முடைய சையினியங்களைப் பார்த்து |
| அன்புற்று | கருணை கொண்டு |
| இவ்வாறு | இந்தப் பிரகாரம் |
| நஞ்சேயனான் | கொடிய விஷம் போன்ற அந்த அறியாமை யென்னும் |
| மேல் நடக்கின்ற பொழுது | அவன் அவ்வஞ்ஞ வேந்தன் மீது தமது படைகளுடன் செல்லும் நேரத்தில் |

ஞான வேந்தனாகிய (ஸ்ரீ சொரூபானந்தர்) தாம் தம்முடைய சையினியங்களைப் பார்த்து கருணை கொண்டு இந்தப் பிரகாரம் கொடிய விஷம் போன்ற அந்த அறியாமை யென்னும் அவன் அவ்வஞ்ஞ வேந்தன் மீது தமது படைகளுடன் செல்லும் நேரத்தில் இது குளகம்.

**2. வித்தக வேதங்க ளேவாசி யாவே**
**மெய்த்திற னாய்கின்ற தோர்பாக னாவே**
**தத்துவ மாகின்ற தேரேறி னாரே**
**தற்சொரு பாநந்தர் தாள்சூடி னாரே**

| | |
|---|---|
| வித்தக வேதங்களே | ஞான வடிவமான இருக்காதி நான்கு வேதமும் |
| வாசியாவே | குதிரைகளாகவும், |
| மெய்த்திறனாய் | உண்மையான திடத்துவமாயிருப்பதுவே, |
| ஓர் பாகனாகவே | ஒப்பற்ற தேர்ப்பாகனாகவும், |
| தத்துவமாகின்ற தேர் ஏறினாரே | மெய்ஞானமென்னும் ரதத்தின் மீது ஏறிச் சென்றார்கள். |
| தற் சொரூபானந்தர் | தத்பத லக்ஷியார்த்த சொரூபரது (ஞான வேந்தரது) |
| தாள் சூடினாரே | ஞான வடிவ சரணகமலங்களை தமது தலையில் கிரீடமாக சூட்டிக் கொண்டார்கள். |

ஞான வடிவமான இருக்காதி நான்கு வேதமும் குதிரைகளாகவும், உண்மையான திடத்துவமாயிருப்பதுவே, ஒப்பற்ற தேர்ப்பாகனாகவும், மெய்ஞானமென்னும் ரதத்தின் மீது ஏறிச் சென்றார்கள். தத்பத லக்ஷியார்த்த சொரூபரது (ஞான வேந்தரது) ஞான வடிவ சரணகமலங்களை தமது தலையில் கிரீடமாக சூட்டிக் கொண்டார்கள்.

3. **வாதக ரோடினு மாதர வோடொர்கால்**
**வாசியி லாவாசி யேவாசி தானாம்**
**போதமே போதக மாந்தேர்வு தேர்தாம்**
**போல்பவ ரேவீர ரேதோது மாறே**

| | |
|---|---|
| வாதகர் ஓடினும் | சத்துருக்கள் நீங்கிய போதும், |
| ஆதரவோடு | அன்புடன் (மித்துருவாக) |
| ஓர் கால் | ஒரு (காலத்தில்)சமயம் |
| வாசியிலா | குற்றமற்ற (நோயில்லா) |
| வாசியே வாசிதானாம் | சிறப்புப் பொருந்திய பிராண ஆயாமமென்னும் குதிரையே (குதிரைகளாம்). |
| போதகமே போதகமாம் | ஞானமே யானைகளாம். |
| தேர்வு தேர் | தெளிந்த நிலையே ரதங்களாம். |
| தாம் போல் பவரே வீரர் | அகக் கரண அடக்கமுடைய தம்போன்ற சமமான வீராதி வீரர்களை |
| ஏது ஓதுமாறு | என்னவென்று எடுத்துக் கூறுவது. (அவர்களுக்குச் சமம் அவர்களேயன்றி அன்னியரிலர் என்பதாம். |

சத்துருக்கள் நீங்கிய போதும், அன்புடன் (மித்துருவாக) ஒரு (காலத்தில்) குற்றமற்ற (நோயில்லா) சிறப்புப் பொருந்திய பிராண ஆயாமமென்னும் குதிரையே (குதிரைகளாம்). ஞானமே யானைகளாம். தெளிந்த நிலையே ரதங்களாம். அகக் கரண அடக்கமுடைய தம்போன்ற சமமான வீராதி வீரர்களை என்னவென்று எடுத்துக் கூறுவது. (அவர்களுக்குச் சமம் அவர்களேயன்றி அன்னியரிலர் என்பதாம்.

4. **தான தேதுமில னாதி யாகவல**
**தம்பி ரானுடைய தானைமால்**
**யானை தேர்புரவி யஞ்ஞ மன்னனது**
**மாய மாபுரம ணைந்ததே**

| | |
|---|---|
| தான் | சச்சிதானந்த சொரூபமானவன், |
| அது ஏதும் இலனாகி | நாம ரூபாதி பிரபஞ்ச வஸ்துக்கள் (பாரமார்த்திகனாதலால்) அல்லாதனவாகியும், |
| ஆகவல | நாமரூபாதி வஸ்துக்கள் (வியவகாரனாதல் கொண்டு) எல்லாம் ஆகக் கூடிய |
| தம்பிரானுடைய | அடியவர் தலைவனான (ஞான வேந்தனது) |
| தானைமால் | மிகப் பெரிய சேனைக் கூட்டங்கள் |

| | |
|---|---|
| யானை தேரி புரவி | ரதகெஜதுரகமென்னும் (முப்படைகளும்) சென்று |
| அஞ்ஞ மன்னனது | அஞ்ஞ வேந்தனுடைய |
| மாயமாபுரம் | காயாபுரி யென்ற (மாயாபுரத்தை) |
| அணைந்ததே | அடைந்தனவாம். ஞாந வேந்தனது படைகள் அஞ்ஞ வேந்தனது நகரமான மாயாபுரியைச் சூழ்ந்து கொண்டன. |

சச்சிதானந்த சொரூபமானவன், நாம ரூபாதி பிரபஞ்ச வஸ்துக்கள் (பாரமார்த்திகனாதலால்) அல்லாதனவாகியும், நாமரூபாதி வஸ்துக்கள் (வியவகாரனாதல் கொண்டு) எல்லாம் ஆகக் கூடிய அடியவர் தலைவனான (ஞான வேந்தனது) மிகப் பெரிய சேனைக் கூட்டங்கள் ரதகெஜதுரகமென்னும் (முப்படைகளும்) சென்று அஞ்ஞ வேந்தனுடைய காயாபுரி யென்ற (மாயாபுரத்தை) அடைந்தனவாம். ஞாந வேந்தனது படைகள் அஞ்ஞ வேந்தனது நகரமான மாயாபுரியைச் சூழ்ந்து கொண்டன.

**5. புறம்பு றாதபடி சூழ நம்படைஞர் போது கென்றருளு போதிலோ**
**ரறம்பு காதபடை வீடு சூழவும டங்க வும்படைஞ ரானவே**

| | |
|---|---|
| புறம் புறாதபடி | புறமுதுகிட்டு (வெளியே) ஓடாத வண்ணம் |
| நம் படைஞர் | நமது படைகளை |
| சூழப் போதுக | மாயாபுரத்தை வளைத்து (சூழ்ந்து) செல்லுங்கள் |
| என்றருளு போதில் | என்று சொன்ன மாத்திரத்தில், |
| ஓர் அறம் புகாத | ஒரு தர்மமும் செல்லாத |
| படை வீடு சூழவும் | பாசறையை சுற்றிலும் |
| அடங்கவும் படைஞரானவே | அனைத்து இடங்களையும் ஞான வேந்தனது படைகளே சூழ்ந்திருந்தனவாம். (கொண்டனவாம்.) |

புறமுதுகிட்டு (வெளியே) ஓடாத வண்ணம் நமது படைகளை மாயாபுரத்தை வளைத்து (சூழ்ந்து) செல்லுங்கள் என்று சொன்ன மாத்திரத்தில், ஒரு தர்மமும் செல்லாத பாசறையை சுற்றிலும் அனைத்து இடங்களையும் ஞான வேந்தனது படைகளே சூழ்ந்திருந்தனவாம். (கொண்டனவாம்.)

**6. முகுந்த னன்றரனு மன்று நாலுதிசை**
**முகனு மன்றவர்த மூலமே**
**புகுந்த தென்றிகல் புறம்பு கண்டவ**
**ரடங்க வுள்புகுது போதிலே**

| | |
|---|---|
| முகுந்தன் அன்று | ஸ்ரீக்கு பதியாகிய ஸ்ரீமத் நாராயணனுமல்ல, |

| | |
|---|---|
| அரனும் அன்று | ஸ்ரீ ருத்திரனுமல்ல, |
| நாலு திசை முகனும் அன்று | சதுர்முகனென்னும் பிரம்மதேவனு மல்ல. |
| அவர் தம் மூலமே | அவர்களுக்கெல்லாம் ஆதியாயுள்ள துரிய வடிவமே |
| புகுந்தது என்று | இங்கே எழுந்தருளி வந்தது என |
| இகல் புறம்பு கண்டு | அவர்களது (வீர) திறத்தை பாஹியத்திலறிந்து |
| அவரடங்கவுள் புகுது போதிலே | அவர்களனைவரும் (பாஹியேந்திராதிகளெல்லாம்) அந்தர் முகமாக(அகமுகமாக) செல்லுங் (காலத்தில்) சமயத்தில் |

ஸ்ரீக்கு பதியாகிய ஸ்ரீமத் நாராயணனுமல்ல, ஸ்ரீ ருத்திரனுமல்ல, சதுர்முகனென்னும் பிரம்மதேவனு மல்ல. அவர்களுக்கெல்லாம் ஆதியாயுள்ள துரிய வடிவமே இங்கே எழுந்தருளி வந்தது என அவர்களது (வீர) திறத்தை பாஹியத்திலறிந்து அவர்களனைவரும் (பாஹியேந்திராதிகளெல்லாம்) அந்தர் முகமாக(அகமுகமாக) செல்லுங் (காலத்தில்) சமயத்தில்

**7. மருவி யெங்குமுற நின்றபொரு ளின்று புவிமேல்**
**வடிவு கொண்டுவரு கின்றதென வந்து மொழிவா**
**ரருவ மென்றுமொழி கின்றபொரு ளிங்கு வருவதற்**
**கடியெ னென்றுசிலர் நின்றுநகை கொண்டு விடுவார்**

| | |
|---|---|
| எங்குமுற மருவி நின்ற பொருள் | எள்ளுக்குள் எண்ணை போல் எவ்விடங்களிலும் நீக்கமற நிறைந்திருக்கின்ற பரிபூரண பரமாத்ம வஸ்துவே, |
| இன்று | இக்காலத்தில் (இது சமயம்) |
| புவிமேல் | இப்புவியின் (இம் மண்ணுலகில் பரதகண்டத்தின்) கண்ணே |
| வடிவுகொண்டு வருகின்றது | ஞான வேந்தனாக (ஸ்ரீ சொரூபானந்தராக) ஒப்பற்ற திவ்ய மங்கள மூர்த்தமாக எழுந்தருளிச் செய்கின்றது |
| என வந்து மொழிவார் | என்று இந்தப் பிரகாரம் ஓடிவந்து சொல்வார்கள். |
| அருவமென்று மொழிகின்ற பொருள் | அரூபி, அசரீரி நிராகாரனென்று இருக்காதி வேதங்களால் பிரதிபாதிக்கப்பட்ட (சொல்லப்பட்ட) சாயஞ் சித்தாகிய பரவஸ்து, |
| இங்கு வருதற்கு | இவ்விடம் எழுந்தருளி வந்ததற்கு |
| அடயென் | நிமித்தம் (காரணம்) என்ன |
| என்று சிலர் நகை கொண்டு விடுவார் | ஏது காரணமென ஒரு சிலர் சொல்லி சிரித்து நீங்குவர். அடியனென்று சிலர் (யான் செய்த புண்ணியமே இங்கு வந்தது என்பர்) அருவ மாயினு மன்பர்க் குருவனாய் வரவனென்பது மாமறை சொல்லுமென்று கூறுவர். அடி—என் காரணம் என்ன என்று கூறுவர். |

எள்ளுக்குள் எண்ணை போல் எவ்விடங்களிலும் நீக்கமற நிறைந்திருக்கின்ற பரிபூரண பரமாத்ம வஸ்துவே, இக்காலத்தில் (இது சமயம்) இப்புவியின் (இம் மண்ணுலகில் பரதகண்டத்தின்) கண்ணேஞான வேந்தனாக (ஸ்ரீ சொரூபானந்தராக) ஒப்பற்ற திவ்ய மங்கள மூர்த்தமாக எழுந்தருளிச் செய்கின்றது என்று இந்தப் பிரகாரம் ஓடிவந்து சொல்வார்கள். அரூபி, அசரீரி நிராகாரனென்று இருக்காதி வேதங்களால் பிரதிபாதிக்கப்பட்ட (சொல்லப்பட்ட) சாயஞ் சித்தாகிய பரவஸ்து, இவ்விடம் எழுந்தருளி வந்ததற்கு நிமித்தம் (காரணம்) என்ன ஏது காரணமென ஒரு சிலர் சொல்லி சிரித்து நீங்குவர். அடியனென்று சிலர் (யான் செய்த புண்ணியமே இங்கு வந்தது என்பர்) அருவ மாயினு மன்பர்க் குருவனாய் வரவனென்பது மாமறை சொல்லுமென்று கூறுவர். அடி–என் காரணம் என்ன என்று கூறுவர்.

**8. சமய மென்பனவு மொன்றுமில தென்று மொழிவார்**
**தவமு டிந்ததுமு டிந்ததென நின்று சமைவா**
**ரமையு நந்துழனி யென்றமைவு வந்து விடுவா**
**ரறிவி லன்புரம ழிந்ததினி யென்றய ருவார்**

| | |
|---|---|
| சமயம் என்பனவும் | ஷட் காயம் என்று உண்டு என்பதெல்லாம் |
| ஒன்று மிலது என்று மொழிவார் | எதுவுமில்லை என்று கூறுவார்கள். |
| தவ முடிந்தது முடிந்தது என | நமது தவமெல்லாம் பூர்த்தியானது பூர்த்தியானது என்று |
| நின்று சமைவார் | இருந்து அமைதியாவார்கள். |
| நந்துழனி | நமது ஆரவாரங்கள் |
| அமையும் | போதும். |
| என்று அமைவு வந்துவிடுவார் | இது போதுமென அமைதியாய் சாந்தமாயிருப்பார்கள். |
| இனி அறிவிலன்புரம் | பின்னர் அஞ்ஞ வேந்தனது நகரம், |
| அழிந்தது என்று | அறியா மன்னனது பட்டிணம் இருந்த இடம் தெரியாமல் ஒழிந்து போய்விடும் என |
| அயருவார் | ஐயோ பாவம் என்று (இரக்கமேலிட்டு) அயர்ச்சியடைவார்கள். |

ஷட் காயம் என்று உண்டு என்பதெல்லாம் எதுவுமில்லை என்று கூறுவார்கள். நமது தவமெல்லாம் பூர்த்தியானது பூர்த்தியானது என்று இருந்து அமைதியாவார்கள். நமது ஆரவாரங்கள் போதும். இது போதுமென அமைதியாய் சாந்தமாயிருப்பார்கள். பின்னர் அஞ்ஞ வேந்தனது நகரம், அறியா மன்னனது பட்டிணம் இருந்த இடம் தெரியாமல் ஒழிந்து போய்விடும் என ஐயோ பாவம் என்று (இரக்கமேலிட்டு) அயர்ச்சியடைவார்கள்.

**9. குடிகெ டும்படிபு குந்துணர் வென்று தளர்வார்**
**குலம டங்கலுமு டிந்ததென நின்று குலைவார்**
**முடிவில்வந்துறுவ தொன்றெனமொ ழிந்த கணியார்**
**மொழியு மின்றுதலை வந்ததென நின்று மொழிவார்**

| | |
|---|---|
| குடி கெடும்படி | நமது பிழைப்பு ஜீவனம் (ஜீவத்துவம்)நீங்கும்படி |
| உணர்வு புகுந்தது | விவேக ஞானம் உண்டானது |
| என்று தளர்வார் | எனக்கூறி தளர்ச்சியடைவார்கள். |
| குலமடங்கலு முடிந்ததென | மாயை, மாயா காரியமான அனைத்தும் ஒழிந்தது என்று |
| நின்று குலைவார் | எண்ணியிருந்து கலக்கமெய்துவார்கள். |
| முடிவில் வந்துறுவது | யுகாந்தத்தில் வந்து சேர்வது |
| ஒன்றென | ஒன்றே தானென்று |
| மொழிந்த கணியார் மொழியும் | கூறிய சோதிடர் (கணித நூலாராய்ச்சியாளர்) வார்த்தையும் |
| இன்று தலை வந்த தென | இப்பொழுது முடிவாக வந்து சேர்ந்தது என்று |
| நின்று மொழிவார் | இவ்வாறு அவரவர்களும் இருந்து பேசிக் கொள்வார்கள். |

நமது பிழைப்பு ஜீவனம் (ஜீவத்துவம்)நீங்கும்படி விவேக ஞானம் உண்டானது எனக்கூறி தளர்ச்சியடைவார்கள். மாயை, மாயா காரியமான அனைத்தும் ஒழிந்தது என்று எண்ணியிருந்து கலக்கமெய்துவார்கள். யுகாந்தத்தில் வந்து சேர்வது ஒன்றே தானென்று கூறிய சோதிடர் (கணித நூலாராய்ச்சியாளர்) வார்த்தையும் இப்பொழுது முடிவாக வந்து சேர்ந்தது என்று இவ்வாறு அவரவர்களும் இருந்து பேசிக் கொள்வார்கள்.

**10. பறைவ தென்கொல்பல விங்கிவர்க ணின்று கெடுவீர்**
**பவமொ ழிந்துவரு கின்றபடி கண்டு மினநீ**
**ரிறைவ னன்றெனவி யம்புவதெ னென்றுமொழிவா**
**ரிருவர் தங்களிலி யம்புவத டங்கவிவையே.**

| | |
|---|---|
| இங்கு இவர் கணின்று | இவர்களிலிருந்து இவ்விடத்தில் |
| பல பறைவது ஏன்கொல் | அநேகம் வார்த்தைகளைப் பேசி என்ன செய்வது. |
| கெடுவீர் | இப்போது வீணாகக் கெட்டுப் போவீர்கள் (எதனாலெனின்) |
| பவ மொழிந்து பருகின்றபடி கண்டும் | பிறப்புநீங்கி வருவதை(ஜென்மம் ஒழிந்ததை)அறிந்திருந்தும், |
| இனம் நீர் இறைவன் அன்று என | இன்னமும் நீங்கள் இறைவன் (கடவுள்) இல்லை என்று |
| இயம்புவது என்னென்று | சொல்லுவது எந்தக் காரணம் கொண்டு (இல்லை என்று) |

| | |
|---|---|
| மொழிவார் | பேசுவார்கள். இருவர் தங்களில் அடங்க லியம்புவதும் இதையே |
| இருவர் தங்களில் அடங்க லியம்புவதும் இதையே | இவ்வாறு இருதிறத்தவர்களில் அனைவரும் அறைவதும் இதுவேயாகும். |

இவர்களிலிருந்து இவ்விடத்தில் அநேகம் வார்த்தைகளைப் பேசி என்ன செய்வது. இப்போது வீணாகக் கெட்டுப் போவீர்கள் (எதனாலெனின்) பிறப்புநீங்கி வருவதை(ஜென்மம் ஒழிந்ததை)அறிந்திருந்தும், இன்னமும் நீங்கள் இறைவன் (கடவுள்) இல்லை என்று சொல்லுவது எந்தக் காரணம் கொண்டு (இல்லை என்று) பேசுவார்கள். இவ்வாறு இருதிறத்தவர்களில் அனைவரும் அறைவதும் இதுவேயாகும்.

*******************

# 21. அஞ்ஞ வேந்தன் படை யெழுச்சி

**1. விடர்வி ளங்கு தானை யஞ்ஞ வேந்த னுக்கு மாந்தர்போய்ச்**
**சுடர்வி ளங்கு ஞாந சேனை சூழ்ந்த தென்று சொல்லவே**

| | |
|---|---|
| விடர் விளங்கு | சந்திர மண்டலம் போன்ற முகத்தில் ஈட்டி போன்ற கண்ணில் விஷம் பொருந்திய பார்வையும், வாள் போன்ற புருவமுடைய யௌவன பருவமுடைய ஸ்த்ரீகளும், ஆண்களுக்கு ஆண்களே ஆசை கொள்ளும்படியான (ஆடவராலும் தோழினாய் என்றபடி) காளை பருவமுடைய விடபுருஷர்களும் நிறைந்து பிரகாசிக்கின்ற |
| தானை | சேனைகளையுடைய |
| அஞ்ஞ வேந்தனுக்கு | அறியாமை யென்னும் அரசனுக்கு |
| மாந்தர் போய்ச் | மாயாபுரமென்னும் பட்டணத்தில்வாழும் மக்கள் சென்று |
| சுடர் விளங்கு ஞானசேனை | பிரகாசம் பொருந்திய ஞான வேந்தனுடைய படைகள் |
| சூழ்ந்தது என்று | நம்நகரை வளைத்து கொண்டன என்று |
| சொல்லவே | எடுத்துச் சொன்ன மாத்திரத்தில். |

சந்திர மண்டலம் போன்ற முகத்தில் ஈட்டி போன்ற கண்ணில் விஷம் பொருந்திய பார்வையும், வாள் போன்ற புருவமுடைய யௌவன பருவமுடைய ஸ்த்ரீகளும், ஆண்களுக்கு ஆண்களே ஆசை கொள்ளும்படியான (ஆடவராலும் தோழினாய் என்றபடி) காளை பருவமுடைய விடபுருஷர்களும் நிறைந்து பிரகாசிக்கின்ற சேனைகளையுடைய அறியாமை யென்னும் அரசனுக்கு மாயாபுரமென்னும் பட்டணத்தில்வாழும் மக்கள் சென்று பிரகாசம் பொருந்திய ஞான வேந்தனுடைய படைகள் நம்நகரை வளைத்து கொண்டன என்று எடுத்துச் சொன்ன மாத்திரத்தில். இரண்டு பாடல் குளகம்.

**2. மூவர் சேனை யென்கண் முன்பு நிற்க வில்லை மொய்ம்பினோ**
**டியாவர் சேனை யென்னை வெல்ல விங்கு வந்த தென்னவே**

| | |
|---|---|
| மூவர் சேனை | பிரம்மா, விஷ்ணு,ருத்திரனென்னும் மும்மூர்த்திகளுடைய சேனைகளும், |
| மொய்ம்பினோடு | ஒரே கூட்டமாக சேர்ந்தும் |
| யென்கண்முன்பு | எனது எதிரில் கண் முன்னிலையில் |
| நிற்கவில்லை | நில்லாமல் ஓடி மறைந்தனவாம். |
| இங்கு | அப்படியிருக்க இவ்விடத்தில் |

| | |
|---|---|
| யென்னை வெல்ல | சகல வளப்பம் பொருந்திய பராக்கிரமசாலியாய் நிகரற்று விளங்கும் சார்வபௌமனான என்னை ஜெயிப்பதற்கு |
| வந்தது என்னவே | வந்தவர்கள் (யார்) என்று வினவிய போது (கூறுவாராயினர்) இதுவுங் குளகம். |

பிரம்மா, விஷ்ணு,ருத்திரனென்னும் மும்மூர்த்திகளுடைய சேனைகளும், ஒரே கூட்டமாக சேர்ந்தும் எனது எதிரில் கண் முன்னிலையில் நில்லாமல் ஓடி மறைந்தனவாம். அப்படியிருக்க இவ்விடத்தில் சகல வளப்பம் பொருந்திய பராக்கிரமசாலியாய் நிகரற்று விளங்கும் சார்வபௌமனான என்னை ஜெயிப்பதற்கு வந்தவர்கள் (யார்) என்று வினவிய போது (கூறுவாராயினர்) இதுவுங் குளகம்.

**3. யாவர் சேனை யென்ன யாம றிந்த தில்லை யெங்கனுந்
தேவ தேவ தேவ னென்ற சின்ன வோசை யென்னவே**

(வந்தவர்கள் யாராயிருக்கலாமென்று அஞ்ஞ வேந்தன் வினவிட) அதற்கு அறியா மன்னனே (அறியாமைவடிவ அரசே) அறியோம் யாமும் (உங்களாட்சியில் வாழும் நாங்களும் அறியோம்) இறைவா இறைவா என்னும் இறைச்சலும் ஓமென்ற ஓசையும் கேட்டது என.

| | |
|---|---|
| யாவர் சேனை யென | இது எவர்களுடைய படைகளென்று |
| யாமறிந்ததில்லை | நாங்கள் அறிந்தோமல்லோம். (ஒன்று மற்றும் தெரிந்ததுண்டு) |
| யெங்கனுந் | எவ்விடங்களிலும் |
| தேவ தேவ | தேவர்களுக்கெல்லாம் தலைவனே |
| தேவனென்ற | எவ்வுயிர்க்கும் தலைவனே (யாவராலும் வணங்கப் பட்டவனே) என்னும் இறைவனை வணங்கும் (ஒலியும்) |
| சின்னவோசையென்னவே | ஓங்கார வடிவன் வருகின்றான் பார்ப்பவர் பவநாசன் வருகின்றான் என்ற திருச்சின்னம் பிடிக்கும் சப்தங்களை மாத்திரம் அறிந்தோம் (என்று கூறிய மாத்திரத்தில்) |

இது எவர்களுடைய படைகளென்று நாங்கள் அறிந்தோமல்லோம். (ஒன்று மற்றும் தெரிந்ததுண்டு) எவ்விடங்களிலும் தேவர்களுக்கெல்லாம் தலைவனே எவ்வுயிர்க்கும் தலைவனே (யாவராலும் வணங்கப் பட்டவனே) என்னும் இறைவனை வணங்கும் (ஒலியும்) ஓங்கார வடிவன் வருகின்றான் பார்ப்பவர் பவநாசன் வருகின்றான் என்ற திருச்சின்னம் பிடிக்கும் சப்தங்களை மாத்திரம் அறிந்தோம் (என்று கூறிய மாத்திரத்தில்)

**4. ஏகமுத லோன்வருவ னாகினமர்**
**செய்யவவ னென்கணெதிர் நிற்க விலனே**
**தேகமுள னேலவனை மாரன்முதல் வீரர்**
**படைசிந்து வர்கள்சிந்தி விடவே**

| | |
|---|---|
| அமர் செய்ய | என்னோடு (அஞ்ஞ வேந்தனான என்னுடன்) யுத்தஞ் செய்வதற்கு |
| ஏக முதலோன் வருவன் ஆகின் | மும்மூர்த்திகளுக்கும் அப்பாற்பட்ட முழுமுதலாகிய ஒருவன் வருவானேயாகில் |
| என் கண் எதிர் நிற்க வலன் | எனது கண்முன்னே நிற்க மாட்டான் (ஆற்றலற்றவன்). |
| தேக முளனேல் | நாம ரூப வடிவ தேகத்தோடு கூடியிருப்பானே ஆகில் |
| அவனை மாரன் முதல் படைவீரர் | அந்த ஞான வேந்தனை காமன் முதலான படைத்தலைவர்கள் |
| சிந்தி விடவே சிந்துவார்கள் | அந்த எதிரிகளது தலையை சிதைத்து எறிந்துவிடுவார்கள்.(இதுவே நிச்சயமாகும்) என்று அஞ்ஞ வேந்தன் கூறினான். |

என்னோடு (அஞ்ஞ வேந்தனான என்னுடன்) யுத்தஞ் செய்வதற்கு மும்மூர்த்திகளுக்கும் அப்பாற்பட்ட முழுமுதலாகிய ஒருவன் வருவானேயாகில் எனது கண்முன்னே நிற்க மாட்டான் (ஆற்றலற்றவன்). நாம ரூப வடிவ தேகத்தோடு கூடியிருப்பானே ஆகில் அந்த ஞான வேந்தனை காமன் முதலான படைத்தலைவர்கள் அந்த எதிரிகளது தலையை சிதைத்து எறிந்துவிடுவார்கள்.(இதுவே நிச்சயமாகும்) என்று அஞ்ஞ வேந்தன் கூறினான்.

**5. வாநவர்க டாநவர்கண் மானவர்க**
**ளானவரின் யாவர்மறை கூறுபரிசே**
**ஞாநபர ராகிமத ராசான்முத**
**லானவிரு நால்வரையும் வென்றவரே**

| | |
|---|---|
| வானவர்கள் தானவர்கள் | தேவர்களிலும் அசுரர்களிலும் |
| மானவர்களான | மக்களாக பிறந்தவர்களுக்குள்ளே |
| மறை கூறு பரிசே | வேதஞ் சொன்ன வண்ணம் |
| யாவர் ஞானபரராகி | யார்தான் மேலான ஞானவான்களாகயிருந்து, |
| மதராசன் முதலான | காமன் முதலான |
| இரு நால்வரையும் வென்றவர் | எனது சேனாதிபதிகளாகிய எண்மரை இதுநாள்வரை வென்றிருக்கிறார்கள்.(இனிமேல் வெல்லப்போகிறார்கள்) ஒரு |

| | |
|---|---|
| | காலத்திலும் ஒருவரும் இன்றென்பதாம். |

தேவர்களிலும் அசுரர்களிலும் மக்களாக பிறந்தவர்களுக்குள்ளே வேதஞ் சொன்ன வண்ணம் யார்தான் மேலான ஞானவான்களாகயிருந்து, காமன் முதலான எனது சேனாதிபதிகளாகிய எண்மரை இதுநாள்வரை வென்றிருக்கிறார்கள்.(இனிமேல் வெல்லப்போகிறார்கள்) ஒரு காலத்திலும் ஒருவரும் இன்றென்பதாம்.

**6. ஓதுமுட லிந்திரிய முள்ளுமந புந்தியுயி**
**ரோங்கியவ கங்கர முமிங்**
**கியாதுமுறு சங்கமெனு மேழணியி**
**னொன்றுவிடு விக்கிலவனிங் கிறைவனே**

| | |
|---|---|
| ஓது முடல் | தேகமென்று சொல்லுவதும் |
| இந்திரியம் | மெய், வாய், கண்,மூக்கு, என்னும் ஐந்து புறக்கருவிகளும் , |
| உயிர் | இத்தேகத்திற்கு ஆதாரமான பிராணனும், |
| உள்ளம் | நாபித்தானத்திலிருந்து சதா சிந்திக்கும் சிந்தையும் கண்டத்திலிருந்து நினைத்தல் மறத்தல் வடிவ மனதும் இருதயத்திலிருந்து பிறவிஷயங்களை விளக்கியறிகின்ற புத்தியும், |
| ஓங்கிய அகங்காரமும் | சர்வ ஜீவர்களிடத்தும் நான் என்று எழுகின்ற ஆணவமும், |
| இங்கு யாதுமுறு சங்கமெனும் | இவ்விடத்தில் இவையாவும் ஒன்று சேர்ந்த கூட்டுறவு என்று சொல்லும்படியான (இவர்களில்) |
| ஏழணியில் | அணிவகுக்கப்பட்ட இந்த ஏழு வரிசைகளில் |
| ஒன்றை விடுவிக்கில் | இவைகளில் ஒன்றை ஜெயித்துவிடுவானாகில் |
| இங்கு இறைவனவனே | இவ்விடத்தில் கடவுள் அவனேதான் (வேறு யாருமில்லை) |

தேகமென்று சொல்லுவதும் மெய், வாய், கண்,மூக்கு, என்னும் ஐந்து புறக்கருவிகளும் , இத்தேகத்திற்கு ஆதாரமான பிராணனும், நாபித்தானத்திலிருந்து சதா சிந்திக்கும் சிந்தையும் கண்டத்திலிருந்து நினைத்தல் மறத்தல் வடிவ மனதும் இருதயத்திலிருந்து விஷயங்களை விளக்கியறிகின்ற புத்தியும், சர்வ ஜீவர்களிடத்தும் நான் என்று எழுகின்ற ஆணவமும், இவ்விடத்தில் இவையாவும் ஒன்று சேர்ந்த கூட்டுறவு என்று சொல்லும்படியான (இவர்களில்) அணிவகுக்கப்பட்ட இந்த ஏழு வரிசைகளில் இவைகளில் ஒன்றை ஜெயித்துவிடுவானாகில் இவ்விடத்தில் கடவுள் அவனேதான் (வேறு யாருமில்லை)

**7. ஆண்டகைய னாகினெனை யஞ்சுதலொ ழிந்து**
**வரு மவனையெதிர் சுண்ட ளவினான்**
**மீண்டிடுவ னாகிலேனை யஞ்ஞுவர சென்ற ழையேல்**
**வேறு பெய ரிட்ட ழையுமே**

| | |
|---|---|
| ஆண்டகையனாகின் | தகுதியுடைய ஆண்களாக இருப்பார்களானால் |
| எனை அஞ்சுதல் ஒழிந்து | எனக்கு பயப்படாமல் |
| வரும் அவனை | வருகின்ற எனது விரோதியானவனை, |
| எதிர் கண்டளவின் நான் | நான் என்முன் பார்த்த மாத்திரத்தில் (அறியாமையின் கூற்றால்) |
| மீண்டிடுவனாகில் | மீளுவனானால், |
| எனை யஞ்ஞு வரசே என்று அழையேல் | அஞ்ஞு வேந்தன் என என்னை அழைக்க வேண்டாம். |
| வேறு பெயரிட்டு அழையுமே | என்பெயரை மாற்றி அழையுங்கள் (உலக வழக்கில் என் பெயரை மாற்றி வை என்பர்) |

தகுதியுடைய ஆண்களாக இருப்பார்களானால் எனக்கு பயப்படாமல் வருகின்ற எனது விரோதியானவனை,நான் என்முன் பார்த்த மாத்திரத்தில் (அறியாமையின் கூற்றால்) மீளுவனானால், அஞ்ஞு வேந்தன் என என்னை அழைக்க வேண்டாம். என்பெயரை மாற்றி அழையுங்கள் (உலக வழக்கில் என் பெயரை மாற்றி வை என்பர்)

**8. என்றுபலபாஷைகள்கொ டுத்துமத**
**நாதிபடை யேவியிறை வன்க ணெதிரே**
**நின்றுபொர நேரறிவி னெஞ்சினிசி கோடியிரு**
**ணின்ற தென லாகு நிலையே**

| | |
|---|---|
| என்று பலபாஷைகள் கொடுத்தும் | மேற்கூறிய வண்ணம் அனேகஞ் சபத வார்த்தைகளைச்சொல்லி |
| மதனாதி படையேறி | காமன் முதலிய சேனைகளை செலுத்த |
| இறைவன் கணெதிரே | ஞான வேந்தனது முன்னிலையில் |
| நேரறிவில் நெஞ்சில் | கூர்மை யான விவேக ஞானமில்லாத மனதில் |
| நின்று பொர | இருந்து யுத்தஞ் செய்யும் |
| நிலை | நிலைமை எவ்வாறுள்ளதெனில், |
| கோடி நிசி இருள் நின்றதென | ஒரு கோடி இரவில் அநேகங்கோடி அமாவாசை இருட்டு போலிருந்தனவாம். |

மேற்கூறிய வண்ணம் அனேகஞ் சபத வார்த்தைகளைச்சொல்லி காமன் முதலிய சேனைகளை செலுத்த ஞான வேந்தனது முன்னிலையில் கூர்மை யான விவேக ஞானமில்லாத மனதில் இருந்து யுத்தஞ் செய்யும் நிலைமை எவ்வாறுள்ளதெனில், ஒரு கோடி இரவில் அநேகங்கோடி அமாவாசை இருட்டு போலிருந்தனவாம்.

****************

# 22. தொந்த யுத்தம்

1. **வேத கீதன்ப டையுடன் வெஞ்சினப்
போத கீநன்ப டைபொரப் போதவே**

| | |
|---|---|
| வேதகீதன் | சதாகாலமும் வேத வேதாந்தங்களை ஓதிக் கொண்டிருக்கும் (நான் மறக்கினும் நா சொல்லு நமச்சிவாய என்றபடி) உள்ள |
| படையுடன் | ஞான வேந்தனது சேனைகளுடன் |
| வெஞ்சினம் போத கீனன் | கொடிய கோபமே குடிகொண்டு விவேகமற்ற அஞ்ஞ வேந்தனது |
| படைபொரப் போதவே | சேனைகள் போர் செய்யச் சென்றன. |

சதாகாலமும் வேத வேதாந்தங்களை ஓதிக் கொண்டிருக்கும் (நான் மறக்கினும் நா சொல்லு நமச்சிவாய என்றபடி) உள்ள ஞான வேந்தனது சேனைகளுடன் கொடிய கோபமே குடிகொண்டு விவேகமற்ற அஞ்ஞ வேந்தனது சேனைகள் போர் செய்யச் சென்றன.

2. **துன்னிட் டேகந போதகந் தோன்றலும்
வென்னிட் டேகின வைம்புல வேழமே**

| | |
|---|---|
| துன்னிட்டே கந போதகம் தோன்றலும் | பூரண ஞானம் எனும் யானைகள் தோன்றவும், |
| ஐம்புல வேழம் | மெய், வாய், கண், மூக்கு செவியெனும் (பஞ்சேந்திரியங்களும்) யானைக் கூட்டங்கள் |
| வென்னிட்டேகின | புற முதுகு காட்டி ஓடிச் சென்றனவாம் |

பூரண ஞானம் எனும் யானைகள் தோன்றவும், மெய், வாய், கண், மூக்கு செவியெனும் (பஞ்சேந்திரியங்களும்) யானைக் கூட்டங்கள்புற முதுகு காட்டி ஓடிச் சென்றனவாம்

3. **இரத மானர தத்தெதிர் நின்றில
விரத மானவி டயர தங்களே**

| | |
|---|---|
| விரதமான | மிகவும் இனிமையான |
| விடயரதங்கள் | சப்த, ஸ்பரிச,ரூப, ரச, சந்த மெனும் விஷய தேர்கள், |

| | |
|---|---|
| இரதமான | சொரூப ஆனந்தமயமாயிருக்கும் |
| ரதத்தெதிர் நின்றில | தேர்களுக்குமுன் நிற்க மாட்டாமல் ஓடிவிட்டன. |

மிகவும் இனிமையான சப்த, ஸ்பரிச,ரூப, ரச, சந்த மெனும் விஷய தேர்கள்,சொரூப ஆனந்தமயமாயிருக்கும் தேர்களுக்குமுன் நிற்க மாட்டாமல் ஓடிவிட்டன.

**4. புரணப் பாய்பரி தோன்றப்பு ரத்துள**
**கரணப் பாய்பரி யாவுங்க ரந்தவே**

| | |
|---|---|
| புரணப்பாய் பரி தோன்ற | சித் வடிவமெனும் (விளக்க ரூப) பாய்ந்து செல்லும் குதிரைகள் எழுந்த மாத்திரத்தில் |
| புரத்துள கரண | புறக் கரணங்களெனும் |
| பாய் பரி யாவுங் கரந்தவே | பாய்ந்து செல்லும் குதிரைகளெல்லாம் ஓடி மறைந்தனவாம். |

சித் வடிவமெனும் (விளக்க ரூப) பாய்ந்து செல்லும் குதிரைகள் எழுந்த மாத்திரத்தில் புறக் கரணங்களெனும் பாய்ந்து செல்லும் குதிரைகளெல்லாம் ஓடி மறைந்தனவாம்.

**5. அறிவன்பெ ருஞ்சேனை கண்காண வெதிரே**
**யஞ்ஞன்கொ டுஞ்சேனை யஞ்சாம லெழவோ**
**வெறிவெங்க திர்ச்செல்வ ரெத்திக்கு மெழவே**
**பிரியாம லிருனிற்கி னிதுநிற்கு மெதிரே**

| | |
|---|---|
| அறிவன் பெருஞ்சேனை | ஞான வேந்தனுடைய பெரிய சேனா சைனியங்கள், |
| கண்காண | கண் முன்னிலையில் |
| எதிரே | நேரில், |
| யஞ்ஞன் கொடும் சேனை | அறியாமையெனும் அரசனது கொடிய படைகள், |
| அஞ்சாமல் | பயமின்றி |
| எழவோ | எழுந்திருக்க மாட்டாவாம். |
| எத்திக்கும் | எட்டுத் திக்குகளிலும் |
| எறி வெங்கதிர் செல்வர் | தகதகவென வெப்பம் பொருந்திய சகஸ்ர கிரணங்களையுடைய சூரிய குமாரர்கள் |
| எழவே | தோன்றும்பொழுது |
| இருள் பிரியாமல் நிற்கில் | நீங்காமல் இருட்டு இருக்குமானால் |

| | |
|---|---|
| எதிரே இது நிற்கும் | ஞான வேந்தனது படைகளுக்கு எதிர் (இவைகள்நிற்கும்) அஞ்ஞவேந்தனுடைய படைகளிருக்கும். (இரவி முன் இருள் நிற்கமாட்டாவாம்) அது நின்றால் இது நிற்கும் என்பதாம். |

ஞான வேந்தனுடைய பெரிய சேனா சைனியங்கள்,கண் முன்னிலையில் நேரில், அறியாமையெனும் அரசனது கொடிய படைகள், பயமின்றி எழுந்திருக்க மாட்டாவாம். எட்டுத் திக்குகளிலும் தகதகவென வெப்பம் பொருந்திய சகஸ்ர கிரணங்களையுடைய சூரிய குமாரர்கள் தோன்றும்பொழுது நீங்காமல் இருட்டு இருக்குமானால் ஞான வேந்தனது படைகளுக்கு எதிர் (இவைகள்நிற்கும்) அஞ்ஞவேந்தனுடைய படைகளிருக்கும். (இரவி முன் இருள் நிற்கமாட்டாவாம்) அது நின்றால் இது நிற்கும் என்பதாம்.

**6. ஓட லின்றியெதிர் நின்ற வீரர்தமை**
**வீர ரங்கொருவ ரொழிவரச்**
**சாடு கென்றருள வீரர் சொல்லுவர்**
**வணங்கி வீரனிரு தாளிலே**

| | |
|---|---|
| ஓடலின்றி எதிர் நின்ற வீரர் தமை | தப்பி ஓடிப் போகாத வண்ணம் நமது முன்நிற்கும் வீரர்களை |
| வீரர் | நமது வீரர்கள் |
| அங்கு ஒருவர் ஒழிவர | இவ்விடமுள்ள அஞ்ஞனது படைகளில் ஒருவரையும் விட்டு வைக்காமல் |
| சாடுக என்றருள | சம்கரிப்பீர்களாக என (ஞான வேந்தனது) திருவாய் மலர்ந்தருள |
| வீரனிரு தாளிலே | ராஜாதி ராஜனான (ஸ்ரீசொரூபானந்தரென்னும்) ஞான வேந்தரது திவ்ய திருவடிகளில், |
| வணங்கி | பணிந்து |
| வீரர் சொல்லுவார் | சேனாதிபதியான வீரனியம்புவான். |

தப்பி ஓடிப் போகாத வண்ணம் நமது முன்நிற்கும் வீரர்களைநமது வீரர்கள் இவ்விடமுள்ள அஞ்ஞனது படைகளில் ஒருவரையும் விட்டு வைக்காமல் சம்கரிப்பீர்களாக என (ஞான வேந்தனது) திருவாய் மலர்ந்தருள ராஜாதி ராஜனான (ஸ்ரீசொரூபானந்தரென்னும்) ஞான வேந்தரது திவ்ய திருவடிகளில், பணிந்து சேனாதிபதியான வீரனியம்புவான்.

**7. அறிவி லன்படையு மளவி னம்படையு**
**மறிய வின்றிவரு மறிவுறுங்**
**குறியு றும்பரிசை யருளு கெனவர்**
**குறியு றும்பரிசு கூறமே**

| | |
|---|---|
| அறிவிலன் படையும் | அஞ்ஞ வேந்தனது சேனைகளும் |
| அளவு இல் நம் படையும் | எண்ணிலாத நமது சேனைகளும் |
| அறியவின்றி வரும் | அவ்விருவர்களுடைய செய்கை அறிந்து கொள்ள முடியாதனவாம். |
| அறிவுறும் குறியுறும் பரிசை | அவர்களை அறிந்து அடையாளம் கண்டு கொள்ளும் படியான தன்மை |
| அருளுகென | கூற வேண்டும் என்றபோது |
| அவர் குறியுறும் பரிசு கூறுமே | அவர்களது குறிகளான அடையாளங் கூறுவாம். |

அஞ்ஞ வேந்தனது சேனைகளும் எண்ணிலாத நமது சேனைகளும் அவ்விருவர்களுடைய செய்கை அறிந்து கொள்ள முடியாதனவாம். அவர்களை அறிந்து அடையாளம் கண்டு கொள்ளும் படியான தன்மை கூற வேண்டும் என்றபோது அவர்களது குறிகளான அடையாளங் கூறுவாம்.

**8. விண்டி ருந்தென்மெய் கண்டு**
**ளோர்தவவேட மேவியென் கோடி மாதரைக்**
**கொண்டி ருந்தெனவர் செய்த தேதவங்**
**கொண்ட கொண்டதே கோல மாகுமால்**

| | |
|---|---|
| மெய் கண்டுளோர் | சச்சிதானந்த சிவ பரம் பொருளான (பிரத்யக்ஷ அபின்ன பிரம்ம) சொரூபத்தை தனது ஆன்ம சொரூபமாக அறிந்து திட அபரோக்ஷானுபவம் பெற்ற பெரியோர்கள், |
| விண்டிருந்தென் | சனகாதி முனிவர்களைப்போல் சகலத்தியாக முடையவர்களா யிருந்தால்தான் என்ன, |
| தவ வேட மேவிஎன் | தண்டு, கமண்டலாதியுடன் சடை தரித்து தவக்கோலம் கொண்டதனால் என்ன, |
| கோடி மாதரைக் கொண்டிருந்தென் | ஸ்ரீகிருஷ்ணரைப்போல் அனேகம் பெண்களோடு கூடியிருந்தென்ன |
| அவர் செய்ததேதவம் | அந்த மகான்கள் செய்கைஅனைத்தும் தவமேயாகும். |
| கொண்ட கொண்டதே கோலமாகுமால் | அம்மகான்கள் பெற்ற வடிவமே சாலச் சிறந்த தவ வடிவமாகும்.(சிவ வாக்கியர், திருமழிசையாழ்வார் ஆனது போல்) இன்னும் சுகர், வசிஷ்டர் போலுமுண்டு. |

சச்சிதானந்த சிவ பரம் பொருளான (பிரத்யக்ஷ அபின்ன பிரம்ம) சொரூபத்தை தனது ஆன்ம சொரூபமாக அறிந்து திட அபரோக்ஷானுபவம் பெற்ற பெரியோர்கள், சனகாதி

முனிவர்களைப்போல் சகலத்தியாக முடையவர்களா யிருந்தால்தான் என்ன, தண்டு, கமண்டலாதியுடன் சடை தரித்து தவக்கோலம் கொண்டதனால் என்ன, ஸ்ரீ கிருஷ்ணரைப்பேல் அனேகம் பெண்களோடு கூடியிருந்தென்ன,அந்த மகான்கள் செய்கைஅனைத்தும் தவமேயாகும். அம்மகான்கள் பெற்ற வடிவமே சாலச் சிறந்த தவ வடிவமாகும்.(சிவ வாக்கியர், திருமழிசையாழ்வார் ஆனது போல்) இன்னும் சுகர், வசிஷ்டர் போலுமுண்டு.

**9. நனவுநிலை போல வறிவுமறி வார்க**
**ணவையு மறிவார்க ணலமுளோர்**
**கனவுநிலை போல வெதுவுமறி யார்க**
**ளதுவுமறி யார்கள் கயவரே**

| | |
|---|---|
| நலமுளோர் | கற்றுத் தெளிந்த புத்தியுடைய குணநலம் பெற்றோர் |
| நனவு நிலை போல | சர்வேந்திரியங்களுஞ் செயல்படும் சாக்கிராவஸ்தையைப் போல் |
| அறிவும் அறிவார்கள் | துரியாவஸ்தையில் விளங்கும் (தனது யதார்த்த வடிவ) ஞானத்தை அறிந்திருப்பார்கள், |
| நவையும் அறிவார்கள் | மாயை மாயாகாரியமான இழிவையும் உணர்வார்கள். |
| கயவர் | கீழ் மக்கள் |
| களவு நிலை போல் எதுவும் அறியார்கள் | சர்வேந்திரியங்களும் ஒடுங்கி மனம் ஒன்று மட்டும் உடைய சொப்பனாவஸ்தையைப்போல் எந்த (ஆத்மனாத்ம) விஷயங்களும் தெரிந்து கொள்ள மாட்டார்கள். |
| அதுவும் அறியார்கள் | அந்த உயர்ந்த விவேக (ஞான) நிலையும் தெரிந்து கொள்ள மாட்டார்கள் என்பதாம். |

கற்றுத் தெளிந்த புத்தியுடைய குணநலம் பெற்றோர் சர்வேந்திரியங்களுஞ் செயல்படும் சாக்கிராவஸ்தையைப் போல் துரியாவஸ்தையில் விளங்கும் (தனது யதார்த்த வடிவ) ஞானத்தை அறிந்திருப்பார்கள், மாயை மாயாகாரியமான இழிவையும் உணர்வார்கள். கீழ் மக்கள் சர்வேந்திரியங்களும் ஒடுங்கி மனம் ஒன்று மட்டும் உடைய சொப்பனாவஸ்தையைப்போல் எந்த (ஆத்மனாத்ம) விஷயங்களும் தெரிந்து கொள்ள மாட்டார்கள். அந்த உயர்ந்த விவேக (ஞான) நிலையும் தெரிந்து கொள்ள மாட்டார்கள் என்பதாம்.

**10. சுற்றவரு மற்றவரு மொருவர் செய்யுங்**
**கடுமையினிற் கலுழும்வகை யொத்து மொவ்வார்**
**செற்றவர் மேலுறுஞ் செயிர்க்கு நோவர் நல்லோர்**
**தீயுடன் மேலுறுஞ் செயிர்க்கு நோவர் தீயோர்**

| | |
|---|---|
| கற்றவரும் | கற்க வேண்டியவற்றை (கற்பவை) கற்று விவேகம் பெற்றவரும் |
| மற்றவரும் | அறிவியல் நூல்களைக் கல்லாதவர்களும் |
| ஒருவர் செய்யுங் கடுமையில் | அவர்கள் செய்யப்பட்ட நற்செய்கை கொடுஞ் செய்கையிலும்,அழுந்தன்மைகளையும், |
| ஒத்தும் ஒவ்வார் | சமமாக இருந்தாலும் சமமாக மாட்டார்கள். |
| நல்லோர் | ஜகமின்புறுவது தாமின்புறுவதாகக் காணும்நலமுளோர் |
| செற்றவர் மேலுறுஞ் செயிர்க்கு | தன்னைத் துன்புறுத்திய ஒருவன்அடையுந் துன்பத்திற்கு |
| நோவர் | மிகவும் வருந்துவார்கள். |
| தீயோர் | கொடுஞ் செயல்களை யுடையோர் |
| தீயுடன் மேலுறுஞ் செயிர்க்கு | நெருப்பைப் போன்ற தீமை படைத்த ஒருவனுக்கு இன்னும் துயர் செய்யும் கோபத்திற்கு |
| நோவர் | வருந்தும்படி செய்வர். |

கற்க வேண்டியவற்றை (கற்பவை) கற்று விவேகம் பெற்றவரும் அறிவியல் நூல்களைக் கல்லாதவர்களும் அவர்கள் செய்யப்பட்ட நற்செய்கை கொடுஞ் செய்கையிலும்,அழுந்தன்மைகளையும், சமமாக இருந்தாலும் சமமாக மாட்டார்கள். அகமின்புறுவதுதாமின்புறுவதாகக் காணும்நலமுளோர் தன்னைத் துன்புறுத்திய ஒருவன்அடையுந் துன்பத்திற்கு மிகவும் வருந்துவார்கள். கொடுஞ் செயல்களை யுடையோர் நெருப்பைப் போன்ற தீமை படைத்த ஒருவனுக்கு இன்னும் துயர் செய்யும் கோபத்திற்கு வருந்தும்படி செய்வர்.

**11. உள்ளமழிந் துகுமன்பர்க் கன்றி யோரா**
**வுலகர்திறத் தினுமுண்டங் கொவ்வார் மாதர்**
**கள்ளவிழிக் கழிந்துகுவா ரறியா ரீசன்**
**கலந்தவிழிக் கழிந்துகுவார் கவலை யற்றோர்**

| | |
|---|---|
| உள்ளமழிந்துகு மன்பர்க்கன்றி | மனங்கசிந்து உருகுகின்றது (ஈசனிடத்து) அன்புள்ளவர்(பக்தர்) களல்லாமல், |
| ஓரா உலகர் திறத்தினுமுண்டு | விவேகமற்ற உலகத்திலுள்ள பாமரமக்களிடத்தும் இருக்கின்றது. |
| ஆங்கு ஒவ்வார் | அவ்விடத்தில் அவர்கள் அவ்வாறு இருந்தாலும், சமமாகார்கள்.(அன்பரோடு சமமாகார்). எதனாலெனில், |
| கவலையற்றோர் | தனக்குவமை யில்லாதவன் தாள் சேர்ந்து மனக்கவலை தீர்ந்தோர், |
| ஈசன் | வினைப் பிரகாசம் ஒவ்வொரு உயிர்களையும் செலுத்துகின்ற இறைவன் |
| கலந்த விழிக் கசிந் துகுவார் | கருணையுடைய கிருபா கடாக்ஷத்திற்கு உளம் நெகிழ்ந்து உருகுவார்கள்(அன்பர்) |

| | |
|---|---|
| அறியார் | விவேகமில்லாதவர் |
| மாதர் | பெண்களுடைய |
| கள்ள விழிக்கு | திருட்டுப் பார்வைக்கு (நான் நோக்க நில நோக்கும் நோக்கால் தானோக்கி என்றும் ஒரு நோக்கு நோய் செய்யும், மற்றொரு நோக்கு அந்நோய்க்கு மருந்து என்பதாலறிக) |
| அழிந்து உகுவார் | உளங் கனிந்து உருகி யழுவார்கள் என்பதாம். (அரிவையராசையில் அழுவார்கள்) |

மனங்கசிந்து உருகுகின்றது (ஈசனிடத்து) அன்புள்ளவர்(பக்தர்) களல்லாமல், விவேகமற்ற உலகத்திலுள்ள பாமரமக்களிடத்தும் இருக்கின்றது. அவ்விடத்தில் அவர்கள் அவ்வாறு இருந்தாலும், சமமாகார்கள்.(அன்பரோடு சமமாகார்). எதனாலெனில், தனக்குவமை யில்லாதவன் தான் சேர்ந்து மனக்கவலை தீர்ந்தோர், வினைப் பிரகாசம் ஒவ்வொரு உயிர்களையும் செலுத்துகின்ற இறைவன் கருணையுடைய கிருபா கடாக்ஷத்திற்கு உளம் நெகிழ்ந்து உருகுவார்கள்(அன்பர்) விவேகமில்லாதவர் பெண்களுடைய திருட்டுப் பார்வைக்கு (நான் நோக்க நில நோக்கும் நோக்கால் தாநோக்கி என்றும் ஒரு நோக்கு நோய் செய்யும், மற்றொரு நோக்கு அந்நோய்க்கு மருந்து என்பதாலறிக) உளங் கனிந்து உருகி யழுவார்கள் என்பதாம்.(அறிவையராசையில் அழுவார்கள்)

**12. அறிவினான் மிகுபவரு மறிவி லோரு**
**மாயுமா றொன் றுமில ரெனினு மொவ்வார்**
**பிறிவிலா மையிலறியார் பிறவி நீத்தார்**
**பேரிருளா னொன்றறியார் பிறந்து சாவார்**

| | |
|---|---|
| அறிவினால் மிகுபவரும் | ஞானம் நிறைந்த அறிஞர்களும், |
| அறிவிலோரும் | விவேகமற்ற அஞ்ஞர்களும் |
| ஆயுமாறும் | ஆராய்ந்து பார்க்குமிடத்து |
| ஒன்று மிலரெனினும் | ஒருவிதமான பேதமுமற்றவர்களென்றாலும் |
| ஒவாவார் | எவ்விடத்தும் சமமாகார்கள். |
| பிறவிநீத்தார் | எதனாலெனில், பிறப்பறுத்திருக்கும் பெரியோர்கள் |
| பிறிவிலாமையில் | ஈதெலாமெனதுருவென்றும் யானிலாயிடமுமில்லையெனதிடத்திலாததில்லை என்னும் ஒருமைப்பாட்டால் |
| அறியார் | பேதம் காண மாட்டார். |
| பிறந்து சாவார் | சதா பிறந்திறந்துழலு மூடர்களும் |
| பேரிருளால் | மிகுந்த அஞ்ஞான இருளினால் |

| | |
|---|---|
| ஒன்றும் அறியார் | பிறவாமை மேலென்றும் பிறத்தல் கீழென்றும் (உயர்வு–தாழ்வு) பேதம் ஒன்றும் அறியார். |

(அறிஞர்களும் அஞ்ஞர்களும் சமமாகார்) பிறப்பறுத்தோர் அறிஞர் பிறந்துழல்வார் அறியாதவர்களாகையால் வேறாவரென்பதாம்)

ஞானம் நிறைந்த அறிஞர்களும், விவேகமற்ற அஞ்ஞர்களும் ஆராய்ந்து பார்க்குமிடத்து ஒருவிதமான பேதமுமற்றவர்களென்றாலும் எவ்விடத்தும் சமமாகார்கள். எதனாலெனில், பிறப்பறுத்திருக்கும் பெரியோர்கள் ஈதெலாமெனதுருவென்றும் யானிலாயிடமுமில்லையெனதிடத்திலாததில்லை என்னும் ஒருமைப்பாட்டால் பேதம் காண மாட்டார். சதா பிறந்திறந்துழலு மூடர்களும் மிகுந்த அஞ்ஞான இருளினால் பிறவாமை மேலென்றும் பிறத்தல் கீழென்றும் (உயர்வு–தாழ்வு) பேதம் ஒன்றும் அறியார். (அறிஞர்களும் அஞ்ஞர்களும் சமமாகார்) பிறப்பறுத்தோர் அறிஞர் பிறந்துழல்வார் அறியாதவர்களாகையால் வேறாவரென்பதாம்)

**13. மகவருடப் பாலான கொங்கை யின்ப**
**மயக்கமுயக் குறுங்கணவன் வருடும்போது**
**மிகவுணர்ந்தோர்க் கும்பிறர்க்குஞ் செயல்கள்பார்த்தால்**
**வேறறினும் பாவகந்தான் வேறு வேறு**

| | |
|---|---|
| மக வருடப் பாலான | குழந்தைகள் பிடித்திழுக்கும்போது பால் சுரந்தன |
| கொங்கை | பெண்களது (செப்பு போன்ற) தனங்கள். |
| கணவன் வருடும் போது | அப் பெண்களது நாயகன் (புருஷன்) பிடித்திழுக்கின்ற காலத்து, |
| யின்ப மயக்க முயக்குறும் | சுகமதிகரித்து புத்தி மயங்கி (காமப்பால் சுரக்கும்) அதிக ஆசையை மூட்டும். |
| மிக வுணர்ந்தோர்க்கும் | கற்றறிந்தஞானிகளுக்கும், |
| பிறர்க்கும் | விவேக ஞானமற்ற அஞ்ஞானிகளுக்கும், |
| செயல்கள் பார்த்தால் | விவகார தசையில் (உண்ணல், உறங்கல், உலாவல் முதலிய காலத்தில்) காணும்போது |
| வேற்றினும் | தூல திருஷ்டியில் பேதமின்றி தோன்றினாலும், |
| பாவகந்தான் | மனத்தின் எண்ணந்தான் |
| வேறு வேறு | தனித் தனியாகும். |

குழந்தைகள் பிடித்திழுக்கும்போது பால் சுரந்தன பெண்களது (செப்பு போன்ற) தனங்கள். அப் பெண்களது நாயகன் (புருஷன்) பிடித்திழுக்கின்ற காலத்து, சுகமதிகரித்து புத்தி மயங்கி (காமப்பால் சுரக்கும்) அதிக ஆசையை மூட்டும்.

கற்றறிந்தஞானிகளுக்கும், விவேக ஞானமற்ற அஞ்ஞானிகளுக்கும், விவகார தசையில் (உண்ணல், உறங்கல், உலாவல் முதலிய காலத்தில்) காணும்போது தூல திருஷ்டியில் பேதமின்றி தோன்றினாலும், மனத்தின் எண்ணந்தான் தனித் தனியாகும். எப்படி ஒரு பெண்ணின் தனம் பற்றும் போது பாலனென்ற பாவனையால் பாலும், கணவனென்ற பாவனையால் காமப்பாலுஞ் சுரக்கின்றதோ அதுபோல் உலகவியவகாரங்களில் ஞானியும் அஞ்ஞானியும் பேதமின்றி இருந்தாலும் உள்ளத்தில் ஞானி தேகம் தானல்லவென்றும், உலகம் பொய்யென்றும் பிறப்பிறப்பற்ற பிரம்ம சொரூபமே தானென்றிருப்பன். அஞ்ஞானியோ தேகந்தானென்றும் உலகம் சத்தியமென்றும் இருப்பன். அதனால், பிறந்திறந்துழல்வன் (உலகச் செயலில் ஒன்றும் உள்ளத்தால் வேறும் ஆமென்பதாம்),

**14. அழுக்கிலவர் செயவேண்டுந் தவமு மில்லை**
**யழுக்குடையோர் செய்வதிலை யாத லாலே**
**யொழுக்குடைய நல்வினையு முயர்ந்தோர்க் கில்லை**
**யொழிந்தோர்க்கு மில்லெனினு மொவ்வா ரொவ்வார்**

| | |
|---|---|
| அழுக்கிலவர் | உள்ளம் பரிசுத்தமான ஆசை(கோபமற்ற) வர்கள் |
| செய வேண்டுந் தவமுமில்லை | அம்மகான்கள் செய்ய வேண்டிய தவம் வேறு ஒன்றுமிலையாம். |
| யழுக்கடையோர் | மனதில் ஆசை கோபமென்னும் குற்றம் நிறைந்தோர் |
| செய்வதிலை | ஆசையென்னும் அழுக்கு நிறைந்த மனத்தோர் அது நீங்க தவஞ்செய்வது இல்லவே இல்லை. |
| ஆதலாலே | ஆகையினால் |
| யொழுக்குடைய | பரம்பரைச் சாதனமான |
| நல்வினையும் | நிஷ்காமிய கர்மம் (பலனை விரும்பாமல்) யஞ்ஞாதி கர்மம் சித்த சுத்தியின் பொருட்டு தவமும் |
| உயர்ந்தார்க்கில்லை | ஞானிகளுக்கின்றாம். |
| ஒழிந்தார்க்கும் | ஞானமற்ற மூடர்களுக்கும் |
| இல்லெனினும் | இல்லையென்று கூறின், |
| ஒவ்வார் ஒவ்வார் | அஞ்ஞரும், அறிஞரும் சமமாகார் (ஞானத்தில் எவ்விடத்தும் சமமாகார்) என்பதாம். |

உள்ளம் பரிசுத்தமான ஆசை(கோபமற்ற) வர்கள் அம்மகான்கள் செய்ய வேண்டிய தவம் வேறு ஒன்றுமிலையாம். மனதில் ஆசை கோபமென்னும் குற்றம் நிறைந்தோர் ஆசையென்னும் அழுக்கு நிறைந்த மனத்தோர் அது நீங்க தவஞ்செய்வது இல்லவே இல்லை. ஆகையினால் பரம்பரைச் சாதனமான நிஷ்காமிய கர்மம் (பலனை விரும்பாமல்) யஞ்ஞாதி கர்மம் சித்த சுத்தியின் பொருட்டு தவமும் ஞானிகளுக்கின்றாம். ஞானமற்ற

மூடர்களுக்கும் இல்லையென்று கூறின், அஞ்ஞரும், அறிஞரும் சமமாகார் (ஞானத்தில் எவ்விடத்தும் சமமாகார்) என்பதாம்.

**15. மேவிவிடு மருட்படைக்கு மருட்ப டைக்கும்**
**வேறறிய விவ்வாறு விளம்பி வீர**
**னேவிவிடு மளவதனி லஞ்ஞ சேனை**
**யிறந்தபடி யதனையுமிங் கியம்பல் செய்வாம்**

| | |
|---|---|
| மேவி விடும் அருட் படைக்கும் | ஞான சாதனம் பொருந்திய ஞான வேந்தன் படைகளுக்கும் |
| மருட் படைக்கும் | அதர்மரூப அஞ்ஞ வேந்தன் படைக்கும் |
| வேறறிய | வேற்றுமை (பேதம்) தெரிந்து கொள்ளும் பொருட்டு |
| இவ்வாறு | இந்தப்பிரகாரம் |
| வீரன் | ஞான வேந்தன் |
| விளம்பி | அருளிச் செய்து |
| ஏவி விடும் அளவதனில் | தமது சேனைகளைச் செலுத்திய காலத்து |
| அஞ்ஞ சேனை | அஞ்ஞ வேந்தனது படைகள் |
| யிறந்த படி | அழிந்த தன்மையை |
| அதனையும் இயம்பல் செய்வாம் | அந்த விவரங்களையும் இயம்பல் செய்வோம் (எடுத்துக் கூறுவாம்) |

ஞான சாதனம் பொருந்திய ஞான வேந்தன் படைகளுக்கும் அதர்மரூப அஞ்ஞ வேந்தன் படைக்கும் வேற்றுமை (பேதம்) தெரிந்து கொள்ளும் பொருட்டு இந்தப்பிரகாரம் ஞான வேந்தன் அருளிச் செய்து தமது சேனைகளைச் செலுத்திய காலத்து அஞ்ஞ வேந்தனது படைகள் அழிந்த தன்மையை அந்த விவரங்களையும் இயம்பல் செய்வோம் (எடுத்துக் கூறுவாம்)

**16. உருபக மகளிர்தி றத்தினை**
**யுசாவொடு மறமொடி ழிப்பொடு**
**நிருபகன் மதனைய ழித்தன**
**னிலவிய ரதியுமி றப்பவே**

| | |
|---|---|
| நிருபகன் | நேரில் ஜெயித்துக் காட்டும் நிருபகனென்ற சேனாதிபதி |
| உருபக மகளிர் திறத்தினை | சவுந்தரியமுடைய பெண்களது சாமர்த்திய வலிமையினையும், |
| யுசாவொடு | அப்பெண்களது தேகத்திலிருக்கும் ஆடையாபரணங்களை நீக்கி |

| | |
|---|---|
| | பிடைத்திலுள்ள தோல், இறைச்சி,இரத்தம், நரம்பு, எலும்பு, மூளை என்னும் இவற்றை நன்றாக பலப்பட விசாரித்து அதனால் |
| மறமொடும் இழிப்பொடும் | பாவம் பழி இழிவு இவற்றோடு கூடி விளங்கிக் கொண்டிருந்த |
| நிலவிய ரதியுமிறப்பவே | அழகு மிக்க ரதியானவள் இறக்கவும் |
| மதனை யழித்தனன் | உடனேயே அந்தநிமிஷத்திலேயே மன்மதனையும் கொன்றனன் |

நேரில் ஜெயித்துக் காட்டும் நிருபகனென்ற சேனாதிபதி சவுந்தரியமுடைய பெண்களது சாமர்த்திய வலிமையினையும், அப்பெண்களது தேகத்திலிருக்கும் ஆடையாபரணங்களை நீக்கி பிடைத்திலுள்ள தோல், இறைச்சி,இரத்தம், நரம்பு, எலும்பு, மூளை என்னும் இவற்றை நன்றாக பலப்பட விசாரித்து அதனால் பாவம் பழி இழிவு இவற்றோடு கூடி விளங்கிக் கொண்டிருந்த அழகு மிக்க ரதியானவள் இறக்கவும் உடனேயே அந்தநிமிஷத்திலேயே மன்மதனையும் கொன்றனன் (நிருபகன் விசாரத்தால் வென்றான்)

**17. பாவனு மிகலுமி ரங்கலில்**
**பாடுறு கொலையுமெ ரிந்தெழு**
**கோபனு மடையந லம்பல**
**கூறிய பொறையின ழிந்ததே**

| | |
|---|---|
| பாவனு மிகலு மிரங்களில் | பகை, பாவம், வன்நெஞ்சம் ஆகியவற்றையும் |
| பாடுறு கொலையும் | கேடு வடிவமான ஜீவஹிம்சையும், |
| எரிந்தெழு கோபனும் | நெருப்பைப்போல் கொதித்து தகிக்கக்கூடிய கோபனோடும் |
| நலம் பல கூறிய | மற்றுமெல்லாம், அநேகமான நல்ல வார்த்தைகளை (கோபத்தால் கௌசிகன் கொட்டினான் தவத்தை) எடுத்துச் சொல்லும் |
| பொறையினழிந்ததே | பொறுமை என்பவனிடத்தில் மேற்கூறிய அனைத்தும் அழிந்தனவாம். |

பகை, பாவம், வன்நெஞ்சம் ஆகியவற்றையும் கேடு வடிவமான ஜீவஹிம்சையும், நெருப்பைப்போல் கொதித்து தகிக்கக்கூடிய கோபனோடும் மற்றுமெல்லாம், அநேகமான நல்ல வார்த்தைகளை (கோபத்தால் கௌசிகன் கொட்டினான் தவத்தை) எடுத்துச் சொல்லும் பொறுமை என்பவனிடத்தில் மேற்கூறிய அனைத்தும் அழிந்தனவாம்.

**18. மோகனு முலகம யக்குற**

**முடிய மயலுமி குத்தெழு**
**சோகனு மகிழ்வுந சித்தனர்**
**தூமதி கணவன்வி ழிக்கவே**

| | |
|---|---|
| தூமதி கணவன் விழிக்கவே | சுமதியென்னும் சுத்தபுத்தி உதயமாகி தோன்றிய மாத்திரத்தில் |
| மோனும் உலகம் மயக்குறமுடிய | அதிகப்பிரயமென்னும் ஜெகத்தினனை மயக்கியுள்ள அபிமான மறைப்பையும் |
| மயலும் மிகுத்தெழு சோகனும் மகிழ்வும் | புத்தி மயக்கமும் அதிகரித்தெழுந்த சோர்வும் (ஆசைப்பட்ட வஸ்து கிடைத்தவுடனுண்டாகும் ) அதிகமான ஆசையால் உண்டாகும் மகிழ்ச்சியும் |
| நசித்தனர் | மாண்டனர்.(சுத்த புத்தியில் அழிந்தன சோகமோகாதிகள்) என்பதாம். |

சுமதியென்னும் சுத்தபுத்தி உதயமாகி தோன்றிய மாத்திரத்தில் அதிகப்பிரயமென்னும் ஜெகத்தினனை மயக்கியுள்ள அபிமான மறைப்பையும் புத்தி மயக்கமும் அதிகரித்தெழுந்த சோர்வும் (ஆசைப்பட்ட வஸ்து கிடைத்தவுடனுண்டாகும் ) அதிகமான ஆசையால் உண்டாகும் மகிழ்ச்சியும் மாண்டனர்.(சுத்த புத்தியில் அழிந்தன சோகமோகாதிகள்) என்பதாம்.

**19. ஆனசந் தோடனில் லோபனு**
**மாசையும் பேசுகள வாதியு**
**மானசந் தாபனுந் தீநனு**
**மாநமுஞ் சேரவுயிர் மாயுமே**

| | |
|---|---|
| ஆன சந்தோடனில் | மிகுதியான திருப்தியில் (மனநிறைவு) |
| லோபனும் | ஈயாமையும், |
| ஆசையும் | அவாவும், |
| பேசு கன வாதியும் | உலகத்தவர்இழிவாகச் சொல்லும் திருடு முதலியவைகளும், |
| ஆனசந்தாபனும் | அதிகமான மனக்கொதிப்பும், |
| தீநனும் | நாளைக்கில்லையே என்னும் நல்குறவும், |
| மாநமும் | தேகாதிபிரபஞ்சத்தில் யான், எனது என்னும் அபிமானமும், |
| சேர உயிர் மாயுமே | மேற்கூறிய இக்குணங்களனைத்தும் ஒன்றாகவே அழிந்தொழியுமாம். |

மிகுதியான திருப்தியில் (மனநிறைவு) ஈயாமையும், அவாவும், உலகத்தவர்இழிவாகச் சொல்லும் திருடு முதலியவைகளும், அதிகமான மனக்கொதிப்பும், நாளைக்கில்லையே

என்னும் நல்குறவும், தேகாதிபிரபஞ்சத்தில் யான், எனது என்னும் அபிமானமும், மேற்கூறிய இக்குணங்களனைத்தும் ஒன்றாகவே அழிந்தொழியுமாம்.

**20. அறன ழித்தனன்ம றத்தினைய சூயை தனைநல்**
**லமிர்த சீலனும ழித்தனன டக்கனுமதத்**
**திறன ழித்தனனு பேட்சையில பேட்சை பொடி**
**நற்றேர்வி லேபெரிய டம்பனுயிர் சிந்தியதுவே**

| | |
|---|---|
| மறத்தினை | (துக்க காரண பாவ வடிவ) அதர்மத்தை |
| அறனழித்தனன் | (சுககாரண புண்ணிய வடிவ) தர்மம் வென்றது. |
| அசூயைதனை | தானடைந்த இன்பம் பிறர்க்கு வரக்கூடாதென்று எண்ணுபவனையும், |
| நல்ல அமிர்த சீலனும் அழித்தனன் | என்றும் நிலைபெற்ற நல்லொழுக்கம் என்பவன் வென்றான். |
| அடக்கனும் | தன் நிலையில் மாறுபடாதடங்கியிருப்பவன் |
| மதத்திறனழித்தனன் | தன்னை மலைபோல் பெரிதாக எண்ணி பெரியோர்களை மதியாதிருப்பதை வென்றான். (அகஸ்தியர் விந்திய பர்வதத்தை அடக்கியது போல்) மதத்தை அடக்கன் வென்றது. |
| உபேட்சையில் | விறுப்பு வெறுப்பின்மையால் |
| அபேட்சை பொடி | விருப்பம் என்னும் ஆசையானது பொடிப்பொடியாயினவாம். |
| நற்றேர்வில் | நல்ல ஆராய்ச்சியிலே |
| பெரிய டம்பன் உயிர் சிந்தியதுவே | படாடோபமென்பவன் (ஆடம்பரம்) உடனே பிராணனை விட்டான். |

ஆராய்ச்சியாவது அப்படிப்பட்டது. பட்டினத்தார் தீவட்டி பிடித்தார். பெரியதொரு தொண்டினைச் செய்து சிறுத்தொண்டரெனப் பெயர் பெற்றார். நாம் எம் மாத்திரம் என்று எண்ணுவது.

(துக்க காரண பாவ வடிவ) அதர்மத்தை (சுககாரண புண்ணிய வடிவ) தர்மம் வென்றது. தானடைந்த இன்பம் பிறர்க்கு வரக்கூடாதென்று எண்ணுபவனையும், என்றும் நிலைபெற்ற நல்லொழுக்கம் என்பவன் வென்றான். தன் நிலையில் மாறுபடாதடங்கியிருப்பவன்தன்னை மலைபோல் பெரிதாக எண்ணி பெரியோர்களை மதியாதிருப்பதை வென்றான். (அகஸ்தியர் விந்திய பர்வதத்தை அடக்கியது போல்) மதத்தை அடக்கன் வென்றது. விறுப்பு வெறுப்பின்மையால் விருப்பம் என்னும் ஆசையானது பொடிப்பொடியாயினவாம். நல்ல ஆராய்ச்சியிலே படாடோபமென்பவன் (ஆடம்பரம்) உடனே பிராணனை விட்டான். ஆராய்ச்சியாவது அப்படிப்பட்டது. பட்டினத்தார் தீவட்டி பிடித்தார். பெரியதொரு தொண்டினைச் செய்து சிறுத்தொண்டரெனப் பெயர் பெற்றார். நாம் எம் மாத்திரம் என்று எண்ணுவது.

21. **ஆங்க ரிப்பரிய சாந்தியின ழிந்ததுயிர்க்ட்**
**கன்னை போலுமவி ரோதமெழ வாருயிரையுந்**
**தீங்க ருத்தியிடு மச்சரன ழிந்தயரவே**
**செய்யு மையமழி வுற்றதுமி குந்தெளிவிலே**

| | |
|---|---|
| அரிய சாந்தியில் | கிடைத்தற்கரிய சாந்தத்தினால் (சத்வகுணத்தால் ) |
| ஆங்கரிப்பழிந்தது | அகங்காரமானவனிறந்தான், (சாந்தம் வென்றான் அகங்காரியை) |
| உயிர்கட்கு அன்னை போலும் அவிரோதம் எழ | சர்வ ஜீவர்களுக்கும் தயைவேறுபாடற்ற சூரியன் எழுந்தவுடனே, |
| ஆருயிரையுங் தீங்கருத்தியிடு மச்சர னழிந்தது | எல்லா உயிர்களும்இன்புறுக என்பதால் மச்சரன் மாண்டான். |
| மிகத் தெளிவிலே | மேலான திடநிச்சயத்தால் |
| அயர்வே செய்யும் | அனைவருக்கும் துக்கத்தை செய்யும் |
| சோகம் ஐயம் அழிவுற்றது | சோகம் சந்தேகம் நீங்கியது. |

(நான் ஜீவனோ சிவனோ வென்ற சமுசயம், அதாவது, இரண்டு கோடிகளையுடைய ஞானம் நீங்கி ஒன்றே அதுவே நானென ஐயமற நிலைத்தலாம் பெரியோர் சீவனெனச் சிவனே வேறில்லை என்றனர்)

கிடைத்தற்கரிய சாந்தத்தினால் (சத்வகுணத்தால் ) அகங்காரமானவனிறந்தான், (சாந்தம் வென்றான் அகங்காரியை) சர்வ ஜீவர்களுக்கும் தயைவேறுபாடற்ற சூரியன் எழுந்தவுடனே, எல்லா உயிர்களும்இன்புறுக என்பதால் மச்சரன் மாண்டான். மேலான திடநிச்சயத்தால் அனைவருக்கும் துக்கத்தை செய்யும் சோகம் சந்தேகம் நீங்கியது. (நான் ஜீவனோ சிவனோ வென்ற சமுசயம், அதாவது, இரண்டு கோடிகளையுடைய ஞானம் நீங்கி ஒன்றே அதுவே நானென ஐயமற நிலைத்தலாம் பெரியோர் சீவனெனச் சிவனே வேறில்லை என்றனர்)

22. **தற்க மோனமுற வேபொடித மம்பொ டிவுறுஞ்**
**சத்து வத்தில்வரு சங்கமும சங்க முறநேர்**
**நிற்கு மோவொரும ருட்படைய ருட்ப டையின்முன்**
**னிற்க வேதுநநிண மேதுகுட ரேதுநிலையே**

| | |
|---|---|
| மோன முறவே | மனம் மௌன நிலையடைந்த உடனே |
| தற்கம் பொடிபட | மேலான கேள்வி பதில் துகளானது. |

| | |
|---|---|
| சத்துவத்தில் | சமத்தினால் |
| தமம் வொடி வுறும் | அகக்கரணங்கள் (மனது, புத்தி, சித்தம், அகங்காரம் இவையடங்கின) அழிந்தன. |
| வரு சங்கமும் | தொடர்ந்து வரப்பட்ட ஆசைக்கூட்டங்களும் |
| அசங்க முற | பற்றற்ற நிலையையடைந்தன. |
| நேர் நிற்குமோ | எதிரில் இருக்க முடியுமா ஒரு மயட்படை (இழிவானவற்றில் சமமின்றிய) அஞ்ஞ வேந்தனது இரக்கமின்றிய சேனைகள், ஞானவேந்தனது கருணைக்கடலாகிய சைனியங்களின் எதிலிருப்பதற்கு ஒரு மாமிச பிண்டமாவது நீண்ட குடலாவது காண முடியாது. (ஞான வேந்தனது படைகளுக் கெதிரில் நின்றால் அஞ்ஞ வேந்தனது படைகள் ஒரு உருவும் காணாமல் மறைந்து விடும். இரவும் பகலும் ஓரிடமிராது.) |

மனம் மௌன நிலையடைந்த உடனே மேலான கேள்வி பதில் துகளானது. சமத்தினால் அகக்கரணங்கள் (மனது, புத்தி, சித்தம், அகங்காரம் இவையடங்கின) அழிந்தன. தொடர்ந்து வரப்பட்ட ஆசைக்கூட்டங்களும் பற்றற்ற நிலையையடைந்தன. எதிரில் இருக்க முடியுமா ஒரு மயட்படை (இழிவானவற்றில் சமமின்றிய) அஞ்ஞ வேந்தனது இரக்கமின்றிய சேனைகள், ஞானவேந்தனது கருணைக்கடலாகிய சைனியங்களின் எதிலிருப்பதற்கு ஒரு மாமிச பிண்டமாவது நீண்ட குடலாவது காண முடியாது. (ஞான வேந்தனது படைகளுக் கெதிரில் நின்றால் அஞ்ஞ வேந்தனது படைகள் ஒரு உருவும் காணாமல் மறைந்து விடும். இரவும் பகலும் ஓரிடமிராது.)

******************

# 23. அஞ்ஞ னழிவு

சுயம் பிரகாச அறிவெனும் ஞான வேந்தனது படைகள் (சேனைகள்) அறியாமையென்னும் அஞ்ஞ வேந்தனது படைகளை வென்று மேற்படி அஞ்ஞ வேந்தனையும் கைப்பற்றி (அடியர் குழாமென்னும்) ஞான வேந்தனது படைத்தலைவர்களும் மற்றவர்களும் கூறுவது. ஏ! அஞ்ஞ வேந்தே! உமது படைகளனைத்தும் மாண்டன. உன் உயிர் தப்பியிருக்கிறது. இப்பொழுதாவது எமது சக்கரவர்த்தியாகிய (ஞான வேந்தரைப்(சொரூபானந்தரைப்) பணிந்தால் பிழைத்துக் கொள்ளலாமென அதற்கு ஞான வேந்தன் என் எதிரில் நிற்கட்டும் அதன்பின் பேசலாம். (என் பெயர் இருக்கும்வரை உமக்கு எப்படி வெற்றியுண்டாம்) என்றனன். அதுகேட்ட ஞான வேந்தர் புன்சிரிப்புக் கொண்டு தனது திருவடியை இருக்காதி வேதந் தேடியும் முனிவர் தேவராதியர் தேடியும் இருவர் தேடியுங் காணாதது. அதனை அஞ்ஞ வேந்தனது சிரசில் உதைத்தனன். அதுபட்ட மாத்திரத்திலேயே அபக்குவர் பக்குவர் என்பதுமின்றி அனைவரும் அகக்கரணம் புறக்கரணங்களையொடுக்கி அந்தர்முக முடையவராய் ஆவரணம் நீக்கி (அஞ்ஞானமொழிந்து) ஆத்ம அபரோக்ஷ சாக்ஷாத் காரமுடையவராயினர். (தனது யதார்த்த சொரூபத்தில் நிலைத்திருந்தனர்.) என்பதாம்.

**1. ஆவியை யொழிய வெல்லா மழிந்தகப் பட்ட வஞ்ஞப்**
**பாவியை யெந்தை பாதம் பணியெனப் பகர்ந்த போதே**

| | |
|---|---|
| ஆவியை யொழிய | அஞ்ஞ வேந்தனது உயிர் தவிர |
| எல்லாம் அழிந்து | அவனது சேனா சைன்னியங்கள் அனைத்தும் சம்கரித்து |
| அகப்பட்ட அஞ்ஞப் பாவியை | தங்கள் வசப்பட்ட (பிடியிலகப்பட்ட) சர்வ துன்பங்களுக்கும் காரணமென்னும் அறியாமையெனுமரசனை |
| எந்தை பாதம் பணி | எமது பிதாவாகிய ஞான வேந்தரது செந்தாமரை போன்ற திவ்ய திருவடியில் சரணாகதியாவாய் |
| எனப் பகர்ந்தபோதே | என்று கூறிய மாத்திரத்தில் (அஞ்ஞ வேந்தன் கூறுவது) இவ்விரண்டு பாடலும் குளகம். |

அஞ்ஞ வேந்தனது உயிர் தவிர அவனது சேனா சைன்னியங்கள் அனைத்தும் சம்கரித்து தங்கள் வசப்பட்ட (பிடியிலகப்பட்ட) சர்வ துன்பங்களுக்கும் காரணமென்னும் அறியாமையெனுமரசனை எமது பிதாவாகிய ஞான வேந்தரது செந்தாமரை போன்ற திவ்ய திருவடியில் சரணாகதியாவாய் என்று கூறிய மாத்திரத்தில் (அஞ்ஞ வேந்தன் கூறுவது) இவ்விரண்டு பாடலும் குளகம்.

**2. அறிவில னெனும்பே ரொன்று மழிவுறா திருக்க ஞாநங்**
**கிறிவரும் படியென் றானை கிளர்ந்தெழு மென்னக் கேட்டே**

| | |
|---|---|
| அறிவிலனெனும் பேர் | அஞ்ஞனென்ற பெயர்(நாமம்) |
| அழிவுறாதிருக்க | நீங்காதிருக்கும்போது |
| ஞானம் கிறி வரும்படி | உம்மிடம் பொருந்திய அறிவு(ஞானம்) பொய்யாகும். |
| என்றானை | இவ்வாறு கூறிய அஞ்ஞ வேந்தனை |
| கிளர்ந்தெழும் | சரிதான் போதும் பேச்சை விட்டு செயல்படு, நீ எழுந்து ஞானவேந்தன் முன் நின்றால் போதும் |
| என்னக் கேட்டு | என்று கூறிய மாத்திரத்தில். (இந்நூலாசிரியர் வெகுண்டெழுந்த படைபோன்று ஈங்கு உவமையணிகளை வரிசைப்பட நிறுத்துகின்றார்.) |

அஞ்ஞனென்ன பெயர்(நாமம்) நீங்காதிருக்கும்போது உம்மிடம் பொருந்திய அறிவு(ஞானம்) பொய்யாகும். இவ்வாறு கூறிய அஞ்ஞ வேந்தனை சரிதான் போதும் பேச்சை விட்டு செயல்படு, நீ எழுந்து ஞானவேந்தன் முன் நின்றால் போதும் என்று கூறிய மாத்திரத்தில். (இந்நூலாசிரியர் வெகுண்டெழுந்த படைபோன்று ஈங்கு உவமையணிகளை வரிசைப்பட நிறுத்துகின்றார்.)

**3. இருடுணிந் திரவிமுன் னிற்குமோ பஞ்சுதா**
**னெரியின்முன் னிற்குமோ வெங்ஙனே யரவமுங்**
**கருடன்முன் னிற்குமோ ஞாநமே வந்துறுங்**
**கண்ணின்முன் னிற்குமோ வெண்ணறுங் கன்மமே**

| | |
|---|---|
| இருள் இரவி முன் துணிந்து நிற்குமோ | அந்தகாரமென்னும் இருட்டானது அருக்கன் (சூரியன்) முன் தைரியத்துடனிருக்குமோ ? (நில்லாவாம்) ஒகாரம் எதிர்மறைப் பொருள். |
| எங்ஙனே | எவ்விடத்தில்தான் |
| பஞ்சுதான் எரியின் முன்னிற்குமோ | பஞ்சானது நெருப்பில் இருக்கமுடியுமோ ? முடியாது. |
| அரவமும் கருடன் முன்நிற்குமோ | வைகுந்தன் வாகனமாகிய கெருடாழ்வார் எதிரில் சர்ப்பங்கள் தலையெடுத்திருக்குமோ ? (கெருட நிழல் பட்டால் பாம்பு மடியுமென்றதால்) நில்லாவாம். |
| வந்துறும் ஞானம் | பலனை விரும்பாது செய்யும் பணியின் பக்குவத்தால் பொருந்தும் மெய்யறிவு, |
| கண்ணின் முன் | மனக்கண்ணென்று சொல்லப்படும் பிரம்மாகார விருத்தியின் எதிரில் |
| எண்ணுருங் கன்மம் நிற்குமோ | அளவில்லாத வினைகள் (கர்மங்கள்) இருக்குமோ ? (அறியாமை)யென்னும் சர்ம இருள் அறிவென்னும் அருக்கன்முன்) நில்லாவாம். |

அந்தகாரமென்னும் இருட்டானது அருக்கன் (சூரியன்) முன் தைரியத்துடனிருக்குமோ ? (நில்லாவாம்) ஓகாரம் எதிர்மறைப் பொருள். எவ்விடத்தில்தான் பஞ்சானது நெருப்பில் இருக்கமுடியுமோ ? முடியாது. வைகுந்தன் வாகனமாகிய கெருடாழ்வார் எதிரில் சர்ப்பங்கள் தலையெடுத்திருக்குமோ ? (கெருட நிழல் பட்டால் பாம்பு மடியுமென்றதால்) நில்லாவாம். பலனை விரும்பாது செய்யும் பணியின் பக்குவத்தால் பொருந்தும் மெய்யறிவு, மனக்கண்ணென்று சொல்லப்படும் பிரம்மாகார விருத்தியின் எதிரில் அளவில்லாத வினைகள் (கர்மங்கள்) இருக்குமோ ? (அறியாமை)யென்னும் சர்ம இருள் அறிவென்னும் அருக்கன்முன்) நில்லாவாம்.

**4. அழியுமிக் காயமுங் கழியுமுன் னிளமையு**
**மன்புறுங் கிளைஞரு மின்புறும் போகமு**
**மொழியுமிச் செல்வமொன் றாகநீ வுன்னியோ**
**வுடையநா யகனைநெஞ் சுணர் வுறாதொ ழிவதே**

| | |
|---|---|
| இக்காயமும் | இந்த சரீரமும் |
| அழியும் | காலாந்தரத்தில் நாசமாகக் கூடியதாம். |
| முன் இளமையும் கழியும் | ஆரம்பத்தில் தோற்றும் பால்யம், யௌவனமும் முதிர்ந்து நீங்கும். |
| அன்புறுங் கிளைஞரும் | நம்மிடத்தில் அதிக பாசமும் பந்தமும் வைத்துள்ள சுற்றத்தார்களும், |
| இன்புறும் போகமும் | இரசமாக அநுபவிக்கக்கூடிய போக்கிய வஸ்துக்களும், |
| மின்புறு போக | மின்னலுக்கு சமமாக தோன்றி மறையும் போக வஸ்து வென்னுமவையும், |
| ஒழியும் இச் செல்வமும் | ஓரிடத்தும் நில்லாது சகடக்கால் போன்று நீங்கும். |
| ஒன்றாக நீ வுன்னியோ | இந்த ஐஸ்வரியங்களும் பொய்யான இவற்றை சாசுவதமாக நினைந்தோ |
| வுடைய நாயகனை | நம்மை ஆளுடைய தலைவனை |
| நெஞ்சுணர்வுறாது ஒழிவது | மேற்கூறியவற்றிற் கெல்லாம் ஆதார பூர்வகமாயுள்ள சச்சிதானந்த சுக சொரூபனாய், நம்மையுமாட்கொண்ட நாதனை நெக்குருகி நெஞ்சில் நினையாது நீங்கினை (என்னே அஞ்ஞ வேந்தே உனது அறியாமையே) |

இந்த சரீரமும் காலாந்தரத்தில் நாசமாகக் கூடியதாம். ஆரம்பத்தில் தோற்றும் பால்யம், யௌவனமும் முதிர்ந்து நீங்கும். நம்மிடத்தில் அதிக பாசமும் பந்தமும் வைத்துள்ள சுற்றத்தார்களும், இரசமாக அநுபவிக்கக்கூடிய போக்கிய வஸ்துக்களும், மின்னலுக்கு சமமாக தோன்றி மறையும் போக வஸ்து வென்னுமவையும், ஓரிடத்தும் நில்லாது சகடக்கால் போன்று நீங்கும். இந்த ஐஸ்வரியங்களும் பொய்யான இவற்றை சாசுவதமாக நினைந்தோ நம்மை ஆளுடைய தலைவனை மேற்கூறியவற்றிற் கெல்லாம் ஆதார

பூர்வகமாயுள்ள சச்சிதானந்த சுக சொரூபனாய், நம்மையுமாட்கொண்ட நாதனை நெக்குருகி நெஞ்சில் நினையாது நீங்கினை (என்னே அஞ்ஞ வேந்தே உனது அறியாமையே)

**5. தேவர்களு முனிவர்களுஞ் செழுமறையும் பழையவொரு
மூவருமென் றிருந்தனையோ முழுமுதலென் றறிந்திலையோ**

| | |
|---|---|
| தேவர்களும் முனிவர்களும் | விண்ணுலகத்தவர்களும் மண்ணுலகில் பிறந்து மநனசீலர்களானவர்களும் (ஆசையை முநிந்து, கோபித்துவிட்டு நீக்கியவர்கள்) |
| செழுமறையும் | செம்பொருளை விளக்கிக் கூறுவதில் மிக்கதாயுள்ள இருக்காதி நான்கு வேதங்களும் கூறுவதாகிய (தேவர் முநிவர் மறை கூறும்) |
| பழையவொரு | பழமையான ஒப்பற்ற |
| மூவரு மென்றிருந்தனையோ | பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் என்னும் மும்மூர்த்திகள்தானே என்று கருதினை போலும். |
| முழுமுதலென்றறிந்திலையோ | மேற்கூறிய மும்மூர்த்திகளுக்கும் அப்பாற்பட்ட பரிபூரண வஸ்து (மூலப்பொருள்) என, ஏ! அஞ்ஞ வேந்தே! நீ அறிய மாட்டாய் போலும். |

விண்ணுலகத்தவர்களும் மண்ணுலகில் பிறந்து மநனசீலர்களானவர்களும் (ஆசையை முநிந்து, கோபித்துவிட்டு நீக்கியவர்கள்) செம்பொருளை விளக்கிக் கூறுவதில் மிக்கதாயுள்ள இருக்காதி நான்கு வேதங்களும் கூறுவதாகிய (தேவர் முநிவர் மறை கூறும்) பழமையான ஒப்பற்ற பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் என்னும் மும்மூர்த்திகள்தானே என்று கருதினை போலும். மேற்கூறிய மும்மூர்த்திகளுக்கும் அப்பாற்பட்ட பரிபூரண வஸ்து (மூலப்பொருள்) என, ஏ! அஞ்ஞ வேந்தே ! நீ அறிய மாட்டாய் போலும்.

**6. இந்தவுல கத்தினிடர் கெடும்பரிசிங் கெழுந்தருளி
வந்தவனென் றறிந்திலையோ மானிடனென் றிருந்தனையோ**

| | |
|---|---|
| இவ்த உலகத்தின் இடர் கெடும் பரிசில் | இப்பூமியிலுள்ள சகலவுயிர்களும் காலவசத்தால் பிறந்திறக்கும் துன்பத்தில் அகப்பட்டு தவிக்கின்றனவென கருணையால் அத்துன்பத்தினின்றும் உய்யும்படியான (நீங்கும்படி) சிவப்பிரகாசனால் தந்தவன். |
| இங்கு எழுந்தருளி வந்தவன் | இவ்விடத்து (சொரூபானந்தராக) தோன்றி காட்சியளிப்பவன் |
| என்றறிந்திலையோ | என அறிவாய்கொல்லோ. (அறியவில்லையோ) |

| | |
|---|---|
| மானிடனென்றிருந்தனையோ | சாதாரணமான மனிதர்களில் ஒருவனெனக் கருதி எண்ணியிருந்தாய் போலும். இது எவ்வாறு இருப்பதெனில் முன் இராம அவதாரத்தில் மறைந்து பானஞ் செலுத்தியது (வாலிமீது) குற்றமென்று கூறும் மதியீனர் போன்றும் இக்காலத்தெம்மோடு ஒத்து சாவி வாழ்ந்த பூண்டி மகான் என்ற சண்முக சுவாமிகளையும் மனிதராக கருதிய மதியீனர் போன்றும். இவ்வஞ்ஞன் கருதியதெனலாம். |

இப்பூமியிலுள்ள சகலவுயிர்களும் காலவசத்தால் பிறந்திறக்கும் துன்பத்தில் அகப்பட்டு தவிக்கின்றனவென கருணையால் அத்துன்பத்தினின்றும் உய்யும்படியான (நீங்கும்படி) சிவப்பிரகாசனால் தந்தவன். இவ்விடத்து (சொரூபானந்தராக) தோன்றி காட்சியளிப்பவன் என அறிவாய்கொல்லோ. (அறியவில்லையோ) சாதாரணமான மனிதர்களில் ஒருவனெனக் கருதி எண்ணியிருந்தாய் போலும். இது எவ்வாறு இருப்பதெனில் முன் இராம அவதாரத்தில் மறைந்து பானஞ் செலுத்தியது (வாலிமீது) குற்றமென்று கூறும் மதியீனர் போன்றும் இக்காலத்தெம்மோடு ஒத்து சாவி வாழ்ந்த பூண்டி மகான் என்ற சண்முக சுவாமிகளையும் மனிதராக கருதிய மதியீனர் போன்றும். இவ்வஞ்ஞன் கருதியதெனலாம்.

7. **அதிரேக வழகுடையா னாளுடையான் றாளுடையா**
**னெதிரேநின் றனையாவி யிப்பொழுதே யிழந்தனையே**

| | |
|---|---|
| அதி ரேக வழகுடையான் | அதிசயிக்கத்தக்க ரூப சௌந்தரியங்களைக் கொண்டவன், |
| ஆளுடையான் | நம்மை அடிமையாகக் கொண்டுள்ளவன், |
| தாளுடையான் | மார்க்கண்டேயரைக் காக்க கடவூரில் தோன்றிய கால் போன்றும் மாணிக்கவாசகரைக்காண கழுக்குன்றத்தில் காட்டிய கால்(இருவினையொப்பும் மலபரிபாகமு முடையவர் காணும்) திவ்ய மங்கள (திருச் சொரூப) திருவடியினையுடையவன். |
| எதிரே நின்றனை | எங்கோன் மூர்க்கன் எதிர்செல்லாதீர். கண்டாருயிரென்பான், என்பதையறியாமல் அவர்கண்முன் எதிர்பட்டனை, |
| ஆவியிப்பொழுதே யிழந்தனையே | இந்தக்ஷணத்திலேயே உனது உயிர் நீங்கினை. |

அதிசயிக்கத்தக்க ரூப சௌந்தரியங்களைக் கொண்டவன், நம்மை அடிமையாகக் கொண்டுள்ளவன், மார்க்கண்டேயரைக் காக்க கடவூரில் தோன்றிய கால் போன்றும் மாணிக்கவாசகரைக்காண கழுக்குன்றத்தில் காட்டிய கால்(இருவினையொப்பும் மலபரிபாகமு முடையவர் காணும்) திவ்ய மங்கள (திருச் சொரூப) திருவடியினையுடையவன். எங்கோன் மூர்க்கன் எதிர்செல்லாதீர். கண்டாருயிரென்பான்,

என்பதையறியாமல் அவர்கண்முன் எதிர்பட்டனை, இந்தக்ஷணத்திலேயே உனது உயிர் நீங்கினை.

**8. நாய னாரடி யார்கண வில்தொறும்**
**பேய னானும்பெ ருகச்சி னஞ்செய்தே**

| | |
|---|---|
| நாயனார் | எவ்வுயிர்க்கும் தலைமை பூண்டொழுகும் (எமது தலைவனது) |
| அடியார்கள் | அடித்தொண்டு புரியும் தொழும்பர்கள் |
| நவில்தொறும் | எடுத்துக் கூறியபோது |
| பேயனானும் | உலகமென்னும் பெயர்க்கு ஏதுவாயுள்ளஉயர்ந்தோர்களால் உண்டு எனக்கூறும் ஒன்றை (ஒப்பற்றபொருளை) இல்லையெனச் சொல்லும் இழிவான பேய் என்று வள்ளுவர் கூறிய பேய்க்குச் சமானமானவனும் (அஞ்ஞ வேந்தன்) |
| பெருகச் சினஞ் செய்தே | மிகுதியான கோபங் கொண்டு கூறுவான். |

எவ்வுயிர்க்கும் தலைமை பூண்டொழுகும் (எமது தலைவனது) அடித்தொண்டு புரியும் தொழும்பர்கள் எடுத்துக் கூறியபோது உலகமென்னும் பெயர்க்கு ஏதுவாயுள்ளஉயர்ந்தோர்களால் உண்டு எனக்கூறும் ஒன்றை (ஒப்பற்றபொருளை) இல்லையெனச் சொல்லும் இழிவான பேய் என்று வள்ளுவர் கூறிய பேய்க்குச் சமானமானவனும் (அஞ்ஞ வேந்தன்) மிகுதியான கோபங் கொண்டு கூறுவான்.

**9. ஞாந வேந்தன்வந் தென்னெதிர் நண்ணுற**
**லான வெல்லையிற் காணுமென் னாண்மையே**

| | |
|---|---|
| ஞான வேந்தன் | அறிஞ னென்பவன் |
| என்னெதிர் | அஞ்ஞ னாகிய எனது முன்னிலையில், |
| நண்ணுறலான வெல்லையில் | யுத்த சின்னத்தனாய் (பொருந்திய விடத்தில்) |
| என்னாண்மையைக் காணும் | அப்பொழுது (அஞ்ஞ வேந்தனான) எனது புருஷத்தன்மை (இவ்வாறுள்ளதென்று) அறிந்து கொள்ளுங்கள் என வன்மொழி கூறினான். |

அறிஞ னென்பவன் அஞ்ஞ னாகிய எனது முன்னிலையில், யுத்த சின்னத்தனாய் (பொருந்திய விடத்தில்) அப்பொழுது (அஞ்ஞ வேந்தனான) எனது புருஷத்தன்மை (இவ்வாறுள்ளதென்று) அறிந்து கொள்ளுங்கள் என வன்மொழி கூறினான்.

10. என்ற வன்மொழி யெந்தைதி ருச்செவி
சென்ற வேளைசி ரித்தருள் செய்யுமே

| | |
|---|---|
| என்றவன் மொழி | அஞ்ஞன் கூறிய இவ்வாறான கடுஞ்சொல்லானது |
| எந்தை திருச்செவி | எமது பிதாவாகிய (ஞான வேந்தரது) அழகிய அசுவதரன், கம்பனன் இவ்விருவரிசையும்,ஆரேன் அன்பு பாடலும் எப்பொழுதும் கேட்கும் காதில் |
| சென்ற வேளையில் | புகுந்த மாத்திரத்தில் |
| சிரித்தருள் செய்யுமே | புன்முறுவல் கொண்டு (ஏ! அஞ்ஞ! இது காறுமறிந்திலை) இப்பொழுதேனும் அறிவாயென கிருபை செய்தார். |

அஞ்ஞன் கூறிய இவ்வாறான கடுஞ்சொல்லானது எமது பிதாவாகிய (ஞான வேந்தரது) அழகிய அசுவதரன், கம்பனன் இவ்விருவரிசையும்,ஆரேன் அன்பு பாடலும் எப்பொழுதும் கேட்கும் காதில் புகுந்த மாத்திரத்தில் புன்முறுவல் கொண்டு (ஏ! அஞ்ஞ! இது காறுமறிந்திலை) இப்பொழுதேனும் அறிவாயென கிருபை செய்தார்.

11. உம்ப ரிம்பரு வப்பவொ ளிமிகுந்
தம்பெ ருந்தன்மை காட்டச்ச மைந்துமே

| | |
|---|---|
| உம்பர் | தேவர்களும் |
| இம்பர் | மனிதர்களும், |
| உவப்ப | உய்யும் பொருட்டு |
| ஒளி மிகுந்த | சூரியன் முதலிய அஷ்டப் பிரகாசங்களையும் விளங்கும்படி செய்து தான் மேலான சுயம்பிரகாச (விளக்க வடிவ)மாய் இருக்கும், |
| தம் பெருந்தன்மை | தானிருந்தபடியே யிருந்து தன்னிடத்தெல்லாம் தோன்றின வென்னும் (எல்லா வுயிருமின்புறுக) என கருதி |
| காட்டச் சமைந்ததுமே | சன்னிதி செய்ய (கிருபாகடாக்ஷம் அளித்து) கருணை புரிந்தார். |

தேவர்களும் மனிதர்களும், உய்யும் பொருட்டு சூரியன் முதலிய அஷ்டப் பிரகாசங்களையும் விளங்கும்படி செய்து தான் மேலான சுயம்பிரகாச (விளக்க வடிவ)மாய் இருக்கும், தானிருந்தபடியே யிருந்து தன்னிடத்தெல்லாம் தோன்றின வென்னும் (எல்லா வுயிருமின்புறுக) என கருதி சன்னிதி செய்ய (கிருபாகடாக்ஷம் அளித்து) கருணை புரிந்தார்.

12. பழுதுப டாமறை வானுளோர்

**பண்டை யொர் மூவர்க ளின்றுகா**
**றழுதுபெ றாவடி யஞ்ஞன்மே**
**லாகவி சைந்தன ணண்ணலே**

| | |
|---|---|
| பழுதுபடாமறை | மதவாதிகளால் வேறு வேறான பொருள் கூறினும், தன்னிலையில் மாறுபாடு இன்றி (ஒன்றே பொருளென்று கூறி) மலைபோல் நிலைத்து குற்றமற்று விளங்கும் இருக்காதி நான்கு வேதங்களும் |
| வானுளோர் | அமிர்தபானமுண்டு அதனால் ஜனன மரணாதியற்ற தேவர்களும் |
| பண்டையொர் மூவர்களும் | பழமையாகிய சிருஷ்டி திதி சம்காரம் என்னும் முத்தொழில் செய்யும் பிரம்மா விஷ்ணு ருத்திரனென்னும் மும்மூர்த்திகளும் |
| இன்று காறும் | உலகம் முதல் தோற்றம் (பிரதம சிருஷ்டி) முதல் இதுநாள் பரியந்தம் (இன்றை வரையும்) |
| அழுது பெறாவடி | கீழும் மேலுமாய் ஓடியும் தேடியும் கணுருதுகலுளந்தும்(ரோதனம் செய்தும்) ஓலமிட்டும் அறியாத திவ்ய மங்கள திருவடியானது |
| அஞ்ஞன் மேலாக | அஞ்ஞ வேந்தனுக்கு அனுக்கிரகம் செய்யும் பொருட்டு |
| அண்ணல் இசைந்தனன் | ஞான வேந்தனெனும் (எமது குருமூர்த்தியாகிய ஸ்ரீ சொரூபானந்தர்) பரமேஸ்வரர் பொருந்தினார். |

மதவாதிகளால் வேறு வேறான பொருள் கூறினும், தன்னிலையில் மாறுபாடு இன்றி (ஒன்றே பொருளென்று கூறி) மலைபோல் நிலைத்து குற்றமற்று விளங்கும் இருக்காதி நான்கு வேதங்களும் அமிர்தபானமுண்டு அதனால் ஜனன மரணாதியற்ற தேவர்களும் பழமையாகிய சிருஷ்டி திதி சம்காரம் என்னும் முத்தொழில் செய்யும் பிரம்மா விஷ்ணு ருத்திரனென்னும் மும்மூர்த்திகளும் உலகம் முதல் தோற்றம் (பிரதம சிருஷ்டி) முதல் இதுநாள் பரியந்தம் (இன்றை வரையும்) கீழும் மேலுமாய் ஓடியும் தேடியும் கணுருதுகலுளந்தும்(ரோதனம் செய்தும்) ஓலமிட்டும் அறியாத திவ்ய மங்கள திருவடியானது அஞ்ஞ வேந்தனுக்கு அனுக்கிரகம் செய்யும் பொருட்டு ஞான வேந்தனெனும் (எமது குருமூர்த்தியாகிய ஸ்ரீ சொரூபானந்தர்) பரமேஸ்வரர் பொருந்தினார்.

**13. வெருவரு நான்முக னாதியாம்**
**விண்ணவர் மண்ணுளர் வேறுவோ**
**ரொருவர்பெ றாவடி வுணர்விலா**
**னுச்சியின் மீதுமு தைத்ததே**

| | |
|---|---|
| வெருவரு நான்முகனாதியாம் | பயப்படத்தக்க கடவுளராகி சதுர்முகன், சாரங்கபாணி, சங்கரன் முதலான |
| விண்ணவர் | தேவர்களும் |
| மண்ணுளர் | மனிதர்களும் |

| | |
|---|---|
| வேறுளோர் | இவர்கட்கு வேறான கந்தர்வர் முதலிய மற்றவர்களும் |
| ஒருவர் பெறாவடி | மற்றைய யாவர்களாலும் பெறுதற்கரிய சகல ஐஸ்வரியங்களையும் தரத்தக்கவல்ல பாத கமலங்களை |
| வுணர்விலான் | யாதொரு விவேகமுமற்ற (அஞ்ஞ வேந்தனது) |
| உச்சியின் மீது | சிரசின் கண்ணே |
| உதைத்தது | பொருந்தியது (அரிதினுமரிதாம்) |

பயப்படத்தக்க கடவுளராகி சதுர்முகன், சாரங்கபாணி, சங்கரன் முதலான தேவர்களும் மனிதர்களும் இவர்கட்கு வேறான கந்தர்வர் முதலிய மற்றவர்களும் மற்றைய யாவர்களாலும் பெறுதற்கரிய சகல ஐஸ்வரியங்களையும் தரத்தக்கவல்ல பாத கமலங்களை யாதொரு விவேகமுமற்ற (அஞ்ஞ வேந்தனது) சிரசின் கண்ணே பொருந்தியது (அரிதினுமரிதாம்)

**14. தென்றிசை யின்றுயர் தீர்த்ததாள்**
**செய்தரு ளும்படிதெரியுமோ**
**வின்றிசை கின்றன வல்லவோ**
**வித்தலை மீதுமி ருக்கவே**

| | |
|---|---|
| தென் திசையின் உயிர் தீர்த்த தாள் | தெற்கு திசையில் வசிக்கும் யமனால் உண்டாகிய துன்பத்தை (மார்க்கண்டேயர் முதலிய முனிபுங்கவர்களுக்கு ) போக்கிய திவ்ய திருவடியானது |
| செய்தருளும்படி தெரியுமோ | இன்னாளில் இன்னவருக்கு அருள் செய்ய வல்லது என்பதையாம் அறியக்கூடுமோ ? (கூடாவென்பது உண்மையேயாகும்) |
| இத்தலை மீதும் | அந்த சர்வ ஜீவர்களையும் துன்புறுத்துகின்ற அறியாமை என்னும் அஞ்ஞனது சிரசின் கண்ணும் |
| இருக்க | பொருத்தி அனுக்கிரகஞ் செய்ய |
| இன்று | இக்காலத்தில் |
| இசைகின்றனவல்லவோ | இப்பொழுது சம்மதிக்கின்றது. (பொருந்துவதனால் ) பக்குவ அபக்குவங்கள் அறிந்து அனுக்கிரகஞ் செய்யுந் திருவடியின் பெருமையை யறிய மாட்டோம் என்பதாம். |

தெற்கு திசையில் வசிக்கும் யமனால் உண்டாகிய துன்பத்தை (மார்க்கண்டேயர் முதலிய முனிபுங்கவர்களுக்கு ) போக்கிய திவ்ய திருவடியானது இன்னாளில் இன்னவருக்கு அருள் செய்ய வல்லது என்பதையாம் அறியக்கூடுமோ ? (கூடாவென்பது உண்மையேயாகும்) அந்த சர்வ ஜீவர்களையும் துன்புறுத்துகின்ற அறியாமை என்னும் அஞ்ஞனது சிரசின் கண்ணும் பொருத்தி அனுக்கிரகஞ் செய்ய இக்காலத்தில்

இப்பொழுது சம்மதிக்கின்றது. (பொருந்துவதனால் ) பக்குவ அபக்குவங்கள் அறிந்து அனுக்கிரகஞ் செய்யுந் திருவடியின் பெருமையை யறிய மாட்டோம் என்பதாம்.

**15. பெரியவர் தஞ்செய லாவதும்**
**பிறரறி வாலறி வோமெனத்**
**தெரியும தன்றது தெரிவதுஞ்**
**செய்துமு டிந்திடு திசையிலே**

| | |
|---|---|
| பெரியவர் தஞ் செயலாவதும் | சர்வ காலமுங் சரீரத்தில் நானென்னும் புத்தி நீங்கியிருக்கும் பெரியோர்கள் (மகாத்மாக்களது) செய்கை (நித்ய நைமித்திக கர்மங்களானது) |
| பிறரறிவாலறிவோமென | அந்நியர்கள் புத்தியினாலறியலாமென்பது (கூடாதது) |
| தெரியும் அது அன்று அது | அறிந்து கொள்ளக் கூடாததும் அல்லவது. |
| தெரிவதும் | அவ்வாறு அறிந்து கொள்வதும் |
| முடிந்திடு திசையிலே | கிருத கிருத்யன் என்றபடி பண்ண வேண்டுவ பண்ணி விடுத்து (நிர்விகாரியாயிருப்பர்) என்பதாம். |

சர்வ காலமுங் சரீரத்தில் நானென்னும் புத்தி நீங்கியிருக்கும் பெரியோர்கள் (மகாத்மாக்களது) செய்கை (நித்ய நைமித்திக கர்மங்களானது) அந்நியர்கள் புத்தியினாலறியலாமென்பது (கூடாதது) அறிந்து கொள்ளக் கூடாததும் அல்லவது. அவ்வாறு அறிந்து கொள்வதும் கிருத கிருத்யன் என்றபடி பண்ண வேண்டுவ பண்ணி விடுத்து (நிர்விகாரியாயிருப்பர்) என்பதாம்.

**16. செறித ரும்பிறவி முறிய**
**வந்தி றைவர் திருவி ளங்குகழ லருளுநா**
**ளறிஞ ரென்றுமில ரவல ரென்றுமில**
**ரவர்சு தந்தரம தடையவே**

| | |
|---|---|
| செறிதரும் பிறவி முறிய | துன்பத்தோடு தொடர்ந்து வருகின்ற பிறப்பு நீங்க |
| இறைவர் | குரு மூர்த்தியானவர் |
| வந்து | எழுந்தருளிச்செய்து |
| திருவிளங்கழல் | சகல ஐஸ்வரியங்களும் தரத்தக்க லக்ஷ்மி கடாக்ஷமான வீரகண்டாமணி தரித்த அழகிய திருவடி |
| அருளு நாள் | கிருபை செய்யுங் காலத்தில் |
| அறிஞரென்றுமிலா அவலா என்றுமிலர் | விவேகி அவிவேகி என்பதில்லை. உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்பதுமிலை. பாவி புண்ணியவானென்பதும் அபக்குவர் |

| | |
|---|---|
| | பக்குவர் என்பது இல்லை. |
| அவர் சுதந்திரம் அது அடையவே | அவரவர்கட்கும் பரதந்திரத்தினீங்கி (அந்நியர் ஆட்சி கட்டுப்பட்டில்லாது விலகி) அனைவரும் தனது யதார்த்த அனுபவம் (ஆத்மானுபவம்) பெற்று சுகியாய் சதா ஆனந்தராய் வாழ்வார்களென்பதாம். |

துன்பத்தோடு தொடர்ந்து வருகின்ற பிறப்பு நீங்க குரு மூர்த்தியானவர் எழுந்தருளிச்செய்து சகல ஐஸ்வரியங்களும் தரத்தக்க லக்ஷ்மி கடாக்ஷமான வீரகண்டாமணி தரித்த அழகிய திருவடி கிருபை செய்யுங் காலத்தில் விவேகி அவிவேகி என்பதில்லை. உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்பதுமிலை. பாவி புண்ணியவானென்பதும் அபக்குவர் பக்குவர் என்பது இல்லை. அவரவர்கட்கும் பரதந்திரத்தினீங்கி (அந்நியர் ஆட்சி கட்டுப்பட்டில்லாது விலகி) அனைவரும் தனது யதார்த்த அனுபவம் (ஆத்மானுபவம்) பெற்று சுகியாய் சதா ஆனந்தராய் வாழ்வார்களென்பதாம்.

**17. பிறிவி லாதகுரு பரம னார்தமருள்**
**பெருக வேயுடைய திருவினா**
**னறிவி லானுடனிவ் வகில மாயையுயி**
**ரடைய நூறும்வகை யறைகுவாம்.**

| | |
|---|---|
| பிறிவிலாத | சர்வ சீவர்களிடத்திலும் அறிவுக்கறிவாய் விளங்கும் |
| குருபரனார்தம் | பரமகுரு ஸ்ரீ சிவப்பிரகாச ஞான தேசிகருடைய |
| அருள் | அருளை |
| பெருகவே உடைய திருவினான் | நிரம்பப்பெற்ற நமது குருமூர்த்தியாகிய ஸ்ரீசொரூபானந்தரென்னும் ஞான வேந்தன் |
| அறிவிலான் உடன் | அனைத்து உயிர்களையும் துன்புறுத்தும் அறியாமையென்னும் (அஞ்ஞ வேந்தனுடன்) |
| இவ்வகில மாயை உயிர் | ஜகத்துவம், இவற்றிற்கேதுவான மாயையும்,, சீவத்துவமும், |
| அடைய நூறும் வகை | மாயை அழியும்படிசெய்த தன்மையை |
| அறைகுவாம் | கூறுவாறாயினர். |

சர்வ ஜீவர்களிடத்தும் நீக்கமற நிறைந்திருக்கும் பரம குருவாகி, ஸ்ரீசிவப் பிரகாச ஞான தேசிகரது கிருபையை நிரம்ப பெற்ற ஸ்ரீசொரூபானந்தராகிய (ஞான வேந்தன்) அஞ்ஞனென்னும் அறியாமையையும் ஜகத்தும் இவற்றிற்கேதுவான மாயையும், ஜீவத்துவமும் அனைத்தையும் அழிக்குந்தன்மையை அருளிச் செய்வாம் (சர்வ மாயையும் அழியும்) என்பதாம்.

சர்வ சீவர்களிடத்திலும் அறிவுக்கறிவாய் விளங்கும் பரமகுரு ஸ்ரீ சிவப்பிரகாச ஞான தேசிகருடைய அருளை நிரம்பப்பெற்ற நமது குருமூர்த்தியாகிய

ஸ்ரீசொரூபானந்தரென்னும் ஞான வேந்தன் அனைத்து உயிர்களையும் துன்புறுத்தும் அறியாமையென்னும் (அஞ்ஞ வேந்தனுடன்) மாயை அழியும்படிசெய்த தன்மையை கூறுவாறாயினர்)

சர்வ ஜீவர்களிடத்தும் நீக்கமற நிறைந்திருக்கும் பரம குருவாகி, ஸ்ரீசிவப் பிரகாச ஞான தேசிகரது கிருபையை நிரம்ப பெற்ற ஸ்ரீசொரூபானந்தராகிய (ஞான வேந்தன்) அஞ்ஞனென்னும் அறியாமையையும் ஜகத்தும் இவற்றிற்கேதுவான மாயையும், ஜீவத்துவமும் அனைத்தையும் அழிக்குந்தன்மையை அருளிச் செய்வாம் (சர்வ மாயையும் அழியும்) என்பதாம்.

**18. சலிக்குமநத் தெழுச்சியறத் தவிர்த்திதம் விட்டகத்தே**
**சிலுத்தெழுமத் துடிப்புமறத் திரித்தடையக் கெடுத்தே**

(சர்விகல்ப நிர்விகல்ப சமாதி அவஸ்தைகளும், அதன் நிலைகளும் அதனால் அஞ்ஞான நீக்கமும் அருளிச்செய்து பின் திட அபரோக்ஷ ஆன்மானுபவ நிலை கூறல்.)

| | |
|---|---|
| சலிக்கு மனத்து | வாசனையால் விஷய முன்னிலையாய மனத்தினது |
| எழுச்சியறா | சங்கல்ப நீங்க |
| இதம் விட்டு தவிர்த்து | இது எனது என்னும் விருத்தியை நீக்கி |
| அகத்தே | உள்ளத்தின் கண்ணே |
| சிலுத்தெழும் | நீண்டெழுகின்ற |
| அத்துடிப்பும் அற | அந்த வேகமும் நீங்க |
| அடைய திரித்து கெடுத்து | மேற்கூறிய மனத்தினில் யனைத்தும் மாறுபடுத்தி ஒழியச் செய்து |

வாசனையால் விஷய முன்னிலையாய மனத்தினது சங்கல்ப நீங்க இது எனது என்னும் விருத்தியை நீக்கி உள்ளத்தின் கண்ணே நீண்டெழுகின்ற அந்த வேகமும் நீங்க மேற்கூறிய மனத்தினில் யனைத்தும் மாறுபடுத்தி ஒழியச் செய்து

**19. குறித்திடலற் றிடத்ததனைக் குறிப்பவரைக் கெடுத்தே**
**கறுத்தவிருட் டனைக்கதுவக் கரித்தனைவிட் டழித்தே**

| | |
|---|---|
| குறித்திடலற்றிடத்து | சுட்டு நீங்கியிருந்து |
| அதனைக் குறிப்பவரைக் கெடுத்து | விசுவதைசதனை நீக்கி |
| கறுத்த விருள் தனை கதுவக் | ஞான அஞ்ஞானம்(அறிவு அறியாமை) அனைத்தையும் பிராணனை வாங்கும்படி |
| கரித்தனை விட்டழித்து | சாக்ஷி விருத்தியினால் அழியும்படி செய்து |

சுட்டு நீங்கியிருந்து விசுவதைசதனை நீக்கி ஞான அஞ்ஞானம்(அறிவு அறியாமை) அனைத்தையும் பிராணனை வாங்கும்படி சாக்ஷி விருத்தியினால் அழியும்படி செய்து

**20. குறித்தல்குறிப் பிறத்தலெனிக் குறிப்பழியக் குலைத்தே**
**மறித்தவிடத் ததிற்பரிசித் தகத்தெனல்மற் றொழித்தே**

| | |
|---|---|
| குறித்தல் குறிப் பிறத்தலென | சகல கேவலம் எனச் சொல்லும் |
| இக் குறிப்பழியக் குலைத்து | இந்த சுட்டுஞானம் அழியும்படி நீக்கி |
| மறித்த விடத்து | மீண்ட நிலையில் |
| அதில் | அந்த வஸ்துவில் |
| பரிசித்து அகத்தெனல் மற்றொழித்து | சர்வசாக்ஷி நாமென்பதும் நீங்க |

சகல கேவலம் எனச் சொல்லும் இந்த சுட்டுஞானம் அழியும்படி நீக்கி மீண்ட நிலையில் அந்த வஸ்துவில் சர்வசாக்ஷி நாமென்பதும் நீங்க

**21. தனிச்சுடரிச் சகத்தொளிரத் தனைக்கெடவக் கணத்தே**
**பனித்திவலைத் தடிப்பொழியப் பரச்சுடர்விட் டழித்தே**

| | |
|---|---|
| ஒளித் தனிச் சுடர் | பிரத்தியக்குக்கு (அந்தர் ஆத்மாவிற்கு) வேறாக ஒளி, |
| பரச்சுடர் | சொப்பனம், |
| அத்தனையும் விட்டு பனித் திவலைத் தடிப்பு | சாக்ஷியைக் கொண்டு தாமரைத்தண்டு போன்ற சிறிய வாசனை, |
| இச் சகத்து அக் கணத்தே கெட | இவ்வுலகம் அந்நிமிடத்து நீங்க |
| ஒழிய அழித்து | நீங்கி ஒழித்துவிட வேண்டு மென்பதாம். |

பிரத்தியக்குக்கு (அந்தர் ஆத்மாவிற்கு) வேறாக ஒளி, சொப்பனம், சாக்ஷியைக் கொண்டு தாமரைத்தண்டு போன்ற சிறிய வாசனை, இவ்வுலகம் அந்நிமிடத்து நீங்க நீங்கி ஒழித்துவிட வேண்டு மென்பதாம்.

**22. ஒருக்கிவிரித் ததிற்சுழல்வுற் றழற்றுமிருட் டனைப்பே**
**ரருக்கனுதித் தலக்கணறுத் ததிற்பிரபையிட் டழித்தே**

| | |
|---|---|
| பிரபை அதில் | சுயம் பிரகாச ஆத்மாவில் |
| அலக்கணறுத்து | வாசனையை கெடுத்து |

| | |
|---|---|
| அழித்து | அழியும்படி செய்து |
| ஒடுக்கி | பிரளயத்தில் (சர்வ சம்மார காலத்தில்) ஒடுக்கி |
| விரித்து | (தன்னுள் கரந்தும்) சிருஷ்டியில் தோற்றுவித்தும் |
| அதில் சுழல் வுற்று | அவற்றில் சுற்றி |
| உழற்றும் | துன்புறுத்தும் |
| இருள்தனை | அவித்தையாம் இருளை |
| அருக்கனுதித்து | சதோதயமான சொரூப சூரியன் தோன்றி (இருளை நீக்க வேண்டும்) என்பனவாம். |

சுயம் பிரகாச ஆத்மாவில் வாசனையை கெடுத்து அழியும்படி செய்து பிரளயத்தில் (சர்வ சம்மார காலத்தில்) ஒடுக்கி (தன்னுள் கரந்தும்) சிருஷ்டியில் தோற்றுவித்தும் அவற்றில் சுற்றி துன்புறுத்தும் அவித்தையாம் இருளை சதோதயமான சொரூப சூரியன் தோன்றி (இருளை நீக்க வேண்டும்) என்பனவாம்.

**23. செகத்தொழியத் திரித்தவிடத் தெளிர்ச்சியுறச் சிதைத்தே**
**விகற்பமறத் தனிச்சுடர்விட் டெரித்தயர்வைக் கெடுத்தே**

| | |
|---|---|
| செகத்தொழிய | உலகம் தோன்றாமல் (நாமரூப) போன நிலையில் |
| திரித்தவிடத்து | மாறுபட்டுப் போயினவிடத்தில் |
| எளிர்ச்சியற | நினைவு ஒழிய |
| விகற்பமற | மறதியும் நீங்க |
| தனிச்சுடர் | சுயம் பிரகாசத்தால் |
| அயர்வை | சுழுத்தியையும் |
| விட்டெரித்து | கொண்டு நீங்கும்படி |
| சிதைத்து | (அவ்விருளை தகித்து) ஓடச் செய்து |
| கெடுத்தே | ஒழிப்பாம். |

உலகம் தோன்றாமல் (நாமரூப) போன நிலையில் மாறுபட்டுப் போயினவிடத்தில் நினைவு ஒழிய மறதியும் நீங்க சுயம் பிரகாசத்தால் சுழுத்தியையும் கொண்டு நீங்கும்படி (அவ்விருளை தகித்து) ஓடச் செய்து ஒழிப்பாம்.

**24. கலுழ்ச்சிகளிப் பகத்தெளிவுட் கலக்கமிகுத் திகத்தே**
**செலுத்தல்திரித் தலற்றறடையச் சிவச்சுடர்விட் டெரித்தே**

| | |
|---|---|
| கலுழ்ச்சி | துன்பமும் |
| களிப்பு | இன்பமும், |
| அகத்தெளிவு | உள்ளத்தின் விளக்கம். |

| | |
|---|---|
| ஷட்கலக்க மிகுத்து | மனத்தெளிவின்றி (கலங்கியவிடத்து) |
| செலுத்தல் திரிதலற்று | உலக விஷயாதிகளில் சென்று மீளுதலின்றி |
| அடைய | முழுதையும் (அனைத்தையும்) |
| சிவச் சுடர் விட்டெரித்து | சுயம் பிரகாச சைதன்னியத்தால் அழியும்படி செய்து எனவும் |

துன்பமும் இன்பமும், உள்ளத்தின் விளக்கம். மனத்தெளிவின்றி (கலங்கியவிடத்து) உலக விஷயாதிகளில் சென்று மீளுதலின்றி முழுதையும் (அனைத்தையும்) சுயம் பிரகாச சைதன்னியத்தால் அழியும்படி செய்து எனவும்

**25. தனிற்பிறிதற் றிருக்குமருட் டனிச்சுடர்தற் பதத்தே**
**யினிப்பிறிதற் றிருக்கவிசைத் திடுக்கணறுத் துவிட்டே**

| | |
|---|---|
| தனிற் பிறிதற்றிருக்கும் | தனக்கு வேறாக இல்லாமல் (தானாகவே இருக்கின்ற) |
| தனி | ஒப்பற்ற, |
| அருட் சுடர் | திருவருட்பிரகாசம் (சிவப் பிரகாசம்) |
| தற்பதத்தே | மேற்கூறிய துவம்பத லக்ஷியம் தத்பத லக்ஷியத்தில் |
| இனிப் பிறிதற்று இருக்க விசைத்து | மேலும் வேறற்று (துவம்பத லக்ஷியமும் தத்பத லக்ஷியமும் வேறற்று) விளங்கும்படிசெய்து |
| இடுக்கணறுத்துவிட்டு | சோகம் நீங்கி (நிரங்குச திருப்த்தனாய்) யிருப்பன் என்பனவாம். |

தனக்கு வேறாக இல்லாமல் (தானாகவே இருக்கின்ற) ஒப்பற்ற, திருவருட்பிரகாசம் (சிவப் பிரகாசம்) மேற்கூறிய துவம்பத லக்ஷியம் தத்பத லக்ஷியத்தில் மேலும் வேறற்று (துவம்பத லக்ஷியமும் தத்பத லக்ஷியமும் வேறற்று) விளங்கும்படிசெய்து சோகம் நீங்கி (நிரங்குச திருப்த்தனாய்) யிருப்பன் என்பனவாம்.

**26. சகப்புரணத் தடிப்படையச் சமித்திடலுற் றிடத்தே**
**சுகத்தெளிவிற் சிவப்பிரபையிற் களிப்பதனைத் தொலைத்தே**

| | |
|---|---|
| சகப் புரணத் தடிப்பு | உலக நாம ரூப விளக்க வடிவ மனோ விருத்தி |
| அடையச் சமித்திடலுள்றிடத்து | அனைத்தும் ஒழிந்த விடத்தில் |
| தெளிவில் | தெளிந்த |
| சுகத்து | ஆனந்தத்தில் |
| சிவப்பிரபையில் | சிவப்பிரகாசத்தில் (சிவ ஜோதியில்) |
| களிப்பதனைத் தொலைத்து | மேற்கூறிய சிவப்பிரகாசத்தில் களி மிகுந்திருக்கும் நிலைமையையும் கடந்து மேற்செல்லல். |

உலக நாம ரூப விளக்க வடிவ மனோ விருத்தி அனைத்தும் ஒழிந்த விடத்தில் தெளிந்த ஆனந்தத்தில் சிவப்பிரகாசத்தில் (சிவ ஜோதியில்) மேற்கூறிய சிவப்பிரகாசத்தில் களி மிகுந்திருக்கும் நிலைமையையும் கடந்து மேற்செல்லல்.

**27. காயா திகளேழு மாயா விடயத்தே**
**கையற் றறிவின்கா ரணமா திகளேழும்**
**மாயா விடயத்தே மாயச் சுகசற்சின்**
**மயபூ ரணமேதன் வடிவா னதுவந்தே**

| | |
|---|---|
| ஆயாவிடயத்து | ஆராய்ந்து (விவேகமாக விசாரித்து) பார்க்காத போது |
| காயாதிகளேழும் | ஜீவ சப்தாவஸ்தைகளென்னும் தூலதேகம் இந்திரியம், பிராணன், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆக ஏழும் (ஏழு நிலைகளும்) |
| கையற்று | துவம்பத சோதனையால் நீங்கி |
| அறிவின் காரணமாதிகள் ஏழும் | ஈஸ்வர சப்தாவஸ்தைகளென்ற சர்வஞ்ஞன், சர்வேஸ்வரன், சர்வஅந்தர்யாமி, சர்வ காரணன், சர்வ சிருஷ்டர், சர்வ திதியுடையோன், சர்வ சம்மாரன் ஆக ஏழும் |
| மாயா விடயத்தே மாய | தத்பத சோதனையால் யாதென்று விசாரித்த மாத்திரத்தில் இல்லாமல் போகின்றதோ (அந்த மாயையுடன் அழிந்தபோது) |
| சுகசற்சின்மய | (அசிபதார்த்தரூப) சச்சிதானந்த வடிவ |
| பூரணமே | எங்கும் நிறைந்த பரிபூரணமான பிரம்மமே |
| தன்வடிவானது வந்து | தனது யதார்த்த வடிவ ஆன்ம சொரூபமாக விளங்கும். |

ஆராய்ந்து (விவேகமாக விசாரித்து) பார்க்காத போது ஜீவ சப்தாவஸ்தைகளென்னும் தூலதேகம் இந்திரியம், பிராணன், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆக ஏழும் (ஏழு நிலைகளும்) துவம்பத சோதனையால் நீங்கி ஈஸ்வர சப்தாவஸ்தைகளென்ற சர்வஞ்ஞன், சர்வேஸ்வரன், சர்வஅந்தர்யாமி, சர்வ காரணன், சர்வ சிருஷ்டர், சர்வ திதியுடையோன், சர்வ சம்மாரன் ஆக ஏழும் தத்பத சோதனையால் யாதென்று விசாரித்த மாத்திரத்தில் இல்லாமல் போகின்றதோ (அந்த மாயையுடன் அழிந்தபோது) (அசிபதார்த்தரூப) சச்சிதானந்த வடிவ எங்கும் நிறைந்த பரிபூரணமான பிரம்மமே தனது யதார்த்த வடிவ ஆன்ம சொரூபமாக விளங்கும்.

**28. கோதற் றமிர்தாகிக் கூறற் றுணர்வாகிக்**
**கூறற் கரிதாகிக் கோசப் புலன்மாறித்**
**தீதற் றவர்காணத் தேனொத் தினிதாகித்**
**தேசத் திசைமாறித் தேறித் தெளிவாயே**

| | |
|---|---|
| கோதற்று அமிர்தமாகி | மாயை மாயா காரியமாகிய குற்றமற்ற பேரின்பமாய் (சாவா மருந்தாகவும்) |
| கூறு அற்று | வேறுபாடு நீங்கி (தனக்கு வேறாகாமல்) |
| உணர்வாகி | தனது யதார்த்தமான (அறிவு) சொரூபமாகவும், |
| கூறற்கு அரிதாகி | இவ்வறென யியம்புவதற்கு அரிதாகியும் |
| கோசப்புலன்மாறி | பஞ்ச கோச மய (ஐந்து உறைகளென்னும்) சரீரத்தில் உள்ள சப்தாதி பஞ்ச விஷயங்களும் நீங்கி (மனம் அந்தர் முகமாகத் திரும்பி) |
| தீது அற்றவர் காண | மும்மலங்கள் (பஞ்ச கிலேச முதலிய ) குற்றமற்றவர்அறிவதாயும், |
| தேனொத்து இனிதாகி | மிக்க மதுரமாயும் (தேனைப்போல் சரீரத்தை நிர்விகற்ப சமாதியில் காப்பதும் ஆன) . |
| தேசத் திசை மாறி | அவர்கள் நிலை திக்கு திசைகள் மறந்து |
| தேறித் தெளிவாயே | ஐயம் நீங்கியவராய் (நானே அதுவென்று– அஹம் பிரம்மாஸ்மி) என்னும் ஸ்ருதி ஞானமும் மறைந்த சத்தானநுவித்த நிருவிகற்ப சமாதியில் இருப்பார்கள் என்பதாம். |

மாயை மாயா காரியமாகிய குற்றமற்ற பேரின்பமாய் (சாவா மருந்தாகவும்) வேறுபாடு நீங்கி (தனக்கு வேறாகாமல்) தனது யதார்த்தமான (அறிவு) சொரூபமாகவும், இவ்வறென யியம்புவதற்கு அரிதாகியும் பஞ்ச கோச மய (ஐந்து உறைகளென்னும்) சரீரத்தில் உள்ள சப்தாதி பஞ்ச விஷயங்களும் நீங்கி (மனம் அந்தர் முகமாகத் திரும்பி) மும்மலங்கள் (பஞ்ச கிலேச முதலிய ) குற்றமற்றவர்அறிவதாயும், மிக்க மதுரமாயும் (தேனைப்போல் சரீரத்தை நிர்விகற்ப சமாதியில் காப்பதும் ஆன) . அவர்கள் நிலை திக்கு திசைகள் மறந்து ஐயம் நீங்கியவராய் (நானே அதுவென்று– அஹம் பிரம்மாஸ்மி) என்னும் ஸ்ருதி ஞானமும் மறைந்த சத்தானநுவித்த நிருவிகற்ப சமாதியில் இருப்பார்கள் என்பதாம்.

**29. எம்பிரானை வந்தெ திர்ந்தி றந்த வஞ்ஞ னிங்குறா**
**னும்பர் வானு றாதி றாம லொன்றி னானவ் வொளியொடே**

| | |
|---|---|
| எம்பிரானை | ஞான வேந்தனை |
| வந்து எதிர்ந்து | எதிரில்பொருந்தி |
| இறந்தவஞ்ஞன் | மடிந்த (அறியாமையென்னும்) அஞ்ஞ வேந்தன் |
| இங்குறான் | இப்பூமியின்கண் வீழ்ந்திலன். |
| உம்பர் வான் | விண்ணுலகும் |
| உறா | செல்லவில்லை (அடையவில்லை). |
| இறாமல் | தனக்கென்று ஒரு வடிவமும் இன்றி |
| ஒன்றினான்அவ் வொளியோடே | அந்த ஒப்பற்ற சுயம்பிரகாச சோதி சொரூபத்தில் மறைந்தான் (அந்தர்த்தானமாயினான்) |

ஞான வேந்தனை எதிரில்பொருந்தி மடிந்த (அறியாமையென்னும்) அஞ்ஞ வேந்தன் இப்பூமியின்கண் வீழ்ந்திலன். விண்ணுலகும் செல்லவில்லை (அடையவில்லை). தனக்கென்று ஒரு வடிவமும் இன்றி அந்த ஒப்பற்ற சுயம்பிரகாச சோதி சொரூபத்தில் மறைந்தான் (அந்தர்த்தானமாயினான்)

**30. அல்ல லான காம ராச னாதி யான சேனையு**
**மில்ல வாகி ஞாந ரூப மாகி யேயி லங்குமே**

| | |
|---|---|
| அல்லலான | சர்வ ஜீவர்களுக்கும் துன்பத்தைத் தரக் கூடிய |
| காமராசன் | மதனராஜா |
| ஆதிசேனையும் | முதலிய சகல சேனாசையின்னியங்களும் |
| இல்லவாகி | பெயர்கூட சொல்வதற்கு இல்லாமல் |
| ஞானரூபமாகியே இலங்கும் | தனது யதார்த்த ஆன்ம வடிவமாகவே (தேகத்தில் தான் என்ற புத்தி நீங்கி) விளங்கினார்கள்.(தேகத்துக்கு வேறான ) அறிவு மயமாய் இருந்தனர் என்பதாம். |

சர்வ ஜீவர்களுக்கும் துன்பத்தைத் தரக் கூடிய மதனராஜா முதலிய சகல சேனாசையின்னியங்களும் பெயர்கூட சொல்வதற்கு இல்லாமல் தனது யதார்த்த ஆன்ம வடிவமாகவே (தேகத்தில் தான் என்ற புத்தி நீங்கி) விளங்கினார்கள்.(தேகத்துக்கு வேறான ) அறிவு மயமாய் இருந்தனர் என்பதாம்.

**31. அறிவறி யாமைய ழிந்தனரே**
**யறிவறி யாமைய ழிந்தனரே**

| | |
|---|---|
| அறிவு | தனதான்மாவிலுள்ள |
| அறியாமை | அஞ்ஞானத்தை |
| அழிந்தனர் | கெடுத்தார்கள். |
| அறிவு அறியாமை அழிந்தனர் | அறிவேம், அறியேம் எனும் ஞாத அஞ்ஞாத மற்றனர். சகல கேவலம் நீங்கினர். (துரியாவஸ்தையிலிருந்தனர்) என்பதாம். |

தனதான்மாவிலுள்ள அஞ்ஞானத்தை கெடுத்தார்கள்.அறிவேம், அறியேம் எனும் ஞாத அஞ்ஞாத மற்றனர். சகல கேவலம் நீங்கினர். (துரியாவஸ்தையிலிருந்தனர்) என்பதாம்.

**32. பிறிவறி யாமைபி றழ்ந்தனரே**
**பிறிவறி யாமைபி றழ்ந்தனரே**

| | |
|---|---|
| பறிவறியாமை | சிற்சட விவேகமின்மை |
| பிறழ்ந்தனரே | (நீங்கி) விளங்கினார்கள் (தன்னையும் பிறவற்றையும் அறியாதது சடம்) அது நீங்கினர். (சுத்த சைதன்ய வடிவமாயினார்கள் என்பதாம். |
| பிறிவறியாமை பிறழ்ந்தனர் | தனக்கு வேறாக ஒன்றையும் காணாமல் நீங்கி (அறிந்து) சகத்போதம் இன்றி விளங்கினார்.(தன்மயமாக பிரகாசித்தனர்) என்பதாம். |

சிற்சட விவேகமின்மை (நீங்கி) விளங்கினார்கள் (தன்னையும் பிறவற்றையும் அறியாதது சடம்) அது நீங்கினர். (சுத்த சைதன்ய வடிவமாயினார்கள் என்பதாம். தனக்கு வேறாக ஒன்றையும் காணாமல் நீங்கி (அறிந்து) சகத்போதம் இன்றி விளங்கினார்.(தன்மயமாக பிரகாசித்தனர்) என்பதாம்.

**33. கரக்குமு ளத்தவ ராயினரே**
**கரக்குமு ளத்தவ ராயினரே**

| | |
|---|---|
| கரக்கும் | கபடம் நீங்கி (தனது சொரூபத்தில்) |
| உளத்தவராயினரே | மறைந்த உள்ளமுடையவர்கள் ஆனார்கள். |
| கரக்குமுளத்தவராயினர் | நிரோதம் செய்யப்பட்ட மனத்தையுடைய தவச் செல்வராக இருக்கின்றார்கள் என்பதாம். |

கபடம் நீங்கி (தனது சொரூபத்தில்) மறைந்த உள்ளமுடையவர்கள் ஆனார்கள். நிரோதம் செய்யப்பட்ட மனத்தையுடைய தவச் செல்வராக இருக்கின்றார்கள் என்பதாம்.

**34. இருக்கமு டிந்தவ ருட்பொருளே**
**யிருக்கமு டிந்தவ ருட்பொருளே**

| | |
|---|---|
| இருக் | ருக் வேதத்தின்கண்ணே |
| முடிந்த | சித்தாந்தமான |
| அருட்பொருளே | அருளான பெரும்பொருள் |
| யிருக்க | சதாகாலமும் சிவமாகயிருக்க |
| முடிந்தவர் | சித்தித்தவர்களது |
| உட்பொருள் | ஆன்மாவாம் அசம்பிரஞ்ஞாதி சமாதியிலிருப்பவர். ஆன்மப் பொருள், நாம் என இருந்தார்.(ஏ அசை) |

ருக் வேதத்தின்கண்ணே சித்தாந்தமான அருளான பெரும்பொருள் சதாகாலமும் சிவமாகயிருக்க சித்தித்தவர்களது ஆன்மாவாம் அசம்பிரஞ்ஞாதி சமாதியிலிருப்பவர். ஆன்மப் பொருள், நாம் என இருந்தார்.(ஏ அசை)

**35. அழிந்தற மாயையி ருட்டெலா**
**மறிவுரு வாகநம் மண்ணலார்**
**மொழிந்தது மிங்கொரு வார்த்தையே**
**மூவுல கும்மொரு வார்த்தையே**

| | |
|---|---|
| மாயை இருட்டு எல்லாம் | மாயாகாரிய முழுவதும் (தூலாஞ்ஞானம், மூலாஞ்ஞானம் ஆகிய அனைத்தும்) |
| அற அழிந்து | ஆத்தியந்தம் மாய்ந்து போக |
| அறிவுருவாக | நமதான்ம சொரூபமாக |
| நம் அண்ணலார் | நமது குருமூர்த்தியாகிய இறைவன் |
| மொழிந்ததும் | இவ்விடத்து மானிட வுருவாக வந்து அது நீ என உபதேசித்ததும் |
| இங் கொரு வார்த்தையே | இப்புண்ணிய பூமியின் கண்ணே அருளிச் செய்தது ஒப்பிலா ஒரு மொழியேயாகும் (அது நீ) என்பதாம் |
| மூவுலகும் ஒரு வார்த்தையே | சொர்க்க மத்திய பாதாளமென்னும் மூன்றுலகம் தோன்றாமல் (அழித்து) எனது ஆன்ம சொரூபமாக தோன்றும்படி செய்தது அந்த ஈடு இணையற்ற ஒரு சொல்லேயாகும். |

மாயாகாரிய முழுவதும் (தூலாஞ்ஞானம், மூலாஞ்ஞானம் ஆகிய அனைத்தும்) ஆத்தியந்தம் மாய்ந்து போக நமதான்ம சொரூபமாக நமது குருமூர்த்தியாகிய இறைவன் இவ்விடத்து மானிட வுருவாக வந்து அது நீ என உபதேசித்ததும் இப்புண்ணிய பூமியின் கண்ணே அருளிச் செய்தது ஒப்பிலா ஒரு மொழியேயாகும் (அது நீ) என்பதாம் சொர்க்க மத்திய பாதாளமென்னும் மூன்றுலகம் தோன்றாமல் (அழித்து) எனது ஆன்ம சொரூபமாக தோன்றும்படி செய்தது அந்த ஈடு இணையற்ற ஒரு சொல்லேயாகும்.

**36. உழுந்துரு ளுந்துணைப் போதிலே**
**யுணர்வுரு வாகநம் முச்சிமே**
**லெழுந்தரு ளும்மிரு போதுமே**
**யேத்துவ தென்றுமெப் போதுமே**

| | |
|---|---|
| உழுந்துருளுந்துணைப்போதிலே | கண்ணாடியில் வைக்கப்பட்ட உழுந்தானது ஒருமுறை உருள்வதற்குள்ளாகவே (இதை) உழுந்துருளுமுன் மலர் கசக்குமுன் (ஞானோதயமாம்) என வாசிட்டம் கூறுகின்றது. வசிட்டர் வாக்கு, |
| உணர்வுருவா | நாம் அறிவு சொரூபமாக விளங்கும்படி |
| நம்முச்சிமேல் | நல்வினை சுமந்த நமது சிரசின்கண்ணே |
| எழுந்தருளும் இரு போதுமே | அருக்கனை அவாவிய அம்புஜம்போல் (சூரியனை |

| | |
|---|---|
| | எதிர்பார்க்கும் தாமரைபோல்) நமது சிரசை எதிர்நோக்கி (பக்குவ காலம் பார்த்து) எழுந்தருளிவந்து திருவடிதீக்ஷை செய்ததும் இரண்டு திவ்ய திருவடித் தாமரைகளே |
| எப்போதும் | சதாகாலமும் (எப்போதும்) எவ்விடங்களிலும் |
| ஏத்துவது | துதித்து இறைஞ்சுவதும் (பாடித் தொழுவதும்) |
| எப்போதுமே | எந்த நேரத்திலும் துதிப்பது ஒப்பற்ற இரண்டு திருவடித் தாமரைகளேயாம். |

கண்ணாடியில் வைக்கப்பட்ட உழுந்தானது ஒருமுறை உருள்வதற்குள்ளாகவே (இதை) உழுந்துருளுமுன் மலர் கசக்குமுன் (ஞானோதயமாம்) என வாசிட்டம் கூறுகின்றது. வசிட்டர் வாக்கு,நாம் அறிவு சொரூபமாக விளங்கும்படி நல்வினை சுமந்த நமது சிரசின்கண்ணே அருக்கனை அவாவிய அம்புஜம்போல் (சூரியனை எதிர்பார்க்கும் தாமரைபோல்) நமது சிரசை எதிர்நோக்கி (பக்குவ காலம் பார்த்து) எழுந்தருளிவந்து திருவடிதீக்ஷை செய்ததும் இரண்டு திவ்ய திருவடித் தாமரைகளே சதாகாலமும் (எப்போதும்) எவ்விடங்களிலும் துதித்து இறைஞ்சுவதும் (பாடித் தொழுவதும்) எந்த நேரத்திலும் துதிப்பது ஒப்பற்ற இரண்டு திருவடித் தாமரைகளேயாம்.

**37. அறிவி லானுயிர் கிறுதி செய்தபி**
**னரிஞர் தம்பிரா னரிய தாளிணைப்**
**பிறிவி லாததம் படையை மீள்கெனப்**
**பெரிய சேனையுந் திரிய மீளுமே**

| | |
|---|---|
| அறிவிலானுயிர்க்கு | அஞ்ஞ வேந்தனது பிராணனை |
| இறுதி செய்தபின் | வாங்கி முடித்தபின்னர் (அழித்தவுடனே) |
| அறிஞர் தம்பிரான் | அடியவர் தலைவராகிய (ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகள்) |
| அரிய தாளினைப் | ஞான வேந்தன் ஹரி தேடியும் அருமறை தேடியுங் காணாத அரிதற்கரிய திருவடியை |
| பிறிவிலாத | சதாகாலமும் தம்மை விட்டு நீங்காத |
| தம் படையை | தமது சேனைகளை |
| மீள்கெனப் | மாறுங்கள் (திரும்புங்கள்) என்று கூறிய மாத்திரத்தில் |
| பெரிய சேனையுந் | சமுத்திரம் போன்ற அபரிமிதமான படைகள் அனைத்தும் |
| திரியமீளுமே | மாறிச் சென்றன.(திரும்பி) தனது யதார்த்த ஸ்தானத்தை பொருந்தி அடைந்தனர் என்பதாம். தெரிந்து கூடிய திருடனைப்போல் நமது சொரூபத்திலிருந்த அறியாமை (சுவாசிரய சுவ விஷயமென்பர்) சந்திரனில் களங்கமிருப்பதுபோலிருந்து (நாம் யார் என) நன்றாய் விசாரித்த மாத்திரத்தில் நீங்கியது (விசாரிப்பதுவே முக்கியமாம்). |

அஞ்ஞ வேந்தனது பிராணனை வாங்கி முடித்தபின்னர் (அழித்தவுடனே) அடியவர் தலைவராகிய (ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகள்) ஞான வேந்தன் ஹரி தேடியும் அருமறை தேடியுங் காணாத அரிதற்கரிய திருவடியை சதாகாலமும் தம்மை விட்டு நீங்காத தமது சேனைகளை மாறுங்கள் (திரும்புங்கள்) என்று கூறிய மாத்திரத்தில் சமுத்திரம் போன்ற அபரிமிதமான படைகள் அனைத்தும் மாறிச் சென்றன.(திரும்பி) தனது யதார்த்த ஸ்தானத்தை பொருந்தி அடைந்தனர் என்பதாம். தெரிந்து கூடிய திருடனைப்போல் நமது சொரூபத்திலிருந்த அறியாமை (சுவாசிரய சுவ விஷயமென்பர்) சந்திரனில் களங்கமிருப்பதுபோலிருந்து (நாம் யார் என) நன்றாய் விசாரித்த மாத்திரத்தில் நீங்கியது (விசாரிப்பதுவே முக்கியமாம்).

*******************

# 24. வெற்றி சாற்றல்

1. **காய மாகிவாழ் மாய மாபுரங்**
**கட்ட டங்கவே சுட்டல் கண்டுளோர்**
**தூய ஞாநநற் சுடர்வி ளங்குமெய்ச்**
**சொருப னார்பதந் தொழுது ரைப்பரே**

| | |
|---|---|
| காயமாகி வாழ் | தேகமே தானென்று வாழ்ந்த |
| மாயமாபுரம் | மாயாபுரி யென்னும் கோட்டையானது |
| கட்டடங்கவே | கோப்புடனே (கூண்டோடு) அனைத்தும் அழிந்தது |
| சுட்டல் கண்டுளோர் | அறிந்து அதில் பற்று நீங்கியிருப்பவர்கள் |
| தூய ஞான நற்சுடர் விளங்கும் | மும்மலங்களும் நீங்கி பரிசுத்தமான அறிவு மயமாய் பிரகாசித்திருக்கும் |
| சொருபனார் பதம் | சச்சிதானந்தமான ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகளது (ஞான வேந்தரது) திருவடியை |
| தொழுதுரைப்பரே | வாழ்த்தி வணங்கினார்கள் (தொழுது தோத்திரஞ் செய்தார்கள் என்பதாம்) |

தேகமே தானென்று வாழ்ந்த மாயாபுரி யென்னும் கோட்டையானது கோப்புடனே (கூண்டோடு) அனைத்தும் அழிந்தது அறிந்து அதில் பற்று நீங்கியிருப்பவர்கள் மும்மலங்களும் நீங்கி பரிசுத்தமான அறிவு மயமாய் பிரகாசித்திருக்கும் சச்சிதானந்தமான ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகளது (ஞான வேந்தரது) திருவடியை வாழ்த்தி வணங்கினார்கள் (தொழுது தோத்திரஞ் செய்தார்கள் என்பதாம்)

2. **அடியே முள்ளங் கருப்பதுநல்**
**லம்போ ருகங்கள் சிவப்பதுமிப்**
**படியே வந்த பரனேநின்**
**பாதங் காட்டாப் பண்டன்றோ**

| | |
|---|---|
| அடியேம் உள்ளம் | ஸ்ரீசொரூபானந்த சுவாமிகளாகிய தங்களது அடியவர்களான எங்களது மனம் |
| கருப்பதும் | மாசு பட்டிருப்பது (ஆசையென்ற இருள் மூடியதும்) |
| நல்லம் போருகங்கள் | பழவடியார்கள் போற்றும் புனிதமான தங்களது திருவடித் தாமரைகள் (கண்கள்) |
| சிவப்பதும் | கோவைக்கனிபோல் சிவந்திருப்பதும் |
| இப்படியே வந்த | இப்புனித பூமியின்கண் எழுந்தருளி வந்த பரம் பொருளே. |

| | |
|---|---|
| பரனே | |
| நின் பாதங்காட்டாப் பண்டன்றோ | சச்சிதானந்த திவ்ய மங்கள ஸ்ரீசொரூபானந்த மூர்த்தி உமது திருவடிதீக்ஷை செய்து அனுக்ரகம் செய்வதற்கு முன்னம் அல்லவா, சுவாமின் தாங்கள் எழுந்தருளி வந்து திருவடிதீக்ஷை செய்யும் முன் எங்களது உள்ளம் அஞ்ஞான விருளால் கருத்திருந்தது (தாங்கள் திருவடிதீக்ஷை செய்தபின்) அருளை நினைந்து நினைந்து உள்ளம்(மனம்) இருள்நீங்கி சிவந்தது (ஞானவருட்கண் உதித்தது) அத்திருவடி வாங்கி எமது உச்சியும் சிவந்தது (பலமுறை வணங்கியதால் திருவடியில் தோய்ந்து அது தழும்பேறி கறுத்தது) (இதுவே யாமறிந்த உண்மையாகும்) |

ஸ்ரீசொரூபானந்த சுவாமிகளாகிய தங்களது அடியவர்களான எங்களது மனம் மாசு பட்டிருப்பது (ஆசையென்ற இருள் மூடியதும்) பழவடியார்கள் போற்றும் புனிதமான தங்களது திருவடித் தாமரைகள் (கண்கள்) கோவைக்கனிபோல் சிவந்திருப்பதும் இப்புனித பூமியின்கண் எழுந்தருளி வந்த பரம் பொருளே. சச்சிதானந்த திவ்ய மங்கள ஸ்ரீசொரூபானந்த மூர்த்தி உமது திருவடிதீக்ஷை செய்து அனுக்ரகம் செய்வதற்கு முன்னம் அல்லவா, சுவாமின் தாங்கள் எழுந்தருளி வந்து திருவடிதீக்ஷை செய்யும் முன் எங்களது உள்ளம் அஞ்ஞான விருளால் கருத்திருந்தது (தாங்கள் திருவடிதீக்ஷை செய்தபின்) அருளை நினைந்து நினைந்து உள்ளம்(மனம்) இருள்நீங்கி சிவந்தது (ஞானவருட்கண் உதித்தது) அத்திருவடி வாங்கி எமது உச்சியும் சிவந்தது (பலமுறை வணங்கியதால் திருவடியில் தோய்ந்து அது தழும்பேறி கறுத்தது) (இதுவே யாமறிந்த உண்மையாகும்)

கருத்துரை: வணங்காகாலத்து தங்கள் திருவடி சிவந்தது. வணங்கிய பின்னர் திருவடி கருத்து உச்சி சிவந்தது. நினையாத போது உள்ளம் கருத்தது நினைக்கச்சிவந்தது.

**3. செய்யப் படுந்தே வருமுலகுஞ்**
**சிறியோம் வாழ்வுந் தீப்பிறப்பும்**
**பொய்யற் றிருப்ப தெம்பெருமான்**
**புவியிற் போதாப் போதன்றோ**

| | |
|---|---|
| செய்யப்படும் தேவரும் | சிருட்டி செய் பிரம்மா முதலிய தேவர்களும் |
| உலகமும் | பதிநான்கு உலகங்களும் |
| சிறியோம் வாழ்வும் | அற்பர்களாகிய எங்களது குறைந்த வாழ்நாளும் |
| தீப்பிறப்பும் | கொடிய ஜெனனமும் |
| பொய்யற்றிருப்ப | மெய்யென்று கருதி வாழ்ந்ததும் |

| | |
|---|---|
| எம்பெருமான் | எமது சுவாமியாகிய (ஸ்ரீசொரூபானந்தர்) தாங்கள் |
| புவியிற் போதாப் போதன்றோ | இப்புனித பூமியின் கண் எழுந்தருளி வராத காலத்து அல்லவா. (தாங்கள் எழுந்தருளி வருவதற்கு முன் பிரம்மா முதலிய தேவர்களும் சுவர்க்கமும் வாழ்நாளும் கொடிய பிறப்பும் மெய்யென்றிருந்தோம்) இப்பொழுது அவையனைத்தும் பொய் யென்றறிந்தோம். |

சிருட்டி செய் பிரம்மா முதலிய தேவர்களும் பதிநான்கு உலகங்களும் அற்பர்களாகிய எங்களது குறைந்த வாழ்நாளும் கொடிய ஜெனனமும் மெய்யென்று கருதி வாழ்ந்ததும் எமது சுவாமியாகிய (ஸ்ரீசொரூபானந்தர்) தாங்கள் இப்புனித பூமியின் கண் எழுந்தருளி வராத காலத்து அல்லவா. (தாங்கள் எழுந்தருளி வருவதற்கு முன் பிரம்மா முதலிய தேவர்களும் சுவர்க்கமும் வாழ்நாளும் கொடிய பிறப்பும் மெய்யென்றிருந்தோம்) இப்பொழுது அவையனைத்தும் பொய் யென்றறிந்தோம்.

**4. போக்கும் வரவும் பொன்னாடும்**
**புழுவார் நரகும் புசிப்பனவு**
**மாக்க மழிவுந் திருக்கடைக்கண்**
**ணணுகா திருக்கு மளவன்றோ**

| | |
|---|---|
| போக்கும் வரவும் | பிறப்பும் இறப்பும் |
| பொன்னாடும் | சுவர்க்கம் செல்வதும் |
| புழுவார் நரகும் | கிருமிகள் நிறைந்த கும்பிபாக முதலிய நரகவாசமும், |
| புசிப்பனவும் | நல்வினை தீவினையாகிய அவற்றால் உண்டாகும் சுக துக்கங்களை அனுபவிப்பதும், |
| ஆக்கம் | செல்வ பெருக்கமும், |
| அழிவும் | ஐஸ்வரிய ஒழிவும் |
| திருக்கடைக்கண் | அழகிய குருமூர்த்தியாகிய தங்களது கிருபா நோக்கம் (பார்வை) |
| அணுகாதிருக்கும் | படாமல் இருக்கும் |
| அளவன்றோ | வரை எமக்கு மேற்கூறிய துவந்தங்கள் இருந்தன. இப்பொழுது தாங்கள் பார்வைபட்டபின், அவையாவும் நீங்கிற்று. |

பிறப்பும் இறப்பும் சுவர்க்கம் செல்வதும் கிருமிகள் நிறைந்த கும்பிபாக முதலிய நரகவாசமும், நல்வினை தீவினையாகிய அவற்றால் உண்டாகும் சுக துக்கங்களை அனுபவிப்பதும், செல்வ பெருக்கமும், ஐஸ்வரிய ஒழிவும் அழகிய குருமூர்த்தியாகிய தங்களது கிருபா நோக்கம் (பார்வை) படாமல் இருக்கும் வரை எமக்கு மேற்கூறிய துவந்தங்கள் இருந்தன. இப்பொழுது தாங்கள் பார்வைபட்டபின், அவையாவும் நீங்கிற்று.

5. **சாவா கின்ற பெரும்பிணிக்குஞ்**
**சனிக்கும் பிணிக்குந் தடுமாற்ற**
**மாவா வென்றுன் றிருக்கரத்தா**
**லஞ்சே லென்னு மளவன்றோ**

| | |
|---|---|
| சாவாகின்ற | மரணமென்று சொல்லப்பட்ட |
| பெரும்பிணிக்குஞ் | மகத்தான வியாதிக்கும் |
| ஜனிக்கும் | பிறப்பிற்கும் |
| பிணிக்கும் | மூன்றுவகையான நோய்க்கும் மூன்றுவிதம் தன்னாலும் (ஆகார வேறுபாட்டாலும்) தாய், தந்தையாலும், அவர்களுக்குள்ள நோயாலும் வினையாலும் முன்பிறப்பில் செய்த தீவினையாலும்,ஆக நோய்வரும் வழி மூன்றாம். |
| ஆ ஆ | ஐயோ |
| என்று | என ஏங்கி |
| தடுமாற்றம் | கலங்குவதெல்லாம் |
| உன் திருக்கரத்தால் | தங்களது அபயங் கொடுக்கும் வலக்கையால் |
| அஞ்சேல் என்னும் அளவன்றோ | பயப்படாதே என்று கூறும் வரையல்லவா. எங்களுக்கு மேற்கூறிய பயமிருந்தது. இப்பொழுது நீங்கினவென்பதாம். |

மரணமென்று சொல்லப்பட்ட மகத்தான வியாதிக்கும் பிறப்பிற்கும் மூன்றுவகையான நோய்க்கும் மூன்றுவிதம் தன்னாலும் (ஆகார வேறுபாட்டாலும்) தாய், தந்தையாலும், அவர்களுக்குள்ள நோயாலும் வினையாலும் முன்பிறப்பில் செய்த தீவினையாலும்,ஆக நோய்வரும் வழி மூன்றாம். ஐயோ என ஏங்கி கலங்குவதெல்லாம் தங்களது அபயங் கொடுக்கும் வலக்கையால் பயப்படாதே என்று கூறும் வரையல்லவா. எங்களுக்கு மேற்கூறிய பயமிருந்தது. இப்பொழுது நீங்கினவென்பதாம்.

6. **முத்திக் கரசே நீயெங்கு முழுந்தி**
**யிருப்ப விமுந் துழலும்**
**புத்திரக் கிலேசந் தலைமிசையுன்**
**பொற்றாள் பொறியாப் போதன்றோ**

| | |
|---|---|
| முத்திக்கரசே | மோக்ஷ சாம்ராஜ்ஜியத்தையாளும் இறையே. |
| நீயெங்குமுழுந்தியிருப்ப | தாங்கள் எவ்விடங்களிலும் (அகமும், புறமும்) பூரணமாய் நிறைந்திருக்க அதனை அறியாமல் |
| விழுந்துழலும் புத்திக்கிலேசம் | மனக் கவலையுற்று சுற்றித் திரிந்து இடரிக் கிடந்தவையெல்லாம் |

| | |
|---|---|
| தலைமிசை | எமது சிரசின் கண்ணே |
| உன் பொற்றாள் | உமது பொன்னாலாகிய திருவடியை |
| பொறியாப் போதன்றோ | எமது சிரசிற்கணிகலனாக சூட்டாத காலத்தில்தானே. நாங்கள் அலைந்தது. இங்கு திருவடி தீக்ஷை அவசியம் என்று கூறினார். |

மோக்ஷ சாம்ராஜ்ஜியத்தையாளும் இறையே. தாங்கள் எவ்விடங்களிலும் (அகமும், புறமும்) பூரணமாய் நிறைந்திருக்க அதனை அறியாமல் மனக் கவலையுற்று சுற்றித் திரிந்து இடரிக் கிடந்தவையெல்லாம் எமது சிரசின் கண்ணே உமது பொன்னாலாகிய திருவடியை எமது சிரசிற்கணிகலனாக சூட்டாத காலத்தில்தானே. நாங்கள் அலைந்தது. இங்கு திருவடி தீக்ஷை அவசியம் என்று கூறினார்.

**7. அந்தக் கரணம் புறக்கரண**
**மவத்தை பலவோ டகம்புறமாந்**
**தொந்தக் கலாதி யாவையுநின்**
**றுணைத்தாள் சூடார் சொல்லன்றோ**

| | |
|---|---|
| அந்தக்கரணம் | மன முதலிய உட்கருவிகளென்னும், |
| புறக்கரணம் | மெய், வாய், கண், மூக்கு, செவி, வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்த்தம். புறக்கருவிகளென்னும் |
| அவத்தை பலவோடு | சாக்கிர முதலிய அநேக நிலைகளுடன் |
| அகம் புறமாம் | உள்வெளியென்றும், |
| தொந்தக் கலாதியாவையும் | தொடர்புள்ள கலை காஸ்டைகளென்பன வெல்லாம் |
| நின்று உனைத் தாள் சூடார் | உமது உபய திருவடிகளை அணியாதவர்கள் |
| சொல்லன்றோ | வார்த்தையல்லவா. அணிந்தார் கூறார் என்பது அறியவல்லதாம். |

மன முதலிய உட்கருவிகளென்னும், மெய், வாய், கண், மூக்கு, செவி, வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்த்தம். புறக்கருவிகளென்னும் சாக்கிர முதலிய அநேக நிலைகளுடன் உள்வெளியென்றும், தொடர்புள்ள கலை காஸ்டைகளென்பன வெல்லாம் உமது உபய திருவடிகளை அணியாதவர்கள் வார்த்தையல்லவா. அணிந்தார் கூறார் என்பது அறியவல்லதாம்.

**8.** சமயா வெந்தச் சமயமுமெச்
சவலைச் சடங்குத் தனமுமெல்லா
மமையா ததுநின் றிருப்பவள
மலரா திருக்கு மளவன்றோ

| | |
|---|---|
| சமயா | சாந்திவராத |
| எந்தச் சமயமும் | எப்படிப்பட்டசீவ காருண்ய ஒழுக்கமுடையவர்களானாலும் (மதக் கொள்கை யுடையவர்களாயினும்) |
| எச் சவலைச் சடங்குத்தனமும் எல்லாம் | எந்த ஐதீக(வைதீக) கிரியைகளனைத்தும் |
| அமையா அது | அது மனச்சாந்தி தரமாட்டாது. |
| அது நின் திருப்பவள மலரா திருக்கும் அளவன்றோ | அதுவும் தங்களது அழகிய சிவந்த பவளம் போன்ற அதரமுடைய அமிர்தமான வாக்கால் அருளிச் செய்யும்வரை தானே. (அதன் பின்னரின்று என்பதாம்) |

சாந்திவராத எப்படிப்பட்டசீவ காருண்ய ஒழுக்கமுடையவர்களானாலும் (மதக் கொள்கை யுடையவர்களாயினும்) எந்த ஐதீக(வைதீக) கிரியைகளனைத்தும் அது மனச்சாந்தி தரமாட்டாது. அதுவும் தங்களது அழகிய சிவந்த பவளம் போன்ற அதரமுடைய அமிர்தமான வாக்கால் அருளிச் செய்யும்வரை தானே. (அதன் பின்னரின்று என்பதாம்)

**9.** எவ்வளவு மளவுபடா திருக்கை யுன்ற
னியல்பாகு மெங்களையெவ் வளவின் வைத்தா
யவ்வளவே யளவாகி யிருக்கை யெங்க
ளளவாகு முன்பெருமை யறிவா ரியாரே

| | |
|---|---|
| எவ்வளவும் அளவுபடாதிருக்கை | எவ்விடங்களிலும் (அபரிச்சின்ன என்றபடி) நீக்கமற நிறைந்து பூரணனாயிருப்பது, |
| உன்றன் இயல்பாகும் | ஞான வேந்தரென்னும் (ஸ்ரீசொரூபானந்த சுவாமிகளாகிய) தங்களது சுபாவ சித்தமான நிலையாம் |
| எங்களை | ஜீவ சுபாவமுடைய எம்போன்றவர்களை |
| எவ் அளவின் வைத்தாய் | அந்த சரீர அளவிற்கு (பரிச்சின்னன்) அமைத்தனையோ |
| அவ்வளவே யளவாகியிருக்கை | அந்த உடம்பினளவே நான் என்று சொல்லும்படி அமைந்திருப்பது |
| எங்கள் அளவாகும் | எம் போன்ற ஜீவர்களது பிரமானமாம். |
| உன் பெருமை அறிவார் யாரே | அணுவிற்கு அணுவும் மகத்திற்கு மகத்தாயிருக்கும் பெருமை அறியார் |
| . | |

எவ்விடங்களிலும் (அபரிச்சின்ன என்றபடி) நீக்கமற நிறைந்து பூரணனாயிருப்பது, ஞான வேந்தரென்னும் (ஸ்ரீசொரூபானந்த சுவாமிகளாகிய) தங்களது சுபாவ சித்தமான நிலையாம் ஜீவ சுபாவமுடைய எம்போன்றவர்களை அந்த சரீர அளவிற்கு (பரிச்சின்னன்)

அமைத்தனையோ அந்த உடம்பினளவே நான் என்று சொல்லும்படி அமைந்திருப்பது எம் போன்ற ஜீவர்களது பிரமானமாம். அணுவிற்கு அணுவும் மகத்திற்கு மகத்தாயிருக்கும் பெருமை அறியார்:

**10. கடம்படுமிவ் வுடம்பானோங் கரண மானோங்**
**கண்டிருந்த கரியானோங் காட்சி தீர்ந்த**
**திடம்படுபே ருணர்வானோ மெல்லா மானோந்**
**திருவிளையாட் டிருக்கின்ற செயலி தென்னே**

| | |
|---|---|
| கடும்படும் இவ்வுடம்பானோம் | அறியாத காலத்து (மூட தசையில்) குடம் போன்று தனக்கு வேறான இந்த சரீரமே தானென்றிருந்தோம். |
| கரணமானோம் | சற்றறிந்தபோது நீர்க்குமிழி போன்று அழியுமித் தேகம் தானல்ல இதற்கு வேறான கருவியென்னும் (மனமே தானென்றிருந்தோம்) |
| கண்டிருந்த கரியானோம் | மேற்கூறிய மனத்தின் தொழிலான நினைத்தல், மறத்தலாகிய அனைத்தும் அறியும் சாக்ஷியே (கூடஸ்தன்) துவம்பத லக்ஷியமே தானென்றிருந்தோம். |
| காட்சி தீர்த்த | சுட்டு ஞானம் நீங்கிய |
| திடம்படு பேருணர்வானோம் | திண்ணிய அறிவு (திடஞானமான தத்பத லக்ஷிய சொரூபமே) தானென்றிருந்தோம். |
| எல்லாம் ஆனோம் | அசிபதார்த்த வடிவமான ஒன்றாய (எலாமெனதுரு வெனுமோர் அனுபவமாய்) யானிலா விடமுமிலை யெனதிடத்திலாததில்லை என்றும் தன்மயமாயிருந்தோம். |
| திருவிளையாட்டு | சர்வ வல்லமை பொருந்திய குருநாதராகிய தங்களது திருவருட் செயலான லீலை இருக்கின்ற |
| செயலிதென்னே | இஃது என்ன ஆச்சரியம். தேவரீரது கிருத்தியமே இவ்வாறுளது. (தங்களுக்கு வேறானது ஒன்றுமில்லை) |

அறியாத காலத்து (மூட தசையில்) குடம் போன்று தனக்கு வேறான இந்த சரீரமே தானென்றிருந்தோம். சற்றறிந்தபோது நீர்க்குமிழி போன்று அழியுமித் தேகம் தானல்ல இதற்கு வேறான கருவியென்னும் (மனமே தானென்றிருந்தோம்) மேற்கூறிய மனத்தின் தொழிலான நினைத்தல், மறத்தலாகிய அனைத்தும் அறியும் சாக்ஷியே (கூடஸ்தன்) துவம்பத லக்ஷியமே தானென்றிருந்தோம். சுட்டு ஞானம் நீங்கிய திண்ணிய அறிவு (திடஞானமான தத்பத லக்ஷிய சொரூபமே) தானென்றிருந்தோம். அசிபதார்த்த வடிவமான ஒன்றாய (எலாமெனதுரு வெனுமோர் அனுபவமாய்) யானிலா விடமுமிலை யெனதிடத்திலாததில்லை என்றும் தன்மயமாயிருந்தோம். சர்வ வல்லமை பொருந்திய குருநாதராகிய தங்களது திருவருட் செயலான லீலை இருக்கின்ற இஃது என்ன ஆச்சரியம். தேவரீரது கிருத்தியமே இவ்வாறுளது. (தங்களுக்கு வேறானது ஒன்றுமில்லை

**11.** **அஞ்ஞாந மென்னவுமங் கதனா லாய**
**வநேகபவ மென்னவுமவ் வயர்வு தீர்ந்த**
**மெஞ்ஞாந மென்னவுநின் றொருநீ தானே**
**விளையாட றோற்றுவித்த விரகீ தென்னே**

| | |
|---|---|
| அஞ்ஞாநமென்னவும் | அறியாமை என்னும் |
| அங்கு அதனாலாய | அஞ்ஞான மென்னும் (அதையறியாமை) அவ்விடத்துண்டான |
| அநேகபவமென்னவும் | அதனால் பல பிறப்பெடுத்தோமென்றும், |
| அவ்வயர்வு தீர்ந்த | அந்த பிறப்பிறப்பாலுன்டான சோகம் நீங்கி (பஜ— புனரபி ஜனனம் புனரபி மரணம் என்றபடி) களைப்பான துக்கம் நிவர்த்தியாக, |
| மெஞ்ஞானமென்னவும் | உண்மை அறிவு (ஆத்ம ஞானம்) என்றும் |
| ஒருநீதானே நின்று | ஒப்பற்ற தாங்கள் ஒருவரே (இவ்வாறிருந்து) |
| விளையாடல் தோற்றுவித்த | தாங்கள் வினோத மாத்திரமாக தோன்றும்படி செய்த |
| விரகு ஈது என்னே | ஈது என்னவென்று சொல்வது ? இந்த சாமர்த்தியம் (இது மற்றொருவராலும் செயற் கரியவாம்). ஆச்சரியமாம். |

அறியாமை என்னும் அஞ்ஞான மென்னும் (அதையறியாமை) அவ்விடத்துண்டான அதனால் பல பிறப்பெடுத்தோமென்றும், அந்த பிறப்பிறப்பாலுண்டான சோகம் நீங்கி (பஜ— புனரபி ஜனனம் புனரபி மரணம் என்றபடி) களைப்பான துக்கம் நிவர்த்தியாக, உண்மை அறிவு (ஆத்ம ஞானம்) என்றும் ஒப்பற்ற தாங்கள் ஒருவரே (இவ்வாறிருந்து) தாங்கள் வினோத மாத்திரமாக தோன்றும்படி செய்த ஈது என்னவென்று சொல்வது ? இந்த சாமர்த்தியம் (இது மற்றொருவராலும் செயற் கரியவாம்). ஆச்சரியமாம்.

12. **ஒழியாதபர வொளியா யோங்குசொரு பாநந்தன்**
**வழியான செயலுறுதி வாழ்வன்றோ வாழ்வாதல்**

| | |
|---|---|
| ஒழியாத பரவொளியாய் | நீக்கமின்றி நிறைந்திருக்கின்ற மேலான சுயம்பிரகாசமாய் |
| ஓங்கு சொரூபானந்தன் | நீள் விசும்பினும் மேலான ஆனந்த வடிவினன் (ஞான வேந்தனாகிய ஸ்ரீ சொரூபானந்தமூர்த்தியின் ) |
| செயலுறுதி | பற்றாகிய பணியே |
| வழியான | நன்மார்க்கமான |
| வாழ்வாதல் | வாழ்க்கையல்லவா ஆகும். (குரு பணிவிடை செய்து வாழும் வாழ்க்கையே |
| உறுதி வாழ்வன்றோ | உண்மையான வாழ்க்கை –ஜீவனம் ஆகும். |

நீக்கமின்றி நிறைந்திருக்கின்ற மேலான சுயம்பிரகாசமாய் நீள் விசும்பினும் மேலான ஆனந்த வடிவினன் (ஞான வேந்தனாகிய ஸ்ரீ சொரூபானந்தமூர்த்தியின் ) பற்றாகிய பணியே நன்மார்க்கமான வாழ்க்கையல்லவா ஆகும். (குரு பணிவிடை செய்து வாழும் வாழ்க்கையே உண்மையான வாழ்க்கை –ஜீவனம் ஆகும்.

****************

# 25. திரு முடி சூட்டல்

**1. அடங்காமற் புலனுருக வடியினையே வெளியான**
**திடங்காணல் கண்டிருக்குந் தெளிவன்றோ தெளிவாதல்**

| | |
|---|---|
| புலன் அடங்காமல் உருக | மனமுதலிய இந்திரியங்களனைத்தும் மட்டின்றி கசிந்து கொண்டிருக்கவும், |
| வெளியான | சிதாகாசவடிவான |
| அடியினையே | சொரூபத்தினை (திருவடி இரண்டும் ) |
| திடங்காணல் | பொருளென அபரோக்ஷவனுபவமாய் (திண்ணிய ஞானம் ) அறிதல் |
| கண்டிருக்கும் தெளிவன்றோ | அவ்வாறறிந்திருக்கும் அறிவல்லவா |
| தெளிவாதல் | ஐயமின்றிய தெள்ளிய ஞானமாகும், குரு திருவடியின் ஒளியே ஆன்மாவென்று நிதித்தியாசன வாயிலாக அறிகுவாம். |

மனமுதலிய இந்திரியங்களனைத்தும் மட்டின்றி கசிந்து கொண்டிருக்கவும், சிதாகாசவடிவான சொரூபத்தினை (திருவடி இரண்டும் ) பொருளென அபரோக்ஷவனுபவமாய் (திண்ணிய ஞானம் ) அறிதல் அவ்வாறறிந்திருக்கும் அறிவல்லவா ஐயமின்றிய தெள்ளிய ஞானமாகும், குரு திருவடியின் ஒளியே ஆன்மாவென்று நிதித்தியாசன வாயிலாக அறிகுவாம்.

**2. தோன்றும்வினை வழியொழியத் தோன்றாத பொருடோன்றிச்**
**சான்றதுவே தானாகுந் தற்சிவமாய் நிறைந்ததுவே**

| | |
|---|---|
| தோன்றும் | சுகதுக்க அனுபவமய போகங்களை கொடுக்கும் |
| வினைவழியொழிய | கர்ம ஆகாமி முதலிய மார்க்கங்கள் நீங்க |
| தோன்றாத | அபக்குவருக்கு உண்டாகாத |
| பொருள்தோன்றி | பக்குவருக்கு உண்டாகும் அனுப வடிவ ஆன்மவஸ்து |
| சான்றதுவே | கூடஸ்த வடிவ சாக்ஷியே |
| தானாகும் | தனக்குத் தானே சமானமாயிருக்கும் |
| தற்சிவமாய் நிறைந்ததுவே | பிரம்ம சொரூபமாம். அந்த பரப்பிரம்மமே தானான (ஆன்மாவான) மங்களாகார சுக வடிவமாய் எங்கும் நிறைந்திருப்பதுவாம். |

சுகதுக்க அனுபவமய போகங்களைக்கொடுக்கும் கர்ம ஆகாமி முதலிய மார்க்கங்கள் நீங்க அபக்குவருக்கு உண்டாகாத பக்குவருக்கு உண்டாகும் அனுப வடிவ ஆன்மவஸ்து கூடஸ்த வடிவ சாக்ஷியே தனக்குத் தானே சமானமாயிருக்கும் பிரம்ம சொரூபமாம். அந்த பரப்பிரம்மமே தானான (ஆன்மாவான) மங்களாகார சுக வடிவமாய் எங்கும் நிறைந்திருப்பதுவாம்.

**3. எல்லை யில்பவ வேலை வீரனெ றிந்த வாண்மைய றிந்தெமாற்**
**சொல்ல வில்லினி வல்ல வாறடி தொழுகை யென்றிவர் தொழுவரே**

| | |
|---|---|
| எல்லையில் | அளவிடமுடியாத |
| பவவேலை | பிறவிக்கடலை |
| வீரன் | ஸ்ரீ சொரூபானந்தராகிய (ஞான வேந்தன்) குரு, முனி, |
| எறிந்த ஆண்மை | ஞான வாளால் வீசிய புருஷத்வ குணத்தை (எமது பிறவிக் கடல் பருகியதை) |
| எம்மால் அறிந்து சொல்ல இல் | எம்போன்றவர்களால் தெளிந்து எடுத்து இயம்பக் கூடியதல்ல. |
| இனி வல்லவாறு | மேலும் நம்மனோரால் முடிந்தளவு |
| அடி தொழுகை | அந்த ஞானவேந்தரது (ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகளது) திருவடியை வணங்கித்துதிப்பதுவேயாம். |
| என்றிவர் தொழுவரே | இந்தப் பிரகாரம் (இவ்வாறு) அடியவர் குழாங்கள் நினைந்து வணங்கி வாழ்த்தினர். இங்கே ஞான வேந்தரது புஜபல பராக்கிரமங்களை துதித்தனர். |

அளவிடமுடியாத பிறவிக்கடலை ஸ்ரீ சொரூபானந்தராகிய (ஞான வேந்தன்) குரு, முனி, ஞான வாளால் வீசிய புருஷத்வ குணத்தை (எமது பிறவிக் கடல் பருகியதை) எம்போன்றவர்களால் தெளிந்து எடுத்து இயம்பக் கூடியதல்ல. மேலும் நம்மனோரால் முடிந்தளவு அந்த ஞானவேந்தரது (ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகளது) திருவடியை வணங்கி துதிப்பதுவேயாம். இந்தப் பிரகாரம் (இவ்வாறு) அடியவர் குழாங்கள் நினைந்து வணங்கி வாழ்த்தினர். இங்கே ஞான வேந்தரது புஜபல பராக்கிரமங்களை துதித்தனர்.

**4. வீர ஞாநவி நோத னாண்மைவி**
**ளம்புவார் கள்வி ளம்பவத்**
**தீர னார்தமை யாளு நாயகர்**
**செம் பொன் மெல்லடி சேரவே**

| | |
|---|---|
| வீர ஞான | உட்பகை புறப்பகைக ளனைத்தையும் வென்ற (அறிஞனது) அரிய |

| | |
|---|---|
| விநோதன் | செயலை உடையவனது |
| ஆண்மை விளம்புவார்கள் விளம்ப | ரிஷபம் போன்ற (புருஷரோடு) புருஷத் தன்மையுடைய அவனது வீரச் செயல்களை புகழ்ந்து (பரணி) பாடுகின்ற புலவர்கள் பாடி துதிக்கட்டும். |
| அத் தீரனார் | மன முதலிய உட்பகைகளை வென்ற அந்த ஞான வேந்தன் |
| தமையாளு நாயகர் | நம்மையெல்லாம் தடுத்தாட்கொண்ட தலைவன் |
| செம்பொன் மெல்லடி சேரவே | பன்முறை அடியவர் குழாங்கள் வணங்கி சிவந்து சுயம்பிரகாசமாய் மெத்தென விளங்கும்.(பொற்றாமரை என்றபடி பொன்னான திருவடியை) சரணாகதியடைய நாம் தொழுவாம். |

உட்பகை புறப்பகைக ளனைத்தையும் வென்ற (அறிஞனது) அரிய செயலை உடையவனது ரிஷபம் போன்ற (புருஷரோடு) புருஷத் தன்மையுடைய அவனது வீரச் செயல்களை புகழ்ந்து (பரணி) பாடுகின்ற புலவர்கள் பாடி துதிக்கட்டும். மன முதலிய உட்பகைகளை வென்ற அந்த ஞான வேந்தன் நம்மையெல்லாம் தடுத்தாட்கொண்ட தலைவன் பன்முறை அடியவர் குழாங்கள் வணங்கி சிவந்து சுயம்பிரகாசமாய் மெத்தென விளங்கும்.(பொற்றாமரை என்றபடி பொன்னான திருவடியை) சரணாகதியடைய நாம் தொழுவாம்.

**5. ஞாந சக்கிர மென்று நீர்ந டாத்து கென்று நல்லதா
ளான ரத்ந முடிக விக்க வருளி னானிவ் வண்ணலே**

| | |
|---|---|
| ஞானசக்கரம் | அறிவென்னும் ஆயுதத்தை (சக்ராயுதம்) தரித்துக் கொண்டு |
| என்றும்நீர் நடாத்தும் | எப்பொழுதும் எக்காலத்தும் நீங்கள் ஆட்சி புரியுங்கள். |
| என்று | இவ்வாரருளிச் செய்து |
| நல்லதாளான | தெரிந்து வழிபடும் அன்பர்களுக்கு தென்திசையின் துயர் தீர்த்த (பக்குவர்க்கு திருவடிதீக்ஷை செய்து தாபத்திரயம்) முத்தாபம் நீங்கிய பொன்னான திருவடியான் |
| ரத்ன முடி கவிக்க | அடியவர்களுக்கு சிரசில் மணிமுடியாக சூட்டிக்கொள்ளும்படி (ஞான வேந்தனான நம் சொரூபானந்த சுவாமிகள்) தமது திவ்ய மங்கள திருவடியான ரத்தின கிரீடத்தை சூட்டினார். |
| அருளினான் இவ் அண்ணலே | முடி சூட்டிய பரமேஸ்வரனாகிய குரு என்றும் இடும்பையற கருணை செய்து ஆசீர்வாதம் செய்தார். |

அறிவென்னும் ஆயுதத்தை (சக்ராயுதம்) தரித்துக் கொண்டு எப்பொழுதும் எக்காலத்தும் நீங்கள் ஆட்சி புரியுங்கள். இவ்வாரருளிச் செய்து தெரிந்து வழிபடும் அன்பர்களுக்கு தென்திசையின் துயர் தீர்த்த (பக்குவர்க்கு திருவடிதீக்ஷை செய்து தாபத்திரயம்) முத்தாபம் நீங்கிய பொன்னான திருவடியான் அடியவர்களுக்கு சிரசில் மணிமுடியாக சூட்டிக்கொள்ளும்படி (ஞான வேந்தனான நம் சொரூபானந்த சுவாமிகள்) தமது திவ்ய

மங்கள திருவடியான ரத்தின கிரீடத்தை சூட்டினார். முடி சூட்டிய பரமேஸ்வரனாகிய குரு என்றும் இடும்பையற கருணை செய்து ஆசீர்வாதம் செய்தார்.

**6. ஞாந வானைத் தாள்கள் சூடி நாயன் மார்க டாமெலா**
**மான வான வதிச யங்க னியாவர் கூற லாகுமே**

| | |
|---|---|
| ஞானவானைத் தாள்கள் சூடி | ஞான வேந்தராகிய ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகளது திருவடியை கிரீடமாக அணிந்துகொண்டு |
| நாயன்மார்கள் தாமெல்லாம் | சேனைத் தலைவர்களான அடியவர்களனைவரும் |
| ஆன ஆன அதிசயங்கள் | அவரவர்களும் அடைந்த சந்தோஷத்தை (புதுமையை) சர்வ துக்க நிவர்த்தி பரமானந்த பிராப்தியென்றும் (அப் பேரின்ப நிலையை) |
| இனி யாவர் கூற லாகுமே | ஆயிர நாவு படைத்த ஆதிசேடனாலும் கூற முடியாது. |

ஞான வேந்தராகிய ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகளது திருவடியை கிரீடமாக அணிந்துகொண்டு சேனைத் தலைவர்களான அடியவர்களனைவரும் அவரவர்களும் அடைந்த சந்தோஷத்தை (புதுமையை) சர்வ துக்க நிவர்த்தி பரமானந்த பிராப்தியென்றும் (அப் பேரின்ப நிலையை) ஆயிர நாவு படைத்த ஆதிசேடனாலும் கூற முடியாது.

**7. ஒழிவற்ற தன்சோதி யுருவத்தை நம்பா**
**லுள்ளங்கை நெல்லிப்ப ழம்போல வுடையான்**
**மொழிவுற்ற விரகேயெ னாநின்று மொழிவார்**
**முன்னோன்ம லர்ப்பாத முடிமீது கொள்வார்**

| | |
|---|---|
| உடையான் | அடியவர்களாகிய நம்மை அடிமையாக கொண்டவன் (உடையவன்) |
| ஒழிவற்ற | நீக்கமற நிறைந்த (அபரிச்சின்னனாகிய) |
| தன் சோதி உருவத்தை | தான் தனது யதார்த்த படிவ சுயம் பிரகாச சொரூபத்தை |
| நம்பால் | நல்லடியார் நம்மிடத்தில் பெருங்கருணைகொண்டு |
| உள்ளங்கை நெல்லிப்பழம் போல் | நம் கரதலத்திருக்கும் (ஆமலகம்) நெல்லிக்கனி போன்று |
| மொழிவுற்ற விரகே | நமது சொரூபத்தை நேரே உபதேசித்த சாமர்த்தியமே சாமர்த்தியம் |
| எனா நின்று மொழிவார் | என்று இந்தப் பிரகாரம் தொண்டரெல்லாம் துதி கூறுவாராயினார். |
| முன்னோன் மலர்பாதம் | மூவருமறியார் யாவர் மற்றறிவார் என்றபடி யாவர்க்கும் முதல்வனது முளரியந்தாளை |

| | |
|---|---|
| முடிமீது கொள்வார் | தமது சிரசின் கண்ணே சூடிக் கொண்டார்கள் என்பதாம். |

அடியவர்களாகிய நம்மை அடிமையாக கொண்டவன் (உடையவன்) நீக்கமற நிறைந்த (அபரிச்சின்னனாகிய) தான் தனது யதார்த்த படிவ சுயம் பிரகாச சொரூபத்தை நல்லடியார் நம்மிடத்தில் பெருங்கருணைகொண்டு நம் கரதலத்திருக்கும் (ஆமலகம்) நெல்லிக்கனி போன்று நமது சொரூபத்தை நேரே உபதேசித்த சாமர்த்தியமே சாமர்த்தியம் என்று இந்தப் பிரகாரம் தொண்டரெல்லாம் துதி கூறுவாராயினார். மூவருமறியார் யாவர் மற்றறிவார் என்றபடி யாவர்க்கும் முதல்வனது மளரியந்தாளை தமது சிரசின் கண்ணே சூடிக் கொண்டார்கள் என்பதாம்.

**8. தன்செய்ய திருமேனி யேயன்றி வேறோர்**
**தானொன்றி லாவண்ண மெந்தம்பி ரானா**
**ரென்செய்த வாறோவி தென்னென்று மொழிவா**
**ரென்னேயி தென்னேயி தென்னேயி தென்பார்**

| | |
|---|---|
| தன் செய்ய திருமேனியேயன்றி | யதார்த்தமாகிய தனது செம்மையான (மேலான ) சுயம் பிரகாச தேஜோமய வடிவமே எவ்விடங்களிலும் பார்த்த விடமெல்லாம் பரமன் காணம்மானை என்று மாப்போல |
| வேறோர் தானொன்றிலாவண்ணம் | தனக்கு வேறாக ஒரு பொருளும் தோற்றாதபடி |
| எம் தம்பிரானார் | எமது தலைவரான (அடியவர் தலைவனாகிய தம்பிரான் சுவாமிகள்) |
| என் செய்தவாறோ | என்ன மாயம் செய்தாரோ (எந்த விஞ்ஞையினால் தோற்றுவித்தனனோ) யாமறியேம். |
| இது என்னென்று மொழிவார் | இஃதோரதிசயமா யிருக்கின்றது எனக் கூறுவாறாயினர். |
| என்னே இது என்னே இது என்பர் | இது வியப்பாகயிருக்கிறது. இது பெரிய வித்தையாகயிருக்கிறது. இது யாவராலும் அறிதற்கு அரிதாயிருக்கிறது என்று பலபல விதமாக முறையாக அதிசயித்து கூறினார்கள். |

யதார்த்தமாகிய தனது செம்மையான (மேலான ) சுயம் பிரகாச தேஜோமய வடிவமே எவ்விடங்களிலும் பார்த்த விடமெல்லாம் பரமன் காணம்மானை என்று மாப்போல தனக்கு வேறாக ஒரு பொருளும் தோற்றாதபடி எமது தலைவரான (அடியவர் தலைவனாகிய தம்பிரான் சுவாமிகள்) என்ன மாயம் செய்தாரோ (எந்த விஞ்ஞையினால் தோற்றுவித்தனனோ) யாமறியேம். இஃதோரதிசயமா யிருக்கின்றது எனக் கூறுவாறாயினர். இது வியப்பாகயிருக்கிறது. இது பெரிய வித்தையாகயிருக்கிறது. இது யாவராலும் அறிதற்கு அரிதாயிருக்கிறது என்று பலபல விதமாக முறையாக அதிசயித்து கூறினார்கள்.

**9. பொருளேது மிவரன்றி வேறில்லை யென்பார்**
**போதங்கி டீர்செய்ய பொன்மேனி யென்பா**
**ரருளேகி டீர்வந்த திருமேனி யென்பா**
**ரளவாவ தேயிந்த வருளென்று மொழிவார்**

| | |
|---|---|
| இவரன்றி ஏது பொருள் | இந்த சுயம் பிரகாச (சொரூபரானந்தரே) பெரும் பொருளா பிரம்மமாம். |
| வேறில்லையென்பார் | சொரூபானந்தரன்றி மற்றோர் பொருளன்று எனக் கூறுவார்கள். |
| செய்ய பொன்மேனி | இயற்கையான பிரகாசம் பொருந்திய பொன்போன்ற திருவுருவம் |
| போதங்கடீர் என்பர் | ஞாந வடிவமே என்று அருளிச் செய்வார்கள். |
| வந்த திருமேனி அருளேகிடீர் என்பார் | ஸ்ரீசொரூபானந்தர் என்ற நாமம் பூண்டு எழுந்தருளிய திவ்ய மங்கள வடிவம் கிருபையேயாகும் என இயம்பினார்கள். |
| இந்த அருள் அளவாவதே என்று மொழிவார் | எங்கும் நிறைந்தும் நானென்ற வாசகத்தின் பொருளாய் அண்மையாயிருக்கின்ற அரூபியாய் அகண்டமாயிருப்பதுமன்றி கருணையே ஒருருவாய் ஒரு சரீரஅளவிற்கு வந்தது என்னென்று சொல்வது எனத் திருவாய் மலர்ந்தார்கள். |

இந்த சுயம் பிரகாச (சொரூபரானந்தரே) பெரும் பொருளா பிரம்மமாம். சொரூபானந்தரன்றி மற்றோர் பொருளன்று எனக் கூறுவார்கள். இயற்கையான பிரகாசம் பொருந்திய பொன்போன்ற திருவுருவம் ஞாந வடிவமே என்று அருளிச் செய்வார்கள். ஸ்ரீசொரூபானந்தர் என்ற நாமம் பூண்டு எழுந்தருளிய திவ்ய மங்கள வடிவம் கிருபையேயாகும் என இயம்பினார்கள். எங்கும் நிறைந்தும் நானென்ற வாசகத்தின் பொருளாய் அண்மையாயிருக்கின்ற அரூபியாய் அகண்டமாயிருப்பதுமன்றி கருணையே ஒருருவாய் ஒரு சரீரஅளவிற்கு வந்தது என்னென்று சொல்வது எனத் திருவாய் மலர்ந்தார்கள்.

**10. பொய்யோடு மெய்யேது மில்லாத பெருமான்**
**புவநிக்க ணெம்மைப்பு குந்தாள விதுவு**
**மையோவொ ரளவாவ தேயென்று மொழிவா**
**ரருளோவி தருளோவி தருளோவி தென்பார்**

| | |
|---|---|
| பொய்யோடு மெய்யேதும் இல்லாத பெருமாள் | சொப்பன ஜகத்தும் சத்தியம் போலத் தோன்றும் சாக்கிர ஜகத்தும் காமரூப முதலிய யாவும் தன்னிடமின்றி வேறாக |

| | |
|---|---|
| | விளங்குகின்ற பெரும்பொருளான இறைவன், |
| புவிநிக்கண் | இம் மண்ணுலகின் கண்ணே (இப்பூவுலகில்) |
| எம்மைப்புகுந்தாள | எம்போன்ற தாபத்திரை துக்கம் தாங்கொணாத) வர்களை ஆட்கொள்ளும்பொருட்டு |
| இதுவும் | இந்தத்திருவுருவம் |
| அய்யோ | ஐயோவென இரங்கக்கூறிப் (இரங்கி) |
| ஓரளவாவது | பரிச்சின்ன (ஸ்ரீ சொரூபானந்த) வடிவமானது |
| என்று மொழிவார் | இவ்வாறு வாழ்த்தினார்கள். |
| அருளோ இது | இதுதான் திருவருள் செய்யும் கருணையோ |
| இருளோ இது என்பார் | கிருபையோ இதுவும். இதுதான் திருவருட்கடாக்ஷமோ என வியந்தார்கள், |

சொப்பன ஜகத்தும் சத்தியம் போலத் தோன்றும் சாக்கிர ஜகத்தும் காமரூப முதலிய யாவும் தன்னிடமின்றி வேறாக விளங்குகின்ற பெரும்பொருளான இறைவன், இம் மண்ணுலகின் கண்ணே (இப்பூவுலகில்) எம்போன்ற தாபத்திரை துக்கம் தாங்கொணாத) வர்களை ஆட்கொள்ளும்பொருட்டு இந்ததிருவுருவம் ஐயோவென இரக்க கூறிப் (இரங்கி) பரிச்சின்ன (ஸ்ரீ சொரூபானந்த) வடிவமானது இவ்வாறு வாழ்த்தினார்கள். இதுதான் திருவருள் செய்யும் கருணையோ கிருபையோ இதுவும். இதுதான் திருவருட்கடாக்ஷமோ என வியந்தார்கள்,

**11. எண்ணாத பெருவாழ்வெ மக்காய பெருமா**
**னெழுதப்ப டாமேனி யிதுகாண வெங்குங்**
**கண்ணான திலையேயெ மக்கென்று மொழிவார்**
**கண்ணல்ல காணாத கண்ணென்று ரைப்பார்**

| | |
|---|---|
| எண்ணாத | கருதமுடியாத |
| பெருவாழ்வு | பிறப்பற்று நீணான் (அநேக காலம்) |
| எமக்காய பெருமான் | நிலையான வாழ்க்கையாக எம்போன்ற ஏழைகட்கு (பக்குவமிலார்க்கு) பெரும்பொருளாயிருப்பவன் |
| எழுதப்படாத மேனி | பிரம்மா முதலிய சித்திரக்காரர்களாலும் வரையமுடியுமா திருவுருவம். |
| இதுகாண | அண்மைக்கண்(சமீபத்தில்) தோன்றும் இந்த ஸ்ரீசொரூபானந்தரது திருவுருவம் கண்டு தெரிசிக்க |
| எங்குங் கண்ணானது இலையோ எமக்கு என்று மொழிவர் | அடியவர்களாகிய எங்கட்கு எவ்விடங்களிலும் (தேக முழுவதும்) கண்களாக இல்லாமல் போய் விட்டதே என வாழ்த்தினார்கள் |

கருதமுடியாத பிறப்பற்று நீணான் (அநேக காலம்) நிலையான வாழ்க்கையாக எம்போன்ற ஏழைகட்கு (பக்குவமிலார்க்கு) பெரும்பொருளாயிருப்பவன் பிரம்மா முதலிய

சித்திரக்காரர்களாலும் வரையமுடியுமா திருவுருவம். அண்மைக்கண்(சமீபத்தில்) தோன்றும் இந்த ஸ்ரீசொரூபானந்தரது திருவுருவம் கண்டு தெரிசிக்க அடியவர்களாகிய எங்கட்கு எவ்விடங்களிலும் (தேக முழுவதும்) கண்களாக இல்லாமல் போய் விட்டதே என வாழ்த்தினார்கள்

**12. ஏயாத வெமையாளு பெருமானை யென்னே**
**யிரும் போநம் முடல்கொண்டெவ் விடமெங்கு மெங்கும்**
**வாயாய்வ ழுத்தாதி ராநின்ற தென்பார்**
**மலர்ப்பாத மீதுள்ள மாலாகி வீழ்வார்**

| | |
|---|---|
| ஏயாத | ஒன்றுக்கும் பற்றாத |
| எமையாளு பெருமானை | எங்களை யாட்கொண்ட (பிறவிக் கடலில் வீழா வண்ணம்) காத்து ரக்ஷித்த பெரியானை |
| கொண்டு எவ்விடமெங்கும் வாயாய் | உடம்பெல்லாம் வாயாக (தேகமுழுவதும்) வைத்து |
| வழுத்திரா நின்றது | வாழ்த்தாமலிருப்பது |
| நம்முடல் இரும்போ | நமது சரீரம் பலம் பொருந்திய உலோகங்களில் ஒன்றான இரும்புதானோ அல்லது கல்லோ. |
| மலர்ப்பாதம் மீது | திருவடித் தாமரையின்கண் |
| உள்ளம் மாலாகி வீழ்வார் | மயங்கி வண்டுபோல் விழுந்து விடுவார்கள். அவர்கள் செயல் அயனுமறியான். |

ஒன்றுக்கும் பற்றாத எங்களை யாட்கொண்ட (பிறவிக் கடலில் வீழா வண்ணம்) காத்து ரக்ஷித்த பெரியானை உடம்பெல்லாம் வாயாக (தேகமுழுவதும்) வைத்து வாழ்த்தாமலிருப்பது நமது சரீரம் பலம் பொருந்திய உலோகங்களில் ஒன்றான இரும்புதானோ அல்லது கல்லோ. இந்நூலாசிரியர் வேறோரிடத்துக் கூறுவார்

வள்ளாளன் சொரூபன் சீர் நினையாத மனந்தான்
வன்பாறை இரும்பன்று வலிதிது வலிதே

என்றார். இதுவும் ஓர் ஆச்சரியமென்பார்கள். திருவடித் தாமரையின்கண் மயங்கி வண்டுபோல் விழுந்து விடுவார்கள். அவர்கள் செயல் அயனுமறியான்.

**13. அருகேசெ லச்செல்லு வாரஞ்சி நிற்பா**
**ரஞ்சாது சென்றாலு மெஞ்சாது புல்லற்**
**கொருகோடி கையில்லை யேயென்று மொழிவா**
**ரொன்றாலு மாராது காணென்று ரைப்பார்**

| | |
|---|---|
| அருகே செலச் செல்லுவார் | அடியவர்கள் அனைவரும் நெருங்கி சமீபத்தில் செல்வோமென விரைவார்கள். |
| அஞ்சி நிற்பார் | மீண்டும் பயந்து நின்று விடுவார்கள். |
| அஞ்சாது சென்றாலும் | அவ்வாறு பயமின்றி சமீபத்தில் நெருங்கிய போதிலும் |
| எஞ்சாது புல்லற்கு | நன்றாக விடாது பற்றிக் கொள்வதற்கு |
| ஒரு கோடி கைகள் இல்லையே | கைகள் கோடி வேண்டுமே. அது நமக்கில்லாமல் போய்விட்டதே |
| என்று மொழிவார் | என இந்தப் பிரகாரம் கூறுவாராயினர். |
| ஒன்றாலும் ஆராது காணென்றுரைப்பார் | எவ்விதத்தும் (உடம்பெல்லாம் கண்ணாகக் கொண்டு பார்த்தாலும் சரி, தேக முழுவதும் வாயாகக் கொண்டு வாழ்த்தினாலும் சரி, ஒரு கோடி கைகளிருந்து பற்றி ஈர்த்து அனைத்தாலும் சரி) எவ்வாறு செய்யினும் திருப்தி அடையோம் (ஆசை நீங்கவே நீங்காது) என இவ்வாறு எப்பொழுதும் (சதாகாலமும்) மொழிந்து கொண்டிருப்பார்கள். |

அடியவர்கள் அனைவரும் நெருங்கி சமீபத்தில் செல்வோமென விரைவார்கள். மீண்டும் பயந்து நின்று விடுவார்கள். அவ்வாறு பயமின்றி சமீபத்தில் நெருங்கிய போதிலும் நன்றாக விடாது பற்றிக் கொள்வதற்கு கைகள் கோடி வேண்டுமே. அது நமக்கில்லாமல் போய்விட்டதே என இந்தப் பிரகாரம் கூறுவாராயினர். எவ்விதத்தும் (உடம்பெல்லாம் கண்ணாகக் கொண்டு பார்த்தாலும் சரி, தேக முழுவதும் வாயாகக் கொண்டு வாழ்த்தினாலும் சரி, ஒரு கோடி கைகளிருந்து பற்றி ஈர்த்து அனைத்தாலும் சரி) எவ்வாறு செய்யினும் திருப்தி அடையோம் (ஆசை நீங்கவே நீங்காது) என இவ்வாறு எப்பொழுதும் (சதாகாலமும்) மொழிந்து கொண்டிருப்பார்கள்.

**14. அன்னேயங் கவர்கள்செயலென்னா லிங்கொன்**
**றறையுமள விலகண்டே யறியி னல்லா**
**லின்னேதங் குறைக்காலங் கழித்தா ரென்ன**
**விக்கால மென்னையென வியம்ப லுற்றே**

| | |
|---|---|
| அன்னே | (விசேடப் பேய் கூறுவது) தாயே! பராசக்தியே! |
| அங்கு அவர்கள் செயல் | அவ்விடத்து (அந்த யுத்த களத்தின் கண்ணே) அந்த அடியவர்களுடைய செய்கையை (கிருத்தியங்களை) |
| கண்டேயறியினல்லால் | தாயே தாங்கள் நேரில் பார்க்க வேண்டுமேயல்லது |
| என்னாலிங்கு ஒன்று அறையும் அளவு இல | பேய் வடிவந்தாங்கிய அடிமையால் இவ்விடத்து ஒரு செயலாவது எடுத்து இயம்பக் கூடிய அளவில் இல்லை. (தாயே மன்னிக்கவும். என்னால் இயம்பலாகாது) |
| இக்காலம் என்னையென | அன்பின் பெருக்கான (இது சமயம் என்ன செய்கிறார்களோ என) |

| | |
|---|---|
| இயம்பலுற்ற | வாழ்த்திக் கொண்டிருந்தன. |
| இன்னே | இப்படியே |
| தங்குறைக்காலம் கழித்தாரென்ன | தங்களது சேஷமான காலத்தைப் போக்கினார்களென்று கூறியது. |

(விசேடப் பேய் கூறுவது) தாயே! பராசக்தியே! அவ்விடத்து (அந்த யுத்த களத்தின் கண்ணே) அந்த அடியவர்களுடைய செய்கையை (கிருத்தியங்களை) தாயே தாங்கள் நேரில் பார்க்க வேண்டுமேயல்லது பேய் வடிவந்தாங்கிய அடிமையால் இவ்விடத்து ஒரு செயலாவது எடுத்து இயம்பக் கூடிய அளவில் இல்லை. (தாயே மன்னிக்கவும். என்னால் இயம்பலாகாது) அன்பின் பெருக்கான (இது சமயம் என்ன செய்கிறார்களோ என) வாழ்த்திக் கொண்டிருந்தன. இப்படியே தங்களது சேஷமான காலத்தைப் போக்கினார்களென்று கூறியது.

**15. செய்தருளும் படிக்கிதுவு மன்றே தீர்க்கை**
**தேசிகனுக் கொருபொருளோ திரித்தல் பின்னு**
**முய்தரவந் தருளுகழ லுவந்து வாழ்த்தி**
**யுடம்பெடுத்த பயன்சிலநா ளுறுதற் கன்றோ**

| | |
|---|---|
| இப்படிக்கு | (மேற்கூறிய பிரகாரம்) இவ்வுலகின்கண்ணே |
| தீர்க்கை செய்தருளும் | உபதேசஞ் செய்து அனுக்கிரகம் பண்ணிய |
| தேசிகனுக்கு | ஞானாசிரியரான குருமூர்த்திக்கு |
| இதுவும் ஒரு பொருளோ | இது (இச்செய்கை) ஒரு பொருளாக மாட்டாது. |
| அன்றே | அல்லவே |
| பின்னுந்திரித்தல் | பகிர்முகமாக செல்லும் மனோவிருத்தியை அந்தர்முகமாக மாறுபடுத்தல் |
| உய்தர வந்து அருளு கழல் | நாம் (பிறவிக் கடலினின்றும்) ஈடேறும் பொருட்டு எழுந்தருளிச் செய்த வீர கண்டாமணி தரித்த திருவடியை |
| உவந்து வாழ்த்தி | மிக களிப்புடன் தோத்திரம் செய்து வணங்குவதும் |
| உடம்பெடுத்தபயன் | இந்த மனித தேகம் பெற்ற பரமப் பிரயோஜனம் (ஜீவன், முக்தி, சுகம்) |
| சில நாளில் உறுதற்கன்றோ | கூடிய சீக்கிரம் பெறுவதற்கல்லவா. |

(மேற்கூறிய பிரகாரம்) இவ்வுலகின்கண்ணே உபதேசஞ் செய்து அனுக்கிரகம் பண்ணிய ஞானாசிரியரான குருமூர்த்திக்கு இது (இச்செய்கை) ஒரு பொருளாக மாட்டாது. அல்லவே பகிர்முகமாக செல்லும் மனோவிருத்தியை அந்தர்முகமாக மாறுபடுத்தல் நாம் (பிறவிக் கடலினின்றும்) ஈடேறும் பொருட்டு எழுந்தருளிச் செய்த வீர கண்டாமணி தரித்த திருவடியை மிக களிப்புடன் தோத்திரம் செய்து வணங்குவதும் இந்த மனித

தேகம் பெற்ற பரமப் பிரயோஜனம் (ஜீவன், முக்தி, சுகம்) கூடிய சீக்கிரம் பெறுவதற்கல்லவா.

**16 முழுந்தியவன் பினர்மலர்த்தாண் முடிமேற்சூட**
**மூவர்களுந் தேவர்களு முழுதும் போற்ற**
**வெழுந்தருளி யிருந்தனனிங் கிறைவன்செய்த**
**வியல்பிதுவென் றிறைவிபதத் திறைஞ்சலுள்றே**

| | |
|---|---|
| முழுந்திய அன்பினர் | குரு பக்தியில் மூழ்கிய அன்புள்ளங்கொண்டவர்கள் (மெய்யடியவர்கள்) |
| மலர்த்தாள் முடிமேல் சூட்டிட | குரு மூர்த்தியின் (ஸ்ரீ சொரூபானந்தரது) திருவடித் தாமரையை தங்கள் (அடியவர்கள்) சிரசின் மீது தரித்துக் கொண்டார்கள். |
| மூவர்களுந் தேவர்களும் | திரிமூர்த்திகளும் இந்திராதி தேவ குழாங்களும் |
| முழுதும் போற்ற | இரவு பகலற இருந்து துதிக்க |
| எழுந்தருளியிருந்தவன் | கிருபா நோக்கஞ் செய்து வீற்றிருந்தனன். |
| இறைவன் செய்த வியல்பு என்று | ஸ்ரீகண்ட பரமேஸ்வரன் (ஸ்ரீசொரூபானந்தர்) செய்கை (சுபாவமான) செயல் இவ்வாறிருந்தது என |
| இறைவி பதத்திறைஞ்சலுற்றே | தேவியாகிய பராசக்தியின் திருவடியை வணங்கி (விசேஷப் பேய்) துதித்துக் கொண்டு பக்கத்திலிருந்தன என்பதாம். |

குரு பக்தியில் மூழ்கிய அன்புள்ளங்கொண்டவர்கள் (மெய்யடியவர்கள்) குரு மூர்த்தியின் (ஸ்ரீ சொரூபானந்தரது) திருவடித் தாமரையை தங்கள் (அடியவர்கள்) சிரசின் மீது தரித்துக் கொண்டார்கள். திரிமூர்த்திகளும் இந்திராதி தேவ குழாங்களும் இரவு பகலற இருந்து துதிக்க கிருபா நோக்கஞ் செய்து வீற்றிருந்தனன். ஸ்ரீகண்ட பரமேஸ்வரன் (ஸ்ரீசொரூபானந்தர்) செய்கை (சுபாவமான) செயல் இவ்வாறிருந்தது என தேவியாகிய பராசக்தியின் திருவடியை வணங்கி (விசேஷப் பேய்) துதித்துக் கொண்டு பக்கத்திலிருந்தன என்பதாம்.

**17. எனக்கினிய சொருபாநந் தனையெங் கோனை**
**யேத்தியவன் புகழினை யேயியம்பா நின்ற**
**வுனக்கினி யென்செய்வ னென விறைவியன்போ**
**டுச்சியைமோந் திடுந்தழுவு முவகையுற்றோ**

| | |
|---|---|
| எனக்கினிய சொரூபானந்தனை | என தனக்கு அளவில் ஆனந்தம் அளிக்கக் கூடிய சுக வடிவ சுவாமியை |
| எங்கோனை | எமது தலைவனை |

| | |
|---|---|
| யேத்தி | தோத்தரித்து |
| அவன் புகழினையே இயம்பா நின்ற | அந்த ஸ்ரீசொரூபானந்த சுவாமிகளது புகழ் (கீர்த்தி) பிரபாவங்களையே பெரிதும் போற்றுகின்ற (துதிக்கின்ற) |
| உனக்கு | விசேடப் பேயான உம் தனக்கு |
| இனி என்ன செய்வனென | மேலும் என்ன கைம்மாறு தான் செய்குவேன் என்று |
| இறைவி | தேவியானவள் |
| அன்போடு | மிகுந்த கருணையுடன் |
| உச்சி மோந்திடும் | சிரசில் நாசியை வைத்தும் |
| உவகையுற்றே தழுவும் | மிக்க மகிழ்ச்சியுடன் பின்புறமுதுகை வருடி தழுவிக் கொண்டும் இஃது அளவில் ஆனந்தச் செயல்கள். |

என தனக்கு அளவில் ஆனந்தம் அளிக்கக் கூடிய சுக வடிவ சுவாமியை எமது தலைவனை தோத்தரித்து அந்த ஸ்ரீசொரூபானந்த சுவாமிகளது புகழ் (கீர்த்தி) பிரபாவங்களையே பெரிதும் போற்றுகின்ற (துதிக்கின்ற) விசேடப் பேயான உம் தனக்கு மேலும் என்ன கைம்மாறு தான் செய்குவேன் என்று தேவியானவள் மிகுந்த கருணையுடன் சிரசில் நாசியை வைத்தும் மிக்க மகிழ்ச்சியுடன் பின்புறமுதுகை வருடி தழுவிக் கொண்டும் இஃது அளவில் ஆனந்தச் செயல்கள்.

**18. உடையசோ தியிலொர்மா சறவினா நிலனிலோ**
**ருருவமா யருவமா சொருபனா ருடையசீ**
**ரிடையறா துருகியோ திடுதலே யுரிமையா**
**மிதனைநீ பெறுகெனா விறைவிதா னருளியே**

| | |
|---|---|
| உடைய சோதியில் | நம்மையாளுடைய சுயஞ்சோதி சொரூபத்தில் |
| ஓர் மாசு அற | ஒரு குற்றமுமில்லாமல் (காமாதி முக்குற்றம்) ஆணவம், காமியம், மாயை முதலியனவும் இன்றி |
| இனாள் | இந்த கலியுகத்தில் |
| நிலனில் | இப்பூவுலகின்கண்ணே |
| அருவமாம் | அரூபியாயிருக்கப் பட்டவர் |
| சொரூபனார் | ஸ்ரீசொரூபானந்த மூர்த்தியானவர் |
| உருவமாயுடைய | ஒப்பற்ற திருவுரு தாங்கி வந்த |
| சீர் | கீர்த்தியை சிறப்பினை (அழகினை) |
| இடையறாது | இரவு பகல் தையிலதாரை போல் தொடர்ச்சியாக |
| உருகி | சிந்தித்து நெருப்பிலிட்ட வெண்ணெய் போல் உளம் கசிந்து (இளகி) |
| ஓதிடுதலே உரிமையாம் நீ | உரிமையுடன் துதித்து வணங்குவதே வேலையாயுடைய விசேஷப் பேயான உமக்கு (நீங்கள்) இந்த இடையறாத பேரின்பத்தினை பெற்றுக் கொள்ளும் என்று இந்தப் பிரகாரம் |

| | |
|---|---|
| இறைவிதானருளியே | தேவியான மனோன்மணி சக்தி இவ்வாறு (கருணாமிர்தம் செய்தனள்) காதிற்கினிமையாக அருள் செய்தாய். (ஆசீர்வாதம் செய்தனள்) |

நம்மையாளுடைய சுயஞ்சோதி சொரூபத்தில் ஒரு குற்றமுமில்லாமல் (காமாதி முக்குற்றம்) ஆணவம், காமியம், மாயை முதலியனவும் இன்றி இந்த கலியுகத்தில் இப்பூவுலகின்கண்ணே அரூபியாயிருக்கப் பட்டவர் ஸ்ரீசொரூபானந்த மூர்த்தியானவர் ஒப்பற்ற திருவுரு தாங்கி வந்த கீர்த்தியை சிறப்பினை (அழகினை) இரவு பகல் தையிலதாரை போல் தொடர்ச்சியாக சிந்தித்து நெருப்பிலிட்ட வெண்ணெய் போல் உளம் கசிந்து (இளகி) உரிமையுடன் துதித்து வணங்குவதே வேலையாயுடைய விசேஷப் பேயான உமக்கு (நீங்கள்) இந்த இடையறாத பேரின்பத்தினை பெற்றுக் கொள்ளும் என்று இந்தப் பிரகாரம் தேவியான மனோன்மணி சக்தி இவ்வாறு (கருணாமிர்தம் செய்தனள்) காதிற்கினிமையாக அருள் செய்தாய். (ஆசீர்வாதம் செய்தனள்)

*******************

# 26. களங் காட்டல்

1. **இலகுநா யகிதனா ரருளதாம் விழியினா**
**லிறைவனார் செயலிதா மெனவினே யருளவே**
**யலகைபோ யடையயோ கிநிகளா யருளினா**
**ரடிதொழா வமர்செய்மா களமெலா மளவியே**

| | |
|---|---|
| இலகு நாயகி | கருணையை உருவாக விளங்கிக் கொண்டிருக்கும் தேவி |
| தன் ஆர் அருளதாம் விழியினால் | தனது அருட்பார்வை (பொருந்திய கிருபா நோக்கம்) செய்து, |
| இறைவனார் செயல் இதாமென | குருமூர்த்தியின் செய்கை இத்தகைத்தென்று (இப்படிப் பட்டது என்று) |
| இனேயருளவே | அன்போடு உடனே அருள் செய்த மாத்திரத்தில் |
| அருளினால் | தனது பேரருட் சக்தியினால் |
| அலகைபோய் | பேய்த்தன்மை நீங்கி |
| அடைய யோகிநிகளாய் | அனைவரும் யோகியர்களாக (சித்த நிரோதம் உடைய) வர்களாய் |
| அடிதொழ | தேவியினது திருவடியை வணங்கி |
| அமர் செய் மாகளமெலாம் | யுத்தம் நடந்த (போர்க்களம் முழுவதும்) இடம் அனைத்தும் |
| அளவியே | சுற்றிப் பார்த்தார்கள். |

கருணையை உருவாக விளங்கிக் கொண்டிருக்கும் தேவி தனது அருட்பார்வை (பொருந்திய கிருபா நோக்கம்) செய்து, குருமூர்த்தியின் செய்கை இத்தகைத்தென்று (இப்படிப் பட்டது என்று) அன்போடு உடனே அருள் செய்த மாத்திரத்தில் தனது பேரருட் சக்தியினால் பேய்த்தன்மை நீங்கி அனைவரும் யோகியர்களாக (சித்த நிரோதம் உடைய) வர்களாய் தேவியினது திருவடியை வணங்கி யுத்தம் நடந்த (போர்க்களம் முழுவதும்) இடம் அனைத்தும் சுற்றிப் பார்த்தார்கள்.

2. **ஓராத மயலார்விட் டொழிந்த போதே**
**யுடனாகும் பிணிதன்னை யொழியாய்ச் சுற்றம்**
**பேராத துவந்துவங்கள் போதல் துக்கம்**
**பிணம்போகப் போமாபோற் காண்மின் காண்மின்**

| | |
|---|---|
| ஓராத மயலார் | விசாரமில்லாத காலத்தில் (சரீரத்தில்) தூல தேகத்தே பொருந்திய அபிமானமாகிய மயக்கம் |
| விட்டொழிந்தபோது | விசாரித்து நீங்கிய மாத்திரத்தில் |
| யடனாகும்பிணி | விட்டு நீங்காத நோயும் |
| அன்னையொழியாச் | ஆபாசனை விட்டொழியாத உறவினர் போல |

| | |
|---|---|
| சுற்றம் | |
| பேராத | தன்னை (ஆபாசனை) விட்டு நீங்காத |
| துவந்துவங்கள் | இரட்டைகளான (சுகம், துக்கம், லாபம், நஷ்டம், மானம், அவமானம் ஆகிய) இவைகள் |
| போதல் | ஜீவ சிதாபாசனாகிய தன்னை விட்டு நீங்குவது (எது போலென்னில்) |
| பிணம்போக | சவமானது இடுகாடு போய்ச் சேர்ந்த பின்னர் |
| துக்கம் போமாபோல | அப்பிணத்தின் உறவினர்களுக்கு எப்படி (பிணம் யிடுகாடு போனவுடன்) அழுகை வசனம் நீங்குவது போன்று |
| காண்மின் காண்மின் | பாருங்கள் நன்றாக பாருங்கள் (ஜீவ சிதாபாசனை விட்டு நீங்காத இரட்டைகளான (தேகாபிமானம் போன பின்னர்) துக்க வடிவ துவந்துவங்கள் இறந்து பட்டுக் கிடப்பதையும் பார்ப்பீர்களாக. |

விசாரமில்லாத காலத்தில் (சரீரத்தில்) தூல தேகத்தே பொருந்திய அபிமானமாகிய மயக்கம் விசாரித்து நீங்கிய மாத்திரத்தில் விட்டு நீங்காத நோயும் ஆபாசனை விட்டொழியாத உறவினர் போல தன்னை (ஆபாசனை) விட்டு நீங்காத இரட்டைகளான (சுகம், துக்கம், லாபம், நஷ்டம், மானம், அவமானம் ஆகிய) இவைகள் ஜீவ சிதாபாசனாகிய தன்னை விட்டு நீங்குவது (எது போலென்னில்) சவமானது இடுகாடு போய்ச் சேர்ந்த பின்னர் அப்பிணத்தின் உறவினர்களுக்கு எப்படி (பிணம் யிடுகாடு போனவுடன்) அழுகை வசனம் நீங்குவது போன்று பாருங்கள் நன்றாக பாருங்கள் (ஜீவ சிதாபாசனை விட்டு நீங்காத இரட்டைகளான (தேகாபிமானம் போன பின்னர்) துக்க வடிவ துவந்துவங்கள் இறந்து பட்டுக் கிடப்பதையும் பார்ப்பீர்களாக.

**3. தொத்தறவே மநந்துஞ்சப் புலன்க ளைந்துந்**
**துஞ்சியவா நஞ்சுமிழ்வா யஞ்சுஞ் சேரக்**
**கத்தறவே யடிக்கழுத்தை யரிய மாய்ந்த**
**கறையனற்கட் செவியொத்தல் காண்மின் காண்மின்**

| | |
|---|---|
| தொத்தறவே | இருவகை (அகம், புறம்) பற்றும் நீங்கியவுடன் |
| மனந்துஞ்ச | வாசனையோடு மனதும் நீங்கிய (ஸ்தூல மனம்) உருவ மனமும் ஒழிந்தன. |
| புலன்களனைத்தும் துஞ்சியவாறு | மெய், வாய், கண், மூக்கு செவியென ஐந்து இந்திரியங்களும் ஒழிந்ததைப்போல் |
| நஞ்சுமிழ்வாயஞ்சும் | கொடியவிஷத்தைக் கக்குகின்ற பாம்பினது |
| சேர | ஐந்து முகமும் ஒன்றாக சேர்ந்து |
| கத்தறவே அடிக் கழுத்தை | சீர்தலையுடைய பாம்பினது தலையின் அடிப்பாகத்தை |

| | |
|---|---|
| அரிய மாய்ந்த | அரிந்த உடனே இறந்தொழிந்த |
| கறையனற்கட் செவி யொத்தல் | கறையான் புற்றில் வசிக்கும் கண்ணே காதாக உடைய பாம்பை கழுத்தை நறுக்கப்பட்ட பாம்பைப்போல் (மனமிறந்தவுடன்) இந்த பஞ்சேந்திரியங்களும் இறந்து கிடப்பதைப் |
| காண்மின் காண்மின் | பாருங்கள். நன்றாகப் பாருங்கள். |

இருவகை (அகம், புறம்) பற்றும் நீங்கியவுடன் வாசனையோடு மனதும் நீங்கிய (ஸ்தூல மனம்) உருவ மனமும் ஒழிந்தன. மெய், வாய், கண், மூக்கு செவியென ஐந்து இந்திரியங்களும் ஒழிந்ததைப்போல் கொடியவிஷத்தைக் கக்குகின்ற பாம்பினது ஐந்து முகமும் ஒன்றாக சேர்ந்து சீர்தலையுடைய பாம்பினது தலையின் அடிப்பாகத்தை அரிந்த உடனே இறந்தொழிந்த கறையான் புற்றில் வசிக்கும் கண்ணே காதாக உடைய பாம்பை கழுத்தை நறுக்கப்பட்ட பாம்பைப்போல் (மனமிறந்தவுடன்) இந்த பஞ்சேந்திரியங்களும் இறந்து கிடப்பதைப் பாருங்கள். நன்றாகப் பாருங்கள்.

**4. மைப்படியு நறுங்குஞ்சி மாயை மாய**
**மாய்ந்தபடி வையமெரி மருவ வேரிற்**
**கப்புடனுங் கிளையுடனும் மரநே ராகக்**
**கரிசறப்பட் டமையொத்தல் காண்மின் காண்மின்**

| | |
|---|---|
| மைப்படியு நறுங்குஞ்சி | கரிய நிறமுடைய மணம் பொருந்திய கூந்தலோடு கூடிய |
| மாயை மாய | அவித்தையாகிய பெண் நசிக்க |
| வையம் மாய்ந்தபடி | அவித்தையா (மாயா) காரிய உலகம் அழிந்தது போல் |
| வேரில் எரி மருவ | மூலாதாரத்தில் நெருப்பு (அடியில்) பற்றிய உடனே, |
| காப்புடனுங் கிளையுடனுங் | கவர் பிளந்த கொம்புகளோடும் |
| மரம் நேராக | பெருந்தருவா (விருக்ஷமானது)னது கண்கூடாக (நேருக்கு நேராக பார்க்கும் பொழுது) |
| கரிசறப்பட்டமை யொத்தங் | உலர்ந்து போனதற்கு சமமாக (மாயையும்) மாயாகாரிய (உலகான) தேகாதிகள் மாய்ந்த தன்மையை |
| காண்மின் காண்மின் | பாருங்கள் இதோ பாருங்கள் |

கரிய நிறமுடைய மணம் பொருந்திய கூந்தலோடு கூடிய அவித்தையாகிய பெண் நசிக்க அவித்தையா (மாயா) காரிய உலகம் அழிந்தது போல் மூலாதாரத்தில் நெருப்பு (அடியில்) பற்றிய உடனே, கவர் பிளந்த கொம்புகளோடும் பெருந்தருவா (விருக்ஷமானது)னது கண்கூடாக (நேருக்கு நேராக பார்க்கும் பொழுது) உலர்ந்து

போனதற்கு சமமாக (மாயையும்) மாயாகாரிய (உலகான) தேகாதிகள் மாய்ந்த தன்மையை பாருங்கள் இதோ பாருங்கள்

**5. அவிழாத பிணியாக்கை யுடைய வஞ்ஞ**
**னழிந்தபடி தான்சாவ வுலக மெல்லாங்**
**கவிழாதோ வென்னுமுரை யார்க்கு மேற்கக்**
**கரமணிபோற் காட்டியவா காண்மின் காண்மின்**

| | |
|---|---|
| அவிழாத | தலைமை கெடாத |
| பிணியாக்கை | நோயால் கட்டப்பட்ட தேகத்தோடு பொருந்திய |
| அஞ்ஞனழிந்தபடி | அறியாமை நீங்கியது (அஞ்ஞவேந்தன் ஒழிந்தது) போல், |
| தான் சாவ | அந்தக் கரணம் ஒழிந்ததும் |
| உலகமெல்லாங் கவிழாதோ | திருஷ்ட நஷ்ட சுபாவமுடைய (பார்த்திருக்க அழியுமுலகம்) பிரபஞ்ச மனைத்தும் அழிந்தே விடும். |
| என்னுமுரை | என்று கூறிய வசிட்டாதி முனி புங்கவர் கூறிய உறுதிமொழி |
| யார்க்குமேற் | இவ்வுலகிலுள்ள விவேக புருஷர்கள்அனைவரும் சம்மதிக்கும்படி |
| கரமணிபோற் | உள்ளங்கையிலிருக்கும் ரத்தினம்போல் |
| காட்டியவா காண்மின் காண்மின் | அறிவித்த பிரகாரம் அறிந்து கொள்ளுங்கள். |

தலைமை கெடாத நோயால் கட்டப்பட்ட தேகத்தோடு பொருந்திய அறியாமை நீங்கியது (அஞ்ஞவேந்தன் ஒழிந்தது) போல், அந்தக் கரணம் ஒழிந்ததும் திருஷ்ட நஷ்ட சுபாவமுடைய (பார்த்திருக்க அழியுமுலகம்) பிரபஞ்ச மனைத்தும் அழிந்தே விடும். என்று கூறிய வசிட்டாதி முனி புங்கவர் கூறிய உறுதிமொழி இவ்வுலகிலுள் விவேக புருஷர்கள் அனைவரும் சம்மதிக்கும்படி உள்ளங்கையிலிருக்கும் ரத்தினம் போல் அறிவித்த பிரகாரம் அறிந்து கொள்ளுங்கள்.

**6. நெய்விட்ட கருங்குழலார் தம்பால் வைத்த**
**நெஞ்சொழிந்தா ரைம்புலன் சேரின்ப நேராக்**
**கைவிட்டா ரொழியாவா நந்த போகக்**
**காமுகராய் முடிந்தபடி காண்மின் காண்மின்**

| | |
|---|---|
| நெய்விட்ட கருங்குழலார் | நெய்பூசிய கரிய கூந்தலையுடைய பெண்கள் |
| தம்பால் வைத்த | அப்பெண்கள் தம்மிடம் செலுத்திய |
| நெஞ்சு ஒழிந்தார் | மனம் மாறிய (நீங்கிய) வர்கள் |

| | |
|---|---|
| ஐம்புலன் சேரின்பம் | பஞ்சேந்திரிய வழித்தாக வந்த சுகத்தை |
| நேராக் கை விட்டார் | அறிந்து கொண்டிருக்க அப்படியே (சாக்ஷாத்காரமாக) நீங்கினார்கள் (அக்கணமே) பின்னர் |
| ஒழியாவா நந்த போக காமுகராய் | தனது யதார்த்த வடிவ (தன்னை) விட்டு நீங்காத பேரின்ப வெள்ளத்தில் பேராசையுற்றவராய் |
| முடிந்தபடி | அழிவெய்திய தன்மையைப் போல் |
| காண்மின் காண்மின் | பாருங்கள் பாருங்கள் |

நெய்பூசிய கரிய கூந்தலையுடைய பெண்கள் அப்பெண்கள் தம்மிடம் செலுத்திய மனம் மாறிய (நீங்கிய) வர்கள் பஞ்சேந்திரிய வழித்தாக வந்த சுகத்தை அறிந்து கொண்டிருக்க அப்படியே (சாக்ஷாத்காரமாக) நீங்கினார்கள் (அக்கணமே) பின்னர் தனது யதார்த்த வடிவ (தன்னை) விட்டு நீங்காத பேரின்ப வெள்ளத்தில் பேராசையுற்றவராய் அழிவெய்திய தன்மையைப் போல் பாருங்கள் பாருங்கள்

7. **இணைப்பரிய பேரின்பந் தன்னின் மூழ்கி**
**இன்புறப்பட் டெவ்விடத்து மெக்கா லத்துங்**
**கணப்பொழுது மின்பமிலா வுடம்ப ரின்பங்**
**கைவிடனீத் தமைகாட்டல் காண்மின் காண்மின்**

| | |
|---|---|
| எவ்விடத்தும் | சர்வ தேசங்களிலும், |
| எக்காலத்தும் | மூன்று காலங்களிலும் |
| இணைப்பரிய | சமானமின்றிய |
| தன்னின் மூழ்கி | பிரம்மானந்த வெள்ளத்துள் அமிழ்ந்து (திளைத்து) |
| கணப்பொழுதும் | க்ஷண நேரமாகிலும் (சிறிது காலமாவது) |
| இன்பமிலா | சுகமென்பது அற்பமுமில்லாத |
| வுடம்பரின்பம் | மகளிரின்பத்தை |
| கை விடனீத்தமை | கை நழுவியது போல் விடலால் (சகலத் தியாகம் செய்திருப்பவர்களை) |
| காட்டல் | அறிவிக்க, |
| காண்மின் காண்மின் | அறிந்து கொள்ளுங்கள். நான்றாயறிந்து கொள்ளுங்கள். |

சர்வ தேசங்களிலும், மூன்று காலங்களிலும் சமானமின்றிய பிரம்மானந்த வெள்ளத்துள் அமிழ்ந்து (திளைத்து) க்ஷண நேரமாகிலும் (சிறிது காலமாவது) சுகமென்பது அற்பமுமில்லாத மகளிரின்பத்தை கை நழுவியது போல் விடலால் (சகலத் தியாகம் செய்திருப்பவர்களை) அறிவிக்க, அறிந்து கொள்ளுங்கள். நான்றாயறிந்து கொள்ளுங்கள்.

8. செற்றவர்க டம்முடனுஞ் செறுதற் கென்றுஞ்
சிந்தைசெயுந் திறன்மறந்து சிறப்பே செய்யக்
கற்றவர்தம் முடனான பிறப்பை யெல்லாங்
கரிசறுத்த பெரியசினங் காண்மின் காண்மின்

| | |
|---|---|
| செற்றவர்கள் தம்முடனும் | தம்மீது கோபித்து பயங்கரமாகிய துன்பத்தை செய்தவர்களுக்கு |
| செறுதற்கென்றுஞ் சிந்தை செய்தும் | எப்பொழுதும் அவர்களுக்கு துன்பஞ் செய்ய வேண்டும் என்று எண்ணும் எண்ணத்தின் |
| திறன் மறந்து | மற்றும் அவர்கள் செய்த துன்பத்தையும் விட்டு(நினையாமல்) நீத்து |
| சிறப்பே செய்ய | மீண்டும் அத்துட்டர்களுக்கு வெகுமதி கொடுத்து (திரவியம்) கொடுத்தும் இன்சொல் பேசியும் பாராட்டுதலை செய்வதற்கும் |
| கற்றவர்தம்முடனான | கற்க வேண்டியவற்றை கற்று (அதன்படி நடந்து) ஆய்ந்து அடங்கிய அறிஞர்களிடத்தும் |
| பிறப்பையெல்லாம் | தோன்றிய பிறவிகள் (தோறும்) அனைத்தையும் |
| கரிசறுத்த பெரிய சினம் | மீதமின்றிய மகத்தான கோபம் என்பவன் |
| காண்மின் காண்மின் | (இதோ இறந்து கிடக்கிறான்) இதோ பாருங்கள் அக் கோபனைப் பாருங்கள். |

தம்மீது கோபித்து பயங்கரமாகிய துன்பத்தை செய்தவர்களுக்கு எப்பொழுதும் அவர்களுக்கு துன்பஞ் செய்ய வேண்டும் என்று எண்ணும் எண்ணத்தின் மற்றும் அவர்கள் செய்த துன்பத்தையும் விட்டு(நினையாமல்) நீத்து மீண்டும் அத்துட்டர்களுக்கு வெகுமதி கொடுத்து (திரவியம்) கொடுத்தும் இன்சொல் பேசியும் பாராட்டுதலை செய்வதற்கும் கற்க வேண்டியவற்றை கற்று (அதன்படி நடந்து) ஆய்ந்து அடங்கிய அறிஞர்களிடத்தும் தோன்றிய பிறவிகள் (தோறும்) அனைத்தையும் மீதமின்றிய மகத்தான கோபம் என்பவன் (இதோ இறந்து கிடக்கிறான்) இதோ பாருங்கள் அக் கோபனைப் பாருங்கள்.

9. பழிப்பாகி யொருகாலு மிதுகொண்டு கௌவுற்ற
பயனற்ற பொருள் விட்டெலா
மழித்தாலு மழியாத பொருள்பேணி யிவருற்ற
வாராமை காண்மின்களோ

| | |
|---|---|
| பழிப்பாகி | இழிவான நிந்தையோடும் |
| இது கொண்டு | பொருந்திய எமக்கென்ற பேராசை வைத்து |

| | |
|---|---|
| கௌவுற்ற | தேடி பற்றிக்கொண்ட |
| பயனற்ற பொருள் விட்டு | ஒரு பிரயோஜனமு(புருஷார்த்த)ம் இல்லாத பொய்யான செல்வங்களை நீக்கி (விட்டொழித்து) |
| எலாமழித்தாலும் | அனைவரும் அழிக்க முயன்ற போதிலும் ஊழிக்காலத்தில் அனைத்தும் (அழிந்து போனாலும்) |
| அழியாத பொருள் பேணி | மூன்று காலத்துங் கெடாத சத்தான (பெரும்பொருள்) செல்வத்தை பாதுகாப்புடன் வைத்திருக்கும் |
| யிவருற்ற ஆராமை | இப்பெரியார்கள் தேடியடையப்பெற்ற பேராசையை (அடங்காத யியல்பை) |
| காண்மின்களோ | தெரிந்து கொள்வீர்களாக. |

இழிவான நிந்தையோடும் பொருந்திய எமக்கென்ற பேராசை வைத்துத் தேடி பற்றிக்கொண்ட ஒரு பிரயோஜனமு(புருஷார்த்த)ம் இல்லாத பொய்யான செல்வங்களை நீக்கி (விட்டொழித்து) அனைவரும் அழிக்க முயன்ற போதிலும் ஊழிக்காலத்தில் அனைத்தும் (அழிந்து போனாலும்) மூன்று காலத்துங் கெடாத சத்தான (பெரும்பொருள்) செல்வத்தை பாதுகாப்புடன் வைத்திருக்கும் இப்பெரியார்கள் தேடியடையப்பெற்ற பேராசையை (அடங்காத யியல்பை) தெரிந்து கொள்வீர்களாக.

**10. ஓராக மேபண்டு வடிவென்றி ருந்தார்க**
**ளுணர்வற்று மொழிவுற்றதோ**
**நேராக வுந்தங்கள் வடிவான திவர்நேதி**
**நேதித்தல் காண்மின்களோ**

| | |
|---|---|
| பண்டு ஓர் அகமே வடிவென்றிருந்தார்கள் | விசாரித்து (நான் யாரென்று) அறிவதற்கு முன்னர் ஒப்பற்ற பொருந்திய தேகம்தான் தனது யதார்த்த சொரூபமென எண்ணி வாழ்ந்தார்கள். |
| உணர்வுற்றதும் | தேகத்திற்கு வேறாக தன்னை அறிந்திருந்தாலும் |
| ஒழிவுற்றதோ | தேகந் தானல்ல (சச்சிதானந்த வடிவமே தான்) என்று அறிந்த போதிலும் நீங்காமல் தோற்றிக் கொண்டிருப்பதால், அவ்வாறெனில், பொய்யென்றறிந்தாலும் கோபாதி பிராந்தியினால் தோற்றிக் கொண்டிருக்கும் (எது போலெனில்) கானல் நீர் போலாம்– நிருபாதிக பிராந்தி மித்தையென்று அறிந்த போதே தோற்றாமல் போய்விடும். திருஷ்டாந்தம் மலடிமகன், முயல்கொம்பு போன்று. |
| நேராகவுந் தங்கள் வடிவமானது | கண்ணெதிரே (சாக்ஷாத்தாகவே) தனது யதார்த்தமான) ஆன்ம சொரூபத்தை பஞ்ச கோசங்களுக்கு வேறாக அறியும் பொருட்டு |
| இவர் நேதி நேதித்தல் | இந்த மகான்களான உத்தமர்கள் இது நானல்ல இது |

| | |
|---|---|
| | நானல்லவென பஞ்ச கோசங்களை (நைதி நைதி என்று) உபநிடதங் கூறியது போல் நேதிக் களைந்து தள்ளியதை |
| காண்மின்களோ | அறிந்து கொள்வீர்களாக (பாருங்கள் என்றவாறு) |

விசாரித்து (நான் யாரென்று) அறிவதற்கு முன்னர் ஒப்பற்ற பொருந்திய தேகம்தான் தனது யதார்த்த சொரூபமென எண்ணி வாழ்ந்தார்கள். தேகத்திற்கு வேறாக தன்னை அறிந்திருந்தாலும் தேகந் தானல்ல (சச்சிதானந்த வடிவமே தான்) என்று அறிந்த போதிலும் நீங்காமல் தோற்றிக் கொண்டிருப்பதால், அவ்வாறெனில், பொய்யென்றறிந்தாலும் கோபாதி பிராந்தியினால் தோற்றிக் கொண்டிருக்கும் (எது போலெனில்) கானல் நீர் போலாம்– நிருபாதிக பிராந்தி மித்தையென்று அறிந்த போதே தோற்றாமல் போய்விடும். திருஷ்டாந்தம் மலடிமகன், முயல்கொம்பு போன்று. கண்ணெதிரே (சாக்ஷாத்தாகவே) தனது யதார்த்தமான) ஆன்ம சொரூபத்தை பஞ்ச கோசங்களுக்கு வேறாக அறியும் பொருட்டு இந்த மகான்களான உத்தமர்கள் இது நானல்ல இது நானல்லவென பஞ்ச கோசங்களை (நைதி நைதி என்று) உபநிடதங் கூறியது போல் நேதிக் களைந்து தள்ளியதை அறிந்து கொள்வீர்களாக (பாருங்கள் என்றவாறு)

******

# 27. கூ ழடுவார்

**1. இந்தக்க ளம்பட்ட பாட்டுக்குநே**
**றொப்பி டத்தேடி டாதீசனார்**
**சந்திக்க விதுப்பட்ட தொப்பப்பெ**
**ருங்கூழ்ச மைப்பாரை யழைமின்களோ**

| | |
|---|---|
| ஈசனார் சந்திக்க | ஞான வேந்தன் எதிர்ப்பட்ட மாத்திரத்தில் |
| இது பட்டதொப்ப | இந்த யுத்த களத்தில் (அழிந்த அஞ்ஞ வேந்தனுக்கு) சமானமான உவமையிருத்தலால் |
| இந்தக் களம் பட்ட பாட்டுக்கு | அண்மை கண்ணிருக்கும் (சமீபத்திலிருக்கும்) போர்க்களத்தில் நடந்த செயல்களுக்கும் (அஞ்ஞ னழிவுக்கும் ) |
| நேர் ஒப்பிட | உவமை கூறிட (அஞ்ஞா திகளுக்கு அவர்களே சமானமாம்) |
| தேடிடாது | வேறே ஒரு சமானம் தேடாமல் |
| பெருங்கூழ் சமைப்பாரை | பெரும்படியாக (அதிகமாக) அன்னம் சமையல் செய்யும் (அரிவையர்களை) |
| அழைமின்களோ | பெண்களை கூவிக் கூட்டிக் கொள்ளுங்கள் என்பனவாம். |

ஞான வேந்தன் எதிர்பட்ட மாத்திரத்தில் இந்த யுத்த களத்தில் (அழிந்த அஞ்ஞ வேந்தனுக்கு) சமானமான உவமையிருத்தலால் அண்மை கண்ணிருக்கும் (சமீபத்திலிருக்கும்) போர்க்களத்தில் நடந்த செயல்களுக்கும் (அஞ்ஞ னழிவுக்கும் ) உவமை கூறிட (அஞ்ஞா திகளுக்கு அவர்களே சமானமாம்) வேறே ஒரு சமானம் தேடாமல் பெரும்படியாக (அதிகமாக) அன்னம் சமையல் செய்யும் (அரிவையர்களை) பெண்களை கூவிக் கூட்டிக் கொள்ளுங்கள் என்பனவாம்.

**2. சாந்தீ யுளவரு தாந்தீ வந்தடி தந்தார்திருவரு டன்னோடே**
**மாந்தீ நல்லறி மாலாய் கூழட வாரீர் கூழட வாரீரே**

| | |
|---|---|
| சாந்தி | ஆறுதல் செய்பவளே, சாந்த குணத்தையுடையவளே, (தேவகன் மகள்) வசுதேவன் மனைவி, அகக்கரணம் (மனம்) அடங்கியவளே, |
| உளவருதாந்தீ | உள்ளத்தையும் பஞ்சேந்திரியங்களையும் அடக்கியவளே, தவஞ் செய்தாலுண்டாகும் துன்பத்தை பொறுப்பவளே, |
| வந்து அடி தந்தார் தன்னோடே மாந்தீ | எழுந்தருளி வந்து திருவடி தீக்ஷை செய்த ஸ்ரீகுருமூர்த்தி யினிடமாக பேரின்பத்தைப் பருகியிருப்பவளே, |
| நல்லறி மாலாய் | சுத்த (ஞானமய) மான தனது சாக்ஷி சொரூபத்தில் மனம் கரைந்து அதில்தானே மயங்கி (தேனுண்ட வண்டானது அதில் கிடப்பது |

| | |
|---|---|
| | போல) இருக்கும் மாலினியே, |
| கூழட வாரீர் கூழட வாரீரே | ஏ! சோறாக்க வாங்கம்மா (நல்லரிவைமார்களே சோறாக்க வாங்கோ!) (சோறு—முக்தி ஆக்கல்—பக்குவப் படுத்தல்) |

ஆறுதல் செய்பவளே, சாந்த குணத்தையுடையவளே, (தேவகன் மகள்) வசுதேவன் மனைவி, அகக்கரணம் (மனம்) அடங்கியவளே, உள்ளத்தையும் பஞ்சேந்திரியங்களையும் அடக்கியவளே, தவஞ் செய்தாலுண்டாகும் துன்பத்தை பொறுப்பவளே, எழுந்தருளி வந்து திருவடி தீக்ஷை செய்த ஸ்ரீகுருமூர்த்தி யினிடமாக பேரின்பத்தைப் பருகியிருப்பவளே, சுத்த (ஞானமய) மான தனது சாக்ஷி சொரூபத்தில் மனம் கரைந்து அதில்தானே மயங்கி (தேனுண்ட வண்டானது அதில் கிடப்பது போல) இருக்கும் மாலினியே, ஏ! சோறாக்க வாங்கம்மா (நல்லரிவைமார்களே சோறாக்க வாங்கோ!) (சோறு—முக்தி ஆக்கல்—பக்குவப் படுத்தல்)

**3. மேலா ரொடுமிகு முறவீ தீவினை மிகுவாரொடுவிடு துறவீயம்
மாலா ரொடுவரு கருணாய் கூழட வாரீர் கூழட வாரீரே**

| | |
|---|---|
| மேலாரொடு மிகவும் வுறவீ | தம்மையொத்த ஞானிகளாகிய பெரியவர்களிடம் அதிக அன்பு கொண்டு (மைத்திரி) நட்பொடு உறவுகொண்டு வாழும் சிநேகியே! |
| தீ வினை மிகுவாரொடு விடு துறவீ | தாழ்ந்த குணங்களுடன் இழிதொழில் செய்யும் பாபிகளிடத்து (உபேட்சையாக) விருப்பு வெறுப்பின்றி விட்டு நீங்கியிருக்கும் (பற்றற்றவளே) |
| மாலாரொடு வரு கருணாய் | உலகம் சத்தியமென்றும் நாம் நித்தியமாயிருப்போம் என்று எண்ணி புண்ணிய தரும காரியங்களை செய்பவரிடத்தில் (முதிதை என்ற) இரக்கமுடையவளே! |
| கூழட வாரீர் கூழட வாரீரே | சமையல் செய்ய வாருங்கோ! சமையல் செய்ய வாருங்கோ! |

தம்மையொத்த ஞானிகளாகிய பெரியவர்களிடம் அதிக அன்பு கொண்டு (மைத்திரி) நட்பொடு உறவுகொண்டு வாழும் சிநேகியே! தாழ்ந்த குணங்களுடன் இழிதொழில் செய்யும் பாபிகளிடத்து (உபேட்சையாக) விருப்பு வெறுப்பின்றி விட்டு நீங்கியிருக்கும் (பற்றற்றவளே) உலகம் சத்தியமென்றும் நாம் நித்தியமாயிருப்போம் என்று எண்ணி புண்ணிய தரும காரியங்களை செய்பவரிடத்தில் (முதிதை என்ற) இரக்கமுடையவளே! சமையல் செய்ய வாருங்கோ! சமையல் செய்ய வாருங்கோ!

**4. பொறையே மிகவரு நிறைவீ புகழ்புனை பொன்னீ யருளினை யுன்னீயக்
குறையா நிறைவுறு திருவீ கூழட வாரீர் கூழட வாரீரே**

| | |
|---|---|
| பொறையே | உயிர்க்கிறுதி வந்தாலும் (பொறுமையுடன்) சகித்துக் கொண்டிருக்கும் சகியே! |
| மிகவரு நிறைவீ | உள்ளது போதுமென்று (மன நிறைவுடன் இருக்கும்) ஏ! திருப்தியே! |
| புகழ்புனை பொன்னீ | புலவர்களால் புகழ்ந்து பாராட்டப்பெற்ற ஏ! காவேரி! |
| யருளினை யுன்னீ | மனக்குறைவிலர் பூரணமாகிய(நிறைந்த) செல்வமுடையவளே (லக்ஷிமியே) |
| கூழட வாரீர் கூழட வாரீரே | சமையல் செய்ய வாருங்கோ! சமையல் செய்ய வாருங்கோ! |

உயிர்க்கிறுதி வந்தாலும் (பொறுமையுடன்) சகித்துக் கொண்டிருக்கும் சகியே! உள்ளது போதுமென்று (மன நிறைவுடன் இருக்கும்) ஏ! திருப்தியே! புலவர்களால் புகழ்ந்து பாராட்டப்பெற்ற ஏ! காவேரி! மனக்குறைவிலர் பூரணமாகிய(நிறைந்த) செல்வமுடையவளே (லக்ஷிமியே) சமையல் செய்ய வாருங்கோ! சமையல் செய்ய வாருங்கோ!

**5. முடிவே திதுவரு முதலே தெனவொரு மொழியா லளவிட முடியாத**
**வடிவே யடைவதொர் மதியே கூழட வாரீர் கூழட வாரீரே**

| | |
|---|---|
| இது வரு முதலேது | இவ்வஸ்து தோன்றியதற்கு காரணம் எதுவாக இருக்க வேண்டும், |
| இது முடிவு ஏது | இப்பர வஸ்து ஒடுங்கும் இடம் எங்கே |
| என வொறா மொழியால் | என்று ஒப்பற்ற மஹா வாக்கியத்தாலும் |
| அளவிட முடியாத | இவ்வளவினது என்று (கண்டமாக) கூறுதற்கரிதான |
| வடிவே | சமானமற்ற பரம்பொருளை |
| அடைவதொர் மதியே | அவ்வான்மப் பொருளைக் கிட்டி சுகமடைவேனென்ற நிச்சய புத்தியான (முமுக்ஷுவே)வளே, |
| கூழட வாரீர் கூழட வாரீரே | களத்தில் கஞ்சியாக்க (கூழ்க் கஞ்சி ஆக்க) வாருங்கோ! (வஸ்து வினிலக்கணம் கூறினார்) |

இவ்வஸ்து தோன்றியதற்கு காரணம் எதுவாக இருக்க வேண்டும், இப்பர வஸ்து ஒடுங்கும் இடம் எங்கே என்று ஒப்பற்ற மஹா வாக்கியத்தாலும் இவ்வளவினது என்று (கண்டமாக) கூறுதற்கரிதான சமானமற்ற பரம்பொருளை அவ்வான்மப் பொருளைக் கிட்டி சுகமடைவேனென்ற நிச்சய புத்தியான (முமுக்ஷுவே)வளே, களத்தில் கஞ்சியாக்க (கூழ்க் கஞ்சி ஆக்க) வாருங்கோ! (வஸ்து வினிலக்கணம் கூறினார்)

**6. பணியே சூடிய வணியே பாடிய பத்தீ கூடிய சித்தீநிர்க்**
**குணியே கோமள மொழியே கூழட வாரீர் கூழட வாரீரே**

| | |
|---|---|
| அணியே சூடிய பணியே | சிறந்த ஒழுங்கே ஆபரணமாய்(ஒழுக்கமே) அணிந்து கொண்டவளே! |
| பாடியபத்தீ | எப்பொழுதும் விட்டு நீங்காத அன்புடன் தோத்திரம் செய்பவளே! |
| கூடிய சித்தீ | சித்தத்தை ஜெயித்து அணிமாதி அஷ்ட சித்தி கைவரப் பெற்றவளே! |
| நிர்க்குணியே | முக்குணவயப்படாமல் (குண ரகிதமாய்) இருப்பவளே! |
| கோமள மொழியே | மிருதுவான (இன்சொல்லாகிய) குயில் போன்ற வாக்குடையவளே! |
| கூழடவாரீர் கூழட வாரீரே | ஏ! சோறாக்க வாங்கோ! சோறாக்க வாங்களே! |

சிறந்த ஒழுங்கே ஆபரணமாய்(ஒழுக்கமே) அணிந்து கொண்டவளே! எப்பொழுதும் விட்டு நீங்காத அன்புடன் தோத்திரம் செய்பவளே! சித்தத்தை ஜெயித்து அணிமாதி அஷ்ட சித்தி கைவரப் பெற்றவளே! முக்குணவயப்படாமல் (குண ரகிதமாய்) இருப்பவளே! மிருதுவான (இன்சொல்லாகிய) குயில் போன்ற வாக்குடையவளே! ஏ! சோறாக்க வாங்கோ! சோறாக்க வாங்களே!

**7. தன்போ லெவரோடு மன்பே விளைவதொர்**
**தாயே பவமெனு மாயாவிவ்**
**வன்பே கெடவரு**
**மன்பே கூழட வாரீர் கூழட வாரீரே**

| | |
|---|---|
| தன்போல் | தனது ஆத்ம சொரூபத்தில் வைத்திருக்கும் மிகுதியான அன்பு போன்று |
| எவரொடும் | தமக்கு வேறாகிய (அன்னியரான) மற்றவர்களிடமும் |
| அன்பே விளைவதொர் தாயே | எப்பொழுதும் இன்சொல்லே பேசி (இனிமையான வார்த்தைகளே கூறி) அதிகப் பிரியத்தை உண்டு பண்ணும் அம்மையே, |
| பவமெனும் | பிறப்பென்கின்ற |
| மாயா இவ்வன்பே கெட | நீங்காத மாயையின் காரியமான இப்பொல்லாப்பு நீங்க |
| வரும் அன்பே | எனது மேலான பரம் பிரியத்துக்கு ஏதுவாய் வருபவளே! |
| கூழட வாரீர் கூழட வாரீரே | கூழ் சமைக்க வாருங்கோ! கூழ் சமைக்க வாருங்கோ! |

தனது ஆத்ம சொரூபத்தில் வைத்திருக்கும் மிகுதியான அன்பு போன்று தமக்கு வேறாகிய (அன்னியரான) மற்றவர்களிடமும் எப்பொழுதும் இன்சொல்லே பேசி (இனிமையான வார்த்தைகளே கூறி) அதிகப் பிரியத்தை உண்டு பண்ணும் அம்மையே, பிறப்பென்கின்ற நீங்காத மாயையின் காரியமான இப்பொல்லாப்பு நீங்க எனது மேலான பரம் பிரியத்துக்கு ஏதுவாய் வருபவளே! கூழ் சமைக்க வாருங்கோ! கூழ் சமைக்க வாருங்கோ!

**8. ஒருமை யெனமுன் வகுத்த சித்ர மாகிய**
**வுலக வுரலை யமைத்து லக்கை யாகவிவ்**
**வுலோகர் பழுவை யொடித் தொடித்து நீளெயி**
**றுதிர்செய் தரிசி புடைத்தி டித்து மேலவர்**
**பெருமை முடியை யடுப்பு வைத்து மேலுறு**
**பிணிசெ யுடல்க டத்து லைச்செய் தாருயிர்**
**பெரிய விருளை நெரித்தெ ரிப்ப தாய்வினைப்**
**பிதிர்செய் தமிர்த மினிச்ச மைக்க வாருமே**

| | |
|---|---|
| ஒருமையென | ஒன்றென்று (ஏகம் பிரம்மம்) |
| முன்வகுத்த | முன்னமே (அநாதிகாலமாக) அமைத்து (வியாச, வசிட்டாதி முனிவர்களால்) வைத்த |
| சித்ரமாகிய உலக வுரலை | பொய்யான ஜெகத்தாகிய யெந்திரத்தை (அரைகல்லை) |
| அமைத்து | செம்மையா சேகரஞ் செய்து வைத்துக் கொண்டு |
| உலக்கையாக | இருப்புத் தண்டாகவும் (குத்துமுலக்கை–இடிமரம்) |
| இவ்வுலோகர் பழுவை | இப்பூமியின்கண் பெரியோர்களது முதுகெலும்பு போன்ற வினை என்ற காய்ந்த குச்சியை |
| ஒடித்தொடித்து | முறியும்படி முறித்து |
| நீளெயிர் உதிர் உதிர்த்து | நீண்ட பற்களை (அதாவது இருவினைகளை பொடியாக்கி) விழும்படி ஆக்கி |
| அரிசி இடித்து | அவற்றை (தண்டுலமானதை) நொய்யாக நொறுக்கி |
| புடைத்து | முறத்திலிட்டு தவிடுமி போகும்படிக்கு தட்டி (பழமலை மாயைத் தவிடுமி போக்கி) (என்றறுத்திடுவாய் என்றார் சிவப்பிரகாசர்) |
| மேலவர் பெருமை முடியை | அகங்காரனது பெரிய தலையை |
| அடுப்பு வைத்து | பரணி நாள் போன்று (தீ வாய் தானத்தை) சேர்க்கை செய்து, |
| மேல் உறு பிணி செய் உடல் கடத்து | இனி நோய் குடிகொண்ட உடம்பாகிய பானையில் |
| ஆருயிர் உலை செய்து | பொருந்திய ஜீவனை சமையல் செய்யும் பானையில் உலை நீராக வைத்து, |
| பெரிய விருளை | மூலாஞ்ஞானமாகிய இருளைக் கெடுத்து (அறியாமையென்னும் |

| | |
|---|---|
| நெரித்து | மயக்கத்தைக் கெடுத்து) |
| வினைப்பிதிர் செய்து எரிப்பதாய் | ஊழினை துகள்களாக்கி சுடும்படி செய்ய (சுட்டு எரித்து தகிக்கும்படியாக்கி |
| அமிர்தம் | பேரின்பமாம் சாவா மருந்தை |
| இனி சமைக்க வாருமே | பக்குவமாக இப்பொழுது செய்ய வருவீர்கள். |
| | |

ஒன்றென்று (ஏகம் பிரம்மம்) முன்னமே (அநாதிகாலமாக) அமைத்து (வியாச, வசிட்டாதி முனிவர்களால்) வைத்த பொய்யான ஜெகத்தாகிய யெந்திரத்தை (அரைகல்லை) செம்மையா சேகரஞ் செய்து வைத்துக் கொண்டு இருப்புத் தண்டாகவும் (குத்துமுலக்கை–இடிமரம்) இப்பூமியின்கண் பெரியோர்களது முதுகெலும்பு போன்ற வினை என்ற காய்ந்த குச்சியை முறியும்படி முறித்து நீண்ட பற்களை (அதாவது இருவினைகளை பொடியாக்கி) விழும்படி ஆக்கி அவற்றை (தண்டுலமானதை) நொய்யாக நொறுக்கி முறத்திலிட்டு தவிடுமி போகும்படிக்கு தட்டி (பழமலை மாயைத் தவிடுமி போக்கி) (என்றறுத்திடுவாய் என்றார் சிவப்பிரகாசர்) அகங்காரனது பெரிய தலையை பரணி நாள் போன்று (தீ வாய் தானத்தை) சேர்க்கை செய்து, இனி நோய் குடிகொண்ட உடம்பாகிய பானையில் பொருந்திய ஜீவனை சமையல் செய்யும் பானையில் உலை நீராக வைத்து, மூலாஞ்ஞானமாகிய இருளைக் கெடுத்து (அறியாமையென்னும் மயக்கத்தைக் கெடுத்து) ஊழினை துகள்களாக்கி சுடும்படி செய்ய (சுட்டு எரித்து தகிக்கும்படியாக்கி பேரின்பமாம் சாவா மருந்தை பக்குவமாக இப்பொழுது செய்ய வருவீர்கள்.

**9. பரவை யுலகம னைத்து முற்றெ மாருயிர்**
**படர்செ யுடல மெடுத்த ழித்து நோயொடு**
**பகலொ டிரவு பசித்தி ளைத்தி டாவகை**
**பவமெ னிருளை யறுத்து தித்த சோதிசெய்**
**யரவ மறைகள் சிரத்து நிர்த்த மாடிய**
**வரிய சொரூப னெனக்கு வைப்பெ னாருயி**
**ரமல ரடியார் சிரத்து வைத்த மாமணி**
**யடிகள் பரவி யுலக்கை குத்த வாருமே**

| | |
|---|---|
| பரவையுலகம் | கடல் சூழ்ந்த பூமி |
| அனைத்தும் | முழுதும் |
| உற்று | அடர்ந்து (நெருங்கிய) |
| எம் ஆர் உயிர் படர் செய் | துன்பஞ் செய்து பொருந்திய ஜீவன் (எனது ஜீவன்) |
| உடலம் எடுத்து | அறம் பாவத்துக்கீடாக அனேகஞ் சரீரம் கொண்டு |
| அழித்து | வினை நீங்கவும் கெடுத்து, |
| நோயொடு | பலவித வியாதிகளுடனும் |

| | |
|---|---|
| பகலொடு இரவு | இரவு பகலாக |
| பசித்துஇளைத்திடாவகை | பசியால் வருந்தி மெலிந்து போகா வண்ணம் |
| பவமெனிருளையறுத்து | பிறவியென்றதை தரும் ஆசையென்ற அறியாமையான யிருட்டை அகற்றி (கெடுத்து) |
| உதித்த | சதோதயமான |
| சோதிசெய் | ஞான சொரூபமாய் விளங்கச் செய்த |
| யரவ மறைகள் சிரத்து | சப்தங்களையுடைய வேத சிரசாக விளங்கும் (உபநிடதங்களில்) சர்ப்பத்தில் |
| நிர்த்தமாடிய | தனித் தாண்டவம் செய்த |
| அரிய சொருபன் | ஹரி பிரம்மாதியரும் அருமறையுமறியொண்ணாத ஸ்ரீசொரூபானந்த ஞான தேசிக மூர்த்தியானவர், |
| எனக்கு வைப்பு | தீனனாகிய யான்பெற்ற புதையல் |
| ஆம் என் ஆர் உயிர் | ஆம்! எனக்குப் பொருந்திய ஜீவனாகுமாம் |
| அமலர் | சுபாவ சித்தமாகவே மும்மலங்களுமற்றவராகும் |
| அடியர் சிரத்து வைத்த மாமணி | திருக்கூட்டத்தடியவர்களுக்கு சிரசில்அணிந்து கொள்ளும்படியான மாட்சிமை பொருந்திய (சிரோரத்ன) மாம். |
| அடிகள் பரவி | அந்த திவ்ய மங்கள தேஜோமய திருவடியை தொழுது வணங்கி |
| உலக்கை குத்த வாருமே | மரத்தண்டினால் நொய் இடிக்க வந்து சேருங்கள். |

கடல் சூழ்ந்த பூமி முழுதும் அடர்ந்து (நெருங்கிய) துன்பஞ் செய்து பொருந்திய ஜீவன் (எனது ஜீவன்) அறம் பாவத்துக்கீடாக அனேகஞ் சரீரம் கொண்டு வினை நீங்கவும் கெடுத்து, பலவித வியாதிகளுடனும் இரவு பகலாக பசியால் வருந்தி மெலிந்து போகா வண்ணம் பிறவியென்றதை தரும் ஆசையென்ற அறியாமையான யிருட்டை அகற்றி (கெடுத்து) சதோதயமான ஞான சொரூபமாய் விளங்கச் செய்த சப்தங்களையுடைய வேத சிரசாக விளங்கும் (உபநிடதங்களில்) சர்ப்பத்தில் தனித் தாண்டவம் செய்த ஹரி பிரம்மாதியரும் அருமறையுமறியொண்ணாத ஸ்ரீசொரூபானந்த ஞான தேசிக மூர்த்தியானவர், தீனனாகிய யான்பெற்ற புதையல் ஆம்! எனக்குப் பொருந்திய ஜீவனாகுமாம் சுபாவ சித்தமாகவே மும்மலங்களுமற்றவராகும் திருக்கூட்டத்தடியவர்களுக்கு சிரசில்அணிந்து கொள்ளும்படியான மாட்சிமை பொருந்திய (சிரோரத்ன) மாம். அந்த திவ்ய மங்கள தேஜோமய திருவடியை தொழுது வணங்கி மரத்தண்டினால் நொய் இடிக்க வந்து சேருங்கள்.

*****************

# 28. சும் முலக்கை

**1. அருவரையா யிரஞ்சிரங் கொண் டருமறைக ளறியாத**
**சொருபரையாங் கண்டனமே சும்மேலோ சும்முலக்காய்**

| | |
|---|---|
| அருவரை | தனக்கென யாதொரு (நாமரூப) வடிவமில்லாத சிதாகாச வெளியை |
| அருமறைகள் | பெருமை பொருந்திய இருக்காதி (அரிய) நான்கு வேதங்களும், |
| ஆயிரஞ்சிரங்கொண்டு | வேத சிரசாக விளங்கும் உபநிஷத்துக்கள் ஓராயிர முகத்தாலும் |
| அறியாத | காண மாட்டாத |
| சொருபரை | ஸ்ரீசொரூபானந்த சுவாமிகளை (சுயம் பிரகாசத்தை) |
| யாங் கண்டனமே | நாங்கள் தெரிசித்தோம் (சாக்ஷாத்காரம் பண்ணினோம்) |
| சும்மேலோ சும்முலக்காய் | சும்மு சும்மு என்று உலக்கை குத்துவோம் (போடுவோம்) |

தனக்கென யாதொரு (நாமரூப) வடிவமில்லாத சிதாகாச வெளியை பெருமை பொருந்திய இருக்காதி (அரிய) நான்கு வேதங்களும், வேத சிரசாக விளங்கும் உபநிஷத்துக்கள் ஓராயிர முகத்தாலும் காண மாட்டாத ஸ்ரீசொரூபானந்த சுவாமிகளை (சுயம் பிரகாசத்தை) நாங்கள் தெரிசித்தோம் (சாக்ஷாத்காரம் பண்ணினோம்) சும்மு சும்மு என்று உலக்கை குத்துவோம் (போடுவோம்)

**2. மாயவடி வளவாகி மதியிலியா யுழல்வேற்குத்**
**துாயவடி சூட்டினர்காண் சும்மேலோ சும்முலக்காய்**

| | |
|---|---|
| மாயவடிவளவாகி | பொய்யான் (மாயா காரிய) இந்த சரீர அளவிற்கு நானென்று எண்ணி |
| மதியிலியாய் வுழல்வேற்கு | விவேக புத்தியின்றி சுற்றி (பிறப்பிறப்பால்) திரிந்த என் போன்றவர்க்கு |
| துாயவடி சூட்டினர்காண் | பரிசுத்தமான (மாயா காரிய இருளற்ற) திருவடியை எமது சிரசிற்கணிகலனாக அணியச் செய்தார். (திருவடி தீக்ஷை செய்தார்) முத்தாபங்களும் (மும்மலங்களும்) நீங்கும் பொருட்டு செய்தார் அம்மா! சும்மு சும்மு என்று உலக்கை குத்துவோம் (போடுவோம்) |

பொய்யான் (மாயா காரிய) இந்த சரீர அளவிற்கு நானென்று எண்ணி விவேக புத்தியின்றி சுற்றி (பிறப்பிறப்பால்) திரிந்த என் போன்றவர்க்கு பரிசுத்தமான (மாயா காரிய இருளற்ற) திருவடியை எமது சிரசிற்கணிகலனாக அணியச் செய்தார். (திருவடி தீக்ஷை செய்தார்) முத்தாபங்களும் (மும்மலங்களும்) நீங்கும் பொருட்டு செய்தார் அம்மா! சும்மு சும்மு என்று உலக்கை குத்துவோம் (போடுவோம்)

**3. பின்னமொழி வகைபுரிந்தெம் பெருங்கருணைப் பெருமானார்**
**சொன்னமொழி யொன்றேகாண் சும்மேலோ சும்முலக்காய்**

| | |
|---|---|
| பின்னமொழி வகை புரிந்து | வேற்றுமை சொல்லின் தரம் அறிந்து |
| எம்பெருங்கருணைப் பெருமானார் | எமது தலைவராகிய பேரளுளாளர் |
| சொன்னமொழி | அனுக்கிரகஞ் செய்த (உபதேசஞ் செய்த வாக்கியம்) |
| ஒன்றேகாண் | ஏகமே தானென்னு (அது நீ என்று) அருளிச் செய்தாரென சொல்லி சும்மு சும்மு என்று உலக்கை குத்துவோம் (போடுவோம்) பின்ன மொழி என்றதால் பேதம் நீங்கவும் சொன்ன மொழி ஒன்றே என்றதால் அபேத சாதகமன (தத்துவமஸி) மஹாவாக்கியம் கூறினாரென்பதாம். |

வேற்றுமை சொல்லின் தரம் அறிந்து எமது தலைவராகிய பேரளுளாளர் அனுக்கிரகஞ் செய்த (உபதேசஞ் செய்த வாக்கியம்) ஏகமே தானென்னு (அது நீ என்று) அருளிச் செய்தாரென சொல்லி சும்மு சும்மு என்று உலக்கை குத்துவோம் (போடுவோம்) பின்ன மொழி என்றதால் பேதம் நீங்கவும் சொன்ன மொழி ஒன்றே என்றதால் அபேத சாதகமன (தத்துவமஸி) மஹாவாக்கியம் கூறினாரென்பதாம்.

**4. நம்மாலே காண்கின்ற நாமும்போய் நாமாகிச்**
**சும்மாவே யிருந்தனங்காண் சும்மேலோ சும்முலக்காய்**

| | |
|---|---|
| நம்மாலே காண்கின்ற | சாக்ஷி ஞாதா வடிவ விஷயமான அறிபடு பொருளான |
| நாமும்போய் | ஞான மயமாய் நாமரூப திருசியம் வஸ்துவிலொடுங்கி |
| நாமாகி | (நீங்கி) சிவமாகி (ஞாதா ஞாநம் நீங்கி ஞேய மாத்திரமாக) |
| சும்மாவே இருந்தனங்காண் | மனோமவுனமடைந்த நிலையிலிருந்தனன் பாருங்கள் |

சாக்ஷி ஞாதா வடிவ விஷயமான அறிபடு பொருளான ஞான மயமாய் நாமரூப திருசியம் வஸ்துவிலொடுங்கி (நீங்கி) சிவமாகி (ஞாதா ஞாநம் நீங்கி ஞேய மாத்திரமாக) மனோமவுனமடைந்த நிலையிலிருந்தனன் பாருங்கள்

5. வான்றுடங்கு முலகுதனின் மன்னுசரா சரங்களெலாந்
தோன்றுமிடன் பிறிதுண்டோ சும்மேலோ சும்முலக்காய்

| | |
|---|---|
| வான்றுடங்கும் உலகுதனின் | ஆகாய முதலாகத் தோன்றிய ஜகத்தில் (பூமியில்) |
| மன்னு சராசரங்களெலாந் | பொருந்திய சரிக்கக் கூடிய மநுடர் மிருகம் பறவை முதலியவும், அசரமான மலை, மர முதலியவனைத்தும் |
| தோன்றுமிடம் | உற்பத்தி ஸ்தானம் |
| பிறிது உண்டோ | தனது யதார்த்த வடிவ ஆன்மாவிற்கு வேறாக இல்லவே இல்லை சும்மு சும்மு என்று உலக்கை குத்துவோம் (போடுவோம்) |

ஆகாய முதலாகத் தோன்றிய ஜகத்தில் (பூமியில்) பொருந்திய சரிக்கக் கூடிய மநுடர் மிருகம் பறவை முதலியவும், அசரமான மலை, மர முதலியவனைத்தும் உற்பத்தி ஸ்தானம் தனது யதார்த்த வடிவ ஆன்மாவிற்கு வேறாக இல்லவே இல்லை சும்மு சும்மு என்று உலக்கை குத்துவோம் (போடுவோம்)

6. உலகாகி யுயிராகி யுணர்வாகி யொருபொருளே
துலங்காமை கண்டாயே சும்மேலோ சும்முலக்காய்

| | |
|---|---|
| உலகு ஆகி | சராசர வடிவ நாமரூப ஜகத்தாகியும், |
| உயிராகி | ஜீவனாகவும் |
| உணர்வாகி | ஆன்ம வடிவ அறிவாகவும் (ஈஸ்வரனாகவும்) |
| ஒரு பொருளே | ஒப்பற்ற சச்சிதானந்த சிவ பரம் (பொருளே) எல்லா (ஜக ஜீவ பர) மாயிருந்தும் |
| துலங்காமை | நம் அறியாமை அவிவேக திருஷ்டிக்கு விஷயமாகாது இருப்பது |
| கண்டாயே | பார்த்தனையோ சும்மு சும்மு என்று உலக்கை குத்துவோம் (போடுவோம்) ( ஒரு பொருளே உலகாகியும் உயிராகியும் யுணர்வாகியும் துலங்காமை கண்டாயே என்று கூட்டிக் கொள்ளவும்.) |

சராசர வடிவ நாமரூப ஜகத்தாகியும், ஜீவனாகவும் ஆன்ம வடிவ அறிவாகவும் (ஈஸ்வரனாகவும்) ஒப்பற்ற சச்சிதானந்த சிவ பரம் (பொருளே) எல்லா (ஜக ஜீவ பர) மாயிருந்தும் நம் அறியாமை அவிவேக திருஷ்டிக்கு விஷயமாகாது இருப்பது பார்த்தனையோ சும்மு சும்மு என்று உலக்கை குத்துவோம் (போடுவோம்) ( ஒரு பொருளே உலகாகியும் உயிராகியும் யுணர்வாகியும் துலங்காமை கண்டாயே என்று கூட்டிக் கொள்ளவும்.)

**7. சாத்திரமென் செயநமக்குத் தர்க்கமய லறுத்தபிரான்
தோத்திரமே யமையுமது சும்மேலோ சும்முலக்காய்**

| | |
|---|---|
| நமக்கு | மெய் அடியவர்களாகிய நம்போன்றவர்களுக்கு |
| சாத்திரமென்செய | வேதாகம புராணங்களால் எக்காரியம் செய்து முடிக்க போவோம். |
| தர்க்கமயலறுத்தபிரான் | தருக்கம் (சந்தேக விபரீதங்களை மனமயக்கம் (தேகம் நான் ஜகத் சத்தியம் ) என்ற எண்ணம் நீக்கிய தலைவனது |
| தோத்திரமே | நமது குருமூர்த்தியினது புகழ் பிரபாவங்களை கூறும் பாக்களே |
| அமையும் அது | அந்த தோத்திர பாக்களே (அதுவே நமக்கு போதும்) சும்மு சும்மு என்று உலக்கை குத்துவோம் (போடுவோம்) |

மெய் அடியவர்களாகிய நம்போன்றவர்களுக்கு வேதாகம புராணங்களால் எக்காரியம் செய்து முடிக்க போவோம். தருக்கம் (சந்தேக விபரீதங்களை மனமயக்கம் (தேகம் நான் ஜகத் சத்தியம் ) என்ற எண்ணம் நீக்கிய தலைவனது நமது குருமூர்த்தியினது புகழ் பிரபாவங்களை கூறும் பாக்களே அந்த தோத்திர பாக்களே (அதுவே நமக்கு போதும்) சும்மு சும்மு என்று உலக்கை குத்துவோம் (போடுவோம்)

**8. வல்லவகை பரனருளே வாயார வாழ்த்தாதே
சொல்லுவது பிறிதுண்டோ சும்மேலோ சும்முலக்காய்**

| | |
|---|---|
| பரனருளே | ஸ்ரீகுரு மூர்த்தியின் கிருபா கடாக்ஷத்தையே |
| வல்லவகை | இயன்றவளவு (நமக்கு முடிந்த மட்டும்) |
| வாயார வாழ்த்தாதே | வாய் நிரம்ப புகழ்ந்து பாடாமல் |
| சொல்லுவது பிறிதுண்டோ | நாம் தோத்திரஞ் செய்வது வேறே இருக்கின்றதோ (இல்லவே இல்லை என்பதாம்) சும்மு சும்மு என்று உலக்கை குத்துவோம் (போடுவோம்) |

ஸ்ரீகுரு மூர்த்தியின் கிருபா கடாக்ஷத்தையே இயன்றவளவு (நமக்கு முடிந்த மட்டும்) வாய் நிரம்ப புகழ்ந்து பாடாமல் நாம் தோத்திரஞ் செய்வது வேறே இருக்கின்றதோ (இல்லவே இல்லை என்பதாம்) சும்மு சும்மு என்று உலக்கை குத்துவோம் (போடுவோம்)

**9. சத்தமா திகளுமெலாந் தற்சொருப மானபரி
சுத்தமாய் விட்டதுகாண் சும்மேலோ சும்முலக்காய்**

| | |
|---|---|
| சுத்தமாதிகள் | ஒலி வடிவ (அறுபத்து நாலு கலை) ஞானங்கள் அனைத்தும் |

| | |
|---|---|
| எல்லாம் | |
| தற் சொரூபமான | தனது யதார்த்த வடிவ (ஆசை நீங்கிய) ஆன்மாவாய் தத்பத லக்ஷியமாகிய |
| பரிசுத்தமாய் விட்டது காண் | மாயை மாயாகாரிய மலமற்றதாய் (சுயம் பிரகாசமாய்) துலங்குகிறோம் பாருங்கள். சும்மு சும்மு என்று உலக்கை குத்துவோம் (போடுவோம்) |

ஒலி வடிவ (அறுபத்து நாலு கலை) ஞானங்கள் அனைத்தும் தனது யதார்த்த வடிவ (ஆசை நீங்கிய) ஆன்மாவாய் தத்பத லக்ஷியமாகிய மாயை மாயாகாரிய மலமற்றதாய் (சுயம் பிரகாசமாய்) துலங்குகிறோம் பாருங்கள். சும்மு சும்மு என்று உலக்கை குத்துவோம் (போடுவோம்)

*****************

# 29. கூழ் சமைப்பு

**1. மிடையிரு வினைகள் பற்கள் மேவரு மறியார் பற்கள்**
**அடையவு மிடித்தீ ராகி லடங்கவு முலையுட் பெய்யீர்**

| | |
|---|---|
| மிடையிரு வினைகள் பற்கள் | நொறுங்கிய நல்வினை தீவினையாகிய அரிசியை (தானியத்தை) |
| மேவரும் அறியார் பற்கள் | அடைதற்கரிய ஆகாமியம் சஞ்சித முதலிய கர்மங்கள் (வந்து பொருந்தா வண்ணம்) |
| அடையவும் | அனைத்தையும் |
| இடித்தீராகில் | குத்தி நொறுக்கி துகளாக செய்து முடித்திருந்தால் |
| அடங்கவும் | அவையனைத்தையும் |
| உலையுட் பெய்யீர் | சரீரமாகிய கடத்தில் (பானையில்) உயிராகிய நீர் பொருந்திய (உலைப்பானையில்) கொட்டுவீர்களாக (போடுங்கள்) இடித்த அரிசியை உலையில் போடவும். |

நொறுங்கிய நல்வினை தீவினையாகிய அரிசியை (தானியத்தை) அடைதற்கரிய ஆகாமியம் சஞ்சித முதலிய கர்மங்கள் (வந்து பொருந்தா வண்ணம்) அனைத்தையும் குத்தி நொறுக்கி துகளாக செய்து முடித்திருந்தால் அவையனைத்தையும் சரீரமாகிய கடத்தில் (பானையில்) உயிராகிய நீர் பொருந்திய (உலைப்பானையில்) கொட்டுவீர்களாக (போடுங்கள்) இடித்த அரிசியை உலையில் போடவும்.

**2. இழைக்கும்வல் வினையெ ரித்திங்**
**கெலும்பெலா முருக்கி யுள்ளங்**
**குழைக்குமெய்ப் பத்திவந்து**
**குறைவறக் குழைக்கச் சொல்லீர்**

| | |
|---|---|
| இழைக்கும் வல்வினை யெரித்து | ஜென்மத்தை கொடுக்கும் கொடிய கர்மங்களை யெல்லாம் அடுப்பில் வைத்து தகிக்கும்படி செய்து |
| இங்கு எலும்பெலா முருக்கி | இவ்விடத்தில் தானே உடம்பெல்லாம் இளகும்படி மனதையும் கசிவுண்டாக்கி |
| உள்ளங் குழைக்கும் | நெருப்பிலிட்ட வெண்ணெய் போல் மனத்தை உருக்கி (நன்றாக இளக்கி) |
| மெய்ப்பத்தி வந்து | உண்மையாய் அனன்ய அன்பு கொண்டு |
| குறைவறக் குழைக்கச் சொல்லீர் | பூர்ணமான நல்ல நிறைவுடன் வெண்ணெய் பதமாகச் செய்வீர். |

ஜென்மத்தை கொடுக்கும் கொடிய கர்மங்களை யெல்லாம் அடுப்பில் வைத்து தகிக்கும்படி செய்து இவ்விடத்தில் தானே உடம்பெல்லாம் இளகும்படி மனதையும் கசிவுண்டாக்கி நெருப்பிலிட்ட வெண்ணெய் போல் மனத்தை உருக்கி (நன்றாக இளக்கி) உண்மையாய் அனன்ய அன்பு கொண்டு பூர்ணமான நல்ல நிறைவுடன் வெண்ணெய் பதமாகச் செய்வீர்.

**3. செப்பாதே பலவு நின்று சிலுப்பற விருத்தி யின்பந்**
**தப்பாதே பதத்தைப் பார்க்கச் சாந்தியை யிருத்திக் கொள்வீர்**

| | |
|---|---|
| பலவும் செப்பாதே நின்று | அநேக வார்த்தைகளை கூறுதல் விடுத்து பேசாமல் (மௌனமாயிருந்து) இருந்து |
| சிலுப்பற | கலகமற |
| விருத்தியின்பம் | பிரம்மாகார விருத்தியோடு உண்டாம் ஜீவன் முக்திச் சுகம் |
| தப்பாதே | நீங்காத (விட்டு நீங்காத ) வண்ணம் |
| பதத்தைப் பார்க்க | பக்குவம் அறிவதற்கு |
| சாந்தியை | சுத்த சத்துவ விருத்தியை |
| இருத்திக்கொள்வீர் | எப்பொழுதும் இருக்கும்படியாய் நிலைபெற செய்வீர்களாக! இங்கு அகண்டாகார விருத்திக்கு ஜீவன் முக்திச் சுகம் விஷயமாம். |

அநேக வார்த்தைகளை கூறுதல் விடுத்து பேசாமல் (மௌனமாயிருந்து) இருந்து கலகமற பிரம்மாகார விருத்தியோடு உண்டாம் ஜீவன் முக்திச் சுகம் நீங்காத (விட்டு நீங்காத ) வண்ணம் பக்குவம் அறிவதற்கு சுத்த சத்துவ விருத்தியை எப்பொழுதும் இருக்கும்படியாய் நிலைபெற செய்வீர்களாக! இங்கு அகண்டாகார விருத்திக்கு ஜீவன் முக்திச் சுகம் விஷயமாம்.

**4. கனித னக்குநிகர் நெக்கு நெஞ்சுகள்**
**கரைந்து கன்னலொடு பாலுமொத்**
**தினிதி னிப்படிச மைத்த போனகமெ**
**டுத்து மெத்தெனவி ருத்துமே**

| | |
|---|---|
| நெஞ்சுகள் | பக்குவப்பட்ட மனங்கள் |
| கனிதனக்குநிகர் | நன்றாக முதிர்ந்து பழுத்த (மா,பலா,வாழை) பழங்களில் ரசங்கள் (தானே கசிந்து ஒழுகும்) போல் (அதற்குச் சமமாக) |
| நெக்கு கரைந்து | நெருப்பிலிட்ட வெண்ணெயைப்போல் |

| | |
|---|---|
| | கசிந்து உருகி |
| கன்னலொடு பாலும் ஒத்து | கருப்பஞ் சாற்றோடு பசுவின்பாலும் சேர்ந்தால் எவ்வாறிருக்குமோ அதற்குச் சமமாக |
| இனிதினிப்படி சமைத்த | மிகுந்த தித்திப்பிலும் (இனிமையாக) தித்திப்பாக அன்புடன் பக்குவஞ் செய்யப்பட்ட |
| போனகம் எடுத்துஅமிர்தமய அன்னத்தைக் கொண்டு வந்து | |
| மெத்தென இருத்துமே | மிருதுவாக வையுங்களேன். |

பக்குவப்பட்ட மனங்கள் நன்றாக முதிர்ந்து பழுத்த (மா,பலா,வாழை) பழங்களில் ரசங்கள் (தானே கசிந்து ஒழுகும்) போல் (அதற்குச் சமமாக) நெருப்பிலிட்ட வெண்ணெயைப்போல் கசிந்து உருகி கருப்பஞ் சாற்றோடு பசுவின்பாலும் சேர்ந்தால் எவ்வாரிருக்குமோ அதற்குச் சமமாக மிகுந்த தித்திப்பிலும் (இனிமையாக) தித்திப்பாக அன்புடன் பக்குவஞ் செய்யப்பட்ட அமிர்தமய அன்னத்தைக் கொண்டு வந்து மிருதுவாக வையுங்களேன்.

****************

# 30. கூழ் வார்ப்பு

1. **தன்மை யாரும்வகை மீளு மாளுடைய**
**தம்பி ரானரிய தாள்கடா**
**முண்மை யாலுரிய வன்ப ரின்புறுமு**
**ளக்க லங்களைவி ளக்கியே**

| | |
|---|---|
| தன்மையாகும் வகை | சாந்தி வரும்படிக்கு |
| மீளும் | மீண்டும் |
| ஆளுடைய | நம்மையாட்கொண்டருளிய |
| தம்பிரான் | அடியார்கள் தலைவன் |
| அரிய தாள்கள் தாம் | மூவுலகத்தவர்களுக்கும் காணக் கிடையாத திருவடியானது |
| உண்மையாலுரிய | மெய்யான (சத்தியந்தவறாத) இருதயத்திலிருப்பதால் |
| அன்பர் இன்புறும் | அன்பர்களுக்கு உரித்தானது. ஆதலால் பாக்கியவான்களான குரு புத்திர சிரேஷ்டர்களால் அன்புடன் இனிமையாக அனுபவிக்க |
| உளக்கலங்களை விளக்கியே | உள்ளமாகிய வட்டில் கலத்தையும் நன்றாக (என்றும் உண்மையாக ) இருக்கும்படி துலக்கினார்கள். |

சாந்தி வரும்படிக்கு மீண்டும் நம்மையாட்கொண்டருளிய அடியார்கள் தலைவன் மூவுலகத்தவர்களுக்கும் காணக் கிடையாத திருவடியானது மெய்யான (சத்தியந்தவறாத) இருதயத்திலிருப்பதால் அன்பர்களுக்கு உரித்தானது. ஆதலால் பாக்கியவான்களான குரு புத்திர சிரேஷ்டர்களால் அன்புடன் இனிமையாக அனுபவிக்க உள்ளமாகிய வட்டில் கலத்தையும் நன்றாக (என்றும் உண்மையாக ) இருக்கும்படி துலக்கினார்கள்.

2. **கடங்க ளோடுமுள மான மெய்ப்பரி**
**கலங்க ளோடுமுள வாவிதா**
**னடங்க நீயமிர்து செய்க வென்னவரு**
**ளையை தானமிர்து செய்யுமே**

| | |
|---|---|
| கடங்களோடும் | சரீரமாகிய பாண்டங்களுடனும் |
| உளமானமெய்ப்பரி கலங்களோடும் | உள்ளத்தில் சத்திய முதலாகிய குணங்களுடைய நல்ல உண்ணும் வட்டில்களோடும் |
| உள ஆவி தான் அடங்க | எங்களது ஜீவத்துவமாகிய அனைத்தையும் |
| நீ அமிர்து செய்க என | தாயே நீங்கள் புசித்துவிடுங்கள் என்று கூறி (முமுக்ஷுவாகிய பேய்கள்) வேண்ட, |
| அருள் ஐயை தான் | கிருபையே வடிவமான தேவியானவள் (அயின்றருள்) |

| | |
|---|---|
| அமிர்து செய்யுமே | புசித்தல் செய்தால் தேவியிடம் ஜீவனை அற்பித்தல் ஆகும். |

சரீரமாகிய பாண்டங்களுடனும் உள்ளத்தில் சத்திய முதலாகிய குணங்களுடைய நல்ல உண்ணும் வட்டில்களோடும் எங்களது ஜீவத்துவமாகிய அனைத்தையும்தானே நீங்கள் புசித்துவிடுங்கள் என்று கூறி (முமுக்ஷுவாகிய பேய்கள்) வேண்ட, கிருபையே வடிவமான தேவியானவள் (அயின்றருள்) புசித்தல் செய்தால் தேவியிடம் ஜீவனை அற்பித்தல் ஆகும்.

**3. அணங்கு தன்றிருவு ளப்ர சாதமது**
**வடைய வேநிறைய வயிலுவீ**
**ருணங்கு கின்றவுட லான பேய்களையு**
**முடைய நீரழையு முண்ணவே**

| | |
|---|---|
| அணங்கு தன் | தேவியினுடைய |
| பிரசாதம் | அருளமுதாம் உச்சிஷ்டேத்தை |
| அது அடையவே நிறைய அயிலுவீர் | அதனை முழுவதையும் குறைவின்றி நன்றாக அருந்துங்கள். |
| உணங்குகின்ற உடலான பேய்களையும் | சரீரம் மிகவும் வாட்டமுடன் இளைத்து வறட்சியான பிசாசுக் கூட்டங்களையும் |
| உடைய நீர் | ஆதரித்து வைத்திருக்கும் நீங்கள் |
| உண்ணவே அழையும் | (அவர்களை) உணவு அருந்துவதற்காக வேண்டி அவசியமாக விழித்திருங்கள். தேவியின் பிரசாதம். |
| | |

தேவியினுடைய அருளமுதாம் உச்சிஷ்டேத்தை அதனை முழுவதையும் குறைவின்றி நன்றாக அருந்துங்கள். சரீரம் மிகவும் வாட்டமுடன் இளைத்து வறட்சியான பிசாசுக் கூட்டங்களையும் ஆதரித்து வைத்திருக்கும் நீங்கள்(அவர்களை) உணவு அருந்துவதற்காக வேண்டி அவசியமாக விழித்திருங்கள். தேவியின் பிரசாதம்.

**4. வெந்த வுடலம் விடும் பரிசு**
**வீடு வினவி மிகப் பசித்து**
**வந்த பேய்க்குப் பசிதீர**
**வாரீர் மெத்த வாரீரே**

| | |
|---|---|
| வெந்த உடலம் விடும் பரிசு | முத்தாபங்களால் (ஆத்மீகம், தெய்வீகம், பௌவுதீகம்) தகிக்கப்பட்டு (தாபத்திரய துக்கம்) பொறுக்க முடியாது (சகிக்க மாட்டாமல்) அது நீங்கும் பொருட்டு தீவிர (முமுக்ஷுத்வமடைந்து) மோக்ஷம் ஒன்றினையே விரும்பி (தலை ரோமத்தில் நெருப்பு பற்றியதைப் போல் சோக நிவர்த்தியை விரும்பி) |

| | |
|---|---|
| வீடுவினவி | மோக்ஷத்தை (முக்தியை) விரும்பிக் கேட்டு |
| மிகப் பசித்து வந்த பேய்க்கு | அதி தீவிர தர பக்குவத்துடன் (மோக்ஷயிச்சையுடன்) கற்பூர புத்தியுடைய அவர்களுக்கு (மிக்க விருப்புடன்) இங்கு எழுந்தருளிச் செய்திருக்கும் பிசாசுகளுக்கு |
| பசிதீர வாரீர் | வயிற்றிலிருக்கும் ஜாடாராக்னி நீங்கும் வரை (தணியும்படி குறைவின்றி நிரங்குச திருப்தியடைய) ஊற்றுங்கள். |
| மெத்த வாரீரே | அதிகமா வேண்டுமளவிற்கு ஊற்றுங்கள்(வார்ப்பீர்களாக) என்றார். முமுக்ஷுக்களாகிய பக்குவிகளுக்கு மாரிபோல் மாறு வேண்டாது (மழையைப் போல் கைம்மாறு கருதாமல்) பிரதி ப்ரயோஜனம் விரும்பாமல் உபதேசிப்பதில் ஸ்ரீகுருமூர்த்தியின் கருணையிருக்க வேண்டுமென்பதை இங்கு வலியுறுத்துகிறார். |

முத்தாபங்களால் (ஆத்மீகம், தெய்வீகம், பௌவுதீகம்) தகிக்கப்பட்டு (தாபத்திரய துக்கம்) பொறுக்க முடியாது (சகிக்க மாட்டாமல்) அது நீங்கும் பொருட்டு தீவிர (முமுக்ஷுத்வமடைந்து) மோக்ஷம் ஒன்றினையே விரும்பி (தலை ரோமத்தில் நெருப்பு பற்றியதைப் போல் சோக நிவர்த்தியை விரும்பி) மோக்ஷத்தை (முக்தியை) விரும்பிக் கேட்டு அதி தீவிர தர பக்குவத்துடன் (மோக்ஷயிச்சையுடன்) கற்பூர புத்தியுடைய அவர்களுக்கு (மிக்க விருப்புடன்) இங்கு எழுந்தருளிச் செய்திருக்கும் பிசாசுகளுக்கு வயிற்றிலிருக்கும் ஜாடாராக்னி நீங்கும் வரை (தணியும்படி குறைவின்றி நிரங்குச திருப்தியடைய) ஊற்றுங்கள். அதிகமா வேண்டுமளவிற்கு ஊற்றுங்கள்(வார்ப்பீர்களாக) என்றார். முமுக்ஷுக்களாகிய பக்குவிகளுக்கு மாரிபோல் மாறு வேண்டாது (மழையைப் போல் கைம்மாறு கருதாமல்) பிரதி ப்ரயோஜனம் விரும்பாமல் உபதேசிப்பதில் ஸ்ரீகுருமூர்த்தியின் கருணையிருக்க வேண்டுமென்பதை இங்கு வலியுறுத்துகிறார்.

**5. நசித்தே னிந்தக் கணத்துள்ளே**
**நசியா வண்ண நல்குமிகப்**
**பசித்தே னென்று பதைக்கின்ற**
**பதைப்பைத் தணிக்க வாரீரே**

| | |
|---|---|
| இந்தக் கணத்துள்ளே நசித்தேன் | இப்பொழுதே (இந்த நிமிஷத்திலேயே)க்ஷண நேரத்தில் (கண் இமைப்பதற்குள்ளாக) என்னைக் காப்பாற்றாவிட்டால் பிராணத்தியாகஞ் செய்து விடுவேன்(முத்தாபம் தாங்க முடியாத அதி தீவிர பக்குவியான முமுக்ஷுவானவன் ) |
| நசியா வண்ணம் நல்கும் | கிடைத்தற்கரிய இம் மாநுட தேகம் (வீணாக அழிந்து போகுமுன்) அழியாதபடி இக்ஷணமே கொடுத்தருள்வீர். |
| மிகப் பசித்தேன் என்று | அதிகமா ஜாடாராக்னியால் தகிக்கப்பட்டு மிக விருப்பத்துடன் இருக்கின்றேன் எனக் கூறும் |
| பதைக்கின்ற | துடிக்கின்ற துடிப்பு நீங்கும்படி (பசி நீங்கும்படி) முக்தி வேட்கை |

| | |
|---|---|
| பதைப்பைத் தணிக்க வாரீரே | நீங்க விடுங்கள் (பிரம்மானந்த முண்டாகும்படி) நிரங்குச திருப்தியுண்டாகும் வண்ணம் கூழ் வார்ப்பீர்களாக. |

இப்பொழுதே (இந்த நிமிஷத்திலேயே)க்ஷண நேரத்தில் (கண் இமைப்பதற்குள்ளாக) என்னைக் காப்பாற்றாவிட்டால் பிராணத்தியாகஞ் செய்து விடுவேன்(முத்தாபம் தாங்க முடியாத அதி தீவிர பக்குவியான முமுக்ஷுவானவன் ) கிடைத்தற்கரிய இம் மாநுட தேகம் (வீணாக அழிந்து போகுமுன்) அழியாதபடி இக்ஷணமே கொடுத்தருள்வீர்.அதிகமா ஜாடராக்னியால் தகிக்கப்பட்டு மிக விருப்பத்துடன் இருக்கின்றேன் எனக் கூறும் துடிக்கின்ற துடிப்பு நீங்கும்படி (பசி நீங்கும்படி) முக்தி வேட்கை நீங்க விடுங்கள் (பிரம்மானந்த முண்டாகும்படி) நிரங்குச திருப்தியுண்டாகும் வண்ணம் கூழ் வார்ப்பீர்களாக.

**6. எட்டுக் கரும முட்டறச்செய்**
**தெட்டுக் குணத்தோ டெழின்முத்தி**
**வட்டத் திருக்கப் போமூத்தை**
**வாய்ப்பேய் தனக்கும்வாரீரே**

| | |
|---|---|
| எட்டுக் கரும முட்டறச் செய்து | ஞானாவரணிய முதலிய சடங்குகளை (கருமங்களை) தடையில்லமல் இயற்றி (செய்து முடித்து பின்) |
| எட்டுக் குணத்தோடு | ஜீவ காருண்ய மயிர் பறித்தல், பானியிலுண்ணல் முதலிய குணங்களுடன் |
| எழின் முத்தி வட்டத் திருக்கப் போம் | அழகிய மோக்ஷ பீடத்திலிருப்பதற்கு விரும்பி செல்லும் |
| ஊத்தை வாய்ப் பேய் தனக்கும் வாரீர் | தந்த சுத்தியற்ற சமணப் பிசாசுகளுக்கும் வார்ப்பீர்களாக (கூழ் விடுங்கள்) |

ஞானாவரணிய முதலிய சடங்குகளை (கருமங்களை) தடையில்லமல் இயற்றி (செய்து முடித்து பின்) ஜீவ காருண்ய மயிர் பறித்தல், பானியிலுண்ணல் முதலிய குணங்களுடன் அழகிய மோக்ஷ பீடத்திலிருப்பதற்கு விரும்பி செல்லும் தந்த சுத்தியற்ற சமணப் பிசாசுகளுக்கும் வார்ப்பீர்களாக (கூழ் விடுங்கள்)

**7. ஒளிதங் கியமா மறையோதி யுள்ளபொருளை யுணராதே**
**பளிதஞ் சுமந்த கழுதையாம் பனவப் பேய்க்கும் வாரீரே**

| | |
|---|---|
| ஒளி தங்கிய மாமறை ஓதி | பிரகாசம் பொருந்திய (சுயம் பிரகாச வடிவ) கூறும் மாக்ஷிமையுள்ள (இருக்காதி நான்கு) வேதங்களையும் நன்றாக கற்றும், |
| உள்ள பொருளை | அதிற் கூறியிருக்கும் சச்சிதானந்த (பிரம்மத்தை) சிவ |

| | |
|---|---|
| உணராதே | பரம்பொருளை அறியாமல் |
| பளிதஞ் சுமந்த கழுதையாம் | பச்சைக் கற்பூரம் பொதி தூக்கி வந்த வேசரி (நீள்செவி) யானது என்று சொல்லப்படும் |
| பனவப் பேய்க்கும் வாரீரே | பிராமணப் பேய்களுக்கும் ஊற்றுங்கள். |

பிரகாசம் பொருந்திய (சுயம் பிரகாச வடிவ) கூறும் மாக்ஷிமையுள்ள (இருக்காதி நான்கு) வேதங்களையும் நன்றாகக் கற்றும், அதிற் கூறியிருக்கும் சச்சிதானந்த (பிரம்மத்தை) சிவ பரம்பொருளை அறியாமல் பச்சைக் கற்பூரம் பொதி தூக்கி வந்த வேசரி (நீள்செவி) யானது என்று சொல்லப்படும் பிராமணப் பேய்களுக்கும் ஊற்றுங்கள்.

**8. படித்து மறைகள்பொருள்படுத்திப்**
**பயனி னெட்டிப் பாராதே**
**வடித்த கிளிபோல் வருமா**
**யாவா தப் பேய்க்கும் வாரீரே**

| | |
|---|---|
| மறைகள் படித்து | வேதங்களை நன்றாக ஓதியும் |
| பொருள் படுத்தி | அதற்கு அர்த்தம் தெரிந்திருந்தும் (நூற்கு விஷயம் ஜீவப் பிரம்ம ஐக்யம் தெரிந்தும்) |
| பயனினெட்டிப் பாராத | அவ்வேதார்த்தத்தின் பரமப் பிரயோஜனமான தனதான்மப் பொருளை (பிரம்ம சொரூபத்தை ) அறிய அதனருகிலுங்கூடச் செல்லாமல், |
| வடித்த கிளி போல் | சொன்னதைச் சொல்லும் கிளிப் பிள்ளையைப் போன்று |
| பரும் மாயா வாதப் பேய்க்கும் வாரீரே | பிறருக்கு எடுத்து ஓதி வருகின்ற வேதாந்தக் கொள்கை (யா—மாயை யென்பதில்லை) மாயா வாதம் உடைய பிசாசுகளுக்கும் வார்ப்பீர்களாக. (வாரீர்—ஏ அசை) |

வேதங்களை நன்றாக ஓதியும் அதற்கு அர்த்தம் தெரிந்திருந்தும் (நூற்கு விஷயம் ஜீவப் பிரம்ம ஐக்யம் தெரிந்தும்) அவ்வேதார்த்தத்தின் பரமப் பிரயோஜனமான தனதான்மப் பொருளை (பிரம்ம சொரூபத்தை ) அறிய அதனருகிலுங்கூடச் செல்லாமல், சொன்னதைச் சொல்லும் கிளிப் பிள்ளையைப் போன்று பிறருக்கு எடுத்து ஓதி வருகின்ற வேதாந்தக் கொள்கை (யா—மாயை யென்பதில்லை) மாயா வாதம் உடைய பிசாசுகளுக்கும் வார்ப்பீர்களாக. (வாரீர்—ஏ அசை)

**9. வேதா கமங்கள் சொன்னபொருண்**
**மெய்ம்மை யறிவார் போலிருந்து**
**பேதா பேதஞ் சாதிக்கு**
**பெரும்பேய் தனக்கும் வாரீரே**

| | |
|---|---|
| வேதாகமங்கள் | இருக்காதி நான்கு வேதங்களும் காமிக முதலிய இருபத்தெட்டு ஆகமங்களும் |
| சொன்ன பொருள் | அதிற்கூறிய சச்சிதானந்த (பிரம்மப் பொருளை) சிவ பரம்பொருளை |
| மெய்ம்மை யறிவார் போலிருந்து | உண்மைத் தத்துவத்தை தெரிந்தவர்களைப்போல் நடைநொடி பாவனைகளில் காட்டி (பிறரறியும் வண்ணம்) யிருப்பவர்கள் |
| பேதா பேதஞ் சாதிக்கும் | ஒரோர் விடத்து பேதமும் மற்றோரிடத்து அபேதமும் நிலைநாட்டி பேசும் |
| பெரும் பேய் தனக்கும் வாரீரே | பெரிய பிசாசுகளுக்கும் கூழ் வார்ப்பீர்களாக. |

இருக்காதி நான்கு வேதங்களும் காமிக முதலிய இருபத்தெட்டு ஆகமங்களும் அதிற்கூறிய சச்சிதானந்த (பிரம்மப் பொருளை) சிவ பரம்பொருளை உண்மைத் தத்துவத்தை தெரிந்தவர்களைப்போல் நடைநொடி பாவனைகளில் காட்டி (பிறரறியும் வண்ணம்) யிருப்பவர்கள் ஒரோர் விடத்து பேதமும் மற்றோரிடத்து அபேதமும் நிலைநாட்டி பேசும் பெரிய பிசாசுகளுக்கும் கூழ் வார்ப்பீர்களாக.

**10. சுத்தப் பிரம மதுநிற்கத் தொள்ளைச் செவியி னுணவான**
**சத்தப் பிரம மென்றோதுஞ் சளப்பேய் தனக்கும் வாரீரே**

| | |
|---|---|
| சுத்தப் பிரம் அது நிற்க | மாயா ரகித பரம்பொருள் (பிரம்மம்) எவ்விடங்களிலும் நீக்கமற நிறைந்து அவ்வஸ்து விருக்கவும் |
| தொள்ளைச் செவியின் | (அதை விடுத்து ) துவாரம் பொருந்திய காதிற்கு |
| சத்தப் பிரம மென்று ஓதும் | விருந்தாயிருக்கும் படியான ஒலி வடிவமாக உபதேசஞ் செய்வதுவே பொருள் என்று கூறும் |
| சளப் பேய் தனக்கும் வாரீரே | மூர்க்க, வையாகரணியர் என்னும் பிசாசுகளுக்கும் (கூழ்) வார்ப்பீர்களாக. |

மாயா ரகித பரம்பொருள் (பிரம்மம்) எவ்விடங்களிலும் நீக்கமற நிறைந்து அவ்வஸ்து விருக்கவும் (அதை விடுத்து ) துவாரம் பொருந்திய காதிற்கு விருந்தாயிருக்கும் படியான ஒலி வடிவமாக உபதேசஞ் செய்வதுவே பொருள் என்று கூறும் மூர்க்க, வையாகரணியர் என்னும் பிசாசுகளுக்கும் (கூழ்) வார்ப்பீர்களாக.

**11. பணியப் படுவா ருள்ளிருக்கும்**
**பரதே வதையைப் பாராதே**
**மணியைத் துலக்கிக் கிணுகிணென**
**வரும்பேய் தனக்கும் வாரீரே**

| | |
|---|---|
| பணியப் படுவார் | யாவராலும் வணங்கும்படியான |
| உள்ளிருக்கும் | இருதயத்திற்குள்ளே இருக்கின்ற |
| பரதேவதையைப் பாராதே | மேலான தெய்வத்தை தெரிசிக்காமல் |
| மணியைத் துலக்கி | பித்தளை (முறி) முதலியவற்றால் கண்டம் (மணி) செய்து அதில் மாசு நீக்கி |
| கிணுகிணென | கிண்கிண் என்று சப்தம் எழுப்பிக் கொண்டு |
| வரும் பேய் தனக்கும் வாரீரே | வருகின்ற பிசாசுகளுக்கும் சோறிடுவீர்களாக என்றார். |

யாவராலும் வணங்கும்படியான இருதயத்திற்குள்ளே இருக்கின்ற மேலான தெய்வத்தை தெரிசிக்காமல் பித்தளை (முறி) முதலியவற்றால் கண்டம் (மணி) செய்து அதில் மாசு நீக்கி கிண்கிண் என்று சப்தம் எழுப்பிக் கொண்டு வருகின்ற பிசாசுகளுக்கும் சோறிடுவீர்களாக என்றார்.

**12. ஞாநம் போலே பலசொல்லி நாடற் கரிய முத்தியினுந்**
**தானுஞ் சிவனும் பாசமுமென் சைவப் பேய்க்கும் வாரீரே**

| | |
|---|---|
| ஞானம் போலே பல சொல்லி | அறிவுதயம் ஆனது போன்று (சிலபேர்) அநேகம் (அத்வைத கருத்துக்களை) பிறர் அறிய பேசி |
| நாடற்கரிய | பின்னர் மனத்தினாலும் நினைக்க முடியாத |
| முத்தியினும் | மோக்ஷ நிலையிலும் (விடுபட்டயிடத்திலும்) |
| தானும் சிவனும் பாசமும் என்னும் | சீவனும் (பசுவும்) சிவமும் (பதியும்) மாயையும் (பாசமும்) உண்டு என்று கூறும் (முப்பொருள்) சத்தியமென்று கூறுகின்றவர்களுமான |
| சைவப் பேய்க்கும் வாரீரே | சிவ சம்பந்தமான (சிவாத்வைதம் கூறும்) பிசாசுகளுக்கும் உணவு அளியுங்கள். |

அறிவுதயம் ஆனது போன்று (சிலபேர்) அநேகம் (அத்வைத கருத்துக்களை) பிறர் அறிய பேசி பின்னர் மனத்தினாலும் நினைக்க முடியாத மோக்ஷ நிலையிலும் (விடுபட்டயிடத்திலும்) சீவனும் (பசுவும்) சிவமும் (பதியும்) மாயையும் (பாசமும்) உண்டு

என்று கூறும் (முப்பொருள்) சத்தியமென்று கூறுகின்றவர்களுமான சிவ சம்பந்தமான (சிவாத்வைதம் கூறும்) பிசாசுகளுக்கும் உணவு அளியுங்கள்.

13. துரியா தீதம் பதினாலிற் றோன்றி யெவர்க்குந் தோன்றாத
பெரியார் தம்மை நானென்னும் பிரமப் பேய்க்கும் வாரீரே

| | |
|---|---|
| துரியா தீதம் | சாக்ரம், சொப்னம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் (நனவு,கனவு,துயில்) சொரூப நிலை, நனவிற் சுழுத்தியான நிலை (இது அனுபவ வாயிலாக கேட்டுத் தெரியவும்) இந்த ஐந்தாவது நிலையில் (ஸ்திதியில்) |
| பதினாலில் | சீவ சப்தாவஸ்தை, தேகம், இந்திரியம், பிராணன், மனம், புத்தி, சித்தம், அகங்காரம்,என்ற ஏழு ஜீவனுக்குரிய நிலைகளும், சர்வேஸ்வரன், சர்வஞ்ஞன், சர்வ வியாபகன், சர்வ காரணன், சர்வ சிருஷ்டி, சர்வ திதி, சர்வ சம்மாரம் ஆக ஏழு சிவனுக்குரிய (ஈஸ்வர சப்த) அவஸ்தைகளும் ஆக பதினான்கு நிலைகளின் மேலும் |
| தோன்றி | தனக்கு தானாக விளங்கியும், (கண்டானாகும் தானாக என்றபடி) |
| யவர்க்கும் தோன்றாத | பக்குவமற்ற பக்தி (குரு பக்தி) யின்றியவர்களுக்கு (வெளிப்படாத) அறிய முடியாத |
| பெரியார் | தமதான்மவடிவ (பிரம்ம சொரூபத்தை) பெரும்பொருளை |
| தம்மை நானென்னும் | அது நானாக (அகம் பிரம்மாஸ்மி) இருக்கிறேனென்று அநுபூதி நிலையிலிருக்கும் |
| பிரம்மப் பேய்க்கும் வாரீரே | அந்த பெரிய பிசாசுக்கும் அன்னம் அளிப்பீராக. |

சாக்ரம், சொப்னம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் (நனவு,கனவு,துயில்) சொரூப நிலை, நனவிற் சுழுத்தியான நிலை (இது அனுபவ வாயிலாக கேட்டுத் தெரியவும்) இந்த ஐந்தாவது நிலையில் (ஸ்திதியில்) சீவ சப்தாவஸ்தை, தேகம், இந்திரியம், பிராணன், மனம், புத்தி, சித்தம், அகங்காரம்,என்ற ஏழு ஜீவனுக்குரிய நிலைகளும், சர்வேஸ்வரன், சர்வஞ்ஞன், சர்வ வியாபகன், சர்வ காரணன், சர்வ சிருஷ்டி, சர்வ திதி, சர்வ சம்மாரம் ஆக ஏழு சிவனுக்குரிய (ஈஸ்வர சப்த) அவஸ்தைகளும் ஆக பதினான்கு நிலைகளின் மேலும் தனக்கு தானாக விளங்கியும், (கண்டானாகும் தானாக என்றபடி) பக்குவமற்ற பக்தி (குரு பக்தி) யின்றியவர்களுக்கு (வெளிப்படாத) அறிய முடியாத தமதான்மவடிவ (பிரம்ம சொரூபத்தை) பெரும்பொருளை அது நானாக (அகம் பிரம்மாஸ்மி) இருக்கிறேனென்று அநுபூதி நிலையிலிருக்கும் அந்த பெரிய பிசாசுக்கும் அன்னம் அளிப்பீராக.

**14. வெறுவாய் கொண்டு மென்றுமந**
**விகாரங்கொண்டு சிலபிதற்றிப்**
**பெறுவா ரன்றிமுத்தி பெறும்**
**பிடகப் பேய்க்கும் வாரீரே**

| | |
|---|---|
| வெறுவாய் கொண்டு மென்று | பலனின்றிய மந்திரம் (அத்தி நாத்தி–இருக்கு இல்லை) மனதில் வைத்து உதடுகளை அசைத்துக்கொண்டு |
| மன விகாரங் கொண்டு | மாறுபட்ட மனமுடையவர்களாய் |
| சிலபிதற்றி | கொஞ்சம் வாயில் முணுமுணுவென்று ஒன்றை மற்றொன்றாக கூறி) |
| பெறுவாரன்றி | கதியடையும் புருஷன் இல்லாமல் |
| முத்தி பெறும் | வீடு செல்லும் (மோக்ஷமடையும்) |
| பிடகப் பேய்க்கும் வாரீரே | பௌத்த பேய்க்கும் கூழ் வார்ப்பீர். |

பலனின்றிய மந்திரம் (அத்தி நாத்தி–இருக்கு இல்லை) மனதில் வைத்து உதடுகளை அசைத்துக்கொண்டு மாறுபட்ட மனமுடையவர்களாய் கொஞ்சம் வாயில் முணுமுணுவென்று ஒன்றை மற்றொன்றாக கூறி) கதியடையும் புருஷன் இல்லாமல் வீடு செல்லும் (மோக்ஷமடையும்) பௌத்த பேய்க்கும் கூழ் வார்ப்பீர்.

**15. உடலை விடுகை முத்தியென**
**வுரைத்த வுண்மை யுணராதே**
**முடலை யுடலை நானென்னு**
**முழுப்பேய் தனக்கும் வாரீரே**

| | |
|---|---|
| உடலை விடுகை முத்தியென | தேகத்தை (அபிமானத்தை) விட்டு விடுவதே மோக்ஷம் என்று |
| உரைத்த உண்மை உணராதே | தார்ப்பமாகக் கூறிய பரமார்த்தத்தை அறியாமல் |
| முடலை உடலை நான் என்னும் | கெட்ட துர்நாற்றம் பொருந்தி (தீக்கிரையாம்) தேகத்தை (அகமென மதித்து) அது தானென்று எண்ணி அதற்கு அஞ்சன மஞ்சனங்களையும், சந்தனம் மாலை முதலாக அலங்கரித்து பார்க்கும் |
| முழுப்பேய் தனக்கும் வாரீரே | சார்வாகம் என்ற (தேகாத்மவாதிகள்) பூரணமான பேய்த்தன்மையில் உண்மையான பெரிய பிசாசுக்களுக்கும் கூழ் வாரீரே |

தேகத்தை (அபிமானத்தை) விட்டு விடுவதே மோக்ஷம் என்று தாா்ப்பமாகக் கூறிய பரமாா்த்தத்தை அறியாமல் கெட்ட துா்நாற்றம் பொருந்தி (தீக்கிரையாம்) தேகத்தை (அகமென மதித்து) அது தானென்று எண்ணி அதற்கு அஞ்சன மஞ்சனங்களையும், சந்தனம் மாலை முதலாக அலங்கரித்து பாா்க்கும் சாா்வாகம் என்ற (தேகாத்மவாதிகள்) பூரணமான பேய்த்தன்மையில் உண்மையான பெரிய பிசாசுக்களுக்கும் கூழ் வாாீரே

**16. தியக்கந் தீா்வாா் நன்முத்தி சோ்வா ரென்னுந் திறங்கேட்டு
மயக்கஞ் செய்யும் வாமப்பேய் வாய்க்கேநெருப்பை வாாீரே**

| | |
|---|---|
| தியக்கத் தீா்வாா் | ஸ்த்ாீக்களின் தேகத்தை சுக சாதனம் என்ப (என்ற மயக்க புத்தி நீங்கிய) து அல்லவென்று வெறுத்து விட்ட அறிஞா்கள்தான் |
| நன் முத்தி சோ்வாா் | என்றும்இன்பமானஅழியாத மோக்ஷ வீட்டினை அடைவாா்கள். |
| என்னுந் திறங் கேட்டும் | ஆசையை விட்டவா்தானே முக்தி அடைவாா்கள் என்று கூறிய உறுதிமொழியை அறிந்திருந்தும் |
| மயக்கஞ் செய்யும் | அநித்தியம், அசுத்தம் துக்கம் என அறிந்தும் (நித்தியம் சுத்தம் சுகம்) என்று விபாீத ஞானங் கொண்டிருக்கும் |
| வாமப்பேய் | புத்தி மயக்கத்திலிருக்கும் இதுவும் ஈஸ்வரன் கூறியதுதானே என்று (பெண்களை நேசித்து விசுவாசித்து பூஜித்து) அவா்களை அடைவதே கா்மமென்று வாக்கினால் வாழ்த்தி மனத்தினால் சிந்தித்துச் சொல்லும் (குறுகிய புத்தி கூறும்) வாம மாா்க்கத்தை கொண்ட பேயினது |
| வாய்க்கே நெருப்பை வாாீரே | அப்படிப்பட்ட வாமப் பேய் வாய்தனில் கொள்ளி வாாி நிரம்பப் போடுங்கள். (இவ்வாறு இந்நூலாசிாியா் கூறியது இது விரோதம் என்று அறிவித்தாா் எனவாம்) |

ஸ்த்ாீக்களின் தேகத்தை சுக சாதனம் என்ப (என்ற மயக்க புத்தி நீங்கிய) து அல்லவென்று வெறுத்து விட்ட அறிஞா்கள்தான் என்றும்இன்பமானஅழியாத மோக்ஷ வீட்டினை அடைவாா்கள். ஆசையை விட்டவா்தானே முக்தி அடைவாா்கள் என்று கூறிய உறுதிமொழியை அறிந்திருந்தும் அநித்தியம், அசுத்தம் துக்கம் என அறிந்தும் (நித்தியம் சுத்தம் சுகம்) என்று விபாீத ஞானங் கொண்டிருக்கும் புத்தி மயக்கத்திலிருக்கும் இதுவும் ஈஸ்வரன் கூறியதுதானே என்று (பெண்களை நேசித்து விசுவாசித்து பூஜித்து) அவா்களை அடைவதே கா்மமென்று வாக்கினால் வாழ்த்தி மனத்தினால் சிந்தித்துச் சொல்லும் (குறுகிய புத்தி கூறும்) வாம மாா்க்கத்தை கொண்ட பேயினது அப்படிப்பட்ட வாமப் பேய் வாய்தனில் கொள்ளி வாாி நிரம்பப் போடுங்கள். (இவ்வாறு இந்நூலாசிாியா் கூறியது இது விரோதம் என்று அறிவித்தாா் எனவாம்)

**17. அச்சந் ததிக ளெல்லாமா**
**யல்லா திருக்கு மறிஞரையு**
**மெச்சந் ததியுந் தமக்கேயென்**
**றியம்பும் பேய்க்கும் வாரீரே**

| | |
|---|---|
| அச் சந்ததிகள் எல்லாமாய் | இதுகாறும் கூறிவந்த சந்தானங்கள் (கோத்திரங்கள்) அனைத்துமாயிருப்பதும் |
| அல்லா திருக்கும் அறிஞரையும் | அவையில்லாதிருப்பதுமான (விவேக ஞானமுடையவர்களையும்) அறிவை அறிந்த ஞானியையும் |
| எச் சந்ததியும் | எப்படிப்பட்ட வித்தாரமுடையவர்களானாலும் |
| தமக்கே யென்று இயம்பும் பேய்க்கும் வாரீரே | அவைகளனைத்தும் நமக்கே யாம் எனக்கூறும் பிசாசுகளுக்கும் கூழ் வார்ப்பீர்களாக வென்று கூறி உபசம்மரித்தார். |

இதுகாறும் கூறிவந்த சந்தானங்கள் (கோத்திரங்கள்) அனைத்துமாயிருப்பதும் அவையில்லாதிருப்பதுமான (விவேக ஞானமுடையவர்களையும்) அறிவை அறிந்த ஞானியையும் எப்படிப்பட்ட வித்தாரமுடையவர்களானாலும் அவைகளனைத்தும் நமக்கே யாம் எனக்கூறும் பிசாசுகளுக்கும் கூழ் வார்ப்பீர்களாக வென்று கூறி உபசம்மரித்தார்.

**********************

## 31.தோத்திர மாகிய குணலை வாழ்த்து

**1. நின்ம லன்கருணை யாய டங்கிடவு**
**நெஞ்சி றந்திடநி னைந்தபின் பொன்ம**
**லர்ந்தவிரு தாளி னல்லவருள்**
**புகழு வாருமுள மகிழவே**

| | |
|---|---|
| நின்மலன் கருணையா யடங்கிடவும் | மும்மலமற்ற அருளானது நிறைந்திருக்கவும் |
| நெஞ்சிறந்திட நினைந்த பின் | தூலமனம் நசித்து பின்னர் (சூட்சும மனோ விருத்தியால் ) கருதி |
| பொன் மலர்ந்த விடு தாளில் | விரிந்த பொற்றாமரையான (உபய) இரண்டு திருவடிகளில் |
| நல்லவருள் | பரிசுத்தமான புனிதமய திருவருளால் |
| உளம் மகிழவே | சிந்தை களிக்கும்படி (மனம் திருப்தி ஆக) |
| புகழுவாரும் | நாம் முமுக்ஷுவாகிய பிசாசுகளான நாமனைவரும் போற்றி துதிப்போம் வாருங்கள் என்று இவ்வாறு தோத்திரம் செய்தனவாம். |

மும்மலமற்ற அருளானது நிறைந்திருக்கவும் தூலமனம் நசித்து பின்னர் (சூட்சும மனோ விருத்தியால் ) கருதி விரிந்த பொற்றாமரையான (உபய) இரண்டு திருவடிகளில் பரிசுத்தமான புனிதமய திருவருளால் சிந்தை களிக்கும்படி (மனம் திருப்தி ஆக) நாம் முமுக்ஷுவாகிய பிசாசுகளான நாமனைவரும் போற்றி துதிப்போம் வாருங்கள் என்று இவ்வாறு தோத்திரம் செய்தனவாம்.

**2. பாவிடை நூல்படு சிந்தையினிற்**
**பதைப்பற வந்தப ராபரனார்**
**சேவடி தந்தமை பாடீரே**
**செய்ய கருணையைப் பாடீரே**

| | |
|---|---|
| பாவிடை நூல்படு சிந்தையினில் | நெய்தலுக்குரிய தறியின் மத்தியில் (உண்டை சலிப்பதுபோல) எப்பொழுதும் இங்கும் அங்குமாக ஓடிச் சலிக்கும் மனத்தின்கண் |
| பதைப்பற வந்த பராபரணார் | மனத்துடிப்படங்கும்படி எழுந்தருளிச் செய்த தேவாதி தேவரானவர் |
| சேவடி தந்தமை பாடீரே | உபய திருவடிகளையும் நமது சிரசில் வைத்து திருவடி தீக்ஷை செய்த நலத்தை கொண்டு பாடுவீர்களாக. |

| | |
|---|---|
| செய்ய கருணையைப் பாடீரே | மேலான பொருளை அருளை நினைந்து தோத்தரிப்பீர்களாக |

நெய்தலுக்குரிய தறியின் மத்தியில் (உண்டை சலிப்பதுபோல) எப்பொழுதும் இங்கும் அங்குமாக ஓடிச் சலிக்கும் மனத்தின்கண் மனத்துடிப்படங்கும்படி எழுந்தருளிச் செய்த தேவாதி தேவரானவர்உபய திருவடிகளையும் நமது சிரசில் வைத்து திருவடி தீக்ஷை செய்த நலத்தை கொண்டு பாடுவீர்களாக. மேலான பொருளை அருளை நினைந்து தோத்தரிப்பீர்களாக

**3. மீட்டவி ரகினைப் பாடீரே**
**விளம்பிய தொன்ரென்று பாடீரே**
**நாட்டவ ருளினைப் பாடீரே**
**ஞாநவி நோதனைப் பாடீரே**

| | |
|---|---|
| மீட்ட விரகினைப் பாடீரே | சதாகாலமும் விஷயாதிகளில் சென்ற நம்மை திரும்பும்படி செய்து சானித்தியம் செய்த சமத்தினை சொல்லித் தோத்திரம் செய்வோம். |
| விளம்பியது ஒன்று என்று பாடீரே | உபதேசித்தும் ஒப்பில்லா ஒரு மொழி (தத்வமஸி) அது நீ என கூறியமை பாடுவீர். |
| அருளினை நாட்ட பாடீரே | திருவருள் பதியும்படி(சத்தின்பாதம் வரும் பொருட்டு) பாடுங்கள். |
| ஞான வினோதனைப் பாடீரே | இந்த புதிதாகிய (அறிவின் லீலையை யுடையவனை) ஞான விளையாட்டு செய்தவனை சொல்லிப் பாடுவீர்களாகவும். |

சதாகாலமும் விஷயாதிகளில் சென்ற நம்மை திரும்பும்படி செய்து சானித்தியம் செய்த சமத்தினை சொல்லித் தோத்திரம் செய்வோம். உபதேசித்தும் ஒப்பில்லா ஒரு மொழி (தத்வமஸி) அது நீ என கூறியமை பாடுவீர். திருவருள் பதியும்படி(சத்தின்பாதம் வரும் பொருட்டு) பாடுங்கள். இந்த புதிதாகிய (அறிவின் லீலையை யுடையவனை) ஞான விளையாட்டு செய்தவனை சொல்லிப் பாடுவீர்களாகவும்.

**4. என்னையொ ழித்தமை பாடீரே**
**யென்னுயி ருண்டமை பாடீரே**
**தன்னைய ளித்தமை பாடீரே**
**தத்துவ நாதனைப் பாடீரே**

| | |
|---|---|
| என்னை ஒழித்தமை பாடீரே | என்னுள் விட்டுநீங்காத அகங்காரத்தினை அழியும்படி செய்தது சொல்லிப் பாடுவீர்களாக. |
| என் உயிர் | எனது ஜீவத்துவத்தை அருந்திய ஆற்றலை நினைத்து |

| | |
|---|---|
| உண்டமை பாடீரே | பாடுவீர்களாக. |
| தன்னை அளித்தமை பாடீரே | தனது யதார்த்தமான சச்சிதானந்த வடிவத்தை (நமக்கு) யானே நீ யாக யிருக்கிறாய் என்று அநுக்கிரகித்த தன்மையை சொல்லி பாடுவீர்களாக |
| தத்துவ நாதனைப் பாடீரே | அந்த நமது உண்மை தலைவனை நீங்கள் துதித்து பாடுவீர்களாக |

என்னுள் விட்டுநீங்காத அகங்காரத்தினை அழியும்படி செய்தது சொல்லிப் பாடுவீர்களாக. எனது ஜீவத்துவத்தை அருந்திய ஆற்றலை நினைத்து பாடுவீர்களாக. தனது யதார்த்தமான சச்சிதானந்த வடிவத்தை (நமக்கு) யானே நீ யாக யிருக்கிறாய் என்று அநுக்கிரகித்த தன்மையை சொல்லி பாடுவீர்களாக அந்த நமது உண்மை தலைவனை நீங்கள் துதித்து பாடுவீர்களாக

**5. துன்னிநி றைந்தொழி யாதுநின்ற**
**சொருபா நந்தச் சுடர்வையந்**
**தன்னின டந்தமை பாடீரே**
**தானெனை யாண்டமை பாடீரே**

| | |
|---|---|
| துன்னி நிறைந்து ஒழியாது நின்ற | எவ்விடங்களிலும் (எள்ளுக்குள் எண்ணை போல் ) நீக்கமற பூரணமாய் வியாபித்திருந்த |
| சொருபானந்தச் சுடர் | சுயம் பிரகாச சுக வடிவினர் |
| வையம் தன்னில் நடந்தமை பாடீரே | இப்பூமா தேவியும் புனிதமுற எழுந்தருளி வந்தகருணையை சொல்லி வாழ்த்துவோம். |
| தான் என்னை ஆண்டமை பாடீரே | அவனே என்னை வலிய வந்து (வா என) ஆட்கொண்டருளிய தன்மையை பாடுவீர்களாக. |

எவ்விடங்களிலும் (எள்ளுக்குள் எண்ணை போல் ) நீக்கமற பூரணமாய் வியாபித்திருந்த சுயம் பிரகாச சுக வடிவினர் இப்பூமா தேவியும் புனிதமுற எழுந்தருளி வந்தகருணையை சொல்லி வாழ்த்துவோம். அவனே என்னை வலிய வந்து (வா என) ஆட்கொண்டருளிய தன்மையை பாடுவீர்களாக.

**6. ஞாநமு ஞேயமு நானுமென்று**
**நாடிட வொன்றின்றி நின்றதுநா**
**மான முழுநலம் பாடீரே**
**யல்லதில் லாதமை பாடீரே**

| | |
|---|---|
| நானும் | அறிபவன் (ஞாதாவும்) |
| ஞானமும் | அறிவும் (ஞானம்) |
| ஞேயமும் | அறியும் பொருள் (ஞேயம்) |
| என்று நாடிட | இவ்வாறு அறிதற்கு |
| ஒன்றின்றி | ஞாதா ஞானம் ஞேயம் (திரிபுடி தோற்றம்) ஒன்றும் (ஞாதாவும் ஞானமும் நீங்கி ) எதுவும் இல்லாமல் |
| நின்றது நாமான | இருந்தது (ஞேய மாத்திரமாக) அவசேஷித்து காண்பான் காட்சி, காணப்படு பொருளன்றி, திரிபுடி ரகிதமாய் நின்ற (நாமாக இருந்த) |
| முழுநலம் பாடீரே | துரிய நிலையில் நாமாக விளங்கிய (அசம் பிரஞாத சமாதியில்) தனதான்ம வடிவமாயிருந்த பூரண சுகமான க்ஷேம நலத்தை (அப்ரதி பந்த அபரோக்ஷ சாக்ஷாத்கார நிலையாம்) சொல்லித் தோத்தரிப்பீராக. (இது ஜீவன் முக்தி சுகமாம்) |
| அல்லது இல்லாதமை பாடீரே | அந்த சின்மாத்ர வடிவமேயன்றி வேறு தோற்றுரு வற்ற தன்மையை பாடுங்கள். |

அறிபவன் (ஞாதாவும்) அறிவும் (ஞானம்) அறியும் பொருள் (ஞேயம்) இவ்வாறு அறிதற்கு ஞாதா ஞானம் ஞேயம் (திரிபுடி தோற்றம்) ஒன்றும் (ஞாதாவும் ஞானமும் நீங்கி ) எதுவும் இல்லாமல் இருந்தது (ஞேய மாத்திரமாக) அவசேஷித்து காண்பான் காட்சி, காணப்படு பொருளன்றி, திரிபுடி ரகிதமாய் நின்ற (நாமாக இருந்த) துரிய நிலையில் நாமாக விளங்கிய (அசம் பிரஞாத சமாதியில்) தனதான்ம வடிவமாயிருந்த பூரண சுகமான க்ஷேம நலத்தை (அப்ரதி பந்த அபரோக்ஷ சாக்ஷாத்கார நிலையாம்) சொல்லித் தோத்தரிப்பீராக. (இது ஜீவன் முக்தி சுகமாம்) அந்த சின்மாத்ர வடிவமேயன்றி வேறு தோற்றுரு வற்ற தன்மையை பாடுங்கள்.

7. **மதியிலி யாவுழல் கின்றநம்மை**
**மாநுட னாயவ னாளவந்த**
**வதிசய மேநினைந் தாடீரே**
**யார்த்தெழுந் தார்த்தெழுந் தாடீரே**

| | |
|---|---|
| மதியிலியா உழல்கின்ற | புத்திஹீனர்களாக (பிறந்திறந்து) சுழன்று திரிகின்ற |
| நம்மை | நம் போன்ற (அபக்குவிகளான) வர்களையும் |
| அவன் ஆள | அந்த குருபரன் (நம்மை) ஆட்கொள்ளும் பொருட்டு, |
| மானுடனாய் வந்த | எங்கும் நிறைந்த மங்கள வஸ்து (சிவ பரம் பொருளே பிரம்மமே) காரண பிரம்மம். காரியமான குருவான மழை ஆலாங்கட்டியாவது போல் ஸ்ரீசொரூபானந்தர் என்னும் மனுஷ்ய ரூபத்தில் வேதவாக்கு (தெய்வம் மனுஷ்ய ரூபேணா) மனுட வடிவில் வரும் என்றபடி வந்த அரிதினுமரிதாக தெய்வம் மாநுட வடிவமாக வந்த |

| | |
|---|---|
| அதிசயமே நினைந்து ஆடீரே | புதுமையை எண்ணி எண்ணி நர்த்தனம் இடுவீர்களாக. |
| ஆர்த்து எழுந்து ஆர்த்தெழுந்து ஆடீரே | அதாவது ஆனந்த தாண்டவமாடுவீர்களாக என்றார். இதை தாண்டவராய சுவாமிகள் தண்ணியனானேன்று தாண்டவமாடுகின்றேனென்றார். அது மிகுந்த களிப்பினால் ஆனந்த பரவசத்தால் பக்தர்கள் பாடி ஆடுவார்கள். அவ்வாறு குழந்தைகளும் விளையாடும்போது ஆனந்த மேலீட்டால் ஆடுவது வழக்கம். வேகமாக (மேற்கிளம்பி) குதித்து குதித்து சப்தித்துக் கொண்டு ஆண்டவனே எம்மை யாண்டவனே என்று கூறி நர்த்தனஞ் செய்வீராக |

புத்திஹீனர்களாக (பிறந்திறந்து) சுழன்று திரிகின்ற நம் போன்ற (அபக்குவிகளான) வர்களையும் அந்த குருபரன் (நம்மை) ஆட்கொள்ளும் பொருட்டு, எங்கும் நிறைந்த மங்கள வஸ்து (சிவ பரம் பொருளே பிரம்மமே) காரண பிரம்மம். காரியமான குருவான மழை ஆலாங்கட்டியாவது போல் ஸ்ரீசொரூபானந்தர் என்னும் மனுஷ்ய ரூபத்தில் வேதவாக்கு (தெய்வம் மனுஷ்ய ரூபேணா) மனுட வடிவில் வரும் என்றபடி வந்த அரிதினுமரிதாக தெய்வம் மாநுட வடிவமாக வந்த புதுமையை எண்ணி எண்ணி நர்த்தனம் இடுவீர்களாக. அதாவது ஆனந்த தாண்டவமாடுவீர்களாக என்றார். இதை தாண்டவராய சுவாமிகள் தண்ணியனானேன்று தாண்டவமாடுகின்றேனென்றார். அது மிகுந்த களிப்பினால் ஆனந்த பரவசத்தால் பக்தர்கள் பாடி ஆடுவார்கள். அவ்வாறு குழந்தைகளும் விளையாடும்போது ஆனந்த மேலீட்டால் ஆடுவது வழக்கம். வேகமாக (மேற்கிளம்பி) குதித்து குதித்து சப்தித்துக் கொண்டு ஆண்டவனே எம்மை யாண்டவனே என்று கூறி நர்த்தனஞ் செய்வீராக

**8. என்றிவை யேமிகப் பாடிப்பாடி**
**யெழுந்துவி ழுந்தெழுந் தாடியாடி**
**நன்றித ருங்கண மானதெல்லா**
**நாநாவி தம்பட நட்டமிட்டே**

| | |
|---|---|
| என்றிவையே மிகப் பாடிப் பாடி | இந்தப் பிரகாரம் தோத்திரங்களையே அதிகமாக செய்து துதித்து |
| எழுந்து விழுந்து எழுந்து | எழுந்து விழுந்து எழுந்து இருந்த விடத்திலிருந்து மேற்கிளம்பியும் கவிழ்ந்தும் மீண்டும் மேற்கிளம்பியும் |
| ஆடியாடி | நர்த்தனம் செய்து கூத்து ஆடியும் |
| நன்றிதருங் கணமானதெல்லாம் | செய்நன்றி மறவாத பிசாசுக் கூட்டங்கள் அனைத்தும் |
| நாநா விதம்பட | பலபல விதமாகவும் |
| நட்ட மிட்டே | நர்த்தனம் செய்தார்கள். |

இந்தப் பிரகாரம் தோத்திரங்களையே அதிகமாக செய்து துதித்து எழுந்து விழுந்து எழுந்து இருந்த விடத்திலிருந்து மேற்கிளம்பியும் கவிழ்ந்தும் மீண்டும் மேற்கிளம்பியும் நிர்த்தனம் செய்து கூத்து ஆடியும் செய்நன்றி மறவாத பிசாசுக் கூட்டங்கள் அணைத்தும் பலபல விதமாகவும் நிர்த்தனம் செய்தார்கள்.

**9. வரவுசெல வறுபழைய வழியொழிய மொழியுங்**
**குரவனடி பரவியிடு குணலைபல பலவே**

| | |
|---|---|
| வரவு செலவறு | செய்த கர்மத்துக்கீடாக பிறப்பதும் அக்கர்மங்கள் முடிந்ததும் இறப்பதும் ஆன |
| பழைய வழி ஒழிய | என்றும் உள்ள மார்க்கம் நீங்கும் படிக்கு |
| மொழியும் | உபதேசிக்கும் (மீண்டிங்குவாராமை செய்யும்) |
| குரவனடி | சற்குரு மூர்த்தியின் திருவடியை |
| பரவியிடும் | தோத்திரம் செய்யும் |
| குணலை பல பலவே | பேய்க் கூட்டங்கள் அநேக மனேக விதமாக இருக்கின்றன. |

செய்த கர்மத்துக்கீடாக பிறப்பதும் அக்கர்மங்கள் முடிந்ததும் இறப்பதும் ஆன என்றும் உள்ள மார்க்கம் நீங்கும் படிக்கு உபதேசிக்கும் (மீண்டிங்குவாராமை செய்யும்) சற்குரு மூர்த்தியின் திருவடியை தோத்திரம் செய்யும் பேய்க் கூட்டங்கள் அநேக மனேக விதமாக இருக்கின்றன.

**10. உரைகழிய வுளமழிய வுணர்வழிய வணையுங்**
**குரைகழல்கள் பரவியிடு குணலைபல பலவே**

| | |
|---|---|
| உரை கழிய | வாக்கு (இவ்வாறுளதென) வசனிக்க முடியாததும் |
| உளம் அழிய | புத்தியினால் கோசரிக்க முடியாததும், |
| உணர்வழிய அணையும் | ஜீவபோதம் அற்றவிடத்து அடையப்படும் (தானாகவே) பிராப்தத்தின் பிராப்தி (புடை பெயர்ச்சியால் சென்றடைவதல்ல) தேவாரத்திலும் சென்றடையாத திருவுடையானை என்றார். இதைக் கண்டாபரண நியாயமென்று கூறுவார்கள். |
| குரைகழல்கள் பரவி இடும் | சப்திக்கா நின்ற வீர கண்டாமணி யணிந்த திருவடிகளில் தோத்தரிக்கும் |
| குணலை பலபலவே | பிசாசு (முமுக்ஷு) கூட்டங்கள் அநேகமாம். அநேகமாம். குணலை (கை தட்டி கூவுதல்) குணலை—கூத்து. |

வாக்கு (இவ்வாறுளதென) வசனிக்க முடியாததும் புத்தியினால் கோசரிக்க முடியாததும்,ஜீவபோதம் அற்றவிடத்து அடையப்படும் (தானாகவே) பிராப்தத்தின் பிராப்தி (புடை பெயர்ச்சியால் சென்றடைவதல்ல) தேவாரத்திலும் சென்றடையாத திருவுடையானை என்றார். இதைக் கண்டாபரண நியாயமென்று கூறுவார்கள். சப்திக்கா நின்ற வீர கண்டாமணி யணிந்த திருவடிகளில் தோத்தரிக்கும் பிசாசு (முமுக்ஷு) கூட்டங்கள் அநேகமாம். அநேகமாம். குணலை (கை தட்டி கூவுதல்) குணலை—கூத்து.

## 11. மதமதென விழிசொரிய மயிர்புளகம் வரவே
## குதுகுதென வுளமுருகு குணலைபல பலவே

| | | |
|---|---|---|
| மதமதென விழி சொரிய | கண்களில் ஒளியுடன்ஆனந்த (பாஸ்பம்) கண்ணீர் தயிலதாரை போல் கொட்டிக் கொண்டு இருக்கவும் | |
| மயிர் புளகம் வரவே | உரோமம் சிலிர்த்து மிகு மகிழ்ச்சி செய்யவும்(புல்லரித்தல்) விருப்பத்தோடு (மிக களி கொண்டு) மனம் நெகிழ்ந்து இருக்கும். | |
| குது குது என உளம் உருகும் | (ஓர் ) கூத்து ஆடி வீராவேசத்தால் கொக்கரித்து ஆடல் செய்வதுமாம். மதமதென ஈரடுக்கு ஒலிக்குறிப்பு இது மிகுந்த பக்திப் பெருக்கால் நிகழும் ஒன்று | |
| குணலை பல பலவே | பேய்கள் பலவாம் | |

கண்களில் ஒளியுடன்ஆனந்த (பாஸ்பம்) கண்ணீர் தயிலதாரை போல் கொட்டிக் கொண்டு இருக்கவும் உரோமம் சிலிர்த்து மிகு மகிழ்ச்சி செய்யவும்(புல்லரித்தல்) விருப்பத்தோடு (மிக களி கொண்டு) மனம் நெகிழ்ந்து இருக்கும். (ஓர் ) கூத்து ஆடி வீராவேசத்தால் கொக்கரித்து ஆடல் செய்வதுமாம். மதமதென ஈரடுக்கு ஒலிக்குறிப்பு இது மிகுந்த பக்திப் பெருக்கால் நிகழும் ஒன்று

## 12. கொடியபவ முடிவுசெய்த குரைகழல்கள் பரவா
## முடியவிவ ரிடுகுணலை மொழியமுடி விலதே

| | |
|---|---|
| கொடிய பவ | மரணத்துக்குச் சமமான |
| முடிவு செய்த | துன்பந் தரும் பிறப்பை நீங்கும்படி அருள் செய்திடும் |
| குரை கழல்கள் | ஒலிக்கும்படி மணியணிந்த திருவடியை |
| பரவா | தோத்திரம் செய்தல் |
| முடிய விவரிடு குணலை | எவ்விடங்களிலும் இப் பிசாசுக் கூட்டங்கள் |
| கொக்கரித்தல் | கொக்கரித்தல் இவர்களிடுங் கூத்தினை |
| மொழிய முடிவு இலதே | இப்படிப்பட்டதென்று இயம்பொனாது (கூறவியலாதாம்) அளவிறந்தனவாம். |

மரணத்துக்குச் சமமான துன்பந் தரும் பிறப்பை நீங்கும்படி அருள் செய்திடும் ஒலிக்கும்படி மணியணிந்த திருவடியை தோத்திரம் செய்தல் எவ்விடங்களிலும் இப் பிசாசுக் கூட்டங்கள் கொக்கரித்தல் இவர்களிடுங் கூத்தினை இப்படிப்பட்டதென்று இயம்பொனாது (கூறவியலாதாம்) அளவிறந்தனவாம்.

**13. பிணக்குறு மாறுச மயங்கத்திப்**
**பேரிருள்சேர்மநங் கொண்டுநின்று**
**கணக்கிடு மாறுத விர்த்தபிரான்**
**கழலிணை பாடிக் களித்தனரே**

| | |
|---|---|
| பிணக்குறும் | மாறுபாடு செய்யும் |
| ஆறு சமயங் கத்தி | சட்சமயவாதிகளும் (சைவம், வைஷ்ணவம், கௌமாரம், காணாபத்யம், சௌரம், சாக்தேயம், ) என்னும் ஆறு மத வாசிகளும் சண்டையிட்டு கூச்சல் செய்யும் |
| பேரிருள் சேர் மனங் கொண்டு | பெரிய பொருளை மறைத்த (அறியாமையுடைய) வரான மனம் பொருந்திய |
| கணக்கிடு மாறு தவிர்த்தபிரான் | அவர்கள் கூறும் மாறுபட்ட இலக்கணங்களை நீக்கிய நமது குருமூர்த்தியாகிய தலைவன் |
| கழலினை | சப்திக்கும்படியான சதங்கை சேர்ந்த இரண்டு பாதங்களையும் |
| பாடிக் களித்தனரே | தோத்தரித்து வணங்கி மகிழ்ச்சியுடனிருந்தார்கள். இதுகாறும் தோத்திரம் சொல்லி வணங்கினார்கள். |

மாறுபாடு செய்யும் சட்சமயவாதிகளும் (சைவம், வைஷ்ணவம், கௌமாரம், காணாபத்யம், சௌரம், சாக்தேயம், ) என்னும் ஆறு மத வாசிகளும் சண்டையிட்டு கூச்சல் செய்யும் பெரிய பொருளை மறைத்த (அறியாமையுடைய) வரான மனம் பொருந்திய அவர்கள் கூறும் மாறுபட்ட இலக்கணங்களை நீக்கிய நமது குருமூர்த்தியாகிய தலைவன் சப்திக்கும்படியான சதங்கை சேர்ந்த இரண்டு பாதங்களையும் தோத்தரித்து வணங்கி மகிழ்ச்சியுடனிருந்தார்கள். இதுகாறும் தோத்திரம் சொல்லி வணங்கினார்கள்.

**14. பாசமல மறவருளு பார்வையான் வாழியே**
**பாடுமறை முடிவினட மாடுவான் வாழியே**
**வாசமல ரெனமுழுது மேவினான் வாழியே**
**மாகரறி வரியவிரு தாளினான் வாழியே**

| | |
|---|---|
| பாச மலம் அற | அநாதிகாலமாக நம்மை மறைத்திருந்த பந்தமாகிய ஆணவ இருள் (அஞ்ஞானம்) நீங்கும்படி |
| அருளு பார்வையான் | கிருபா நோக்கஞ்செய்த குருபரன் |
| வாழியே | வாழட்டும். |
| பாடு மறை முடிவில் | சதாசர்வகாலமும் துதித்துக் கொண்டிருக்கும் வேதங்களின் அந்தத்தில்(உபநிடதம்) வேதாந்தத்தில் |
| நடமாடுவான் வாழியே | நிர்த்தனஞ் செய்பவன் (பரம ஆனந்த தாண்டம் புரிபவன்) என்றும் வாழட்டும் |
| வாச மலர் என | நறுமணம் நிறைந்த புஷ்பங்களைப் போல் |
| முழுது மேவினான் வாழியே | மலர் முழுவதும்இயற்கையான நறுமணம் நிறைந்திருப்பதுபோல மகத்தான உலகமனைத்தும் நிறைந்துள்ள (பரிபூரணனான) வன் வாழக் கடவது. |
| மாகர் அறிவரிய | தேவர்களாலும் காண்பதற்கரிய |
| இரு தாளினான் வாழியே | பெருமை பொருந்திய இரண்டு பாதங்களுடையவன் வாழ வேண்டும். |

அநாதிகாலமாக நம்மை மறைத்திருந்த பந்தமாகிய ஆணவ இருள் (அஞ்ஞானம்) நீங்கும்படி கிருபா நோக்கஞ்செய்த குருபரன் வாழட்டும். சதாசர்வகாலமும் துதித்துக் கொண்டிருக்கும் வேதங்களின் அந்தத்தில்(உபநிடதம்) வேதாந்தத்தில் நிர்த்தனஞ் செய்பவன் (பரம ஆனந்தத் தாண்டம் புரிபவன்) என்றும் வாழட்டும் நறுமணம் நிறைந்த புஷ்பங்களைப் போல் மலர் முழுவதும்இயற்கையான நறுமணம் நிறைந்திருப்பதுபோல மகத்தான உலகமனைத்தும் நிறைந்துள்ள (பரிபூரணனான) வன் வாழக் கடவது. தேவர்களாலும் காண்பதற்கரிய பெருமை பொருந்திய இரண்டு பாதங்களுடையவன் வாழ வேண்டும்.

**15. கோரமொடு முழுதுமற நூறினான் வாழியே**
**கூறவிர கரியமொழி யோதினான் வாழியே**
**நாசமறு மறிவுருவ மாயினான் வாழியே**
**நாடிலது கழலநிகழ் மேனியான் வாழியே**

| | |
|---|---|
| கோசமொடு | (அன்னமய முதலாக ஆனந்த மய மீறாகச்) சொல்லப்பட்ட பஞ்ச கோசங்களுடன் |
| முழுதும் அற நூறினான் | அஞ்ஞானம் அதன் காரியமாகிய அனைத்தும் நீங்கும்படி செய்தவன் (போக்கியவன்) |
| வாழியே | நன்றாகவாழட்டும். |
| கூறு விரகரிய | யாராலும் இவ்வாரென இயம்புதற்கியலாத |
| மொழி ஓதினான் | ஒப்பில்லாத (சமானரகிதமான) ஒரு மொழி (அது நீ) என்று |

| | |
|---|---|
| வாழியே | உபதேசம் செய்தவன் என்றும் வாழ்க. |
| நாசம் அறு | என்றும் அழியாத (திரிகால அபாத்யன்) சத் வடிவ |
| அறிவு உருவம் ஆயினான் | ஞான வடிவாய் விளங்குபவன் |
| வாழியே | வாழட்டும். |
| நாடில் | சுட்டிப் பார்க்குமிடத்து |
| அது கழல | அச்சுட்டு ஞானமும் நீங்கியவிடத்தில் |
| நிகழ் மேனியான் | எந்த சைதன்யம் விளங்குகின்றதோ அந்த சைதன்ய வடிவானவன் |
| வாழியே | வாழட்டும். |

(அன்னமய முதலாக ஆனந்த மய மீறாகச்) சொல்லப்பட்ட பஞ்ச கோசங்களுடன் அஞ்ஞானம் அதன் காரியமாகிய அனைத்தும் நீங்கும்படி செய்தவன் (போக்கியவன்) நன்றாகவாழட்டும். யாராலும் இவ்வாரென இயம்புதற்கியலாத ஒப்பில்லாத (சமானரகிதமான) ஒரு மொழி (அது நீ) என்று உபதேசம் செய்தவன் என்றும் வாழ்க. என்றும் அழியாத (திரிகால அபாத்யன்) சத் வடிவ ஞான வடிவாய் விளங்குபவன் வாழட்டும். சுட்டிப் பார்க்குமிடத்து அச்சுட்டு ஞானமும் நீங்கியவிடத்தில் எந்த சைதன்யம் விளங்குகின்றதோ அந்த சைதன்ய வடிவானவன் வாழட்டும்.

**16. நினையு மாறதின்றி நின்றி லங்கு சோதி வாழியே**
**நேச மோடு மீச னென்ன நெஞ்சி லாத வஞ்சனா**
**மெனையு நீதி யன்ப ரோடு வந்த நாதன் வாழியே**
**யென்னை யாள வந்தகோல மென்றும் வாழி வாழியே**

| | |
|---|---|
| நினையுமாறது இன்றி | இவ்வாறுளதென கருத ஒன்னாதபடி |
| நின்றிலங்கு சோதி வாழியே | என்றும் விளங்குகின்ற (சுயம் பிரகாச) ஒளி வாழட்டும். |
| நேசமோடும் | மிகுந்திருந்த விசுவாசத்துடன் |
| ஈசன் என்ன | இவனே எவ்வுயிர்களையும் கர்மானுசாரம் செலுத்தும் (கடவுள்) இறைவன் என்று |
| நெஞ்சிலாத | மனத்தில் கொள்ளாதவனும் |
| வஞ்சனாம் எனையும் | பக்தியின்றி பக்தன் போல் நடித்தலும் (வஞ்சகம்) எல்லா உடம்பிலும் அவ்விறைவன் இருப்பதை அறிந்தும் அதில் ஒன்றாகிய இத்தேகத்தை யானென வஞ்சித்து வந்த பெருங் குற்றத்தைக் கருதாமல் (அற்பஞ்ஞனான ) என்னையும் |
| நீதியன்பரோடு | இறைவன் (குருவானவர்) சர்வஞ்ஞன் (எல்லாமறிவன்) சர்வவியாபி (எங்கும் நிறைந்தவன்) என்ற நீதி தவறாத பக்திமான்களோடும் |

| | |
|---|---|
| வந்த நாதன் | எப்பொழுதும் தன்னைவிட்டு நீங்காத பக்த சிகாமணிகளான (பழவடியார் கூட்டத்துடன்) எனையாட்கொண்டருளும் பொருட்டு எழுந்தருளிச் செய்தது பெருந்துறை மேய பிரான் அன்ன திருக் கூட்டத் தலைவரான (தம்பிரான்) சுவாமிகளானவர் |
| வாழியே | நீடூழி வாழ்க. |
| என்னை | எளியேனான என்னையும் |
| ஆளவந்த கோலம் என்றும் வாழி வாழியே | ஆட்கொள்ளும் பொருட்டு எழுந்தருளிச் செய்த (ஸ்ரீசொரூபானந்த ரென்னுந் திருவுருவந்தாங்கிய) ஜோதி வடிவம் சதா காலமும் வாழட்டும் என்றும் சாசுவதமாக வாழட்டும். |

இவ்வாறுளதென கருத ஒன்னாதபடி என்றும் விளங்குகின்ற (சுயம் பிரகாச) ஒளி வாழட்டும். மிகுந்திருந்த விசுவாசத்துடன் இவனே எவ்வுயிர்களையும் கர்மானுசாரம் செலுத்தும் (கடவுள்) இறைவன் என்று மனத்தில் கொள்ளாதவனும் பக்தியின்றி பக்தன் போல் நடித்தலும் (வஞ்சகம்) எல்லா உடம்பிலும் அவ்விறைவன் இருப்பதை அறிந்தும் அதில் ஒன்றாகிய இத்தேகத்தை யானென வஞ்சித்து வந்த பெருங் குற்றத்தைக் கருதாமல் (அற்பஞ்ஞனான ) என்னையும் இறைவன் (குருவானவர்) சர்வஞ்ஞன் (எல்லாமறிவன்) சர்வவியாபி (எங்கும் நிறைந்தவன்) என்ற நீதி தவறாத பக்திமான்களோடும் எப்பொழுதும் தன்னைவிட்டு நீங்காத பக்த சிகாமணிகளான (பழவடியார் கூட்டத்துடன்) எனையாட்கொண்டருளும் பொருட்டு எழுந்தருளிச் செய்தது பெருந்துறை மேய பிரான் அன்ன திருக் கூட்டத் தலைவரான (தம்பிரான்) சுவாமிகளானவர் நீடூழி வாழ்க. எளியேனான என்னையும் ஆட்கொள்ளும் பொருட்டு எழுந்தருளிச் செய்த (ஸ்ரீசொரூபானந்த ரென்னுந் திருவுருவந்தாங்கிய) ஜோதி வடிவம் சதா காலமும் வாழட்டும் என்றும் சாசுவதமாக வாழட்டும்.

**17. பந்த பாசம் வேரொடும் பறித்துவீழ வென்முடி**
**தந்த பாதம் வாழியே சமைந்த பார்வை வாழியே**

| | |
|---|---|
| பந்த பாசம் | தேகாதி பிரபஞ்சத்தில் யான் எனதென்னும் அகங்கார மமகார அபிமானமாகிய அகப்பற்று புறப்பற்று |
| வேரோடும் | காரணமாக மூலத்தோடு |
| பறித்து | உதகத்தொடு கைக்கொண்டு(உடல் பொருள் ஆவி) இம்மூன்றும் என்னிடம்பற்றி |
| வீழ | எனது பழவினைகள் நீங்க |
| என் முடி தந்த பாதம் | எனது சிரசிற்கு அணிவித்த திருவடி |
| வாழியே | அந்த உபய திருவடிகளும் வாழட்டும் |
| சமைந்த பார்வை | இவனும் ஈடேறட்டும் என்ற கிருபா நோக்கம் செய்து என்வினை நீங்கும்படி செய்த கருணை நிறைந்த கண்பார்வைகள் |

| | |
|---|---|
| வாழியே | என்றும் இருக்கட்டும். இந்நூலாசிரியர் தமது குருமூர்த்தி செய்த சக்ஷு தீக்ஷையையும் திருவடி தீக்ஷையையும் முறையே வியந்தோதுகின்றார். |

தேகாதி பிரபஞ்சத்தில் யான் எனதென்னும் அகங்கார மமகார அபிமானமாகிய அகப்பற்று புறப்பற்று காரணமாக மூலத்தோடு உதகத்தொடு கைக்கொண்டு(உடல் பொருள் ஆவி) இம்மூன்றும் என்னிடம்பற்றி எனது பழவினைகள் நீங்க எனது சிரசிற்கு அணிவித்த திருவடி அந்த உபய திருவடிகளும் வாழட்டும் இவனும் ஈடேறட்டும் என்ற கிருபா நோக்கம் செய்து என்வினை நீங்கும்படி செய்த கருணை நிறைந்த கண்பார்வைகள் என்றும் இருக்கட்டும். இந்நூலாசிரியர் தமது குருமூர்த்தி செய்த சக்ஷு தீக்ஷையையும் திருவடி தீக்ஷையையும் முறையே வியந்தோதுகின்றார்.

**18. வைத்த வைத்தகண ழித்தவடி வாழியே**
**வைப்பி லாதகண ளித்தவடி வாழியே**
**யெத்தி முத்தியரு ளீசனடி வாழியே**
**யென்னை யாளுடைய வெந்தையடி வாழியே**

| | |
|---|---|
| வைத்த வைத்த கண் | திருசியங்களில் (நாம ரூப வடிவத்தில் ) மன முதலிய இந்திரியங்கள் செல்லும்போது (அநிருத ஜட துக்கமென ) அந்தந்த இடங்களிலும் |
| அழித்த அடி வாழியே | நாம ரூபத்தில் பற்றாத வண்ணம் நீக்கிய பாதம் வாழ்க |
| வைப்பிலாத கண் | நாம ரூபம் பற்றாத புத்தியில் (பற்றில்லா விடத்து) |
| அளித்த அடி வாழியே | அடியேனுக்கு அநுக்கிரகஞ் செய்த (ஞான திருஷ்டியை கொடுத்த) திருவடி வாழ்க. |
| எத்தி | தாழால் உதைத்து |
| முத்தியருள் | என்னை பந்தத்தினின்றும் விடுவித்து (எனக்கு வீடளித்து) திருவருள் செய்த |
| ஈசனடி வாழியே | சகல உயிர்களையும் கர்மாநுசாரமாக செலுத்தும் (பிரேரக கர்த்தாவாகிய) இறைவன் வாழட்டும். |
| என்னை | யாதொரு பக்திவைராக்யமுமின்றிய அடியேனையும் |
| ஆளுடைய | ஆட்கொண்டு அடியார் நடுவிலிருக்கச் செய்த |
| எந்தை அடி வாழியே | எம் தந்தையாகிய குருநாதர் திருவடி வாழ வேண்டும். |

திருசியங்களில் (நாம ரூப வடிவத்தில் ) மன முதலிய இந்திரியங்கள் செல்லும்போது (அநிருத ஜட துக்கமென ) அந்தந்த இடங்களிலும் நாம ரூபத்தில் பற்றாத வண்ணம் நீக்கிய பாதம் வாழ்க நாம ரூபம் பற்றாத புத்தியில் (பற்றில்லா விடத்து) அடியேனுக்கு

அநுக்கிரகஞ் செய்த (ஞான திருஷ்டியை கொடுத்த) திருவடி வாழ்க. தாழால் உதைத்து என்னை பந்தத்தினின்றும் விடுவித்து (எனக்கு வீடளித்து) திருவருள் செய்த சகல உயிர்களையும் கர்மாநுசாரமாக செலுத்தும் (பிரேரக கர்த்தாவாகிய) இறைவன் வாழட்டும். யாதொரு பக்திவைராக்யமுமின்றிய அடியேனையும் ஆட்கொண்டு அடியார் நடுவிலிருக்கச் செய்த எம் தந்தையாகிய குருநாதர் திருவடி வாழ வேண்டும்.

**19. சுத்தம றைதொடர்ந்த தாளினான் வாழியே**
**துற்றுவரும் பெரும்பவ நாசனீ வாழியே**
**தத்துவ நெறிதிறந்த சேவகன் வாழியே**
**தர்க்கச மயசண்ட மாருதன் வாழியே**

| | |
|---|---|
| சுத்த மறை தொடர்ந்த | மாயா காரியமாகிய திருசிய மற்ற திருக்கு ரூப சுருதிப் பிரமாணங்களால் (கேனோபநிடதத்தில் கூறிய வண்ணம்) இலக்ஷணா விருத்தியால் |
| தாளினான் வாழியே | திருவடியையுடையவன் வாழ்கவே. |
| துற்றுவரும் | அநேக காலமாக தொடர்ந்து வந்த |
| பெரும் பவ நாச | பிறவி (பிறப்பை) நீக்கிய |
| ஊசன் நீ வாழியே | குருவாகிய பாப நாசராகிய தாங்கள் வாழ வேண்டும். |
| தத்துவ நெறி | உண்மையான வழியை (சன்மார்க்கத்தை) |
| திறந்த | தத்துவங்களைப் பிரித்தறியும் (நீதி விசார)வழியை அந்தரங்கத்தை வெளியிட்ட |
| சேவகன் | அந்த வீரையென்னும் க்ஷேத்திரத்தில் வந்த வீரன் (பெருந் தொண்டன்) |
| வாழியே | வாழ வேண்டும். |
| தர்க்க சமயம் சண்ட மாருதன் வாழியே | நியாய நூல் கூறும் (சாஸ்திர ஒழுங்கு முறை கூறுவதில்) பிரசண்ட வாயு ஆதிசேடனுடன் வாதமிட்டு கைலை மலையைப் பறித்து வீசிய பிரசண்ட வாயுவைப் போல் (ஒழுங்கு முறையற்ற மதவாதிகளைக் கண்டித்து) துருசு களைந்து எறிவதில் (பிரசண்ட வாயு)போன்ற பலம் பொருந்திய எம் குருநாதா நீ வாழ வேண்டும். |

மாயா காரியமாகிய திருசிய மற்ற திருக்கு ரூப சுருதிப் பிரமாணங்களால் (கேனோபநிடதத்தில் கூறிய வண்ணம்) திருவடியையுடையவன் வாழ்கவே. அநேக காலமாக தொடர்ந்து வந்த பிறவி (பிறப்பை) நீக்கிய குருவாகிய பாப நாசராகிய தாங்கள் வாழ வேண்டும். உண்மையான வழியை (சன்மார்க்கத்தை) தத்துவங்களைப் பிரித்தறியும் (நீதி விசார)வழியை அந்தரங்கத்தை வெளியிட்ட அந்த வீரையென்னும் க்ஷேத்திரத்தில் வந்த வீரன் (பெருந் தொண்டன்) வாழ வேண்டும். நியாய நூல் கூறும் (சாஸ்திர ஒழுங்கு முறை கூறுவதில்) பிரசண்ட வாயு ஆதிசேடனுடன் வாதமிட்டு கைலை

மலையைப் பறித்து வீசிய பிரசண்ட வாயுவைப் போல் (ஒழுங்கு முறையற்ற மதவாதிகளைக் கண்டித்து) துருசு களைந்து எறிவதில் (பிரசண்ட வாயு)போன்ற பலம் பொருந்திய எம் குருநாதா நீ வாழ வேண்டும்.

**20. வாழிதங் குருபரன் மெய்ப்பத்த ரானவர்**
**வாழிமறை துணிபொருள் சித்தித்து வாழ்பவர்**
**வாழிபர மாநந்தந் தித்திக்க வாழ்பவர்**
**வாழிசொரு பாநந்தன் தத்வப்ர காசனே**

| | |
|---|---|
| நங்குருபரன் | நமது குருமூர்த்தியின் |
| மெய்ப் பத்தரானவர் | உண்மைத் தொண்டர்கள் (பழமையான மெய்யடியவர்கள்) |
| வாழி | வாழ்க சீரடியாரெல்லாம் என்றபடி. |
| துணி பொருள் | வேதத்தினுச்சியில் (முடிவான உபநிடதங்களில்) நிச்சயித்துக்கூறிய (பேரின்பமய) செல்வம் பிரம்ம வஸ்து |
| சித்தித்து வாழ்பவர் | திடஅபரோக்ஷ அனுபவம் பெற்ற (ஜீவன் முக்தர்களாய் வாழ்ந்திருக்கும் ) ஞானிகள், |
| வாழி | பல்லூழி காலம் வாழ வேண்டும். |
| பரமானந்தந் தித்திக்க வாழ்பவர் | மேலான ஆன்ம சுகத்தை (உபநிடதத்தில் கூறிய மதுவித்தையில் சொன்ன) மதுரத்தை பெற்று (நிரங்குச திருப்தர்களாய்) வாழ்கின்ற ஜீவன் முக்தி விலக்ஷணானந்த சுகத்தில் இலயமாயிருப்பவர்கள் |
| வாழி | மாண்டமனத்தினை யுடைய அந்த முநீந்திரர்கள் என்றும் வாழ வேண்டும். |
| சொரூபானந்தன் | ஞான வேந்தனாம் (ஆனந்த வடிவினன்) ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகளும் |
| தத்வப் பிரகாசனே | உண்மை ஒளியானவன் (மெய் விளக்கன்) உண்மையை (உபநிடதத்தில் கூறிய மெய்ப்பொருளை ) வெளிப்படுத்திய தானனுபவித்து யானடைந்த இன்பம் இவ்வையகம் பெறுக என்று விளக்கிக்கூறிய (ஸ்ரீதத்வப்ரகாச னாயனார் என்னும்) ஸ்ரீ குருமூர்த்திகளிருவரும் நீடூழிகாலம் வாழ வேண்டும். இவ்வாசிரியர் வாழ்த்துக் கூறியது யாதெனில் மரத்தின் மூலத்தில் (வேரில்) நீர்பாய்ச்சினால் கிளை முழுவதும் செழிப்பது போன்றதாம். உலகம் வாழவே பெரியோர்கள் வாழ்வது. |

நமது குருமூர்த்தியின் உண்மைத் தொண்டர்கள் (பழமையான மெய்யடியவர்கள்) வாழ்க. சீரடியாரெல்லாம் என்றபடி வேதத்தினுச்சியில் (முடிவான உபநிடதங்களில்) நிச்சயித்துக்கூறிய (பேரின்பமய) செல்வம் பிரம்ம வஸ்து திடஅபரோக்ஷ அனுபவம் பெற்ற (ஜீவன் முக்தர்களாய் வாழ்ந்திருக்கும் ) ஞானிகள், பல்லூழி காலம் வாழ வேண்டும். மேலான ஆன்ம சுகத்தை (உபநிடதத்தில் கூறிய மதுவித்தையில் சொன்ன) மதுரத்தை

பெற்று (நிரங்குச திருப்தர்களாய்) வாழ்கின்ற ஜீவன் முக்தி விலக்ஷணானந்த சுகத்தில் இலயமாயிருப்பவர்கள் மாண்டமனத்தினை யுடைய அந்த முநீந்திரர்கள் என்றும் வாழ வேண்டும். ஞான வேந்தனாம் (ஆனந்த வடிவினன்) ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகளும் உண்மை ஒளியானவன் (மெய் விளக்கன்) உண்மையை (உபநிடதத்தில் கூறிய மெய்ப்பொருளை ) வெளிப்படுத்திய தானனுபவித்து யானடைந்த இன்பம் இவ்வையகம் பெறுக என்று விளக்கிக்கூறிய (ஸ்ரீதத்வப்ரகாச னாயனார் என்னும்) ஸ்ரீ குருமூர்த்திகளிருவரும் நீடூழிகாலம் வாழ வேண்டும். இவ்வாசிரியர் வாழ்த்துக் கூறியது யாதெனில் மரத்தின் மூலத்தில் (வேரில்) நீர்பாய்ச்சினால் கிளை முழுவதும் செழிப்பது போன்றதாம். உலகம் வாழவே பெரியோர்கள் வாழ்வது.

***************

# வெண்பா

**தரணிபுகழ் தத்துவனார் தாமுரைத்த ஞாநப்**
**பரணிதனைக் கட்டவிழ்த்துப் பார்த்தாற்–கரணமுடன்**
**சேர்ந்து மண வாத சிவமணமே பூரித்த**
**சாந்தமண நாறுமே தான்**

| | |
|---|---|
| தரணி புகழ் | சமுத்திரம் சூழ்ந்த இப்பூவுலகின்கண் உள்ள உயர்ந்தோர்களால் புகழ்ந்து (போற்றித் துதிக்கும்படியான) |
| தத்துவனார் | ஸ்ரீதத்துவராய ஞானதேசிகர் என்னும் (உண்மை ஆராய்ச்சியாளர்) தத்துவத்தை நன்கு ஆராய்ந்து நியாயமறிந்து கூறும் இயல்புள்ள பெரியார் |
| தாமுரைத்த | தமதநுபூதியால் அருளிச் செய்த |
| ஞானப் பரணிதனை | ஞாந வேந்தனும் (தமது குருமூர்த்தியுமாகிய) ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகள் மீது பாடிய 96 வகை பிரபந்தங்களில் ஒன்றாகிய இந்த பரணி பாமாலையை (அஞ்ஞ வதைப் பரணி யென்னும் நூலினை) |
| கட்டவிழ்த்துப் பார்த்தால் | அந்த ஏட்டுச் சுவடியினை கயிறு பிரித்து கவனத்துடன் அறிந்தால் |
| கரணமுடன் சேர்ந்து | பொறிபுலன்களோடு சம்பந்தித்து கமழ்வதாகிய நறுமணம் அன்று பின்னையோ |
| சிவ மணமே பூரித்த | தெய்வ மணங் கமழ்ந்து நிறைந்த (ஜீவன் முத்தி விலக்ஷணானந்த சுகந்தருவதாகிய ) |
| சாந்த மணம் | சுத்த சத்துவ குணமயமாகப் பரிமளிக்கும் (சுகந்தம் நிறைந்து) |
| நாறுமே தான் | முத்தாபங்கொண்ட (முமுக்ஷுவாகிய வண்டினங்களுக்கெல்லாம்) தான் இன்பமயமாயிருந்து தன்னை வந்து அண்டினவர்களுக்கெல்லாம் பேரின்ப மளிக்கும் சத்வகுணம் (என்றுமுள தெய்வமணமாம் தேனைப் பருகி) இருக்கும்படி செய்யும் என்பதாம். |

சமுத்திரம் சூழ்ந்த இப்பூவுலகின்கண் உள்ள உயர்ந்தோர்களால் புகழ்ந்து (போற்றித் துதிக்கம்படியான) ஸ்ரீதத்துவராய ஞானதேசிகர் என்னும் (உண்மை ஆராய்ச்சியாளர்) தத்துவத்தை நன்கு ஆராய்ந்து நியாயமறிந்து கூறும் இயல்புள்ள பெரியார் தமதநுபூதியால் அருளிச் செய்த ஞாந வேந்தனும் (தமது குருமூர்த்தியுமாகிய) ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகள் மீது பாடிய 96 வகை பிரபந்தங்களில் ஒன்றாகிய இந்த பரணி பாமாலையை (அஞ்ஞ வதைப் பரணி யென்னும் நூலினை) அந்த ஏட்டுச் சுவடியினை கயிறு பிரித்து கவனத்துடன் அறிந்தால் பொறிபுலன்களோடு சம்பந்தித்து கமழ்வதாகிய நறுமணம் அன்று பின்னையோ தெய்வ மணங் கமழ்ந்து நிறைந்த (ஜீவன் முத்தி விலக்ஷணானந்த சுகந்தருவதாகிய ) சுத்த சத்துவ குணமயமாகப் பரிமளிக்கும் (சுகந்தம்

நிறைந்து) முத்தாபங்கொண்ட (முமுக்ஷுவாகிய வண்டினங்களுக்கெல்லாம்) தான் இன்பமயமாயிருந்து தன்னை வந்து அண்டினவர்களுக்கெல்லாம் பேரின்ப மளிக்கும் சத்வகுணம் (என்றுமுள தெய்வமணமாம் தேனைப் பருகி) இருக்கும்படி செய்யும் என்பதாம்.

***************

# குரு ஸ்துதி

**பாசம னைத்தையுந் தனித்தனிப் பரிந்திட நீக்கி**
**நேச மாகிய வறிவுரு நீயெனக் காட்டிப்**
**பேசு மேழ்வகைப் பிறப்புனக் கிலையெனப் பேசித்**
**தூசு நீக்கிய சுயஞ்சிதா காசனைத் தொழுவாம்.**

| | |
|---|---|
| பாசம் அனைத்தையும் | அகப்பற்று புறப்பற்று என்ற பந்தங்களையெல்லாம் |
| தனித் தனிப்பரிந்திடநீக்கி | அப்பற்றுக்களனைத்தும் அதில் உள்ள குண தோஷங்களைப் பிரித்துக்கூறி அவ்வஸ்த்துக்களிடம் இருந்த பற்று நீங்கச் செய்து |
| நேசமாகிய | விசுவாசம் வைக்கக் கூடிய |
| அறிவுரு | அந்த சச்சிதானந்த மய ஆன்ம ரூபம் |
| நீயென | (அது நீ என) அதுவே நீயாக இருக்கின்றாய் என்று |
| காட்டி | என்னில் என்னை எனக்குக் காட்டியபின் |
| பேசு | கூறாநின்ற |
| ஏழ்வகைப் பிறப்பும் | எழுவகைத் தோற்றங்களும் (தேவர், மனிதர், அரக்கர், விலங்கு, பறவை, நீர்வாழ்வன, ஊர்வன) |
| உனக்கில்லை | தேகியான உனக்குக் கிடையாது |
| எனப்பேசி | என்று உபதேசித்து |
| தூசு நீக்கிய | தானல்லாத ஒன்றைத் தானெனக் கருதிய அஞ்ஞானமாகிய குற்றம் நீங்கும்படி செய்த |
| சுயஞ் சிதாகாசனை | இயற்கையான சிதாகாச வடிவ (குருமூர்த்தியை) ஆச்சாரியரை |
| தொழுவாம் | மனத்தில் நினைத்து வாக்கால் வாழ்த்தி காயத்தால் தொழுவாம். |

அகப்பற்று புறப்பற்று என்ற பந்தங்களையெல்லாம் அப்பற்றுக்களனைத்தும் அதில் உள்ள குண தோஷங்களைப் பிரித்துக்கூறி அவ்வஸ்த்துக்களிடம் இருந்த பற்று நீங்க செய்து விசுவாசம் வைக்கக் கூடிய அந்த சச்சிதானந்த மய ஆன்ம ரூபம் (அது நீ என) அதுவே நீயாக இருக்கின்றாய் என்று என்னில் என்னை எனக்குக் காட்டியபின் கூறாநின்ற எழுவகைத் தோற்றங்களும் (தேவர், மனிதர், அரக்கர், விலங்கு, பறவை, நீர்வாழ்வன, ஊர்வன) தேகியான உனக்குக் கிடையாது என்று உபதேசித்து தானல்லாத ஒன்றைத்

தானெனக் கருதிய அஞ்ஞானமாகிய குற்றம் நீங்கும்படி செய்த இயற்கையான சிதாகாச வடிவ (குருமூர்த்தியை) ஆச்சாரியரை மனத்தில் நினைத்து வாக்கால் வாழ்த்தி காயத்தால் தொழுவாம்.

**************

சர்வஞ் சின்மயம்

ஓம் தத்ஸத்

ஸ்ரீகுரு சகாயம்.

ஓம் பிரஹ்மார்ப்பண மஸ்து

**************

For comments/corrections/copies(soft) – pranipatachaitanya@yahoo.co.in